# சத்தியத்தின் சக்திநிலை

(இரண்டாம் பாகம்)






சற்குருதேவர் மாமகரிஷி

ஈசுவரபட்டர் அருளியது

1250

# சத்தியத்தின் சக்திநிலை

(இரண்டாம் பாகம்)

2004

சற்குருதேவர்
மகரிஷி ஈஸ்வரபட்டர்
அருளிய உண்மை நிலைகள்

வெளியீடு:
சத்தியத்தின் சக்திநிலைச் சங்கம்
தலைமையகம்: பவானி - 638301
பெரியார் மாவட்டம் — தமிழ்நாடு

1980 — 35/00.
(இரண்டு பாகம்)

முதற்பதிப்பு: ஜூலை, 1980





புத்தகம் கிடைக்குமிடம்:

சத்தியத்தின் சக்திநிலைச் சங்கம்
தலைமையகம், பவானி-638301.

திரு G. கிருஷ்ணராஜ், B.A., M.L.A.
C/o. சேலம் சண்முகா பிலிம்ஸ்
மாரியம்மன் கோவில் தெரு
சேலம்-6

திரு S. கிருஷ்ணமூர்த்தி
வீனஸ் பிக்சர்ஸ்
நெ. 7, வீனஸ் காலனி
சென்னை-600018

விலை ரூ. 31-00

அச்சிட்டோர்:
கலாட்சேத்ரா பப்ளிகேஷன்ஸ் பிரஸ், சென்னை-600 041

சற்குருதேவர் மாமகரிஷி ஈஸ்வரபட்டரின் அருள் தியானத்தினுல் சொல்லில் வெளிப் படுத்தியவர் திருமதி இராஜம்மாள் பால சுப்பிர்மணியம்.

எழுத்தில் வடிவமைத்தவர் திரு. R. பால சுப்பிரமணியம், பவானி.




சற்குருதேவர் மகரிஷி ஈஸ்வரபட்டர்



ஓம் சிவசக்தி நம
ஓம் மஹாகாளி நம
ஓம் ப்ரம்ம சக்தி நம
ஓம் மஹாசரஸ்வதி நம
ஓம் மஹாலக்ஷ்மி நம
ஓம் கிர்யாசக்தி நம
ச
வ
ர
ஓம் ஈஸ்வரா
ஓம்
ப
குருதேவா
நம
ஹ
ண
ஓம் மஹாகணபதி நம
ஓம் சித்தி விநயகாநம

ஓம்

ஓம் சற்குருதேவர் ஈஸ்வரபட்டாய நம

## ஞானச்சுடர் விளக்கம்

முதற்கண் என் தாய் தந்தையர்க்கு வணக்கங்கள். என் குரு தவத்திரு வேணுகோபால சுவாமி அவர்கட்கு வணக்கங்கள்.

ஓம் ஈஸ்வரா நம
ஓம் புத்தாய நம
ஓம் ஏசுநாதரே நம
ஓம் முகம்மது நபியே நம

**''சத்தியத்தின் சக்திநிலை''** என்னும் இந்நூல் இரண்டாம் பாகமாகும். முதல் பாகம் 25–1–80-ல் சென்னையில் வெளியிடப்பட்டது. இந்நூல் மாமகரிஷி சற்குருதேவர் ஈஸ்வரபட்டர் அருள் நிலையில் இருந்து சொல்லியதை நம் சங்க உறுப்பினர் ஒருவர் தியானத்தில் அருள் பெற்றதைச் சொல்ல மற்றொரு உறுப்பினர் அதை எழுத்து வடிவாக்கினர். இவற்றையே முதல் பாகம், இரண்டாம் பாகம் என்னும் இரண்டு நூல்களாக உலக மக்களுக்கு வழிகாட்ட மா மகரிஷிகள் அநேகர் துணையோடு நம் சங்கம் வெளியிட்டுள்ளது. இப்பாக்கியம் எங்களுக்குக் கிட்டக் காரணமாக இருந்து வருபவர் எங்கள் குரு தவயோகி வேணு கோபால சுவாமி அவர்கள். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அவரை யாம் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அவர்கள் மாமகரிஷி ஈஸ்வரபட்டர் அவர்களால் வழி நடத்திச் செல்லும் ஒரு சித்தர்.

அவர்கள் நம் சங்கத்தார்க்கு தியானம் செய்யும் முறையையும் அதனுல் நமக்கு நாமே அடையும் சக்தியையும் விளக்கி, மிகவும் எளிய முறையில் உபதேசித்து, அவ்வழியில் கிட்டியதே எங்களுக்கு ஞானிகள், சித்தர்கள், முனிவர்கள், மகரிஷிகள், சப்தரிஷிகள் ஆகிய வணக்கத்திற்குரியோர்களின் தொடர்பு. இது இந்நூற்றுண்டில் எவர்க்கும் கிடைத்தற்கரிய பாக்கியம்.

மகரிஷிகள், சப்தரிஷிகள் ஆகியவர்களே நாம் இன்று கடவுள்களாக வணங்கும் எல்லா மதத்தின் எல்லாக் கடவுள்களின் பெயர்களில் நம்மையெல்லாம் வழி நடத்திச் செல்பவர்கள். அவ்வளவு

பெரியோர்களும் இப்போது இவ்வுலக மக்களை சமீப எதிர் காலத்தில் நடக்கவிருக்கும் சகல மாற்றத்தில் இருந்து மீட்டிட, இவ்விரண்டு நூல்களையும் வழிகாட்டிகளாக அருளியுள்ளார்கள். இந்நூல்களில் கண்ட எந்தக் கருத்தும், ஏன், ஒரு எழுத்துக்கூட நமக்குச் சொந்தமில்லை. அவற்றில் சொற்பிழைகள் ஏதேனு மிருப்பின் அவைகளே நமக்குச் சொந்தம்.

இந்நூல்களில் சொல்லியுள்ளபடி முறையாக தியானமும், தூய எண்ணங்களும் கொண்டு வாழ்ந்திட முனைந்துள்ள எங்களுக்கு ஆண்டவன்களாக, அதாவது முருகர், ஈஸ்வரர், ஏசு நாதர், பராசக்தி இப்படி எவ்வளவோ நாமகரணங்களில் செயல் படும் கடவுள்களின் தோற்றங்களை சங்க உறுப்பினர்கள் சிலர் கண்களை மூடி தியானத்தில் உள்ள பொழுது நெற்றியில் தொலைக் காட்சி பார்ப்பதைப்போல் காட்சிகளைக் கண்டும், இன்னும் சிலர் கண்களைத் திறந்தபடியே கோவில்களில் உள்ளபோது அங்குள்ள சிலைக்குரிய ஆண்டவன்களை நிஜத் (பிரத்தியட்ச) தோற்றத்தில் கண்டு பேரானந்தம் கொண்டது மட்டுமின்றிச் சிலர் அவ்வாண்ட வர்களுடன் எப்பிரச்சினை பற்றியும் பேசவும், அவர்களின் அருள் சொற்களைக் கேட்டு அவ்வழியில் வழிநடந்திடவும் செய்து, அனுபவத்தில் பேருண்மைகளையும் தெரிந்துள்ளனர். இந்நிலைகளைப் பலர் கேட்டும், முதல் நூலைப் பலமுறை படித்தும், மனதில் ஏற்றி, எளிய முறை தியானத்தையும் கடைப்பிடித்து வந்து, நம் சங்கத்தில் உறுப்பினர்களாய்ச் சேர்ந்தும் வருகிறார்கள். அந்தந்த ஊர்களிலேயே கிளைச் சங்கங்களைத் துவக்கியும் உள்ளனர்.

இவ்வழி தியானத்தில் இருந்து வரும் சங்க உறுப்பினர்கள் எல்லோரும், இனிச் சேரவிருப்பவர்களுக்கும் பயன்படும் முறை யிலேயே இந்நூல்களை வெளியிட்டுள்ளோம்.

அம்மகான்களின் அருளாசிகளோடு இவ்விரண்டு நூல்களையும் சில மாதங்களிலேயே மொழி பெயர்த்து ஒரே நூலாக ஆங்கிலத் தில் வெளியிடத் தீவிரமாக முனைந்துள்ளோம். அப்போது நம் மகான்களின் கருத்துக்கள் அந்நூல் வாயிலாக இந்தியா முழு வதற்கும், வெளி நாடுகளுக்கும் பரப்ப இருக்கிறோம்.

**இயற்கை சக்தியின் உண்மை நிலைகளை** உலகுக்கு உணர்த்து வதே இந்நூல்களின் நோக்கமாகும். இந்நூல்களைப் படிப்போர்க்கு ஏதேனும் ஐயப்பாடுகள் தோன்றினால் நம் தலைமைச் சங்கத்திற்கு (தபால் தலையுடன்) எழுதிக் கேட்டால் அம்மகான்களின் ஆசி களுடனே பதில் தரப்படும்.

விஞ்ஞான உலகத்தின் பேராசை முயற்சியால் செய்திட்ட அழிவுக் கருவிகளால் ஏற்படவிருக்கும் சகல மாற்றத்திலிருந்தும்

மக்கள் மீள **இது ஒன்றே வழி** என்றுணர்ந்து ஒவ்வொருவரும் தம்மிடமுள்ள தம் சக்தியைத் தாமே கூட்டிச் சித்து நிலை பெற தியானம் என்ற வழியை எளிய முறையில் சொல்லியும், அதற்கு மூலாதாரமான எண்ணம், சொல், செயல்களைத் தூய்மையாக்க வழிமுறைகள் சொல்லியும் உள்ளது இந்நூல்.

ஆண்டவனைக் காணப் பல முறைகள் நம் முன்னோர்களினால் வழிபடுத்தப்பட்டும், ஒவ்வொருவரும் ஒவ்வொரு செயல்முறையில் ஆண்டவனை அடைய, பேரின்பம் காண விழைகின்றோம். அடைகின்றோமா? ஆனந்தமான இசையில் தன்னையே மறந்து அவ் ஆண்டவனையே துதிபாடி, பாடப்படும் பாடல்களில் தன்னை ஐக்கியப்படுத்தி பேரானந்தம் பெறும் நிலையை, அப்பாடலின் ஒரு சுருதி தாளம் மாறியவுடன் நம் எண்ணமெல்லாம் அவ்வின்ப அலையிலிருந்து தவறின் ஈர்ப்பில் எண்ணத்தைச் செலுத்தி மீண்டும் அதே பாடலை முதலில் கேட்ட உணர்வுலயிப்பில் ஈடுபடமுடியாமல் தன் நிலை மாறிவிடுகின்றது. ஆண்டவன் என்ற பேரானந்த வடிவே மாறிய பிறகு ஆண்டவனின் நிலை உணர்வது எப்படி?

ஆகவே இவ்வுலக மக்கள் இல்லறத்தில் இருந்துகொண்டே மகான்களால் வெளியிடப்பட்ட இந்நூல்களில் கண்ட கருத்துக்களைப் பயன்படுத்தி வாழ்ந்திடுவோம். இவற்றில் உள்ளடங்கிய அநேக கருத்துக்கள் விஞ்ஞான உலகத்தையே திகைக்க வைப்பதாகும். குறிப்பாக அணுகுண்டுகள் செய்த எவ் விஞ்ஞானிக்கும் அது எப்படி வெடிக்கப் போகிறது என்பது தெரியாது. ஆனால் இந்நூல் விஞ்ஞானிகளும் ஒப்பும் முறையில் காரணங்களோடு அது எப்படி வெடிக்கும் என்பதையும், அதனால் பிரளயம் உட்பட சகல மாற்றம் வரப்போவதையும் விளக்கியுள்ளது.

இந்நூலைப் படிப்போர் தாங்கள் மட்டும் பயன்பெறுவதோடு நில்லாமல் தங்களைச் சார்ந்தோர்க்கும் சொல்லி நூலைப் படித்து அவ்வழி நடந்து, நல் சுவாசமெடுத்து, நல்லெண்ணமே கொண்டு வாழ்ந்து வழி நடந்திட்டால், நிலையான இன்பம் பெற்று வாழ் வாங்கு வாழ்ந்திடலாம் என்றே எல்லாம் வல்ல அம்மகான்களைப் போற்றியே, வணங்கியே விழைகிறோம்.

அன்புள்ள

**எஸ். எஸ். எம். சுப்பிரமணியம்**
தலைவர்
சத்தியத்தின் சக்திநிலைச் சங்கம்
தலைமையகம்: பவானி - 638301.
பெரியார் மாவட்டம் – தமிழ்நாடு

ஓம்!

முப்பாலுக்கப்பால் எப்பால் பெற்றாலும்
ஞானப்பால் பெற்று ஒளியின்பால் சென்றாலும்
இப்பிறப்பால் பெற்ற தாயின்பாலுக்கு ஈடாகுமா?
என்ற களிப்பால் எண்ணப்பால் கொண்டாலே
இப்பாலுக்கப்பால் அப்பாலுக்கு இப்பால் நமதாகுமே.
குருவின்பால் ஞான அமிர்தப்பால் பெறவே
ஈசன்பால் கொண்ட அன்பால் எப்பாலும் பெறவைத்த
தாயின்பாலுக்கு ஈடாகுமா?

**3-9-79**

இக்கலி மாறி, கல்கிக்கு வரும் பொழுது, இவ்வுலகம் சுழலும் தன்மையில் சிறு அசைவின் மாறுதல் பட்டு மறுபடியும் அதே நிலைகொண்டு சுழற்சி சுற்றிக்கொண்டு இவ்வுலகம் இருக்கும் என்கின்றோம். இவ்வுலகின் நிலை மாறுவதைப்போல், இவ்வுலகுடன் தொடர்புடைய ஒவ்வொரு மண்டலங்களின் நிலையும் மாறுபடுகிறது. அந்நிலையில் மாறுபடும் பொழுது, இப்பொழுது இவ்வுலகிற்கு எந்தெந்த நிலைகொண்ட சக்திகளெல்லாம் இப்பூமி ஈர்த்ததோ அதைப்போல் இப்பூமியிலிருந்து, இப்பூமி வெளியிட்ட சக்தியை மற்ற மண்டலங்கள் ஈர்த்ததோ, அதன் நிலையும் மாறுபடுகிறது. எல்லா மண்டலங்களின் நிலையுமே அவ் ஒரு நொடிக்கும் குறைவான நேரத்தில் மாறுபடுகின்றது. இப்பொழுதுள்ள இவ்வுலகில் எல்லா ஜீவராசிகளின் நிலையுமே அதை ஈர்த்து வெளியிட்ட தன்மையில், பிறகும் சுழலும் சுழற்சியில், இதே நிலையில், அதன் நிலை வந்திடாமல் அதன் சக்தி நிலையும் மாறுபட்ட தன்மையில்தான் சுற்றிக் கொண்டு வரும், அடுத்த சுற்றலின்போது இருந்திடும். இப்பொழுது, வாழும் ஜீவராசிகளுக்கு மட்டும்தான் இந்நிலையா? ஆவி உலகில் உள்ளவர்களின் நிலையெல்லாம் என்ன என்பீர். அடுத்த சுழற்சியில் அவ்வாவி நிலையில் உள்ளவர்கள் எந்நிலையில் வந்து பிறப்பார்கள் என்பீர். அவர்கள் இப்பூமியில் வாழும் காலத்தில், எவ்வெண்ணத்தில், எந்நிலைகொண்ட சுவாசம் எடுத்தார்களோ அந்நிலையிலே தான் சுற்றிக்கொண்டு இருப்பார்கள் என்று முதல் பாடத்திலேயே சொல்லியுள்ளேன். இவ்வுலகம், இக்கலி முடிந்து கல்கியில் மாறுபடும்பொழுது, மற்ற மண்டலங்களில் இருந்து இப்பொழுது நாம் பெறும் சக்தி நிலையும் மாறுபடுவதினால் ஆவி நிலையில் உள்ளவர்

களின் எண்ணத்திற்கும் சுவாசத்திற்கும் உகந்த தன்மை, இப் பூமியில் கிடைக்காததினுல், அடுத்த சுழற்சியில் பல ஆயிரம் காலங்கள் ஆனுலும் ஆகலாம். அவர்களுக்கு உகந்த பிறப்பிடம் பெற்று, பிறவி எடுத்திட, இப்பொழுது மனிதர்களாக வாழ்ப வர்களுக்காவது சூட்சும நிலைபெற்று, எம்மண்டலத்திலும், எவ் வுடலையும் ஏற்கும் தன்மை வருகிறது. இப்பொழுது நாம் வாழ்ந் திடும் வாழ்க்கை பாக்கியம் பெற்ற வாழ்க்கை என்று கருத்தில் கொண்டு வாழ்வதுதான் உயர்ந்த வாழ்க்கை, உன்னத வாழ்க்கை. இவ்வாழ்க்கையை நிலைக்கச் செய்து, ஒவ்வொருவரும் வந்திடுவீர் சூட்சும நிலைக்கே. ஆவி உலகின் சிக்கலில் சிக்கிக் கொள்ளாதீர் என்பதனை உணர்த்துவேன் நாளையே.

**4-9-79**

அன்றுண்ட அரசர்கள் முதல் இன்று வரை நாம் எந்த நிலை கொண்டு வாழ்கின்றேம்? ஒவ்வோர் உயிரினங்களும் எப்படி எப்படி வாழ்கின்றன? என்பதனை முன் பாடத்தில் சிறுகச்சிறுக அளித்து வந்த பாடத்தினையே விவரித்தே அளிக்கின்றேன். பூதம் புதையல் காத்த கதை என்று கதையாகக் கேட்டிருப்பீர். பூதம் எங்குள்ளது? பேய், பிசாசு என்பது என்ன? என்பதனை அறிந்து வாழ்ந்திடவே இந்நிலையில் சொல்லி வருகின்றேன். பல நூறுயிரம் வருடங்களுக்கு முன் அன்றுண்ட அரசர்களின் நிலையெல்லாம் என்ன? தன் நாட்டைக் காக்க, தன் நாட்டு மக்கள் வாழ்வதற்கு, மேலும் மேலும் பொருள் சேர்க்க, ஒரு நாட்டுடன் ஒரு நாடு சண்டையிட்டே பல நாட்டைப் பிடித்து, பேரரசர் ஆக வேண்டும் என்ற வெறி நிலைகொண்டு, அவ்வரசனின் மன நிலையில், ஒரு அரசுடன் மற்ற அரசு சண்டை இடும் நிலையில், பல உயிர்ப் பலிகள் நடந்து, அவ்வுயிர்ப் பலி நடந்த இடத்தில் அவ்வாத்மாக்களின் நிலையென்ன? குரோத நிலையில், வெறியுணர்வுடன் பல ஆத் மாக்கள் சென்றன. இன்னும் பல, அன்று வாழ்ந்த மக்களிலேயே, ஒவ்வொரு நாட்டிற்கும் நடக்கும் சண்டையில், தனக்குகந்த ஒரு நாட்டிலிருந்து ஒரு நாட்டிற்குக் கடத்திச் சென்ற பல பொக்கிஷங் களெல்லாம் மறைத்து வைத்த நிலையில், அந்நிலையில் அதை மறைத்து வைத்த மக்களின் ஆவிகளும் எவ்வரசனின் பொக்கி ஷத்தை யார் யார் களவாடி எங்கெங்கு எடுத்துச் சென்றனரோ, அந்நிலையில் அன்றுண்ட அரசர்கள் இறந்த பிறகு, அவர்களின் ஆவி, அவர்களின் பொருளைக் களவாடிச் சென்றதின் நிலையை யறிந்து, களவாடிச் சென்றவர்களின் வம்சத்தைச் சேர்ந்தவர் களும் அதை எடுத்திடாமல் அவ்வாவிகள் அதைப் பூதமாகக் காக்கின்றன. அரசனின் வம்சத்தார் எடுக்கவும் முடிந்திடாமல்,

களவாடிச் சென்றவனின் ஆவி அந்நிலையில் இருந்தே காக்கின்றது. இப்பூமியில் பல நிலைகொண்ட பொன், பொருள், ஆபரணங்கள், விக்ரகங்கள் இன்றும் பூமியில் பூதங்கள் காக்கும் நிலையில் தான் உள்ளன. சில இடங்களிலிருந்து புதையல் எடுப்பதின் நிலை, அந்நிலையில் காத்து வந்த ஆவிகளின் சக்தியிழந்து, அது மனச் சலிப்புப்பட்டு, விரக்தி நிலையில் மறு ஜென்மம் எடுத்த பிறகுதான் இப்பொழுது சில புதையல்கள் கிடைப்பதுவும். அதுவும் அதன் தொடர்புடைய வம்ச வழிக்கு, வம்ச வழி என்பது அச்சொத்தை அடைய வேண்டுமென்ற உரிமை பெற்றவருக்குத்தான் அதை அடையும் தன்மையும் வருகிறது. அன்று ஆண்ட அரசர்களில் பலரின் நிலையும் இன்னும் இதே நிலையில்தான் உள்ளது. சகல சம்பத்துடன் சக்கரவர்த்தியாய் வாழ்ந்தேன் என்பவனின் நிலையும் இன்றும் பூதத்தின் நிலையில்தான் உள்ளது. பல நாடுகளைப் பிடித்தான், பல பொக்கிஷங்களைச் சேர்த்தான், ஆனாலும் ஆத்மாவிற்கு என்ன சேமித்தான்? பேராசையை, வீர முரசு என்று முழங்கிட்டே வாழ்ந்திட்ட சக்கரவர்த்திகளின் நிலையெல்லாம் என்னப்பா? வீழ்ச்சி பெற்று வந்திட முடியாது. அவர்கள் மீண்டு வருவதற்கு, அடுத்த கலியில் இவ் உலகப் பிரளயம் மாறி, புத்துயிர் பெற்று, இவ்வாவிகளெல்லாம் ஆரம்ப நிலை கொண்டு, அடுத்த பிறவியின் சுற்றலில், ஆத்மாவிற்கு, ஆத்மீக வழியை எடுத்து வாழும் நாள்வரை பூதமாகவும், பேயாகவும் அலையும் ஆவிகளுக்கு முடிவே இல்லாமல் உள்ளது. இப்பொழுது வாழ்ந்திடும் மக்களெல்லாம் இவ்வாவிகளின் பிடியில் சிக்கியுள்ளோம். இப்பிடியிலிருந்து மீள்வதற்கே இப்பாட நிலை. எந்நிலையில் சிக்கியுள்ளோம் என்பதனையே விளக்குவேன் நாளையே.

**5-9-79**

மக்களின் வாழ்க்கை நிலையிலும், ஆவியின் தொடர்பு கொண்ட நிலையில்தான் பலரின் நிலை உள்ளது. எண்ணம் நல் வழியில் சென்று, தெய்வ பக்தி கொண்டு, மனிதர்களின் எண்ணமெல்லாம் அவர்கள் செல்லும் வழிக்குத் தெய்வமாக அருள்புரிகிறார்கள், நாம் இப்போது போற்றி வணங்கிடும் சப்த ரிஷிகளும், ஞானிகளும், சித்தர்களுமே. நல் வழியை மாற்றி, நாம் நம் மனதை அடிமைப்படுத்தி வாழும் வாழ்க்கைக்கு, அந்நிலையிலெல்லாம் ஆசைகொண்டு சென்ற பல ஆவிகளின் தொடர்புகளை நம்முள்ளேயே, நமக்குத் தெரியாமலேயே, அவ்வாவிகளின் ஏவலுக்குகந்தவனாக, நம்மை நாம் அடிமைப்படுத்தி வாழ்கின்றோம் என்பதனை உணர்ந்தே வாழ்வதற்காகத்தான், இந்நிலையில் உணர்த்தி வருகின்றேன். காலம் காலமாக இவ்வாவிகளின் நிலை

யெல்லாம், நல் நிலையில் உடலை விட்டுப் பிரிந்த ஆவி சூட்சும, நிலைகொண்டு, தான் வாழ்ந்த குடும்பத்திற்கு, தன் அங்கத்தின் அங்கமாய், தான் பெற்று வளர்த்த மக்களின் நன்மைக்காக, பல நல்ல நிலைகொண்ட சக்தியை, தான் வாழ்ந்த குடும்பத்திற்கு, தன் இரத்தத் தொடர்புடைய பிள்ளைகள் காலம் வரை, தெய்வ மாக, அக் குடும்பத்திற்குத் தான் விட்டுச் சென்ற சில குறைகளை யும் பூர்த்தி செய்யும் நாள் வரை, அக்குடும்பத்திற்குப் பல உதவிகளை அக் குடும்பத்திலுள்ளோர் அறியாமலேயே அது செயல்படுத்தி, அக் குடும்பத்திலேயே தன் எண்ணத்தைச் சுழல விட்டு அவ்வாவியின் நிலை இருக்கிறது. அந்நிலையின் தன்மை பூர்த்தி பெற்ற பிறகுதான் தன் நிலைக்கு உகந்த உடல் கிடைத்த பிறகு மறு ஜென்மம் பெற்று, வாழ்க்கைக்கே வருகிறது. குரோதத்திலும், பேராசையிலும் தான் வாழ்ந்த நாளில் பல தீய பழக்கங்களுக்குத் தன்னை அடிமைப்படுத்தி வாழ்ந்த ஆவிகள் எல்லாம், ஆவி நிலைக்குச் சென்ற பிறகும், எந்த நிலையில் அவ் வாவி பிரிந்ததோ, அதே குரோத நிலையில்தான், அவ்வாவி அக் குரோதத்தை எந்த நிலையில் விட்டுச் சென்றதோ, குரோதம் கொண்டவர்கள் மூலமாகவும், தான் வாழ்ந்த நாளில் பெற்ற நல்ல நிலையில் இருந்த ஆவி எப்படியெல்லாம் தன் நிலையைச் செயல்படுத்தினவோ, அதேபோல் தான் இத் துர் ஆவிகளும் வந்து செயல் படுத்துகின்றன. இத் துர் ஆவிகளினால், அதன் சுவாச நிலைகொண்டு மற்ற மிருக உடலுக்கு எந்நிலையில் சென்று மனிதன் மிருகமாகும் மிருக இனத்திற்குச் சென்று வாழும் நிலைக்கு ஆளாகின்றான். வாழ்ந்த நாளில், நாம் எடுக்கும் வாழ்க்கைமுறை கொண்டுதான், மறு ஜென்மம் நமக்கு அமைவதுவும். இன்று மனிதர்களுக்கு உள்ள எண்ணமும், செயல் திறமை, அறிவு அனைத்துமே மிருக ஜெந்துக்களுக்கும் பறவைகளுக்கும் உண்டு. மனிதனைக் காட்டிலும் பறவைகள், மிருகங்கள் இவைகளுக்குத் தன் போன சரீரத்தின் நிலையெல்லாம் தெரிந்திடும். நாயின் நிலைக்கு அனைத்து நிலையுமே தெரிந்திடும். ஆனால் அவைகளுக்குச் சொல் லாற்றலும், நம்மை ஒத்துச் செயல்படுத்த அங்கங்களும் இல்லாததினால் தான் விட்டுச் சென்ற குறையை எண்ணியே மிருகமாக வாழ்கின்றன. மனிதன் அம் மிருகத்தைத் தன் நிலைக்கு அரும் பெரும் சுவையாக்கிச் சமைத்து உண்ணுகின்றான். இவன் உண்ணும் நிலையும் ஆவியாகி அம் மிருகத்திற்குத் தெரி கின்றது. அம் மிருக உணவை, பறவைகளின் உணவை நாம் புசிப்பதினால் நம்முள்ளேயே நாம் அவற்றின், அவ்வுடல்களில் எந்த எந்த அணுக்களின் தாக்கல்கள் இருந்தனவோ, அவற்றை யெல்லாம் நம்முள்ளும், தாம் ஏற்றிக் கொள்கின்றோம். இவ் வுலகில் பல நிலைகொண்ட ஆவித்தன்மை உள்ளபொழுது, அவ்

வாவி அணுக்களுக்கு, நம்மை நாம் அடிமைப்படுத்திடாமல் வரும் தடங்கல்களை எல்லாம் நாம் போக்கி, நம்முள் உள்ள சிறு சிறு மனச் சஞ்சலங்களையும், நம்மையே சுற்றிக் கொண்டில்லாமல், இந் நிலையையெல்லாம் புனிதப்படுத்தி வாழ்ந்திட வேண்டும். இவ் வாவிகளின் நிலையே பல நிலையில் உள்ளன. இன்று தாஜ்மஹால் என்ற நிலையில் உள்ள மும்தாஜ் என்னும் ஆவியின் நிலையென்ன? அவ்வாவி இன்னும் அத் தாஜ்மஹாலிலேயே, அந்த நிலையி லேயே சுற்றிக்கொண்டுள்ளது. எந்த எண்ணத்தைப் பூர்த்தி பெரு மல் விட்டுச் சென்றதோ, அதே நிலையில் தான் இன்னும் உள்ளது அவ்விரண்டு ஆவிகளுமே. ஷாஜஹான் என்னும் ஆவியும், அவ் வாவிகளுக்கு அதற்கு மேல் நிலைக்குச் செல்லும் நிலைக்கும் ஆசைப் படவில்லை, மறு ஜென்மத்திற்கும் வரவில்லை. சூட்சும நிலைக்குச் செல்வதற்கும் முடியவில்லை. ஆனல் அவ்விரண்டு ஆவிகளுமே ஆனந்த நிலையில்தான் இன்றும் அந்நிலையில் உள்ளன. அவையின் நிலை என்றுமே அந்நிலையிலேதான் இருந்திடும், ஆனந்த நிலையில் அன்புடனே வாழ்ந்து வருகின்றன அவ்விரண்டு ஆவிகளுமே, அம் மாளிகையில். வாழ்ந்த நாளில் இரண்டும் இணைந்து வாழாத நிலையில், ஆவி நிலையில் இணைந்த காவியக் காதலராய் இன்றும் வாழ்கின்றார்கள் அவ்விரண்டு ஆவிகளுமே.

இந்நிலைபோல் இவ்வாவி உலகில் பல நிலைகள் உள்ளன. ஒவ்வொன்றையும் விளக்கிடுவேன் நாளையே.

**6-9-79**

ஆவியின் தொடர்புடன் தான் பல அணுக்களின் உந்தலினால் நாம் வாழ்ந்திடும் வாழ்க்கை என்றேன். தாஜ்மஹாலின் நிலையை விளக்கினேன். இங்கு பல கோயில்களின் நிலையும் அதுபோல் தான். தஞ்சாவூர் பிரஹதீஸ்வரர் கோவில் நிலையென்ன? அங்கு ஆண்ட இராஜராஜ சோழனின் எண்ணமேதான் அக்கோயில். எவ்வெண்ணம் வைத்து அவ்வரசன் அக்கோயிலை ஸ்தாபிதம் செய்தாரோ அதே எண்ணம் கொண்டே, அவ்வரசர் உடலை விட்டு அவ்வாத்மா பிரிந்த பிறகும், அந்த நிலையிலேயே, அவ் வாத்மா அங்குள்ளது. இன்றும் மறு ஜென்மம் எடுத்திடாமல், சூட்சும நிலைக்கும் சென்றிடாமல், ஆசையின் நிலையிலேயே அவ் வாத்மா அங்கே சுற்றிக்கொண்டுள்ளது. இதைப் போல்தான் பல கோயில்களின் நிலையும். அன்று வாழ்ந்தவர்களின் மன நிலை யைப் பொறுத்தே கோயில்களை எழுப்பினார்கள். இங்கு வாழும் மக்களின் எண்ணமும், இங்கு வாழ்ந்தவர்களின் எண்ணத்தின் தொடர்புடன்தான் உள்ளன. ஒவ்வோர் இடத்திலும் வாழ்ந்த

வர்களின் எண்ணம், எந்தெந்த நிலையில் உடலைவிட்டுப் பிரிந்து சென்றனவோ, அதே நிலையில் தான் அவர்கள் வாழ்ந்த பூமியில் வாழ்பவரின் எண்ணமும். தன் எண்ணத்திற்கு உகந்த செயல் படுத்த, அவ்வெண்ணத்திற்கு உகந்தவர்களின் உடலில் அவ் வாத்மா சென்று தன் எண்ணத்தைச் செயல் படுத்துகிறது. ஒவ் வொரு மனிதனின் நிலையும் இந்நிலையா? பிற ஆவிகளின் தொடர் பில்லாமல் யாருமில்லையா? இங்கு மட்டும்தான் இந்நிலையா? இவ் வுலகின் மற்ற பாகங்களில் உள்ளவர்களின் நிலையெல்லாம் எந் நிலை? இப்படிப் பல வினாக்கள் எழுந்திடலாம் இதைப் படிப்பவர்கள் ஒவ்வொருவருக்குமே. மன நிலையில் நமக்குள்ள அதி பேராசையும் அதி கோபம், துவேஷம் இந்நிலையை நாம் வளரவிடும் பொழுது, பல ஆவிகள் நம்மைத் தாக்கும் நிலைக்கு ஆளாகித்தான் ஒவ் வொருவருமே வாழ்கின்றோம். முன் ஜென்மத்தில் நமக்கிருந்த எண்ணத்திற்கும், இஜ் ஜென்மத்தில் வாழும் முறைக்கும் தொடர் புள்ளதினால், ஒரே குடும்பத்தில் வாழ்ந்திடுபவர்களுக்கும், எண்ண நிலை மாறுபடுகிறது. நம் எண்ணத்திற்கு உகந்த அணுக்களின் தன்மையும் நமக்குள் குடிபுகுகின்றது.

விதையொன்று போட்டுச் செடி ஒன்று முளைப்பதல்ல. எண் ணத்திற்கு உகந்த ஆவிகளின் தொடர்பு, ஒவ்வோர் உடம்பிலும் உள்ளன. இந்நிலையிலிருந்து நாம் விடுபட, நம் நிலையில், அத் தெய்வ பக்தி என்ற ரூபப் படுத்தி, நம் முன்னோர்கள் வழி காட்டிய, நம் முன்னோர்களென்பது, சூட்சும நிலையில் வாழ்ந்திடும் ஆண்டவன் ரூபத்திலுள்ள அரும்பெரும் ஜோதிகள் வழிகாட்டியபடி அஹிம்சையையும், அன்பையும் ஏற்றே பேராசை யையும், பெரும் கோபத்தையும் நம்மை அண்டவிடாமல் வாழ்வதுவே நல் வாழ்க்கை. அவ்வழியினைப் பிடித்து, நம்மைச் சுற்றியுள்ள பல ஆவிகளின் ஏவலுக்கு நாம் ஆளாகாமல், இந் நிலையை அறிந்து வாழ்வதுதான் உத்தமம். ஜோஸ்யம் கண்டு வாழ்வதுவும், ஆவியின் தொடர்புடன்தான். மை போட்டுக் கேட் பதுவும் ஆவியின் தொடர்புடன்தான். பூ கட்டிக் கேட்பதுவும், கோயில்களில் அருள் வந்து ஆடுபவர்களைக் கேட்பதுவும் ஆவியின் தொடர்புடன்தான். வழிவழியாய் வந்தவர்கள் எண்ணத்தில் இருந்து வந்ததுவே ஆண்டவனின் நாமத்தைச் சொல்லித் தன் எண்ணத்தைச் செயல்படுத்த இவ்வாவிகளெல்லாம் வந்து ஆடு வதுவே, இன்று நாம் காணும் நிலையெல்லாம். இன்று நாம் வாழும் இந்நாட்டில் ஆண்டவனின் ரூபத்தில் ஆவியின் தொடர் பாட்டத்தைக் காண்கின்றோம். இவ்வுலகில் ஒவ்வொரு பாகத்தி லும் ஆங்காங்கு வாழ்ந்த மக்களின் எண்ணம் ஒவ்வொரு ரூபத்தில், அவர்கள் ஆவி உலகிற்குச் சென்ற பிறகும், இப்பொழுது வாழ்ந்

திடும் மக்களின் ரூபத்தில் வந்தே தான் செயல்படுத்துகிறுர்கள். ஆவியின் தொடர்பில்லாமல் எத்தேசத்திலும், எந் நிலேயும் நடக்க வில்லே. விஞ்ஞானியாய், விஞ்ஞானம் பல கண்டு வாழ்பவனுக்கும், அவன் வழியில் இருந்த ஆவியின் தொடர்பினுல் தான் இவன் விஞ்ஞானமும் வளர்கிறது. ஒவ்வொரு பாகத்திலும் இவ் வாவியின் தொடர்பு கொண்டுதான் வாழ்கின்றுர்கள் மக்கள் எல்லாருமே. தன் நிலே உணர்ந்து வாழ்பவர்கள்தான் சூட்சும உலகிற்குச் செல்கிறுர்களே தவிர, ஆவியின் தொடர்பு கொண்டு வாழும் ஒவ்வொருவரும் அடுத்தடுத்தே பல பிறவியை எடுக்கின் றுர்கள். பல பிறவியில் மனிதராகவே பிறவி எடுத்தாலும் நன்றே. ஆனுல் மனிதப் பிறவி மாறுபட்டு மிருகமாகி மிருகத்திற்கும் கீழ் நிலேக்குச் சென்று, புழுவாகி, விமோசனமே இல்லாமல் இத் தெய்வமான மனித வாழ்க்கையை ஏன் சிதற விட்டு அழுகும் அணுக்களாக அல்லல்பட்டுச் சுற்றிக்கொண்டே இருக்க வேண் டும்? மனித ஜென்மத்திலிருந்து மாறுபட்டு, மிருக ஜென்மத்திற்கு வந்தாலே, மனித ஜென்மத்தில் நடந்தவை எல்லாமே, மிருக ஜென்மத்தில் தெரிந்திடும். நடந்தவையை நின்த்தே மிருகமாகி ஒவ்வொரு ஜென்மத்திலும் விட்ட குறையெல்லாம் தெரிந்தே ஏன் அல்லல்பட்டு வாழ வேண்டும்? இவ்வுடல் என்னும் மாய ரூபம் தான் மாறுபடுகிறது. நம் எண்ணம் என்றுமே அழிவதில்லே. நம் ஆத்மாவுடனேதான் நம் எண்ணமும் சுற்றிக் கொண்டுள்ளது. இந்நிலேயில் நாம் இருப்பதனே உணர்ந்து ஒவ்வொருவரும் வாழ்ந் திடவேண்டும். பல கோயில்களின் நிலேயும் எந்த நிலேயில் உள்ளன என்றே விளக்கிடுவேன் நாளேயே.

**7-9-79**

அன்றுண்ட அரசர்கள் தன் பெயர் நிலேக்க, தன் புகழ் ஓங்க, கோயில்கள் மூலமாகத் தன் பெயரை நிலேநாட்டினுர்கள். கோயில்கள் ஸ்தாபிதம் செய்து, அந்நிலேயில் பல கல்வெட்டுகளில் தன் பெயர் நிலேக்க, தன் புகழின் ஆசைக்காக, தன்னுல் எழுப்பிய கோயிலிலேயே தன் பெயரையும் கல்வெட்டில் செதுக்கி வைத்து, அவர்கள் பெயர் என்றுமே அழியாமல் இருக்க வேண்டுமென்றே, புகழ் ஆசையினுல் பல கோயில்களேக் கட்டினுர்கள். புகழின் ஆசை யில் வந்ததுதான் இன்று நாம் சென்று வணங்கும் பல கோயில்க ளின் நிலே. அக்கோயிலே ஸ்தாபிதம் செய்த, அவ்வரசர்களின் ஆவி களும் அந்நிலேயிலேயே தான் சுற்றிக்கொண்டுள்ளன. இன்று நாம் வாழ்ந்திடும் இந்நாட்டில், ஆண்டவனின் பெயரையே தன் புகழுக் காகத்தான் அன்றுண்ட அரசன் முதல் இன்று வாழ்ந்திடுபவர் வரை எண்ணி வணங்குகின்றேம். ஆண்டவன் என்பது எந்நிலே யில் உள்ளது பார்த்தாயா?

அன்று இருந்தவர்களின் குண நிலையைப் பொறுத்துத்தான், இன்று வாழும் மக்களின் நிலையும் உள்ளது. வழி வழியாய் வந்த மக்களின் சுவாச நிலை மாறுபடவேயில்லை. மனித உடலை விட்டு ஆவி உலகுக்குச் சென்றாலும், தன் எண்ணத்தைச் செயல்படுத்திட அவ்வாவிகளுக்கு ஆசையும் அடங்கவில்லை. அவ்வெண்ணத்தின் தொடர்ச்சியில் வரும் எண்ணம்தான் இப்பொழுது உள்ளவர்களின் நிலையும். புகழ் ஆசையினால் வந்த வினைதான் இன்று இவ் உலகம் உள்ள நிலையும். புகழுக்காக ஏங்கிடும் எண்ணம்தான் எல்லோருக்குமே இன்று உள்ளது. இன்றிருப்பவரின் மனநிலை, அவர்கள் செய்த நிலை மட்டுமல்ல, தொடர்ந்து கொண்டே வரும் பல ஆவிகளின் தொடர்தான். புகழ் என்னும் பேராசைக்கு அடிமைப்பட்டதினால், இன்றுள்ள எல்லோரின் மனமும் புகழ் ஒன்றுக்கே எண்ணி ஏங்கும் நிலையில் உள்ளது. காலத்தையே விஷமாக்கியவர்கள் அன்றாண்ட அரசர்கள்தான்.

மனிதர்களின் மனதையெல்லாம், பேராசைக்கு உட்படுத்தியவர்களும் அவ்வரசர்கள்தான். அவ்வெண்ண நிலை இன்றும் இங்கு மாறவில்லை. பல கோயில்களில் ஆண்டவனின் விக்ரகங்கள் களவாடும் நிலை எப்படி வந்தது? கயவனை அவ் வாண்டவன் பிடித்துத் தரக்கூடாதா? அவனுக்கு நல்வழி புகட்டக் கூடாதா? என்றெல்லாம் ஆண்டவனை நாம் பல வினாக்களைக் கேட்கின்றோம். கல்லான விக்ரகம்தான் ஆண்டவன் என்பது எடுத்துச் செல்பவன் தான், அவனின் எண்ணத்தின் பேராசையினால் களவாடிச் செல்கின்றான். கல் என்ன செய்யும்? சில கோயில்களில் களவாடிச் செல்லும் விக்ரகங்கள் எடுத்துச் செல்பவன், உதிரம் கொட்டி இறப்பது எந்நிலையில்? அக் கோயிலை ஸ்தாபிதம் செய்த ஆவி வந்து, அவனை அடித்துக் கொன்று விடுகிறது. ஆவியின் நிலையும் தொடர்பில்லாத சில கோயில்களில்தான், அவ்விக்ரகங்கள் களவு போகும் நிலையில் உள்ளன. ஆவி நிலையில் உள்ள எந்தக் கோயிலின் விக்ரகமும் களவாடிச் செல்பவனின் நிலையைப் பார்த்து, அவனை விட்டுவைத்திடாது. பல கோயில்களின் நிலையும் இந்நிலையில்தான் இன்றுள்ளது. ஆண்டவன் என்னும் ஆண்டவனையே இந்நிலைக்கு வந்ததின் நிலையெல்லாம், அரசர்களினால் வந்த வினைதான். தெய்வ பக்தியும், நல்லொழுக்கமும், நற்போதனையும் மக்களின் எண்ணத்தில் பதியச் செய்து, ஆத்மீக வழியில் அன்புடன் வாழ்வதற்கு வழியமைத்துச் சென்றிடாமல், இக்கலியின் காலத்தையே விஷமாக்கி, இவ்விஷத்தின் தொடர்புடனே வாழ்கின்றான் ஒவ்வொரு மனிதனும். இந்நிலையில் ஜாதி, மதம் என்ற வேலி வேறு. இந்நூலைப் படித்திடும் ஒவ்வொருவரும் தன் எண்ணத்தைத் தூய்மைப்படுத்துங்கள். சத்தியத்தை உம்முள்

ஐக்கியப்படுத்துங்கள். அன்பையே ஆண்டவனுக்கி வணங்கிடுங்கள். தெய்வத்தைக் கண்ட பேரானந்தப் பொக்கிஷத்தை, நம் ஆத்மா என்ற ஆண்டவனுக்கு அற்பணித்தே வாழ்ந்திடலாம். ஒவ்வொருவரும் இவ் விஷத்தன்மையில் இருந்து மீண்டு, தன்னைத் தானே உணர்ந்து வாழ்வதற்கே இப்பாட நிலையும், ஜெப நிலையுமே.

**8-9-79**

ஆவியின் தொடர்பில்லாமல் வாழ்வது மிகவும் கடினமான நிலை. தன் எண்ணத்தைச் செயல்படுத்திட எந்த ரூபத்திலும் அவ்வாவி செயல்படுத்திடும். அவ்வாவியின் எண்ணமெல்லாம், தான் முன் ஜென்மத்தில் விட்டு வந்த குறையை எந்தெந்த நிலையில், யார் யார் மேல் அன்பு, பாசம், ஆசை, குரோதம், வெறுப்பு, விருப்பு இவை எல்லாவற்றையுமே, எந்த ரூபத்திலும், அவ்வெண்ணத்திற்குகந்தவர்கள் கிடைத்தவுடன் அவர்களின் உடலில், எப்பாகத்திலும் ஏறி, அவர்கள் எண்ணத்துடனே கலந்து, தன் நிலையைச் செயல்படுத்திக் கொள்ளும். நம் குடும்பத்தில் இருந்து பிரிந்து சென்ற ஆவிகள் மட்டும் நம்மை வந்து காத்து, செயல்படுத்தும் என்பதல்ல. இவ்வுலகில் சுற்றியுள்ள எந்த ஆவியும் தன் எண்ணத்தைச் செயல்படுத்திடத் தனக்குகந்த உடலை எடுத்துக் கொள்கிறது. ஆவியின் நிலை இந்நிலையில் உள்ளதினால் இதையுணர்ந்த, ஜெபம் கண்ட நம் முன்னோர் பலர், இந் நிலையிலிருந்து மக்களை மீட்கத்தான் பல வழிகளை நமக்கு உணர்த்தினார்கள். இவ்வுலகம் முழுவதுமே ஆண்டவன் என்றால் யாரென்று சொல்கிறார்கள்? ஒவ்வொரு நிலையிலும், ஒவ்வொரு நிலைப்படுத்தித் தான் வணங்கும் பக்தியைக் கொண்டே, அவர்களுக்கு உகந்த நிலையை ஆண்டவனுக்கி வணங்குகின்றார்கள். அனைத்து உலகிலுமே இவ் ஆவி என்னும் பயந்த கிலி நிலை பரவித்தான் உள்ளது. பலரின் கண்களுக்கு ஆவியின் நிலை புலப்படுவதையும் கேட்டிருப்பீர். சில நிலைகளில் ஆவியின் நிலையையே, ஆண்டவனாக வணங்குகின்றார்கள். சக்தி நிலையறிந்து சக்தியான அவ் வாண்டவனைக் கண்டவர்கள் யார் உள்ளார்கள்? நம் ரிஷிகள் எல்லாரும், நம்மை இவ்வாவியின் நிலையில் இருந்து தப்ப, பல ஜெப வழிகளை நமக்குணர்த்தி அச்சக்தியிலிருந்து தான் பெற்ற பல நல் உணர்வுகளை நமக்கு ஊட்டினார்கள். அந் நிலையில்தான் கோலமகாரிஷி அவர்கள், தன் ஜெபத்தை, தான் பெற்ற அருள் செல்வத்தை, அனைவரும் உணர்ந்து, நல் வழிக்கு மக்களைச் சீர்படுத்த ஆதிசங்கரரின் உடலில், அவர் நிலை ஏற்றி, ஆதி சங்கரரையே அனைவரும் தெய்வ

மாகக் காணும் நிலைக்கு, அவர் உடலில் இவர் இருந்து பல செயல்களைச் செய்து வந்தார், ஆதிசங்கரரின் ரூபத்திலேயே. அவர் சொல்லி வந்த உபதேசங்களை வழி நடத்திடப் பல இடங்களில் பல மடாலயங்கள் அமைத்தார்கள். அந்நிலையையே வழி வழியாய் இன்று மக்களுக்கு உணர்த்துவதற்காக சங்கராச்சாரியார்கள் என்று மத வழியை, அவ் வழியில் புகட்டி வழி நடத்தி வருகின்றனர்கள். நல்வழியில் வந்த நிலைதான் ஆதிசங்கரரின் நிலை. அனைவரையும் ஒன்றுபோல் எண்ணும் நிலைக்கு இல்லாமல் மாறியதின் நிலை இன்றுள்ள நிலை. பக்தி மணம் உள்ளது, பக்தி மணத்தில் எல்லா மணமும் ஒன்றே என்னும் ஒரே மணத்தைப் பரப்பவிடாமல், அம் மணத்துடன் சிறு விஷமான மணமும் கலக்க விட்டு விட்டார்கள். இந்நிலையில் சிறிதளவு மாற்றும் தன்மை இன்று வந்தாலும், அவர்கள் வழியிலேயே உலகத்தையே தெய்வ மணமாக்கிடலாம். இவ் ஈஸ்வரபட்டனாகிய நான், இக்கலியின் ஆரம்பத்தில் ஓர் உடலை ஏற்று இப்பக்தி மணத்தைப் பரப்பியதுவும் ஜாதி நிலையில் இருந்துதான். ஜாதியின், மதத்தின் நாமத்தைச் செப்பிட விரும்பாததினால் இந்நிலையில் செப்பவில்லை நான். வழி வழியாய் வந்த வினைதான் இவ்வினை. நாமாக ஏற்ற நிலையல்ல, நாமாக மீளும் நிலையைத்தான் இனி அனைவரும் எண்ணத்தில் கொண்டு செயல்படுத்திட வேண்டும். ஆதி சங்கரராய் வணங்கிடும் கோலமாரிஷி அவர்கள் இன்றும் உள்ளார். என்றும் இருப்பார். இன்று அவர் நடத்திச் சென்ற வழியில் வந்த சங்கரர் வழியில் இருந்திடும் பல ஜெபங்கள் செய்து, பூஜிப்பவர்கள் அவருடன் தொடர்பு கொள்ள வேண்டுமென்றால் அவரிடத்திலுள்ள சிறு கறையையும் நிறைவாக்கி ஜெபம் பெறும் பொழுது அந்த ரிஷிகளின் தொடர்பு பெற்று இன்று மகான் என்ற, இன்றுள்ள மனிதர்களால் நாமம் பெற்றவர்கள் சப்த ரிஷிகளின் சொல் நாமத்தை ஏற்றிடலாம். மாமகான் என்ற நாமத்துடனே பல ரிஷிகளுடனும் கலந்திடலாம், இப்பாக்கியத்தை எண்ணி வழியமைத்து வந்திட்டாலே.

எண்ணத்தில் களங்கமில்லை, சொல்லிலும் களங்கமில்லை, தானமைத்த வேலியில் இருந்து மீள வழியுமில்லை (இன்றுள்ள) சங்கராச்சாரியார்கள் அவர்களுக்கு.

**13-9-79**

சக்தியின் சக்திகள்தான் சகலருமே. பாகுபாடு வந்ததெல்லாம் மனிதரின் எண்ணத்தில்தான். அனைத்து உலகமுமே எந்நிலையில் அமைந்தன? அனைத்து உலகத் தன்மையுமே ஆவிதா

னப்பா. அவ்வாவியே சக்தி தானப்பா. அவ்வாவியை எவ்வுலகத்தி லும் காணலாம். நீ காணும் சூரியனும் ஆவிதான்; சூரியனைச் சுற்றியுள்ள 48 மண்டலங்களும் ஆவிதான். நட்சத்திர மண்டல மாகக் காணும் பல கோடி மண்டலங்களும் ஆவிதான். இவ்வுலக மும், நீர், நெருப்பு, மாடு, மனை, நீயும்தான், அனைத்துமே ஆவிதான். உன்னைப் படைத்த, சகலத்தையும் படைத்த, அச் சக்தியே ஆவிதான். ஏன் சகலமுமே ஆவிதான். சகலத்தில் வந்த ஆவியின் பிம்பம் தான் இன்று நாம் காணும் அனைத்துமே. ஆவி என்றாலே பேய், பிசாசு என்று மக்களின் மனதில் பீதியை ஏற்படுத்தி விட்டார்கள். இப் பீதியை ஏற்படுத்தி யாவரும் அவ் வெண்ணத்தில் கலந்த பயத்தினால் வந்ததுதான். இவ்வாவி என்றாலே, உடலை விட்டுப் பிரிந்து செல்லும் ஆத்மாவையே, ஆவி உலகம் என்ற உலகமாக்கி, எல்லோர் நினைவிலும் ஆவி என்றாலே அரண்டு நினைக்கும் நிலையில்தான், காலம் காலமாகப் பழக்கத்தில் வந்துவிட்டது. ஆவியுடனே ஆவியாக வாழும் நாம், நம்மைப் போல் வாழ்ந்த உடலை விட்டுச் சென்ற ஆவிகள், தன் எண்ணத்தின் நிலைகொண்டு, அது அது எடுத்த சுவாச நிலையின்படி சுற்றிக் கொண்டுள்ளது. வாழ்ந்த காலத்தில் நல்லவனாகவும், தீய நினைவு கொண்ட விஷம் படைத்தவனாகவும் வாழ்ந்ததை நிலைப்படுத்தி, தன் குரோதத்திலும், நல் நிலையில் உள்ள நல் ஆவியும் சுற்றிக் கொண்டே உள்ள இவ்வுலகினிலே, தன் எண்ணத்தை முதலில் செயல்படுத்தி, பிறகு பிறவி எடுக்கலாம் என்ற நிலையில், பல ஆவிகள், உடலை விட்டுச் சென்ற ஆவிகள், உடலுடன் உள்ள ஆவிகளுடன், உடலுடன் உள்ள ஆவிகள் என்பது இப்பொழுது உள்ள மனிதர்களைத்தான் குறிப்பிடுகின்றேன். எண்ணத்துடன் கலந்து செயல்படுத்திட இரண்டு எண்ணமும் ஒரு நிலைப்படும் பொழுது, உடலுடன் உள்ள ஆவிகளின் உடலில், உடல் கூடு இல்லாத ஆவிகள், அதன் நிலையைச் செயல்படுத்திட இவ்வுடலில் ஏறுகிறது. இவ்வுடலில் வந்து ஏறிய ஆவிகளினால் அவ்வுடலில் இருந்து கொண்டே, தன் எண்ணப்படியெல்லாம், உடலுடன் உள்ளவரை செயல்படுத்துகிறது. பல துர் ஆவிகளின் நிலைக்கு ஆளாகும் உடலுடன் உள்ளவர்களுக்கு, அவர்களின் எண் ணத்தை நல்ல நிலைப்படுத்திட, அவ் வாவிகள் அவர்களை விடுவ தில்லை. நாம், அவர் செய்யும் பாவங்கள் என்று எண்ணுகின்றோம். பாவத்தை அவன் மட்டும் செய்யவில்லை. அவனை ஆட்டுவிப்பது அத் துர் ஆவியின் நிலைதான். அறியாமல் தன் எண்ணத்தில் களங்கு வைத்திருப்பவனுக்கு, துர் ஆவிகளின் செயலுக்கு, தன்னை அடிமைப்படுத்தி வாழ்கின்றான் என்று உணர்ந்து வாழ்ந்தால், தன் எண்ணத்தைச் சுத்தப்படுத்தி, புனித வாழ்க்கை வாழ்ந்து, இத் துர் ஆவியின் நிலையிலிருந்து தன் நிலையை உயர்த்தி வாழ

வேண்டும். பேய் பிடித்துள்ளது, பிசாசு பிடித்துள்ளது, ஆவியை ஓட்ட வேண்டும் என்றெல்லாம் ஆவியை ஓட்ட வேப்பிலை தட்டி, பலவித ஒலிகளை எழுப்பும் வாத்திய இசையை இசைத்து, அவ் வாவியை ஓட்டுவதாகச் சொல்கிறார்கள். எவ்வாவியை, யார் ஓட்டமுடியும்? அவ்வாவிக்குப் பிற உடலில் ஏறி, தன் எண்ணத்தை செயல்படுத்திடத்தான் முடிந்திடுமே தவிர, உடலில் இருந்து வெளி வந்திட அவ்வாவிக்கு சக்தியும் திறமையும் இல்லை. அவ் வுடல் என்று மாறுபடுகிறதோ, அதனுடன்தான் இவ்வாவியும் வெளிப்படுகிறது. பிற உடலில் ஏறிய இவ்வாவியினால் மனித ஜென்மத்திற்கு ஜெனனத்திற்கு வர முடிந்திடாது. ஆண்டவன் சக்தியில் அருளிய ஏழு ஜென்மங்களையே பல ஆவிகள் பயன் படுத்திடாமல், ஆவி உலகிலும் தன் ஆசையை செயல் படுத்திட, மற்ற உடலில் ஏறி, தன் ஆத்மாவுக்கு அடங்காத இன்னலைத் தானே தேடிக் கொள்கிறது. ஒருவர் உடலில் இருந்து அவர் ஆவி பிரிந்து செல்லும்பொழுது அவ்வுடலுக்குச் சொந்தமான ஓர் ஆவி மட்டுமா பிரிந்து செல்கிறது? அவ்வுடலுடன் இருந்த பொழுது அவன் ஏற்றிக்கொண்ட பல ஆவிகளுமே பிரிந்து செல்கின்றன. அவன் உடலில் ஏறிய ஆவிகளின் சுவாச நிலை மாறுபட்டு, பலப் பல புதிய புதிய இன வர்க்கங்கள் வருவதுவும், இம் மனித மனங் கள் எடுத்த சுவாசத்தின் நிலையிலிருந்துதான். துர் ஆவியைப் போலவே நல் நிலையில், நல் சுவாசம் கொண்டு, பல நிலைகளைத் தன்னுள் காணும் ஒவ்வொருவருக்கும், அந்நிலையில், அவர் உட லில் ஏறிய ஆவிகளும், அவர் எடுத்த, அவ்வுடலுடன் உள்ளவரின் சுவாச நிலைகொண்டு, அவ்வுடலில் ஏறிய, நல் நிலைபெற்ற ஆவிகளும், இவ்வுடலுடன் இருந்தவனின் ஆத்மா பெறும் பாக்கி யத்தையே அவையும் பெறுகின்றன. தன் ஆத்மா மட்டும் சாந்தி பெறுவதல்ல. பல ஆத்மாக்களுக்கும் விமோசனம் கிடைக்கின்றது. இதைப் படிப்பவர்கள் எண்ணலாம், உடலை விட்டுப் பிரிந்த ஆவிக ளுக்கு மட்டும் மற்ற உடலில் ஏறினால் வெளிவரும் சக்தியில்லையே, இன்று இப் பாட நிலையிலேயே மற்ற முனிவர்களும், சித்தர்களும் ரிஷிகள் மட்டும் தன் சக்தியை எந்நிலையில் செயல்படுத்துகிறார்கள் என்று. இதையும் விளக்கிடுவேன் நாளையே.

**14-9-79**

இந்நிலையை அறிவதற்கு முன் இவ்வுலகின் நிலையை முதலில் அறிந்திடுவோம். நேற்றைய பாடத்தில் அனைத்துமே ஆவிதான் என்று உணர்த்தினேன். எந்நிலை என்று அறிந்திட எண்ணுவீர். இவ்வுலகம் எப்படித் தோன்றியது? மற்ற மண்டலங்கள் எப்படித் தோன்றின? இவ்வுலகம் தோன்றிய நாள் முதற் கொண்டே இதே

அளவுடன் தான் உள்ளனவா? இவ்வுலகின் நிலையென்ன? என்று அறிந்திட எண்ணுவீர். ஆவியான உலகங்கள் தான் அனைத்து உலகங்களுமே. உலக ஆரம்ப காலத்தில் உலகம் எப்படித் தோன்றியது? இக்காற்றுடன், இக்காற்றே ஆவிதான். காற்றுடன் கலந்துள்ள நீரும் சகல சக்திகளும் கலந்துள்ள இவ்வாவி காற்றில் கலந்துள்ள அமிலங்கள் ஒன்றுடன் ஒன்று கலந்து, திடப்பொருளாகி அத் திடப் பொருளில் உள்ள காந்த சக்தியினால் பல அமிலத் தன்மைகள் உள்ள திட பிம்பங்களை தன்னுள் ஈர்த்து, அதுவே சுழலும் வேகத்தில் இக்காற்றினில் கலந்துள்ள சகல அமில சத்தையும் தன்னுள் ஈர்த்து, ஒரே கோளமாக ஆனது தான் இப்பூமியின் நிலையும். இதைப்போலத்தான் மற்ற பூமிகளின் நிலையும். சிறுகச் சிறுக ஈர்த்துத்தான் இவ்வுலகமே ஆனதப்பா. இக்காற்று மண்டல ஆவியில் கலந்துள்ள அமிலத் தன்மையினால் வளர்ந்தது தான் இப்பூமி. எந்த நிலைகொண்ட அமிலத்தை ஈர்த்து இப்பூமி வளர்ச்சி பெற்றதோ, அதே நிலைகொண்ட அமிலத்தைத்தான் இன்றும் ஈர்த்து வளர்கிறது. இவ்வளரும் நிலை இந்நிலைகொண்டேதான் வளர்ந்து கொண்டே உள்ளனவா? வளர்வதற்கு சக்தியான அமிலம் எங்கிருந்து வந்து கொண்டே உள்ளது என்றும் எண்ணுவீர். இவ்வுலகம் எந்நிலை கொண்டு வளர்ந்ததோ அந்த நிலை கொண்ட சுவாச நிலைகொண்ட உயிர் அணுக்கள்தான் இன்று இவ்வுலகிலுள்ள உயிரணுக்களின் தன்மையெல்லாம். இவ்வுயிரணுக்களின் சுவாச நிலையும் இவ்வுலக சுவாச நிலையும் ஒன்று போல்தான் இருந்திடும். இவ்வுலகின் சுவாச நிலையை மற்ற மண்டலங்கள் ஆவியாக ஈர்க்கின்றன. இவ்வுலகம் எப்படி ஆவியான அமிலத்தைத் தன்னுள் ஈர்த்து வளர்த்துக் கொண்டதுவோ, அதைப் போல் இவ்வுலகம் வெளிப்படுத்தும் சுவாச நிலையை மற்ற மண்டலங்கள் ஈர்த்து அதற்குகந்த நிலையில் அதன் தன்மை உள்ளது. இவ்வுலகத்தின் சுவாச நிலை ஈர்த்து எடுக்கும் அளவு அதன் ஆவியையும் வெளிப்படுத்துகிறது. அதனால் இவ்வுலகம் வளர்ந்து கொண்டே உள்ளதுவா? குறைந்து உள்ளதுவா என்று எண்ணுவீர். இவ்வுலகின் காலங்கள் மாறுபடும் பொழுது, இவ்வுலகின் தன்மையிலும் மாறுபாடு நடக்கின்றது. அந்நிலையில் அதன் ஈர்ப்புத் தன்மையில் மாறும் நிலையில் உள்ளது. அந் நிலையில் தான் இவ்வுலகத்தின் அளவு நிலையும் மாறுபடும் தன்மை பெறுகிறது. இவ்வுலகம் மாறுபடும் நாளில் தான் எல்லா மண்டலங்களுமே மாறுபடும் தன்மை பெறுகின்றது. அந்நிலையில் ஏற்படும் ஆவியின் சக்தி நிலைகொண்டு ஒவ்வொரு மண்டலங்களிலும் மாறுபடும் தன்மைகள் வருகின்றன. அந்நிலையை சூட்சுமத்தில் வருபவர்கள் அறிந்திடலாம். இவ்வுலகம் யாரும் கண்டு

எடுத்து வாழ்வதற்கு வந்த உலகமல்ல. ஆவியினால் அவதரித்த உலகம், ஆவியின் உயிரணுக்களை ஈன்றெடுத்த உலகம். ஆவியின் ஆவியான அனைத்துமே கலந்துள்ள உலகம். நீ அருந்தும் நீரும் ஆவிதான், நெருப்பும் ஆவிதான். நீ இன்று செல்வமாகக் கருதும் இப்பூமியின் பொக்கிஷங்கள் அனைத்துமே ஆவிதான். ஆவியின் ஆவிதானப்பா அவ்வாண்டவனே. ஆவி உலகம் என்பதனை நாம் இன்று பேய், பிசாசு ரூபத்தில் இனி எண்ணிடலாகாதப்பா. இம் மனித உடலில் இருந்து பிரிந்த ஆத்மாக்கள் தன் ஆசையை செயல்படுத்திடத்தான் இவ்வுலகையே, இவ்வுலக மக்களின் எண்ணத்தையே மாசுபடுத்தி இருக்கிறது. ஆசையின் நிலையிலிருந்து உடலை விட்டுப் பிரிந்த ஆவிகளின், வழிவழியாய் வந்ததின் கொடுமையின் கொடுமைதானப்பா இன்று உடலுடன் வாழ்பவர்களின் நிலையெல்லாம். இதிலிருந்து மீள்வதற்காகத்தான் முனிவர்கள், சித்தர்கள், ரிஷிகள் இவர்களின் நிலையை விளக்கிடுவேன்.

ஆண்டவா ஆண்டவா
ஆண்டவா ஆண்டவா
ஆண்டவன் எங்குள்ளான்
ஆண்டவன் எங்குள்ளான்
என்றே அறிந்திட ஆண்டவனை
எங்கும் எதிலும் காண்பதற்கே
என்னையே நான் ஆண்டவனுக்க
என்னில் அவ் ஆண்டவனை
என்றும் கண்டிடவே
என்னுள்ளே அன்பையும்
சத்தியத்தையும் தர்மத்தையும்
அஹிம்சையையும் ஏற்றிடவே
ஏற்றிய வழியினிலே
ஆண்டவனைக் கண்டிடவே
ஆண்டவா ஆண்டவா
என்றே எம் ஆத்ம
ஜோதியை வணங்கிடுவோம்
அகிலத்திலே அகிலமாக
ஆவியின் ஆவியாக
ஆவியின் சக்தியையே

ஆவியே ஆண்டவனே
ஆவியின் பிம்பமான
அனைத்து பிம்பமுமே
ஆண்டவன் என்றே கண்டு
ஆண்டவா ஆண்டவா
என்று வணங்கிடு ஓம்.

**16-9-79**

இவ்வுலகில் பிறந்தவர்கள்தான் இன்று நாம் ஆண்டவனாக எண்ணி வணங்கிடும் இவர்களெல்லாரும். நம் பாட முறையில், ஞானிகள், சித்தர்கள், முனிவர்கள், ரிஷிகள், சப்த ரிஷிகள் என்று இப்படி நிலைகொண்ட நம்மை வழி நடத்திய பெரியோர்களின் நிலையை உணர்த்திக் கொண்டே வருகின்றேன். பெரியோர்கள் என்பது வயது முதிர்ந்தவரையோ, நாம் பிறக்கும் காலத்திற்கு பல ஆண்டுகளுக்கு முன் பிறந்தவர்களையோ பெரியோர்கள் என்று செப்பவில்லை. அவர்கள் காலத்துடனும் நாமும்தான் கலந்து வாழ்ந்துள்ளோம். இன்று நம் காலமுடனும், நாம் யாரென்று அறியாத நிலையிலேயே இப்பெரியோர்கள் உள்ளனர்.

ஞானிகள்:—ஞானிகள் என்பவரின் நிலை என்னப்பா? எழுத்தறிந்தவனும் ஞானியாகலாம். கல்விக்கூடம் செல்லாத நிலையிலும் ஞானியாகலாம். தன் எண்ணத்தின் உயர்வைக் கொண்டு தன் நிலையில் பல ஞானங்கள் பெற்றவர்களெல்லாருமே ஞானிகள் தான். தன் அறிவை மேன்மேலும் வளர்த்து, தன் அறிவின் துணைகொண்டே தன் சக்தியை உணர்ந்து, தான் யாரென்பதை உணர்ந்து ஞானங்கள் பெற்றே இன்று வாழும் வாழ்க்கையுடனும் பல ஞானிகள் கலந்துள்ளார்கள். ஆத்மீக வழியின் வழி நடந்து முதல் நிலையை அறிந்ததுதான் ஞான நிலை. இந்த ஞான நிலை பெற்றவர்கள்தான் சித்தர்கள் நிலைக்கு வருபவர்கள். தான் பெற்ற ஞானத்தினால் இவ்வுலகின் காற்றுடன் கலந்துள்ள எல்லா நிலைகளையுமே இருந்த நிலையிலேயே மற்ற மண்டலங்களின் நிலை முதற்கொண்டு இவ்வுலகினில் எந்தெந்தப் பாகங்களில், எந்தெந்த நிலைகள் நடக்கின்றன என்பதனை அறிந்து தன்னுள் அவ்வறியும் சக்தியை ஏற்படுத்தி அந்நிலை கொண்டு செயல்படுபவர்கள் தான் சித்தர்கள். இந்நிலையில் சித்து என்ற நிலை நாமம் கொண்ட பல சித்து விளையாட்டுக்கள் நடத்திடும் சித்து நிலைகொண்ட சித்து நிலை வேறு. உடலுடன் இல்லாத ஆவிகளின் ஆத்மாக்களை தன் வசியப்படுத்தி, அதன் வழியில் இவன் சென்று, இவன் வழி

யில் அதனின் செயலைத் தன் வசியப்படுத்தி, அதன் நிலைகொண்டு விளையாடுபவன் சித்து நிலைபெற்றவன். சித்தர்களின் நிலை வேறு. இது சித்து, அது சித்தன். அச் சித்தன், தன் சித்தன் நிலை கொண்டு உலக நிலை அறிவது மட்டுமல்லாமல், இவ்வுலகில் உதித்த உயிரணுக்களின் தன்மையறிந்து அந்நிலைகொண்டு ஒவ்வோர் உயிரணுக்களுக்கும் எந் நிலைகொண்டு வாழ்ந்திட்டால் நல் நிலை பெறலாம் என்பதனையும் அறிந்து எதனுடன் எதனைச் சேர்த்தால் எந்நிலை கொண்ட மாற்றங்கள் ஏற்படும் என்பதனையெல்லாம் உணர்ந்து, இவ்வுலகிற்குச் சித்தர்களினுல் தான், பல வகை மூலிகைகளை அறிந்து, இன்று நமக்கு வைத்திய முறையையே வழியமைத்துத் தந்தார்கள். சிவன் துதிபாடுபவர்கள், சிவனையும் சித்தனுக்கித்தான் பாடினுர்கள். இன்று நீங்கள் திருக்குறள் என்னும் நூலைப் பெற்றதின் நிலையும் இச் சித்தன் நிலையினுல் தான். வாழ்க்கையுடனே சித்தனுகியவன்தான், திருவள்ளுவனும். சித்தன் நிலை பெறுவதற்கு எந்நிலையில் இருந்தும் பெறலாம். வாழ்க்கையுடனே உலக மக்களுடன் கலந்துறவாடி வருபவன் தான் சித்தன். இச்சித்தன் நிலையில், தான் வாழ்ந்த காலத்தில் இருந்திட முடிந்தது, பல முனிவர்களினுலும், ரிஷிகளினுலும். சப்த ரிஷிகளினுலும், வாழ்ந்த காலத்தில் இச் சித்தன் நிலை கொண்ட உடலை விட்டுச்சென்ற ஆத்மா சூட்சும உலகத்திற்குச் சென்று, பல நூறு ஆண்டுகள் அந்நிலையிலேயே பல நிலைகளை அறிந்து பிறகு இவ்வுலகின் நிலைக்கு ஐயப்பன் நிலையும், ஏசுநாதர், முகமது நபி, புத்தர் இப்படி பல நிலைகளில் வந்தவர்கள் சித்தன் நிலைபெற்று, சூட்சும நிலைகொண்டு, மற்ற உடலின் ஆத்மா பிரிந்த கூட்டில் வந்து ஏறி அம்முனிவனின் தன்மையை பெறுகின்ருர்கள். இன்று ஐயப்பனும் முனிவன்தான், முனிவன் நிலையில் எவ்வுடலை ஏற்று மக்களின் நிலையைச் சீர்படுத்திட அந்த நிலையில் இருக்கும்பொழுது முனிவனின் நிலையிலுள்ளார். அந்நிலை மாறி, அந்நிலையில் தான் பெற்ற சக்தியிலிருந்து வருவதுதான் ரிஷிகளின் நிலை, இன்று போகர் பெற்ற நிலையும், கொங்கணவரின் நிலையும் இதுதான். தான் இருந்த நிலையிலேயே தன் உடலை இன்றும் அதே நிலைகொண்டு பாதுகாத்து, மற்ற உடலில் தன் ஆத்மாவைச் செலுத்திடாமல் இருந்த நிலைகொண்டு பல சக்திகளைத் தன்னுள் ஈர்த்து, அவர் சொல்லிய மந்திரத்தின் மந்திரமான 'முருகா' என்ற அம்மந்திரத்தை யாரெல்லாம் ஜெபிக்கின்ருர்களோ அந் நிலையில், அவர் இருந்த நிலையிலேயே, பலரின் சக்திக்கு தான் பெற்ற சக்தியின் செல்வத்தை அருள் நிலையில் அருளாக்கித் தருகின்ருர். ரிஷி நிலை பெற்றவர்கள் இந்நிலையில் இருந்துதான் செயல்படுத்துகிருர்கள். சப்த ரிஷி என்பவரின் நிலைதான் சக்தியையே சக்தியாக்கி, சக்தியாகக் கலந்து சூட்சுமத்தில் செயல்

படுத்திடும் நிலை. கோலமா சப்த மகரிஷி இந்நிலை பெற்றவர் தான். அவரின் நிலையை உணர்த்துவதற்கு அவரின் ஆசியையே வேண்டுகின்றேன் அவருடன் கலந்தே. அவரின் ஆசியுடனே அருளு கின்றேன் இந்நிலையிலிருந்தே. இச் சப்த ரிஷிகளின் நிலையெல்லாம் சகலத்தையும் தன்னுள் அடக்கிய நிலை. ஞானிகள், சித்தர்கள், முனிவர்கள், ரிஷிகள் இவர்களின் நிலையே அச் சப்த ரிஷிகளின் அருளினால்தான் இன்றும் வழிவழியாய் நடந்து வருகின்றது. சப்த ரிஷியும் நம்மைப் போல் உயிரணுவாய் உதித்து, மனிதனாய் வாழ்ந்து, இந்நிலையிலிருந்தெல்லாம் வழி நடந்து, சப்த ரிஷியாய், சகலத்தையும் அறிந்த ஆண்டவனாய் இன்று நாம் காணும், நமக்கு அருள் அளித்திடும் நிலைக்கு வந்தவர்கள். சப்த ரிஷிகளின் நிலையி னால்தான் இவ்வுலக அழிவிலிருந்து, அழிவு என்பதல்ல, இவ்வுல கின் மாற்றத்திலிருந்து, இக்கலியின் காலம் தள்ளி வருகின்றது. இன்னும் சப்த ரிஷிகளின் நிலை இன்று இவ்வுலகுடன் வாழும் மனிதர்களை நல்வழி நடத்தி, நல்நிலைப்படுத்தி, சூட்சும உலகத் திற்கு அழைத்திடவே, பல நிலைகளைச் செயல்படுத்தி வருகிறார்கள். மனிதர்களின் மனமே இப்பேராசையிலிருந்து விடுபட்டால்தான் நல்நிலை பெற்றிடலாம் என்ற ஆசை கொண்டே செயல்படுத்தி வருகிறார்கள். சுற்றிக்கொண்டே உள்ள இவ்வுலகத்தை, சுற்று வதை நிறுத்தும் தன்மையும் அச் சப்த ரிஷிகளுக்குண்டு. சகல சக்தியையும் பக்குவப்படுத்தி, தன் பார்வையிலேயே அனைத்தை யும் ஈர்த்து வைத்துள்ளவர்கள் அச்சப்த ரிஷிகள். அவர்க ளின் நிலையெல்லாம் வழிப்படுத்தி அனைத்தையும் சொல்லிட லாகாது. இச்சப்த ரிஷிகளின் நிலையெல்லாம் இன்று இல்லாவிட் டால், இன்று வாழும் மனிதன் ஒவ்வொருவனுமே தன் இனத்தைத் தானே அழித்து உண்ணும் நிலையில்தான் இருந்திருப்பான். இன்றும் சில நிலைகளில் தன் இனத்தைத் தானே அழித்து உண்ணும் நிலை உள்ளது. அந்நிலைபோலவே உலகனைத்துமே இருந்திருக்கும். மனிதர்களின் எண்ணத்துடன் கலந்து பல ஆயிரமாண்டு கால மாக, இவ்வாண்டவன் என்ற ரூபத்தை பக்தியென்னும் நிலையில் வளரவிட்டதினால் இன்று நாம் வாழ்ந்திடும் நிலையும் நாம் வழி வந்ததின் நிலையும். நம்மைக் காத்த இப்பெரியோர்களின் வழி நடந்தே, நம்முள் அவர்களின் அருளைப் பெற்று, நல்வழி பெற்றே, வழியறிந்து வாழ்வதுவே நாம் இன்று இம்மனித ஜென்மங்களாக வாழும் வாழ்க்கைக்கு நம் ஆத்மாவை நல் நிலை பெற்று வாழும் நிலை. வழியறிந்தே வாழ்ந்திடுங்கள்.

**17-9-79**

இன்றைய தினம் திரு. பி. இராமநாதன் ரிடையர்டு

இஞ்சினியர் அவர்கள் ஆத்மீக சம்பந்தமாகப் பல நூல்கள் படித்த பிறகு எழுப்பப்பட்ட வினாக்களுக்குக் கொடுக்கப்பட்ட விளக்கங்கள்.

திரு பி. இராமநாதன்:—நான் சில புத்தகங்களைப் படித்து விட்டு தியானம் செய்வதற்கு 15 வருடங்களுக்கு முன்பு ஆரம்பித்தேன். ஆனால் அந்த முறை எனக்குச் சரியாக விளங்கவில்லை. எந்த குருவிடமும் சென்று பயிற்சிபெற எனக்கு வாய்ப்பு கிடைக்கவில்லை.

ஏழு வருடங்களுக்கு முன்பு ஒருவர் தியானம் செய்யும் முறையை எனக்குக் கற்றுக் கொடுத்தார். அதன்படி சில காலம் அப்பியாசம் செய்து வந்தேன். 20-30 நிமிடங்கள் உட்கார்ந்திருந்த பிறகு என்னை மறந்து உட்கார்ந்திருப்பேன். கடிகாரம் மணி அடிப்பது எனக்குத் தெரியாது. பிறகு திடீரென்று கவனம் வந்ததும் மூச்சு விடுவதை நிறுத்தி விட்டேனே என்று தோன்றும். இதைத்தான் சமாதி நிலை என்று நான் எண்ணி இருக்கிறேன். ஆனாலும் இது எனக்குத் திருப்தியாக இல்லை.

நான் செல்லும் பாதை சரியானது தானா? இல்லாவிடில் சரியான பாதையில் என்னை குருநாதர் நடத்திச் செல்ல வேண்டுமென்று வேண்டிக் கொள்கிறேன்.

வேதாந்தத்தைப் பற்றிப் பலர் எழுதியுள்ள புஸ்தகங்களைப் படிக்கலாமா? கூடாதா? என்பதை விளக்கவும். எந்த புஸ்தகங்களைப் படிக்கலாம்? எது கூடாது?

குருதேவர்:—உன் நிலை பதப்படுத்திய, பயிர் செய்ய உகந்த நிலம் போன்றது. அப்பலனைப்பெறும் வழியைத்தான் இனி அறிந்து செல்ல வேண்டும். சக்தியின் சக்திதான் நாம் அனைவருமே. அச்சக்தியின் ஸ்வரூப நிலை பெற்றதுதான் எல்லாமே. அவரவர்கள் எண்ணத்தில் இருந்துதான் அவரவர்களின் வழியும் செல்கின்றது. இவ்வுலகினில் உயிரணுக்களாய் என்று நாம் தோன்றினோமோ, அன்றிலிருந்தே நாம் எடுக்கும் சுவாச நிலை கொண்டுதான், நம் எண்ணம் சுற்றுகின்றது. ஒவ்வோர் உயிரணுவிற்கும் ஒவ்வொரு தன்மையுண்டு. ஒன்றைப்போன்ற இன வர்க்கங்களுக்கும் ஒவ்வொரு குண நிலைகள் உண்டு. அதைப்போல் ஒவ்வோர் உயிரணுவிற்கும், அதன் ஜீவ சக்தியும் உண்டு. ஒன்றைப் போல் ஒன்று ஒத்த நிலையில் எதுவுமே இருந்திடாது. ஒவ்வொரு ஜீவ அணுவும், ஒவ்வோர் உடல் பிம்பம் எடுத்து மாறுபடும் பொழுதும் அவ்வுயிரணு என்னும் ஆத்மாவுடன் ஜீவ சக்தியும் சுற்றிக்கொண்டே தான் உள்ளது. எப்படி சப்த அலைகளும் சுற்றிக் கொண்டுள்ளனவோ, அதைப்போன்றே ஜீவ சக்திகளும் சுற்றிக்

கொண்டே உள்ளன. இப் 15 வருடத்தில் வந்ததல்ல உம் தியான நிலை. உம்முடைய உயிரணு உதித்த நாள் கொண்டே உம்முடனே வருவதுதான் உம் நிலையும் இன்று. வந்த நிலையை வழி நடத்தி, சமாதி நிலையிலிருந்து மீண்டு, இனி தியானத்தில் அமரும்பொழுது நீவிர் இவ்வுலகின் மேல் அமர்ந்துள்ளதைப் போல் எண்ணி, உம் எண்ணத்தை அச்சூரியனின் சக்தியை ஈர்த்து உம் உயிர் ஆத்மா உள்ள இடத்தில் அமர்ந்துள்ள நிலையைப்போல் வைத்து, உம் எண்ணம் அனைத்தையும் அச் சூரியனை ஈஸ்வரா என்ற நாமம் கொண்டு, அதே நிலையில் ஜெபித்து, அச்சூரியனில் இருந்து வரும் சக்தியினை உம் உயிராத்மாவிற்கு ஊட்டமாக ஏற்று, அந்நிலையில் நீவிர் பல உண்மைதனை உம் ஜெபத்தினிலே அறிந்து, நீர் அறிந்த உண்மைதனையே இவ்வுலக மக்களுக்கு உணர்த்தும் வகையில் உப தேச நிலையிலும், நூலின் நிலையிலும் வெளியிடலாம். நாம் எடுத்த தின் பிறவிப்பயனை இவ்வுலக மக்களுக்கு நல்வழியில் உணர்த்தும் வகையில், ஒவ்வொருவரும் அவர்கள் வழியை நல்வழியாக்கி அவர்களைச் சார்ந்தோரையும் அந் நிலைப்படுத்தி இன்று கறையு யுடனே வாழ்ந்திடும் இக்கலியின் மக்களைக் கரையேற்றுங்கள். அந் நிலைக்காகத்தான் யான் பல நிலையில் பலரின் வழியினில் உணர்த்து கின்றேன் இந்நிலைதனை.

மற்ற நூல்களைப் படித்திடலாமா என்ற வினவிற்கே, ஏன் மனதைச் சஞ்சலப்படுத்துகிறீர்? அனைத்து நூலையுமே படித்திட லாம், அந்நிலையின் உண்மையை நம் ஜெபத்தினில் அறிந்திடலாம். அவரவர்களின் எண்ணத்தை வெளியிட்டுள்ளார்கள். அதை அறிந்தே நாம் ஏற்பதுவே உத்தமம்.

**18-9-79**

பி. இராமநாதன்:—நாம் ஏதாவது ஒரு காரியத்தைப் பற்றி முடிவு எடுக்க முடியாமல் இருந்தால் அதைப்பற்றித் திரும்பத் திரும்ப யோசித்துக் கொண்டு இருக்காமல் அந்த விஷயத்தை ஆராய்ந்து கூறுமாறு அந்தராத்மாவிடம் ஒப்பித்து விட்டு நமது வேறு காரியங்களைச் செய்து கொண்டிருந்தால் அந்த அந்தராத்மா அந்தக் காரியத்தை அலசிப் பார்த்து சரியான விடையைக் கண்டு பிடித்து நம் வெளி மனதிற்குத் தெரியப்படுத்தும் என்று எண்ணு கின்றேன்.

குருதேவர்:—இந்நிலைதான் ஜெப நிலை என்று நான் உணர்த்தும் நிலை. ஒரு நிலைக்கு நம்முள் தீர்வு கண்டிட, நம்முள் சுற்றியுள்ள எண்ணச் சிதறல்களை ஒரு நிலைப்படுத்தி அந்நிலையி லேயே, நம் மனதை அமைதியுறச் செய்து, அந்நிலையில் நம் மனது

தெளிவு பெறும் நிலைதான், நீர் சொல்லும், அந்தராத்மா முடி வெடுக்கும் நிலை என்பது. அந்நிலைதான் ஜெபநிலையும். ஜெபம் என்பது, மனதை ஒருநிலைப்படுத்தும் நிலைதான். இன்று நம்மில் கலந்துள்ள பல பெரியோர்களின் வழியில், அவர்கள் வழிப் படுத்திச் சென்ற நிலை, வாழ்க்கை நிலைக்கும் ஜெப நிலைக்கும் வேறு பாடில்லை. வாழ்க்கை நிலையில் வரும் நிலைகளுக்கு, தெளிவு பெற வழியமைத்த நிலைதான் இஜ் ஜெபநிலை. இந்நிலையையே ஞானி களும், சித்தர்களும் வழியமைத்து வந்ததுதான், அவர்களின் உயர்ந்த நிலை. இவ்வெண்ணம் ஒவ்வொரு மனிதனுக்கும், பல நிலை களில் செயல் படுத்துகிறது. உள் மனம், வெளி மனம் மட்டுமல்ல, முதல் பாடத்தில் சொல்லியுள்ளேன், அகக்கண், புறக்கண் என்பதையே ஞானக்கண்ணால் வென்று வா என்று.

சித்தர்களின் நிலை—சாதாரண மனிதர்களின் நிலைக்கும், சித்தர்களின் நிலைக்கும் எந் நிலையில் மாற்றம் உள்ளது?

நாம், சாதாரண மனிதர்களாகிய நாம், ஒன்றை எண்ணும் பொழுது, பிற நிலை தாக்கினால், நம் எண்ணம் ஒன்றையேதான் சுற்றிக்கொண்டிருக்கும். அந்நிலையில் தாக்கும் மற்றதின் நிலையை, இந்நிலைபோல் செயல்படுத்திட முடிந்திடாது. எண்ணத்தின் சிதறலைத் தாங்கும் சக்தியை இழந்து, அந்நிலையில் மனச் சோர்வு கொண்டு, நம்மை அறியாமல் பல சொற்களை வெளியிடுவோம். நம் நிலைக்கும் பதட்டம் வரும். அப்பதட்டத்திலிருந்து வருவது தான் கோபமும். இப்படி நாமே வளர்த்துக்கொள்வதுதான் நம்மில் இந்நிலையெல்லாம். இந்நிலையில் இருந்து மீள்வதற்குத் தான் பல நிலையின் மோதல்களைத் தாங்கும் நிலை ஏற்படுத்திட ஜெபம் என்ற மந்திரத்தை நம்முள் ஏற்படுத்தி, எந்நிலையிலும், அது தாக்கும் நிலையிலேயே, அந்நிலைக்குத் தீர்வு கண்டிட நம்மைப் பக்குவப்படுத்திய நிலை. நம்மை நாமே அடிமைப்படுத்தும் நிலையி லிருந்து ஜெபநிலை பெற்று அன்று நமக்குப் புரிவதற்காகப் பல இதிகாச நூல்களில், ஆண்டவன் என்று ரூபப்படுத்தி ஆண்டவ னுக்குப் பல தலைகள், பல கைகள், ஆண்டவன் ஒரே சமயத்தில் பலருக்கும் எந்நிலையில் அருள்புரிகின்றார் என்பதைப்போல் சித்தர்கள் மக்களுக்கு உணர்த்தும் வகையில் உணர்த்திய வழிகள் தான் ஆண்டவனுக்குப் பல தலைகளும், பல கைகளும். இப்பொழுது சூட்சும நிலையில் உள்ளவர்கள் ஒரே சமயத்தில் பல நிலைகளில் தன் செயலைச் செயலாக்குகிறார்கள். அதைப்போல்தான், ஒவ் வொரு மனிதனும் அவரவரின் எண்ணத்தின் சிதறலினால்தான், பல நிலைகள், பதட்ட நிலை பெற்று, தன்னுள் தன்னையே கைதி யாக்கி வாழ்கின்றான். உள் மனம், வெளி மனம் என்பதல்ல இவ்

வெண்ண மனம். பல நிலைகளுக்குச் சென்றாலும் ஒரு நிலைப்படுத்திடும் பக்குவம் பெற்றாலே ஒவ்வொரு மனிதனும் தன் ஆத்மாவிற்கு நல் சொத்தைச் சேர்த்த நிலை பெறுகின்றான். இன்று மக்களுக்குப் போதனை நிலையும் குறைவு. வழி நடத்திடும் அவர்களது பெரியோர்களின் நிலையும் (தாய், தந்தை) உபதேசிக்கும் நிலையற்றதினால் வந்த நிலை இவ்வுலகின் நிலை இன்று. முன் காலத்தில் பல நீதி நிலைகளைக் கதையாக்கி, தாத்தா பாட்டி கதை என்ற ரூபத்திலும், அரிச்சந்திரனின் கதையாகவும், விக்ரமாதித்தனின் கதையாகவும் மக்களின் எண்ணத்தில் பதிய வைப்பதற்காகப் பல நீதி நூல்களை வெளியிட்டார்கள். இன்று அனைத்து நீதி நூல்களுமே ஆராயும் தன்மையில் வைத்துள்ளார்கள், அந்நிலையையும் மாற்றி, அன்று சித்தர்கள் வெளியிட்டதின் வழியிலேதான், இன்று இருக்கும் விஞ்ஞான உலகத்தின் அறிந்த நிலையெல்லாம். 'முள்ளை முள்ளால் எடு', 'வைரத்தை வைரத்தால் அறு' என்பதைப்போல், ஒவ்வொரு நோய்க்கும் அந்நோயின் தன்மைகொண்ட, எந்நிலை கொண்ட நோய் வருகிறதோ, அதன் தன்மைக்குகந்த மருந்தை அதன் விஷத்தன்மையிலேயே, அதற்கு மேல் இதை ஏற்றி, இதை வெளிப்படுத்தும் நிலையை உணர்த்தியவர்களே நம் சித்தர்கள் தான். இவ்வுலகில் வந்து குவியும் அமிலத்தன்மையிலிருந்து, பல நிலைகளைத் தன்னுள் ஈர்த்து, ஒவ்வொன்றையும் செயல் படுத்திக்காட்டிய பல ரிஷிகள் உள்ளார்கள். போகரின் நிலையும், போகரை ஒத்த நிலைகளில் உள்ள பல ரிஷிகளின் நிலையும், இன்றும் அழியாத உடலை, எந்நிலையில் பாதுகாத்து வைத்துள்ளார்கள். இக்காற்றில்தான் அனைத்து நிலைகளுமே கலந்துள்ளன. தன் நிலையையும் தன் உடலையும் அழியாத நிலைப்படுத்திப் பாதுகாக்கும் பக்குவத்தை, இன்றும் ஈர்த்துச் செயல்படுத்துகிறார்கள். இவ்வுடலையே கல்லாகவும் எந்நிலைகொண்ட உலோகம் போலவும் காத்து வைத்திட முடியும். இக்காற்றில் உள்ள அமிலத்தை, தனக்குகந்ததை ஈர்த்துக் காத்து வருகிறார்கள். வைரமாகவும் இவ்வுடலை ஆக்கிட முடியும். மண்ணுடன் மண்ணாக மக்கும் நிலையிலும் ஆக்கிடுகின்றோம். அனைத்துமே இவ்வெண்ணத்தினால் வந்ததுதான். உலக சக்திக்கும் சக்தியாக, சக்தியுடனே நம் எண்ணத்தைக் கலக்கவிட்டு, நல்சக்தி பெற்றுவிட்டால், அனைத்து சக்திகளையுமே நம்முள்ளே கண்டிடலாம். இவ்வெண்ண சக்தியினால் வளர்வதுதான், வளர்வது மட்டுமல்ல, வாழ்வது தான் இவ்வுலகமும் பிற உலகங்களுமே.

**19-9-79**

இச்சத்தியத்தின் சக்திநிலை நூலின் வடிவினில் சில உண்மைகளை வெளிப்படுத்துகின்றோம் என்பதின் பொருளே, இக்கலியின்

மாற்றத்திலிருந்து, மக்களை நல்வழியில் கல்கிக்கு அழைத்துச் செல்வதற்காக, பல சித்தர்களினாலும் மறைக்கப்பட்ட பல உண்மைகளை, இன்று, இந்நிலையில், அச்சித்தர்களுடன் கலந்தே, இவ்வுலக மக்கள், இதிலிருந்து மீள்வதற்காகத்தான், சத்தியத் தின் சக்திநிலையின் தன்மையில், பல உண்மைகளை வெளிப்படுத்து கின்றோம். உலக மக்கள் உணர்ந்து ஏற்று நடப்பதற்காகத்தான், சக்தியின் நிலை அனைவருக்கும் பொதுவானதே. அச்சக்தியின் நிலையை ஏற்கும் தன்மை மட்டுமல்ல, ஏற்றதனை வழி நடப்ப திலும் அச்சக்தியின் தன்மையுள்ளது. அனைத்தையும் அறிந்து விட்டோம் என்ற நிலையில் நம் சக்தியை விரையமாக்கினாலும் அச்சக்தி நிலைத்திடாது. அச்சக்தியை நிலைநிறுத்தி வாழும் தன்மை யிலே வழி வந்திட வேண்டும் நாம் அனைவருமே.

சூரியனிலிருந்து நாம் அணுக்கதிர்களைப் பெற்று வாழ்கின்றோம். அவ்வாவியான அணுவேதான் இவ்வுலகும், அனைத்து உலகுமே. ஆவியான அணுவை ஆக்கும் வழியில் செயல்படுத்திடாமல், அழிக்கும் நிலைக்குச் செயல்படுத்திடும் வினையை இவ்வுலக மக்கள் கூடிய விரைவில் உணரும் காலம் மிகவும் நெருங்கிக்கொண்டே வருகிறது. எந்நிலையில் என்று கேட்பீர்கள். இவ்வுலகில் சூரியனி லிருந்து வரும் அணுக்கதிர்களைக் கொண்டேதான் பல நிலை பெற்ற செயல்களை இம் மனிதனின் எண்ணம் கொண்டு உரு வாக்கியுள்ளான். இவன் உருவாக்கிய அணுகுண்டுகளை ஒவ் வொரு நாட்டிலும் பாதுகாக்கும் நிலையில் பூமியின் அடியில் புதைத்துப் பல இரும்புக் கவசங்களைக் கொண்டு சிறு அணுவும் வெளிப்படாத நிலையில் தன் அறிவை எல்லாம், சக்தியையெல் லாம் செயல்படுத்தி விஞ்ஞானக் குண்டுகளைப் பல நாடுகளில் புதைத்து வைத்துள்ளான். 'இன்று வெடிக்கப் போகின்றேன், நாளை வெடிப்பேன்' என்ற பயமுறுத்தலுடன், பயமுறுத்தலுக்காக வைத்துள்ள குண்டுகள் இவனும் வெடிக்கப்போவதில்லை, மற்றவ னும் வெடிக்கப்போவதில்லை. ஆனால் இவ்வுலகம் சுற்றிக் கொண்டே உள்ள நிலையில் சூரியனின் அணுக்கதிர்களைப் பெற்றுக் கொண்டே உள்ளது. இவ்வுலகமும் ஈர்த்து வெளிப்படுத்திக் கொண்டே உள்ளது. ஆவியில் வந்த அணுக்கதிர்கள்தான் அனைத்துமே. இவ்வுலகம் ஈர்த்த நிலையில் அது வெளிப்படுத்தும் நிலைகொண்டு இவ்வுலகத்தின் பாதுகாப்பினால் ஆன அணுகுண்டு கள் வைத்துள்ள நிலையிலெல்லாம் இப்பூமி வெளிப்படுத்தும் காந்த சக்தியை ஈர்த்துக் கொண்டே உள்ளன. இந்நிலையிலேயே இன்னும் சில காலங்களில் அதன் சக்தி இழந்து இவ்வுலக சக்தி தன்னுள் ஈர்த்த சக்தியை வெளிப்படுத்தும் நிலையில், கக்கும் நிலையில் அதன் மேல்பட்டு, ஓர் இடத்தில் வெடிக்கும் நிலையில் அணுக்களின்

சிதறலினுல் அனைத்து அணுகுண்டுகளுக்கும் அதனதன் ஈர்க்கும் நிலையில் அனைத்தும் வெடிக்கும் நிலை மிகக் குறுகிய காலத்தில் உள்ளது. இப்பூமியில் அணுகுண்டுகள் வெடிக்கும் நிலையில் இப் பூமியே அதிரும் நிலையில்தான் சிறு அதிர்வினுல் இவ்வுலக நிலையே மாறும் தன்மைக்கு வரப்போகின்றது. இந்நிலையை அறிந்து நல் வழிபெற்று வாழ்வதுதான் நம்மால் இன்று செய்திட முடியும். இன்று இந்நிலையை வெளிப்படுத்துபவர் ஏன் அந்நிலையிலிருந்து காப்பாற்றலாமே என்ற வினுவும் எழலாம். அனைத்தையும் அறிந்து சூட்சும நிலைகொண்டு நல்வழி புகட்டிடலாமே தவிர அனைத்தும் அறிந்த ஆண்டவன் என்ற அச்சக்தியின் சக்தியே நான் என்ற சக்தியும் எனக்கில்லையப்பா. யானறிந்த சக்தியை என்னு டன் கலந்துள்ள பல ரிஷிகளின் நிலைகொண்டே, இந்நிலையை வெளியிடுகின்றேன். அதி விரைவில் அனைவருக்கும் வெளியிடவும் காலம் சொல்வோம்.

இதிலிருந்து மீண்டு எந்நிலையில் காத்திடலாம் என்பதனையும் உணர்த்துவேன் இனிவரும் பாட நிலைதனில்.

**21-9-79**

அனைத்துமே ஆவிதான். ஆவியிலிருந்து வந்ததுதான் அனைத்து உலோகங்களும், ஜீவராசிகளும். அந்நிலையிலிருந்து பிரித் தெடுத்து அதனதன் தன்மையில் அறியும் ஆற்றலைப் பெற்றுள் ளோம். இப் பூமியில் இயற்கையிலிருந்து எடுத்த நிலைகளிலிருந்து அணுகுண்டு செய்து இப்பூமியில் புதைத்து வைத்துள்ளார்கள். சகல பாதுகாப்புடனும் அவர்கள் பாதுகாத்து வைத்த உலோ கத்தினுலான துருப்பிடிக்காத இரும்பைக் கொண்டு பாதுகாத்து வைத்துள்ளார்கள். பலர் பதப்படுத்தும் நிலையில் பதப்படுத்தி வைத்துள்ளார்கள். இப்பூமியிலிருந்து எடுத்த உலோகத்திலே தன் அறிவினுல் விஞ்ஞானம் கொண்டு இவ்வணுகுண்டைச் செய்து வைத்துள்ளார்கள். அனைத்துமே ஆவிநிலை ஆகக்கூடியதுதான். உதாரணத்திற்கு தங்கத்தினுல் ஓர் ஆபரணத்தைச் செய்து இன்று நீ பார்க்கும் எடைக்கும் பத்தாண்டிற்குப் பிறகு அவ்வாபரணத்தை உபயோகிக்காத நிலையிலேயே நிறுத்துப் பார்த்தால் அதன் நிறை யில் ஒரே நிலை இல்லாமல் குறைந்துதான் இருக்கும். தேய் மானம் என்பார்கள், பிற வஸ்துவில் பட்டு தேய்வதல்ல. இக் காற்றில் கலந்துள்ள ஆவித் தன்மையினுல் இப் பூமிக்குள்ள காந்த சக்தியைக் கொண்டு ஈர்ப்பதினுல் அதுவும் ஆவியாகிறது. அனைத்து உலோகங்களின் நிலையும் இதுதான். இவ்வுலக நிலையும் இதுதான். இவ்வுலகம் ஆவியை ஈர்த்து அவ்வாவியையே வெளிப்

படுத்துகிறது. அதனுல்தான் இன்று விஞ்ஞானம் கொண்டு செய் திடும் அணுகுண்டைப் பாதுகாக்கும் நிலைகொண்ட அவ்விரும்புக் கவசமே இவ்வுலகம் ஈர்த்து ஆவியை வெளிப்படுத்தும் தன்மையில் அதன் நிலையும் ஆவியாகி அதில ஏற்படும் சிறு துவாரத்தினுல் வரப்போகிறது இவ்வுலக மாற்றமே. இன்று விஞ்ஞானம் கொண்டு சூரியனிலிருந்து வரும் சக்தியினுல் பல நிலைகளைச் செய்திடலாம் என்று விஞ்ஞானப் படுத்துகிறன். சூரியனிலிருந்து வந்த அணுக்கதிரினுல் பூமியில் ஏற்பட்ட கனிவளங்களையும் பல திரவ வஸ்துக்களையும் தன்னிலைக்கு ஈர்த்து எடுத்துவிட்டான். இன்று இவன் செயற்கைக்காக சூரியனிலிருந்து வரும் ஒளிக் கதிரை ஈர்த்து அதிலிருந்து பல சாதனை செய்து காட்டுகின்றுனும். இக்காற்றையே கரியாக்கி வாழ்கின்றுன். வரும் சக்தியையே ஒவ் வோர் இடத்திற்கும் தன்னிலைக்குகந்த விஞ்ஞானமாக்கி ஈர்த்து எடுத்துவிட்டால் வாழும் மனிதர்களின் இக்காற்றிலிருந்து பிரித் தெடுத்து நல் சுவாசம் எடுப்பதற்கும் சக்தியை அழித்து வருகிறுன்.

இன்று விஞ்ஞானத்தினுல் வந்த வினைதான் சூரியனிலிருந்து வெளிக்கிளம்பும் ஒளிக்கதிர்களும் மனிதனுக்கு ஆறறிவு என்று அவன் பெற்ற அறிவினுலேயே, உலக நிலையையே இவ்வாறறிவு படைத்த மனிதன்தான் மாற்றுகிறுன். இதனுல் இவ்வுலகம் மட்டும் மாறப்போகிறதா? உலகுடன் தொடர்பு கொண்ட எல்லா மண்டலங்களுமே மாறத்தான் போகின்றன. இன்று இவ்வுலகில் வாழும் மக்களினுல் வந்த வினைதான், ஆத்மீக வழியை வழியமைத்தால் ஏற்பதற்கும் ஆளில்லை. இதன் நிலை அறிந்துதான் பல சித்தர்கள் பல உண்மைகளையே மறைத்தார்கள். இன்று குழந்தை பெறுவதற்கே செயற்கை முறைப்படுத்திப் பேழை யில் கரு வளர்த்து அக்கருவைச் தாய்க்குச் செலுத்திக் குழந்தையை வளரவிடுகின்றுனும். இன்று ஒரு சித்தனுல் தாயும் தந்தையும் இல்லாமல் இக்காற்றில் உள்ள சகல சக்தியிலும் கலந்துள்ள இம்மனித ஜீவ அணுவிற்கு வேண்டிய ஜீவ அணுவையே பிரித் தெடுத்து அப்பிரித்ததின் ஜீவ அணுவை வளரவிட்டுக் குழந்தை யாக்கிக் காட்டமுடியும். புராணக் கதைகளில் படித்திருப்பீர் ஆறு முகனைக் கார்த்திகைப் பெண்கள் வளர்த்தார்கள் என்று. அவ்வாறு முகன் எந்தத் தாயின் கர்ப்பத்தில் இருந்தான் என்பதனைச் சூட்சு மத்தில் மறைத்தார்கள். அனைத்தையுமே இந்நிலையில் வெளியிட்டு நான் என்ற ஆணவத்தை ஏற்படுத்திடவும் விரும்பவில்லை. நம் சக்தியை நல்வழிக்குச் செலுத்திட்டால் அந்நிலையில் என்றுமே நிலைத்திருக்கலாம். சக்தியையே நமக்குத் தெரிந்தது என்று ஆண வத்தால் செய்து காட்டி என்ன பயன் என்றுணர்ந்துதான் அன்றே பல சித்தர்களினுல் பலவும் மறைக்கப்பட்டன. எண்ண

நிலையை ஒரு நிலைப்படுத்தினுல் சகல நிலையையும் சகலரும் அறிந் திடலாம்.

22-9-79

விஞ்ஞானம் கொண்டு இன்று பல ஏவுகணையின் மூலமாகப் பல மண்டலங்களின் உண்மை நிலையறியத் தன் சக்தியை விஞ் ஞானத்தில் செலுத்தி அறியப் பார்க்கின்முன் இன்றைய மனிதன். ஒவ்வொரு மண்டலத்திலும் மாறுபட்டதன் நிலையை அறியும் ஆவலில் தன் எண்ண சக்தியை விஞ்ஞானத்தில் செலுத்தி அறிந் திட எண்ணுகின்முன். அனைவருக்கும் பொதுவான அச் சக்தியை ஒவ்வொருவரும் உணர்ந்தே தன் எண்ணத்தை ஒரு நிலைப்படுத்தி னுல் ஜெபம் கொண்ட நிலையில் எம் மண்டலத்திற்கும் அவரவர்க ளின் ஆத்மாவுடன் இவ்வுடலின் சக்தியையும் சேர்த்தே பல மண்டலங்களுக்குச் சென்று அம் மண்டலங்களில் உள்ள உண்மை நிலையை அறிந்து வரலாம். எந்த மண்டலத்தில் எந்த உயிரணு உதித்து வாழ்ந்ததுவோ, அந்த மண்டலத்தை விட்டுப் பிற மண்ட லத்தில் வாழ்வதற்கு அதற்கு சக்தியில்லை. சுவாச நிலை மாறுபடும் பொழுது வாழும் தன்மையும் அற்று விடுகிறது. எம் மண்டலத் தில் இவ்வுயிரணு ஜீவன் பெற்றதோ அந்நிலையிலிருந்து மாறு பட்டால் எவ்வுயிரணுவினுலும் வாழ்ந்திட முடியாது. நம் பாடத் தில் இவ்வாத்மா அழிவதே இல்லை; இவ்வுடல்தான் மாறுகிறது என்றேன். அப்பொழுது இவ்வழியாத ஆத்மா பிற மண்டலத்துக் குச் சென்முல் மட்டும் அழிந்துவிடுமா என்பீர். எந்த மண்டலத் தில், எவ்வுயிரணு தோன்றியதோ, அவ்வுயிரணு என்ற ஆத்மா வானது அதன் சுவாசம் கொண்டு உயிர் என்னும் ஜீவனைப்பெற்ற இக்காற்றுமண்டலத்திற்கு மேல் செல்லும் சக்தி அவ்வுயிரணுவிற்கு இல்லை.

இன்று இவ்விஞ்ஞானம் கொண்டு, பிற மண்டலத்திற்கு எடுத்துச் செல்லும் ஜீவாத்மாக்களும் அந்நிலையில் இவர்கள் விட்டு வந்தாலும் (நாய், பூனை, குரங்கு) அந்நிலையின் சுவாச நிலைக்கும் இச் ஜீவாத்மாவின் சுவாச நிலைக்கும் ஏற்காத தன்மையில் அவ்வாத் மாவை எம்மண்டலத்தில் இருந்து வந்ததோ அம்மண்டலத்தின் நிலைக்கு ஏற்காத தன்மையில் உந்தித் தள்ளிவிடும்; இனம் இனத் துடன்தான் சேரும் என்ற நிலைப்படி. இங்கிருந்து பல உயிரணுக்கள் எடுத்துச்சென்று அந்நிலையில் வாழ்ந்திட முடியுமா என்பதனை அறியப் பல சக்திகளைச் செயலாக்குகிறுர்கள். எந்த மண்டலத்திலும் உள்ள உயிரணு பிற மண்டலத்திற்குச் சென்று வாழ்ந்திட முடி யாது. ஆனுல் நம்முள் உள்ள சக்தியை, அவ்வெண்ண சக்தியை

ஒரு நிலைப்படுத்தி ஜெபம் கொண்டால் சகல நிலையையும் அறிந்திட லாம். சூட்சும நிலைக்குச் சென்றவர்கள் எந்த மண்டலத்திலும் வாழும் நிலைக்கு வந்திட முடிந்திடும். இன்று நம்மில் இருந்து சென்ற பல சூட்சும நிலைபெற்றவர்கள் எம்மண்டலத்திலும் செல்லும் பாக்கியத்தைப் பெற்றவராய் இருக்கிறார்கள். இன்று சூரியனில் சென்று வாழலாமா? பெரும் நெருப்புக் கோளமான அந்நிலைக்கு எப்படிச் செல்வது? என்று விஞ்ஞானம் கொண்டு ஏவுகணை அனுப்புபவனும் சூரியனின் நிலையைக் கண்டு அஞ்சுகின் றான். சூரியனின் நிலை குளிர்ந்த நிலை. நம் பூமியைப்போல் காலை, மாலை, இரவு என்ற மாறுபட்ட நிலை அங்கில்லை. இங்கு எப்படி நம் நிழலை நாம் காண்கின்றோமோ, அந் நிலையும் அங்கில்லை. அதி சுவையான நீரும், ஆனந்த மயமான மணமும் உள்ள பூமி அது. இந்நிலையில் உள்ளது போல் மழை நிலையும் மாறுபட்ட நிலையில் அங்கு உள்ளது. மழை உண்டு, ஆனால் மாறுபட்ட நிலை. பனியான மழை. எப்பொழுதும் அந்நிலை இருந்துகொண்டே உள்ளன.

(காட்சி—அந்நிலையில் ஜீவன் பெற்று பல உயிரணுக்கள் வாழ் கின்றன. நாம் இவையெல்லாம் கதைக்குச் சொல்வதைப் போல் சொன்னதின் நிலையல்ல. உள்ளதின் உண்மையைத்தான் ஜெபம் கொண்டு அறிந்ததில் வெளியிடுகின்றோம். ஒவ்வொருவரின் சக்தியி லும் அறிந்திடும் தன்மையுண்டு. இப்பூமியைப் போல் பல நூறு மடங்கு பெரியவையான அச்சூரியன் சுழலும் வேகத்திலேயே அதன் ஈர்ப்புத் தன்மையும் பல மடங்கு அதிகமாகப் பெறுகிறது. இச் சூரியனைச் சுற்றி எப்படி 48 மண்டலங்கள் அதன் ஈர்ப்பு நிலைகொண்டு வாழ்கின்றனவோ அதைப்போல் சூரியனும் பல சூரியன்களின் சக்தியின் உதவியால் வாழ்கிறது. இதன் நிலையை விளக்கிடுவேன் நாளையே.

**23-9-79**

இப்பூமி சுற்றுவதைக்காட்டிலும் சூரியன் சுழலும் வேகம் அதிகப்படுகிறது. இன்று இப்பூமியின் ஈர்ப்புத் தன்மைக்கு மேல், சூரியனின் ஈர்ப்புத்தன்மை பல மடங்கு அதிகமாக உள்ளது. அது ஈர்த்து வெளியிடும் நிலையும், அதே நிலைக்குகந்த துரித நிலையில் உள்ளது. பல சூரியன்களின் தொடர்பு கொண்ட நம் சூரியன், நாம் காணும் சூரியனின் சக்தி மிகவும் வலுப்பெற்ற சக்தி. சூரிய னின் பூமி நிலை குளிர்ந்த நிலை. இப்பூமியில் பிறவி எடுத்து இப் பூமியிலிருந்து சூட்சும நிலைக்குச் சென்ற பலர் இருந்து செயல் படுத்தும் கோயில்தான் நம் சூரியன். இப் பூமியில் உதித்த உயி ரணுக்கள் மற்ற மண்டலங்களில் வாழ்ந்திடலாகாது, சுவாச நிலை மாறுபடும்பொழுது அம்மண்டலத்தின் உந்தலினால் இம்

மண்டலத்திற்கே உந்தப்பட்டு வருவார்கள் என்று உணர்த்தினேன். சூட்சும நிலைக்குச் செல்பவர்கள் பல மண்டலங்களிலும் இருந்து செயல்படுத்துகிறார்கள். இப்பூமியிலும் பிற மண்டலத்தில் உதித்து வாழ்ந்தவர்கள் சூட்சும நிலை பெற்றே இம்மண்டலத்திலும் (பூமி) சில நிலைகளைச் செய்கிறார்கள். வான சாஸ்திரம் என்று அறியப் பல நிலைகளைச் செய்கிறார்கள். அன்றே இப்பூமியும் மற்ற பூமிகளின் நிலையையும் என்றாவது ஒரு நாள் வெளிப்படுத்தும் நிலையில் பல சித்தர்கள் ஒன்றுபட்டு இப்பூமியிலேயே அக்காலப் பெட்டகத்தைப் பதித்து வைத்துள்ளார்கள். இக்கலி மாறுவதற்குள் அந்நிலை வெளிப்படும். அந்நிலையை வெளிப்படுத்திட இக் கலியில் வந்து பல சித்தர்களினால் உருவப்படுத்தி ஜீவன் தந்த ஓர் உயிரணு ஒரு தாயின் வயிற்றிலேயே பிறந்து வந்துள்ளது. அவன் வெளிப்படுத்துவான் சூட்சும நிலையில் உள்ள பல சித்தர்களை என்றேன். சூட்சும நிலைக்குச் சென்ற பெரியோர்கள் என்றும் உணர்த்துகிறேன். அச் சூட்சும நிலைக்குச் சென்றவர்கள் தனித்த நிலையில் யாரும் இயங்குவதில்லை. அவர்களின் சக்தியை எல்லாம் ஒன்றாக்கி, அச்சப்தரிஷிகளின் நிலையிலிருந்து செயல்படும் தன்மைக்கு வருகிறார்கள்.

மனிதர்களின் குண நிலை மாறுபட்ட குண நிலைகள். சூட்சுமத்தில் உள்ளோரின் குண நிலை ஒன்றுபட்ட நிலை. இன்று சிறு தேவதைகள், பெரும் தேவதைகள் என்று மாறுபட்டு, பிரித்துச் சொல்கிறார்கள் புராணக் கதைகள் மூலமாக. இச்சிறு தேவதைகளின் நிலை துர் ஆவிகளின் நிலையில் இருந்து மாறுபட்ட அன்பு கொண்ட ஆத்மாக்கள். இவ்வுலகின் ஆசையுடன் இவ்வுலகில் உள்ளோரின் எண்ணமுடன் கலந்து, தன்னையே ஆண்டவனாக ஏற்கும் நிலைப்படுத்தி செய்து வரும் நிலை. சூட்சுமத்திற்குச் சென்று அச்சகல தேவர்களின் தேவனாக இயங்கும் அச்சூரிய தேவனிடம் செல்லும் நிலைக்குப் பக்குவப்படாத நிலையிலேயே உள்ள நிலைதான். சித்து நிலையுடன் கலந்து உறவாடும் நிலை. சூரிய தேவன் என்றேனல்லவா? அனைத்துச் சித்தர்களும் முனிவர்கள், ரிஷிகள், சப்த ரிஷிகள் அனைவரும் ஒன்றுபட்டு அச்சக்தியின் சக்தியான அச்சூரியனில் ஒன்று கலந்து அச்சூரியனின் நிலையிலிருந்து தான், எல்லாச் செயல்களுமே இன்று செயல்படுத்துகின்றனர். இன்று அச்சூரிய தேவன் இல்லாவிட்டால் எவ்வுலகமும் இல்லை. நம் சூரியனைப் போல் சக்தி கொண்ட பல சூரியன்கள் இருந்தாலும், அனைத்து சூட்சும சக்தியிலுள்ள தேவர்கள் கலக்கும் நிலை, நம் சூரியன்தான். இவ்வுடலில் உள்ளபோதே அனைத்து நிலையையும் அறியும் பக்குவத்திற்கு உங்களைச் செயல்படுத்திடத்தான் பல சக்திகளைக் கொண்ட சூட்சும நிலையில் உள்ளவர்களின் நிலையை ஒன்று

படுத்தியே, இந்நிலையை இங்கு வெளிப்படுத்துகின்றோம். சக்தியின் சக்தி பெற்ற இம் மனித ஜென்மத்தில் வாழும் பாக்கியத்தைப் பெற்ற சக்திகளே, உங்களின் சக்தியை அனைத்து சக்திகளுடன் ஒன்றுபட்டுத் தெய்வமான அச்சூரிய சக்தியில் இருந்துவரும் ஒளிக் கதிரிலிருந்து அனைத்து மண்டலங்களின் நிலையையும் உம் சக்தி களில் இருந்தே ஈர்த்து அறியும் பக்குவத்திற்கு உம் சக்தியின் செல்வத்தை சக்தியாக்கி வாழுங்கள்.

**26-9-79**

அச்சூரியனின் அணு சக்தியில்லாமல், இவ்வுலகில் உள்ள எந்த சக்தியும் இயங்கிட முடியாது. சூரியனிலிருந்து இப்பூமிக்கு வந்து படரும் சக்தியைக் கொண்டுதான், அனைத்து சக்தியுமே இன்று இயங்குகின்றன. அதன் தொடரில் இருந்துதான் இன்றைய மனிதனால் செயலாக்கிய பல மின்அணுக்கதிர்களின் செயல் எல்லாமே. இக்காற்றுடன் கலந்துள்ள, சூரியனின் அணு சக்தியை இன்று மனிதன் தன் செயற்கையின் நிலைக்காகப் பல அணுக் கதிர்களைப் பிரித்து எடுப்பதினால் இக்காற்று மண்டலமே கடும் விஷமாகச் சுற்றிக்கொண்டுள்ளது. மின்சாரம் எடுப்பதற்காக இக் காற்றில் கலந்துள்ள காந்த சக்திகளை ஈர்த்து எடுக்கின்றான். அதைப்போல் பல நிலைகளுக்காக இவ்வணு சக்திகளைக் காற்றி லிருந்து ஈர்த்து எடுக்கின்றார்கள். இன்று மனிதன் வாழ்வதற்குத் தானாகச் சூரியனில் இருந்துவரும் அணுப் பிழம்புகளைத் தன்னுள் ளேயே அச்சக்திதனைப் பெறும் வாய்ப்பினை இன்று வாழும் மனிதனே அதனைச் செயற்கை நிலைப்படுத்தி வாழப் பழகிக் கொண்டான். இனியும் அச்சூரியனின் சக்தியிலிருந்து மேன்மேலும் பல செயற்கை நிலைக்காக ஈர்த்தெடுத்து விஞ்ஞானம் கண்டே வாழ்ந்திட்டால் விஞ்ஞானத்தைத் தாங்கும் நிலை மெஞ்ஞானம் கொண்ட இப்பூமியினால் முடிந்திடாதப்பா. காற்றையே கடும் விஷ மாக்கிவிட்டான் சக்தியின் சக்தி பெற்ற, இன்று வாழும் இம் மனிதன். இவன் செய்த இவ்வினையினால் வருவதுதான் புதிய புதிய வியாதிகள். இப்புதிய புதிய வியாதிகளுக்கு அதன் சக்திக்கும் மேம்பட்ட சக்தியைக் கொண்ட மருந்தையும், இவன் சக்தி கொண்டு புதிய புதிய நிலைப்படுத்தித்தான், இவன் மருத்துவத் தில், இவனே கொண்டுவரவேண்டும். இன்று நாம் பெறும் சுவாசமே விஷ நிலைகொண்ட காற்றாக உள்ள பொழுது புதிய புதிய வியாதிகள் நம்மை வந்து தாக்கத்தான் செய்யும். மனிதனை மனிதனே அழித்து வாழும் நிலையில்தான் இன்றுள்ளார்கள் மனிதர்கள் எல்லாருமே. இயற்கையுடன் கலந்து இயற்கையையே தெய்வமாகப் போற்றி, இயற்கை அன்னைக்கு சக்தி தந்த, அச்

சூரியனைத் தேவனாக்கி, தெய்வமாக வாழ்ந்தார்கள் அன்று பல மக்கள்.

இன்று வாழும் நிலை எல்லாமே செயற்கைக்கு ஏங்கும், செயற்கையான மனமுடைய, செயற்கையுடன் ஒன்றிய, செல்வந்த வாழ்க்கைதான் செழித்த வாழ்க்கை என்ற மனநிலையிலேயே இவ்வுலகமே தன்னைத்தானே விஷமாக்கி, இவ்வுலகையும் விஷமாக்கிச் சுழன்றுகொண்டே உள்ளார்கள். இச் சுழற்சியிலிருந்து தப்புவதற்கு எந்நிலையையும் யாரும் நாடவில்லை. காலத்துடன் வழிப்படுத்தி வந்த வினை இன்றுள்ள வினை. இதிலிருந்து மீளும் நிலையை ஏற்க வருபவர்க்கு நம் தியான நிலையின் மகத்துவ நிலை புரியும். இவ்வுலகில் படர்ந்துள்ள பல உண்மை சக்தியினையும் புரிந்துணர்ந்து வாழ்ந்திட முடியும். நல்லுணர்வைப் புகட்டுகிறோம். புகட்டத்தான் நம் சக்தியில் சக்தியுண்டு. அவரவர்கள் ஏற்கும் நிலைகொண்டுதான் அவரவர்களுக்கும் அச்சக்தி நிலை பெறும் பாக்கியமும் உண்டு. அச்சக்தியினை ஏற்போர்க்கும் வழி நடத்தி வந்திடுவோம். எண்ண நிலையை மாற்றுவோருக்கு நல்நிலை பெற்றிட நமக்குச் சக்தி தந்த அச்சக்தி தேவனையே வணங்கி, அவர்கள் நிலையை நல் சக்தியாக்கிட நாமும் வணங்கிடுவோம்.

**27-9-79**

இவ்வுடல் பசிக்கு நாம் எப்படி உண்ணுகின்றோம்? பசித்ததும் புசிக்கின்றோம். புசித்த பிறகு அதன் நிலையை இவ்வுடல் ஏற்றதும் மறுபடியும் பசி வந்து புசிக்கும் பொழுது நாம்தான் புசித்து விட்டோமே, இப்பொழுது எதற்காக என்று எண்ணுவதில்லை. மறுபடியும் மறுபடியும் பசி வந்தால் புசித்துக்கொண்டே உள்ளோம். இவ்வுடல் பசிக்கு நாம் எடுக்கும் உணவு நம் எண்ணப் பசியில் இருந்து வருவதுதான். அனைத்து நிலைகளுமே இவ்வெண்ணப்பசியிலிருந்து வருவதுதான். இவ்வெண்ணப்பசியே நாம் எடுக்கும் சுவாச நிலைகொண்டுதான் வருகின்றது. இவ்வுடல் நாம் புசிக்கும் ஆகாரத்தை எந்நிலையில் ஏற்று வளர்கிறது? நாம் உண்ணும் ஆகாரம் இவ்வுடலில் எத்தன்மையில் செயல்படுகின்றது? நாம் எண்ணுகின்றோம், நாம் உண்ணும் உணவெல்லாம் இவ்வுடலுக்குள் சென்று இரப்பை ஏற்று, அந்நிலையிலிருந்து சிறு குடல், பெருங்குடலுக்குச் சென்று ஜீரணித்து அந்நிலையிலிருந்து அவை இரத்தமாகவும், சிறு நீராகவும், மலமாகவும் பிரித்து இவ்வுடல் நிலை உள்ளதென்று. இவ்வுடலின் நிலை எந்நிலையில் உள்ளதென்று உணர்த்துகின்றோம் இப்பாட நிலையில். இதைப் படிப்பவரின் எண்ணத்தில் இதன் உண்மையினை அறியவேண்டு

மென்றால் (வினு எழுப்பினால்) இந்நிலையில் வந்து அவர்கள் கேட்டிடலாம். நாம் ஏற்கும் உணவு இவ்வுடல் எந்நிலையில் ஏற்கிறது? நாம் எந்த ஆகாரத்தை உண்ணும் பொழுதும் இக் கையான காந்த சக்தி கொண்ட, ஈர்ப்பு நிலை கொண்ட இக்கையினால் நாம் எடுத்துப் புசிக்கும் பொழுதே அவ்வாகாரம் நம் வாய்க்குச் செல்லுவதற்கு முன், நம் சுவாசத்திற்கு அதன் மணம் ஈர்க்கிறது. ஈர்க்கும் நிலையில் நம் உடலுக்குள் சென்ற அவ்வாகாரமும் நம் வாயில் உள்ள பொழுதே, நம் சுவாசம் ஈர்த்த நிலையில் நம் வாயிலிருந்து உமிழ்நீர் சுரக்கிறது. அவ்வுமிழ்நீர் அவ்வாகாரத்தில் பட்டு, அவ்வாகாரத்திலுள்ள சத்தையும் சேர்த்து, ஆவியாகி அவ்வாவியே அமிலமாகி நம் உடலில் எல்லாப் பாகங்களுக்கும், அவ்வாகாரத்திலுள்ள ஆவியான, சத்துள்ள அமிலம் நம் இரத்த நாளங்களில் கலக்கின்றது. நாம் உண்ணும் உணவு எல்லாமே, நம் சுவாசம் ஏற்றுத்தான் அவ்வுமிழ்நீர் என்னும் நீர் சுரந்து அதிலிருந்து செயல்படுவதுதான் இவ்வுடலமைப்பே. மரம், செடி, கொடி, இவ்வுலகம், இவ்வுலகைப் போல் பல உலகங்கள் எல்லாவற்றுக்குமே ஆணிவேர் உண்டு. அதைப் போல் இம் மனிதனுக்கு எது ஆணிவேர்? இம் மனிதனுக்கு மட்டுமல்ல மற்ற ஜெந்துக்களுக்கும் எது ஆணிவேர்? இம் மனிதனின் ஆணிவேர் அவன் ஆத்மாவுமல்ல, அவன் உடலுமல்ல. அவன் எடுக்கும் சுவாசம் தான். இந்நாசி மனிதனுக்கு ஆணிவேர். இவ்வாணிவேரில் மாற்றம் வந்தால் அனைத்து நிலையுமே மனிதனுக்கு மாற்றம்தான். எடுக்கும் சுவாச நிலைகொண்டு, அவ்வெண்ணத்தில் எண்ணுவதின் நிலைகொண்டுதான், அவன் உடல் நிலையே உள்ளது, வாழ்க்கை நிலையும்தான்.

உடல் பசிக்கு உண்டதை நினைத்திடாமல், பசி வரும் பொழுதெல்லாம் எப்படி உண்ணுகின்றோமோ, அதைப்போல் இவ்வெண்ணத்தை நடந்தவற்றை நினைவுகூர்ந்தே பின் நோக்கிச் செலுத்திடாமல், இவ்வெண்ணப் பசியை நடப்பவற்றைச் செயலாக்கும் நிலையிலேயே நல் நிலைப்படுத்தி வாழுங்கள். பசிக்கும் பொழுது புசிக்கும் நிறைவைப் போல், எப்படிப் பசிக்கும்பொழுது அந்த நேரத்தில் நாம் புசிக்கும் நிலை மட்டும்தான் அந்நிலையில் செயலாக்குகின்றோம். இப்பொழுது பசிக்கும் பொழுது இப்பொழுதே சாப்பிட்டால், பிறகு வரும் பசிக்கு என்ன செய்வது என்று இவ்வுடல் எண்ணுவதில்லை. அதைப்போல் நடந்தவற்றையும், நடக்கப் போவதையும் கனவான கற்பனைப்படுத்தி கால நிலையை விரயம் செய்திடாமல் ஆண்டவன் தந்த கால நிலையில் இவ்வுடல் என்னும் பொக்கிஷத்தை உயர்ந்த தெய்வமான இவ்

வாத்மாவின் செயலினுல் இக்காலத்தை விரயமாக்கிடாமல் ஒவ்வொரு நொடியையும் அத்தெய்வத்தின் சேவகனுய் நம் எண்ணத்தைச் செயல்படுத்தி, தெய்வமுடன் தெய்வமாக, தெய்வீக வாழ்க்கையில், தேவனுய் வாழ்கின்ருேம் என்ற நிலைப்படுத்தி ஒவ்வொருவரும் வாழ்ந்திடுங்கள். இக்காற்றினில்தான் அனைத்து சக்தியும் கலந்துள்ளன. தங்கமும், வைரமும், அந்நிலைக்கும் மேலான செம்பும், இன்னும் பல உலோகங்களும் இக்காற்றில் தான் கலந்துள்ளன. அனைத்து சக்திகளின் கலவைதான் நம் உடலும். இவ்வுடலின் உண்மை மகத்துவத்தை உணர்ந்து, நாமும் தெய்வத்துடன் தெய்வமாக சூட்சுமம் கொண்டு வாழ்பவர்களுடன், இவ்வுடலில் நாம் உள்ள நிலையிலேயே கலந்து வாழ்வதற்குத்தான், இப்பாட நிலையின் உண்மை நிலை.

**28-9-79**

ஒவ்வோர் உடல் மாறுபட்டாலும், நாம் எடுக்கும் ஒவ்வொரு பிறப்பிலும், குழந்தைப் பருவம் முதல், தன்னைத்தானே உணர்ந்து வாழும் காலம் வரை, நம்மை ஒருவர் வழிநடத்தித் தான், நாம் வாழும் காலம் வருகிறது. அன்னை அன்னத்தை ஊட்டத்தான் செய்வாள். அதை ஏற்று உண்ணுவது நாம்தான். பள்ளியில் பாடத்தை உபாத்தியாயர் போதித்தாலும், அதை ஏற்று மதிப்பெண் பெறுவதுவும் நாம்தான். நம்மை நாமே உணரும் காலம் வரும்வரை, வழியைத்தான் நமக்குணர்த்துவர் பெரியோர். ஏற்றுச் செயல்படுவது நம் செயலில்தான் உள்ளது. ஒவ்வொரு ஜென்மத்திலும் மாறி நாம் வந்தாலும், முன் ஜென்மத்தின் நினைவு இஜ்ஜென்மத்தில் இருப்பதில்லை. முன் ஜென்மத்தின் தொடரின் அறிவுடன்தான் இஜ்ஜென்மத்தில் பிறக்கின்ருேம். அவ்வறிவுடன் இஜ்ஜென்மத்தில் நாம் பிறந்ததின் பயனைக் கூட்டி வாழும் பக்குவத்தில் தன்னைத்தானே உணர்ந்து, செயல்படும் நிலைக்கு, நம்முள் உள்ள சக்தியை நாமேதான் செயல்படுத்தி, நம் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும். எவ்வாண்டவனும் வந்து நமக்கு அனைத்தையும் அருள்வதல்ல, தீய வழிக்குச் செல்பவனுக்கும் அவன் செல்லும் வழியிலேயே, அவன் சக்தியை வளர்ப்பதினுல், அத்தீய சக்தியே அவன் வழியில் கூடி, மென்மேலும் அந்நிலையிலேயே செல்கின்ருன். அந்த நிலைதான், நாம் பெறும் இந்த நிலையும். நல் உணர்வை வளரச் செய்தால் அந்நிலை தான் வளரும். ஒவ்வொருவரின் வாழ்க்கை நிலை அமைவதுவும் அவரவர்கள் அமைத்துக் கொண்ட நிலைதான். எவ்வெண்ணத்தில் நாம் உள்ளோமோ அவ்வெண்ணத்தின் வழித்தொடர்தான் நம்முடன் வளரும். வியாதியில் உள்ளவன் அவ்வெண்ணத்தையே

வளரவிட்டால் அவ்வெண்ணத்திற்கேற்ப வளரும் நிலைதான் தொடர்ந்து வரும். ஒவ்வொரு வழி நிலையும் இதைப்போல்தான் வருகிறது. விஞ்ஞானத்தில் பல நிலைகளை அறிபவனும், அவன் எண்ணத்தின் வளர்ச்சிப்படிதான் அவன் வழி நடக்கிறது. எந்த ஒரு நிலையிலும் அவரவர்களின் எண்ண நிலையை வளரும் நிலைப் படுத்தி வளர விடுகின்றோமோ, அந்நிலையில்தான் வாழ்க்கை நிலை அமைகிறது. நம் எண்ணமுடன் இக்காற்றினில் கலந்துள்ள பல உயிரணுக்களும் கலந்துள்ள நிலையில், நம் எண்ணத்திற்கு ஒத்த உயிரணுக்கள் நம் உயிரணுக்களுடன் கலந்துவிடுகின்றன. நாம் ஏற்ற ஒரே வழியில் செல்லும்பொழுது, நம்முள் கலந்துள்ள அவ் வுயிரணுவும், நம்முடன் செயல்பட வருகிறது. நம் எண்ண நிலை யில் மாற்றம் வரும்பொழுது, நம் எண்ணத்தை மாற்றிக்கொள் ளாத வழியில், நம்முள் வந்து குடி கொண்டுள்ள மற்ற உயிரணு வின் எண்ணத்தை நாம் வேறு எண்ணத்திற்குச் சென்றாலும் நம்மைத் தடைப்படுத்துகிறது. நம்முள் வந்து குடி கொண்டுள்ள மற்ற உயிரணு. ஒவ்வொரு மனிதனின் உடலிலும் பல உயிரணுக் கள் ஏறித்தான் உள்ளன. நம் ஆத்மாவை நாமே ஆண்டு, நம்மை நாம் உணர்வது என்பதின் பொருள், நம்முள் உள்ள பல உயி ரணுக்களின் எண்ணத்திற்கு நம்மை அடிமை ஆக்காமல், நம் ஆத்மாவின் வழியில் நமக்குகந்த சக்தி நிலையில், நாம் வாழும் நிலைப்படுத்தி, வாழும் பக்குவத்தை நாம் பெற வேண்டும்.

ஒவ்வொரு பிறவியிலும் பல உயிரணுக்களின் நிலையுடன் வாழ்ந்த நாம் அவ்வுடலை விட்டு நம் ஆத்மா பிரிந்து செல்லும் பொழுது நம் ஆத்மாவுடன் கூடிய சப்த அலையும் சத்து நிலையும் தான் நம் உயிராத்மாவுடன், இஜ் ஜென்மத்திற்கு வரும்பொழுதும் வருகிறது. இக்காற்றினில் பல நிலைகொண்ட ஆவியான உயிரணுக் கள் சுற்றிக்கொண்டேதான் உள்ளன. பிறவி எடுக்கும் ஆசையிலும் தன் எண்ணத்தைச் செயலாக்கும் ஆசையிலும், குடும்பத்தைக் காக்கும் பற்றுக்கொண்ட ஆசையிலும், பழிவாங்கும் வெறி நிலை கொண்ட குரோதத் தன்மையிலும், வாழும் காலத்தில் அகால மரணமடைந்து அவதியுறும் நிலையிலும் பல நிலைகொண்ட மன நிலையில் சுற்றிக்கொண்டே உள்ளன. இவ்வுலகில் வாழ்ந்திடும் மனிதர்களைக் காட்டிலும், மற்ற ஜீவராசிகளைக் காட்டிலும் அதிக நிலையில், படர்ந்த நிலையில் பல உயிரணுக்கள் சுற்றிக்கொண்டே உள்ளன. புதிய புதிய மனிதன் பிறக்கிறானா? அப்படி என்றால் போன ஜென்மம் என்பதின் நிலையென்ன? ஆதியில் வந்த உயிர ணுக்கள்தான் நாம் எல்லாம் என்றால், ஆதி காலத்தில் மனிதர்க ளின் ஜனத்தொகை குறைவு, இப்பொழுது அதிகமல்லவா? ஆவி உலகிலும் பல உயிரணுக்கள் சுற்றிக்கொண்டே உள்ளனவல்லவா

என்று எண்ணுவீர். இவ்வுலகம் இக்கல்கியில் தோன்றிக் கலியில் முடியும் காலத்தில் வந்த உயிரணுக்கள் மட்டும் அல்ல, இன்று உள்ள உயிரணுக்கள் எல்லாம். இவ்வுலகம் தோன்றிய நாள் கொண்டே வந்த உயிரணுக்கள்தான் எல்லாமே. படர்ந்துள்ள உயிரணுக்கள் எல்லாம், உலகம் மாறுபடும் நிலையிலும், இவ்வுலகு டனே சுற்றிக்கொண்டே வருகின்றன. புதிய புதிய உயிரணுக்கள் வளர்ந்துகொண்டேதான் உள்ளன. இப்பூமி ஈர்த்து வெளிப்படுத் தும் உஷ்ண அலைகளைக் கொண்டு பல கோடி உயிரணுக்கள் அன் றன்று வளர்ந்துகொண்டேதான் உள்ளன. இம்மனித உயிரணு வில் இருந்து பல உயிரணுக்கள் உதித்து வெளிப்படுகின்றன. ஒவ்வோர் உடலிலிருந்தும் அவ்வுடல் அழிந்து ஆத்மா பிரிந்து சென்ற பிறகும் பல உயிரணுக்கள் அவ்வுடலில் இருந்தே வளர்ச்சி பெற்றுப் பல உயிரணுக்கள் உதிக்கின்றன.

ஆதியில் வாழ்ந்த மனித இனம் குறைவாயிருந்தாலும் அம்மனித இனத்தில் ஒவ்வோர் உடலும் அதன் ஆத்மா பிரிந்து சென்ற பிறகு அவ்வாத்மாவுக்குச் சொந்தமான ஆவி நிலையான சத்து நிலையும் சப்த அலையும் அதனுடன் சென்ற பிறகு இவ்வுடலை நாம் அடக்கம் செய்யும் நிலையில் இவ் உடலில் இருந்து, பூமி யில் இருந்து வெளிப்படும் உஷ்ண அலையின் ஈர்ப்பினால் அவ் வுடலில் இருந்து பல உயிரணுக்கள் உயிர்பெற்றுப் புழுவான நிலையில் படர்ந்துள்ளன. மனித உடலில் இருந்து உயிர் பெற்ற உயிரணுக்கள் அந்நிலைகொண்ட சக்தியையே தன்னுள் ஈர்த்து அதே நிலைகொண்ட சுவாசங்களைப்பெற்று மனித கர்ப்பத்திற்கு வந்து, மனிதனுடன் வந்து விடுகிறது. ஒரு மனிதன் இறந்து விட்டால் அவ் ஒரே மனிதன் மட்டும் பிறவி எடுத்து வந்த நிலையல்ல இப்பொழுது உள்ள நிலை. ஒவ்வொரு மனிதனும் அவன் இறந்த பிறகு, அவனிலிருந்து பல உயிரணுக்கள் மனிதனாகப் பிறவி எடுத்து மனித இனமும் வளர்ந்துகொண்டே வருகிறது. அதைப்போலத்தான் மற்ற ஜெந்துக்களின் உயிரணுவின் நிலையும். நம் முன்னோர்கள் இதன் நிலை அறிந்து தான் உடலை அடக்கம் செய்யும் நிலையிலிருந்து எரிக்கும் நிலையை ஏற்படுத்தினார்கள். உடலை எரிக்கும் பொழுது அவ்வுடலில் உள்ள ஆத்மா மட்டும்தான் அதன் ஆவி நிலையான சத்து நிலையைத் தன்னுள் ஈர்த்துக் கொள்கிறது, அவ்வாத்மா. உடலில் உள்ள நீர்ச் சத்துக்கள் அதை எரிக்கும் நிலையில் ஆவியாகி, நீருடன் நீர் கலந்துவிடுகிறது. இதன் உண்மையை அறிந்துதான் நம் முன் னோர்கள் உடலைவிட்டு ஆத்மா பிரிந்து சென்ற பிறகும், அவ் வுடலைப் பல நிலையில் பக்குவப்படுத்தும் வழி காட்டினார்கள். உயிரணுக்கள் பெருகும் நிலை புரிந்ததுவா?

29-9-79

நம் முன்னோர்கள், ஆத்மா பிரிந்த உடலில், அவ் உடலிலிருந்து உற்பத்தியாகும் உயிரணுக்கள் தோன்றாத நிலைப்படுத்தி, அவ்வுடலுடன், அவ்வுடல் கெடாத பக்குவ நிலைப்படுத்தி அடக்கம் செய்து வைத்தார்கள். இன்று, இக்கலியில் மக்களின்தொகை பெருகுவதினால், அனைத்து ஆக்க சக்திகளும் அதிகரிக்கும் நிலைக்காக, மக்களின் தொகையையே குறைக்கும் நிலையில் பல வழிகளைச் செய்கிறார்கள்.

மனிதனே மனிதனின் இன வர்க்கத்தை நிறுத்தப் பார்க்கின்றான், இன்று வாழும் மனிதன். ஆவி உலகில், பல மனித இன ஆவிகள் தன் எண்ணத்தை ஈடேற்றச் சுற்றிக்கொண்டே உள்ள நிலையில்தான், இன்று பல இடங்களில் ஒரு தாய் ஒரு மகவு பெறும் நிலைமை மட்டும் இல்லாமல், ஒரு தாய், ஒரே சூலில் பல மகவுகளை ஈனும் நிலையில், மிருக வர்க்கத்தின் நிலைக்கு ஒப்ப வந்து பிறக்கின்றன. பிறக்கும் மகவுகளைக் குறைக்க வழி காண்கின்றான், இக்கலியின் மனிதன். இறக்கும் உடலை எந்நிலையில் சிதற விடுகின்றான். இந்நிலையைப் புரிந்துகொண்டால் பல நிலைகளில் இந்நிலையை மாற்றிடலாம். ஆவி உலகிலுள்ள ஆத்மாக்கள் மட்டும் பிறவி எடுத்தால் இன்றுள்ள மக்கள் தொகையுடன் கூடிவராதா என்பீர். ஆவி உலகிலுள்ள மனித ஆத்மாக்கள் எவையுமே, உடனே பிறவி எடுக்கும் ஜென்ம ஆசையில் வந்து பிறப்பதில்லை. ஆவி உலகில் உள்ள ஆத்மாக்களுக்குத்தான் இவ்வுலகில் உடலுடன் வாழும் மனிதர்களின் நிலை புரிகின்றதே. இப்புதிய புதிய உயிரணுக்கள் தோன்றும் நிலையை, இம் மனிதன் மாற்றும் வழியை ஏற்படுத்தி வாழ்ந்தாலே, மனிதனிலிருந்து மிருகம், மிருகத்திலிருந்து மற்ற ஜெந்துக்கள் இவற்றின் நிலையும் மாறி, சூரியனிலிருந்து வரும் சக்தியினால் தாவர வர்க்கங்கள் செழித்து வளரும் உன்னத நிலை பெறலாம்.

சூரியனிலிருந்து வரும் சக்தியில் குறைந்தோ அதிகப்பட்டோ வருவதில்லை. என்றும் ஒரே நிலைப்படித்தான் வந்து குவிகிறது. இவ்வுலகினில் தோன்றிடும் உயிரணுக்களின் ஈர்ப்பு சக்தியின் துரிதத்தினால் (ஜீவன் பெற்ற உயிரணுக்களின் பெருக்கத்தினால்) தாவர வர்க்கங்களின் நிலை குறைந்துவிட்டன. இன்று தாவரங்களுக்குப் பல செயற்கை நிலைகொண்ட பக்குவம் ஏற்றினாலும், முன்காலத்தில் உள்ளதின் சுவையும் மணமும் இன்றில்லை. பூமியிலிருந்து வெளிப்படும் சக்தியையே மற்ற ஜீவன் பெற்ற உயிரணுக்கள் ஈர்த்து வாழ்கின்றன. இனப்பெருக்கம் ஆக ஆக, இப்பெருக்கத்திலுள்ள ஜீவன்களுக்குத்தான், இப்பூமித்தாயும்,

நம் சூரியனும் தரும் சக்திகள் சரிப்படுகின்றன. தாவர வர்க்கங்களின் நிலைக்கு, அதன் ஈர்ப்புத் தன்மைக்கு உகந்த சத்துத்தன்மை குறைந்தே வருகிறது. ஜீவன் பெற்ற உயிரணுக்களின் பெருக்கத்தின் சுவாசத்தினாலும், இன்று செயற்கையினால் வந்த வினை கொண்டு, இக்காற்று மண்டலத்திலுள்ள சக்தியின் தன்மை குறைந்ததினாலும், இக்காற்றே கடும் விஷத்துடன் சுற்றிக் கொண்டுள்ளதினாலும் தாவர வர்க்கங்களின் நிலை செழித்து வளரும் நிலையில்லை. கலியான இம்மனிதன், தன் சக்தியின் சக்தியெல்லாம், செயற்கையின் பேய்க்குப் பலியிட்டதின் பாவத்தை இன்னும் சிறிது காலத்தில் உணரும் தன்மைக்கு வந்துவிடுவான்.

**30-9-79**

செயற்கையின் பாவத்தினால் வந்த வினையான தாவரங்களின் நிலையின் குறைவினால், இன்று இவ்வுலக நிலையே மாறும் தன்மைக்கு வந்துள்ளது. தாவரங்களின் நற்பயனை அறிந்து, சுவையுள்ள காய் கனி வர்க்கங்களும், தானிய வர்க்கங்களும் நாம் பெற்று, இயற்கையின் அமுதைப் புசித்திட்ட உன்னத கால நிலை மாறி, இன்றைய மனிதனின் உணவில், தன் இனத்திலிருந்து மாறுபட்ட ஜென்மம் சென்ற, மற்ற ஜெந்து வர்க்கங்களைச் சமைத்து உண்ணும் நாகரிக நிலைக்குத் தன்னையே அடிமைப் படுத்தி வாழ்கின்றான், இன்றைய மனிதன். இவ்வுலகம் ஒன்றன் சக்தியிலிருந்து ஒன்று சக்தி பெற்றுத்தான் வாழ்கிறது. ஒன்றை ஒன்று அழித்து, ஒன்றன் சக்தியை ஒன்று பெற்றுத்தான், வாழும் சக்தியையே சக்தி நிலை நமக்கு அளித்துள்ளது. அந்நிலையில் இதன் நிலையில் மட்டும் என்ன பாவம் என்பீர். மற்ற ஜெந்து வர்க்கங்கள் எப்படி வந்தன என்பதைத்தான் பாட நிலையில் உணர்த்தியுள்ளோம். இன்று இருக்கும் இவ்வுலக நிலையில், இவ்வுலகிலுள்ள பூமியிலுள்ள கனி வர்க்கங்களையும், தாவர வர்க்கங்களையும் நாம் சிதறவிட்டதினால் (நாம் சிதறவிடவில்லை, அதை எடுத்துப் பயன்படுத்தித்தான் கொண்டோம் என்பீர்) நம் செயற்கையின் ஆசையினால் இவ்வுலகின் பொக்கிஷங்கள் குறைந்ததின் நிலையில், மற்ற ஜெந்துக்கள், மனித வர்க்கம் முதற்கொண்டு, அனைத்து ஜீவ ராசிகளும் மிகத் துரிதமாகப் பெருகியதன் நிலையில், இம்மனிதனும் மற்ற ஜெந்துக்களும், இப்பூமியின் சக்தியை ஈர்த்து வாழ்வதினால், இப்பூமியிலிருந்து மற்ற கனிவர்க்கங்கள் வளரும் நிலை குறைந்துவிட்டது. இஜ்ஜீவ ஜெந்துக்கள் பெருகப் பெருக, இன்னும் இவ்வுலக நிலையிலுள்ள சத்துத்தன்மை குறையும் நிலையில்தான் உள்ளது.

ஒரு ஜீவனை அழிப்பதினால் பல ஜீவன்கள் உற்பத்தி யாகின்றன. உங்கள் நினைவில், மண்ணில் புதைத்தால்தான், அவ்வுடலிலிருந்து பல உயிரணுக்கள் தோன்றுவதாக எண்ணு வீர். மற்ற ஜீவ ஜெந்துக்களை நாம் சமைத்து உண்டு, அதன் சக்தியைப் பெற்று, அதைக் கழிவாக வெளிப்படுத்தும் அக்கழிவில் இருந்தும், எந்நிலைகொண்ட ஜீவ ஜெந்துவை உண்டு கழித்தோமோ, அதன் நிலையிலிருந்து அந்நரகமான அவ் வாடையி லிருந்து, பல ஜீவ ஜெந்துக்கள் உயிர் பெறுகின்றன. ஒன்றை அழித்துத்தான் ஒன்று சக்தி பெறுகின்றது. நாம் அழித்தது பல மடங்கு சக்தி பெற்று உயிர் பெறுகின்றது. இஜ்ஜீவ ஜெந்துவின் பெருக்கத்திற்கு, ஆறறிவு படைத்த இம்மனிதனாலேதான் அனைத்துப் பெருக்கங்களும் வந்துள்ளன. இன்று, இவ்வுலகில் மனித இனத்தைக் குறைக்கப் பார்க்கின்றான். ஒரு மனிதன் வாழும் காலத்தில், அவன் வாழ்க்கையில், அவன் எத்தனை குழந்தை பெறுகின்றானோ, அவைதாம் அவனது பெருக்கம். ஆனால் இவ்வுடலை விட்டு, அவனது ஆத்மா சென்ற பிறகு, அவன் வாழ்ந்ததில் ஆசை வைத்து, அவன் வாழ்ந்த காலத்தில், அவன் பெற்ற இரத்த பந்தத்துடன் உள்ள குழந்தை வாழும் நாள்வரை, அவனது ஆத்மா மறு ஜென்மத்திற்குச் செல்வ தில்லை. ஆனால் அவனின் உடலை அடக்கம் செய்த இடத்தில், அவன் உடலில் இருந்து பல உயிரணுக்கள் உயிர் பெற்று, ஜென்மத்திற்கு வருகின்றன. இம் மனிதனே மனித வர்க்கத்திற்கும் மிருக வர்க்கத்திற்கும், மிருகத்திலிருந்து பல ஜெந்து வர்க்கங்களுக் கும் அடிகோலியாகின்றான். தாவர வர்க்கங்களின் உன்னத பொக்கிஷத்தைச் சிதறவிட்டவனும் இவ்வாறறிவு என்னும் அறி வைப் பெற்ற ஆண்டவனின் அடிகோலிகள் என்று செப்பிடும் இம் மனிதனேதான். தாவர வர்க்கங்களின் உன்னத பொக்கிஷ நிலையை உணர்த்திடுவேன்.

**2-10-79**

தாவர வர்க்கங்களை நாம் இன்று அழித்தும், அதிலிருந்து நாம் பெறும் உன்னத நிலைகளை சிதற விட்டும் வாழ்கின்றோம். இம் மனிதவர்க்கத்தின் பெருக்கத்தினாலும், மற்ற ஜெந்துக்களின் பெருக்கத்தினாலும், நம் செயற்கைக்குகந்த நிலைகளைப் பிரித்ததினால் மட்டும் அல்லாமல், இன்று ஆவி உலகில் சஞ்சரிக்கும் ஆவி உலகத்தின் பெருக்கத்திலுள்ள ஆவிகளும், அச் சத்தை ஈர்த்து வாழ்வதினாலும், இன்று இவ்வனைத்து இனப் பெருக்கத்தினால், அச்சக்தியெல்லாம் இந்நிலையில் ஈர்க்கப்படுவதினால், தாவர வர்க்கங்களுக்குக் கிடைக்கும் சத்து நிலை குறைந்து விட்டது.

எத்தாவரமும் சூரியனின் சக்தி பட்டு மட்டும் வளரவில்லை. இப்பூமித்தாய் சக்தியை ஈர்த்து ஊட்டம் தரும் நிலையிலிருந்து தான் அத்தாவரங்களின் செழிப்பு நிலை உள்ளது.

சில தாவரங்களினுல், இப்பூமியில் உற்பத்தியாகும் பல அணுக்களை ஈர்த்து வளரும் தன்மை உள்ளது. உயிரணுக்களையே ஊட்டமாக ஈர்த்து வளரும் தன்மையில், பல தாவரங்கள் உள்ளன. உயிரணுக்களையே என்பது, இன்று பல ஜீவன்கள் ஆத்மா பிரிந்த பிறகு நாய், நரி, பன்றி இப்படிப் பல ஜீவன்களைத் தாவரங்களின் வேருக்கு அடிப்பாகத்தில், இஜ் ஜீவன்களின் உடலை உரமாக இட்டு, அதையே உரமாக்கி, தன் சக்தியில் ஈர்த்து, நற் கனிகளைப் பல தாவரங்கள் நமக்கு அளிக்கின்றன. அத் தாவரங்க ளின் சக்திக்கு உரமாக வைத்த, அவ்வுடலில் உள்ள தன்மை யெல்லாம், அத்தாவரமே சத்தாக ஈர்த்ததினுல், அதிலிருந்து பல உயிரணுக்கள் ஜீவன் பெறும் நிலையில்லாமல், அதிலிருந்து சென்ற ஓர் ஆத்மா மட்டும்தான் சுற்றிக்கொண்டிருக்கும். மனிதனி லிருந்து மாறுபட்ட மிருக ஜெந்துக்கள், மற்றப் பிராணிகள் யாவுமே, தாவர வர்க்கங்கள் உரமாக ஈர்த்து, செழித்து வளர்ந் திடும், நாம் அதை எருவாக வைக்கும்பொழுது. ஆனுல் இம்மனித உடலைப் புதைத்தால், இம்மனித உடலைப் புதைத்த இடத்தில், அதன் சக்தி அங்கிருந்தால், இம்மனித உடலில் இருந்து ஒரு புல் பூண்டும் வளர்ந்திடாது. இம்மனித உடல், தாவர வர்க்கத்திற்கு எருவாக சக்தி தரும் பாக்கியமும் இம் மனித உடலுக்கில்லை. மற்ற ஜெந்துக்களுக்கும், இம் மனித உடலுக்கும் உள்ள வேறு பாடு, இம்மனித உடல் கடும் உப்பு நிலை பெற்றது. இம் மனித உடலை உப்புக் கலந்த இரசாயன நிலைப்படுத்தி, பல நாட்கள் ஆவி பிரிந்த உடலைப் பாதுகாப்பான நிலையில் வைத்திருக்கலாம்.

ஒன்றை அழித்து ஒன்று சக்தி பெறுகிறது. எதுவுமே அழிவ தில்லை, வளரத்தான் செய்கிறது. இச் சூரியனின் சக்தியில் வந்த எவற்றையும், யாராலும் அழித்திட முடியாது. வளர்ந்துகொண்டே உள்ள இவ்வுலகினில், இன்று நாம் ஆரம்பத்தில் உள்ள நிலையை, ஒரு சக்தியை அழித்ததினுல், மற்ற சக்தி வளர்ந்துவிட்டது. அந் நிலையை மாற்றி, எச்சக்தியை அழித்து எச்சக்தியை வளர்த் தோமோ, அச்சக்தியை அழித்துத்தான் முன் இருந்த சக்தியை வளரச் செய்ய வேண்டும். தாவர வர்க்கங்களை வளர்த்து, மற்ற இனப்பெருக்கத்தை நாம் மாற்றி, மாற்றி என்னும் பொழுது, அழித்து, மற்ற மிருக வர்க்கத்தை, நாமே அதை உண்டு, பல அணுக்களை வளரவிடாமல், மற்றப் பிராணிகள் இறந்த பிறகு, அதன் உடலைத் தாவரங்களுக்கு எருவாக்கி, தாவர நிலையை

வளரச் செய்ய வேண்டும். மனித வர்க்கத்தின் பெருக்கத்திற்கும், எவ்வுடலையும் நாம் புதைக்காமல், மனிதன் இறந்த பிறகு, அவ் வுடலை எரிக்கும் நிலைப்படுத்திட வேண்டும். செயற்கையின் ஆசையை மாற்றி வாழும் நிலையில்லை, இன்று மனிதனுக்கு. இவ் வுலக நிலையையே காத்து, அதன் அழிவான மாற்றத்தைத் தாங்கும் சக்தி சித்தர்களாலும் ரிஷிகளாலும் முடியாத நிலையில் இன்றுள்ளது. இச் செயற்கையை மனிதனின் நிலையிலிருந்து மாற் றிடவும் முடியாது. இவ்வுலகத்தின் மாறும் தன்மையிலிருந்து, இவ்வுலக நிலையை மீட்டிடவும் முடியாத நிலையிலுள்ளது, இன்று, இவ்வுலகம்.

**3-10-79**

இவ்வுலக மக்களின் எண்ணங்களையும், செயல்களையும், அவர்கள் அறியாமலே, அவர்களை இப்பேராசையென்னும் செயற் கைப் பேயான, பேயாக இன்று இவ்வுலகில் வாழும் மக்கள் உள்ள நிலைகளுக்கெல்லாம், இம்மக்களினுல் அன்று ஆட்சியென்ற நிலை ஏற்படுத்தி, அன்றுண்ட அரசர்களின் ஆவேச உணர்ச்சிகளை, மக்களின் எண்ணங்களிலெல்லாம் கலக்க விட்டு, இன்றும் அவ் வழிவழியாய் வந்த, அவ்வாவேச நிலைகொண்ட உணர்ச்சியினுல், இவ்வுலக நிலையே செயற்கைக்கு அடிபணிந்து வாழும் நிலையில் உள்ளது. இன்றுள்ள மனிதர்களில் பெரும்பாலோரின் எண் ணங்கள், பெரும் பேராசைகொண்ட பணத்திற்கு அடிமைப்பட்டு அச்செல்வத்தை ஈட்ட, எவ்வழியையும் நாடலாம். இவ்வுலகில் வாழப் பணச்செல்வம் ஒன்றைத்தான் பொக்கிஷத்தின் பொக்கிஷ மாகக் கருதி, அதற்கே அடிமையாகி, இவ்வுலகத்தையே செயற்கை யின் கோளமாக்க, இந்நூற்றுண்டில் அறிவு வளர்ச்சி பெற்ற மனிதர்கள், இவ்வுலக நிலையை நடத்திச் செல்கின்றுர்கள்.

ஆண்டவனையே பல நிலைகள், ஜாதி நிலைகொண்டு பிரித்து வைத்தவர்கள்தான் இன்று வாழும் இம்மனிதர்கள். ஒவ்வொரு ஜாதி என்னும் வழியை உண்டுபண்ணியவர்களும், அதன் வெறி நிலையில் இன்று தன்னைத்தானே, தன் ஜாதிக்குத் தானே அடிமைப் பட்டு உழன்று வாழ்கின்றுர்கள் என்று எண்ணுவதில்லை. தன் ஜாதிக்கு, தான் மதிப்பளிப்பதாக எண்ணுகிறுர்கள், அச் ஜாதிக்கு அடிமைப்பட்டவர்களெல்லாம். இவ்வுலக நிலையே, இவ்வரசர்கள் ஆண்ட காலமுதல், இப்பொழுது அரசாட்சி நடக்கும் நிலை கொண்டும், ஆட்சியில் உள்ளவர்கள் நடத்திடும் நாடகத்தினுல் வந்த வினைச்செயல்தான், இன்று இவ்வுலக நிலையில் உள்ளன. சூழ்ச்சியான நிலையில், பேராசையின் பேயை வளர விட்டுத்தான்,

இன்று இவ்வுலக நிலையே உள்ளது. அனைவரின் எண்ணமும் ஒன்று பட்டுச் செயல்படும் நிலை, என்றும் கூடிவரும் நிலையை ஏற்படுத்திட, இன்றுள்ள பல மத வழிகளில் உள்ள பெரியோர்கள் எல்லாம் ஒரு நிலைப்பட்டு, இவ்வுலக நிலையை, இவ்வுலக மக்களின் எண்ண நிலையை, ஒன்றுபடுத்திட, பக்தி என்னும் நிலையை வளரவிட்டு, அன்பு, பாசம் என்ற பிணைப்பு நிலையை மக்களின் எண்ணத்தில் சுழலவிட்டு, இப் பேராசையிலிருந்து விடுபட்டு, ஆசையான அமுதை ஊட்டி, தெய்வீக நிலையில் ஈர்த்து, இன்றுள்ள மக்களின் ஜன நெருக்கத்தை மிகத் துரித நிலையில் பெருகும் நிலையைச் சமப் படுத்தி, தாவர வர்க்கங்களை ஓங்கச் செய்து, இவ்வுலகை நிலைப் படுத்தும் தன்மையான, பல நூறு வருடங்களுக்கு முன் நம்மைப் போல் இவ்வுலகினில் பிறந்து, நமக்கெல்லாம் வழிகாட்டியாய் இருந்த, இவ்வுலகின் ஞானச்சுடரான மகரிஷி ஒருவர் எழுதி வைத்த பொக்கிஷத்தின் பொக்கிஷமான, பெரும் பெக்கிஷ மொன்று, இவ்வுலகின் காலப்பெட்டகத்தில் பாதுகாத்து வைத் துள்ளார். அந்நிலையிலேயே ஜெபம் கொண்டும் காத்துள்ளார். அவருக்கு ஜாதி மதம் ஒன்றுமில்லை. இன்று இவ்வுலகிலுள்ள சக்தியின் செல்வங்களான, சக்தி பெற்ற, நம் மக்களில் யாவரும் அறிந்திடலாம் அவரவர்களின் நிலையில் நடக்கும் நிலைகொண்டு, ஜெபத்தின் அருளைப் பெற்றால், அந்த ஞானச் சுடரின், அம் மக ரிஷியின் அருளைப் பெற்று, அவ்வுலகப் பொக்கிஷத்தை எடுத்து, அனைவருக்கும் அதிலுள்ள உண்மையை உணரும் பாக்கியத்தைப் பெற்றுத் தந்திடலாம். இம்மதம் என்ற நிலையை மாறுபடுத்தி, இன்று இவ்வுலக நிலையைக் காத்து அருள, ஆண்டவன் அருள் பெற்று, ஆண்டவனின் ஜோதிகளாகப் பல ஞான நிலைகளை மக்க ளுக்கு உணர்த்திடும் நல் பெரியோர்கள் அனைவரும் ஒன்றுபட் டால், இவ்வுலகில் உதித்த சக்தியின் செல்வக் குழந்தைகளை, இச் செயற்கையின் பேராசைப் பேயிலிருந்து விடுபடும் நிலைக்கு அழைத் திடலாம். இச் ஜாதி மதப் பேயை நாமும் வழி நடந்திடாமல், ஒன்றுபட்டுச் செயல் கொண்டு, தன்னைத்தானே அடிமைப்பட்டு வாழும் நிலையிலிருந்து, மீண்டு வருவதுதான், இன்றுள்ள இம் மக்களின் நிலைக்கு நாம் உணர்த்தும் உன்னதப் பொக்கிஷமே. வழிநடந்து வந்திடுங்கள்.

**5-10-79**

நம் முன்னோர்கள் நமக்குக் காட்டிய ஒவ்வொரு வழியிலும் உள்ள உண்மையினை அறியாமல், நாம் அவற்றை, அக் குடும்பங்களில் வந்த குடும்பச் சடங்கு, சாங்கியம் என்று வழிப் படுத்தி, அதன் நிலையில் மாறுபடும்பொழுது, மனச் சஞ்சலம்

கொண்டு, நாம் தெய்வக் குற்றம் செய்துவிட்டோம், பாவத்திற்கு ஆளாகிவிடுவோம், என்ற பயந்த நிலையில், இன்றும் பல குடும்பங்களில், பல நிலைகள் நடக்கின்றன. பக்தி நிலை வளர்வதற்காக நம் முன்னோர்கள் பல வழிகளில் அவர்களின் சந்ததியார் வர வேண்டுமென்பதற்காகக் காட்டிச் சென்ற வழிதான் பல வழிகளும்.

அம்மாவாசையன்று அவரவர்களின் முன்னோர்களை நினைத்து பூஜிப்பது, அம்மாவாசையில் வைத்தியம் செய்து கொண்டால் நற்பயன் அடையலாம், அம்மாவாசையன்று எந்த நற்காரியங்களுக்கும் நல்ல நாள், அம்மாவாசையன்று சேமித்து வைத்த தானியத்தைச் சூரியனின் ஒளி படும்படி வைத்தால் பல நாட்கள் அவற்றில் பூச்சி புழுக்கள் அண்டா, அம்மாவாசையன்று தொழில்களுக்குச் செல்லலாகாது என்றெல்லாம் பல நிலைகளை நமக்கு உணர்த்திச் சென்றார்கள், நம் முன்னோர்கள். அம்மாவாசையின் நிலையென்ன? அன்று நமக்கு இப்பூமியின் மேல் சூரியனிலிருந்து வெளிப்படும் ஒளிக்கதிர்கள் அனைத்தும் அப்படியே வந்து தாக்குகின்றன. தாக்கும் நிலைகொண்டு, இப்பூமியும் ஈர்த்து வெளிப்படுத்துகிறது. அம்மாவாசையன்று கடல் பொங்குகிறது என்கின்றோம். கடலும் பொங்குகிறது; அம்மாவாசையன்று மட்டும் கடல் நீர் அதிகரிப்பதின் நிலையென்ன? இப்பூமித்தாய் ஈர்த்து வெளிப்படுத்தும் நிலையில் அதிசக்தி வெளிப்படுகிறது. கடல் நீர் எப்படிப் பொங்குகிறதோ, அதைப்போலத்தான் ஜீவராசிகளின் நிலையும், தாவரங்களின் நிலையும், பனிமலையின் நிலையும், எரிமலையின் நிலையும் மற்றுமுள்ள பல இவ்வுலகில், இப்பூமியிலிருந்து, இப்பூமித்தாய் வளர்க்கும் அனைத்து ஜீவ நிலைகொண்ட யாவுமே, அம்மாவாசையன்று சூரியனிலிருந்து கிடைக்கும் சக்தியின் மாற்றத்தினால் இந்நிலை பெறுகிறது.

மனிதர்களுக்கு அம்மாவாசையன்று உடல் கனம் தெரியும். ஒருவிதச் சோர்வும், என்றும் இல்லாத நிலையில் சிறு தளர்ச்சியும் ஏற்படும். நாம் அன்று சுவாசிக்கும் காற்றில் கனமான அணுநிலை கொண்ட, சூரியனிலிருந்து வெளிப்படும் சக்தியின் துரிதத்தினால், அக்காற்றை நாம் சுவாசிப்பதினால் நம் உடல் நிலையில் மாற்றம் தெரிந்திடும். ஆரோக்கியமுடன் வாழ்பவர்க்கே இந்நிலை ஏற்படும் பொழுது, நலிவுற்றோரின் நிலைக்கு அவர்கள் எடுக்கும் சுவாசம் கனம் பெறுவதால், அவர்களின் உடல் நிலைக்கு, முதலில் இருந்த நிலைக்கும், அவ்வமாவாசை நாளுக்கும் முன்னேற்றத்தைவிட, நலிவுத் தன்மை கூடிவிடுகிறது. நம் முன்னோர்கள், அதிக நலிவுற்றோர்களைக் காணும் பொழுது, அம்மாவாசை தாண்ட வேண்டும்

என்பதின் நிலையும் இதுதான். நலிவுற்ற நிலையில் இக்கனமான சுவாச நிலையை நலிவுற்றோர் ஈர்த்து சுவாசிப்பது கடினமாவதினால் தான், இந்நிலை நடக்கின்றது. புத்திசுவாதீனம் இல்லாதவர்களுக்கும், இவ்வமாவாசையன்று அவர்கள் மனநிலை அதிகமாக மாறுபடும் நிலைக்கு வருகிறது. அம்மாவாசையன்று சந்திரனில் இருந்து நாம் பெறும் பல நிலைகள் நமக்கு கிடைக்காமல் போகின்றது. நமக்கு எப்பொழுதும் பாதுகாப்புப்போல் உள்ள சந்திரனின் அன்பான அரவணைப்பு இல்லாததினால் இந்நிலை ஏற்படுகிறது. ஆவி நிலையில் உள்ள முன்னோரை, பக்தி கொண்டு நாம் வணங்கும் பொழுது, நம் எண்ணம் அனைத்தும் அவர்களின்பால் பக்தி கொண்டு செல்வதினால், அவர்கள் காக்கும் நிலைக்கு, நம்மை நாம் நிலைப்படுத்துகின்றோம். அப்பொழுது நமக்கு இவ்வம்மாவாசையன்று கனமான சுவாசத்தை ஈர்த்துச் சுவாசித்தாலும், அந்நிலையில் அவர்களின் ஆசி பெறுவதினால், இந்நிலையில் சோர்வு நமக்குத் தெரிவதில்லை.

அம்மாவாசையன்று, நம் முன்னோர் விரதம் இருக்கும் நிலை ஏற்படுத்தியதும் எந்நிலையில்? நாம் எடுக்கும் சுவாசத்திலேயே அம்மாவாசை தினத்தில் பல சக்திகள் அதிகரித்து ஏற்பதினால், இவ்வுடல் நிலைக்கு அன்று பசியின் நிலையும் குறைவு. அதன் நிலையை அறிந்துதான் நம் முன்னோர்கள் விரதம் என்னும் பக்தி நிலையை, அந்நிலையில் காட்டி, நமக்கு வழிப்படுத்தித் தந்தார்கள். எந்த ஒரு சிறிய நிலையையும் நம் முன்னோர்கள் நமக்கு பக்தி நிலையிலேயேதான் உணர்த்திச் சென்றுள்ளார்கள். ஆண்டவன் என்ற பக்திநிலை ஒன்றினால் மட்டும்தான் என்றும் இவ்வுலக மக்களின் நிலையை, நல்வழிப்படுத்திட முடியும் என்ற உண்மை நிலையில் தான், பல நிலைகள் கொண்ட செயல்களையெல்லாம் நமக்குணர்த்திச் சென்றார்கள். பல ஏடு நிலைகளில் எழுதி வைத்தும் சென்றுள்ளார்கள். எந்நிலையிலும் நம்பிக்கை என்ற ஆண்டவனை நம்பினால் அனைத்து சக்திகளின் ஆண்டவனையே, ஆண்டவனின் அருளையே அந் நம்பிக்கையில் நாம் பெறலாம். நல்லோரின் வாயிலிருந்து வரும் சொற்கள் எல்லாமே ஆண்டவனின் நாமச் சொற்கள் என்ற நம்பிக்கையுடன் நாம், நம் முன்னோரையும், நம் பெரியோர்களின் வாழ்த்தையும், நம்பிக்கையுடன் ஆண்டவனின் சொற்களாக, நம்பி வரம் பெற்றால் நடப்பவை யாவும் நல் நிலைகளாக நடந்திடும். நம் முன்னோரையும், நம்மில் பெரியோரையும் அவர்கள் ஆசி பெற நாம் வணங்குவது ஆண்டவனின் அருள் சொற்களை அவர்களின் நிலையில் இருந்து பெறுகின்றோம் என்ற நம்பிக்கையில் நலம் பெறப் பெரியோர்களின் ஆசி பெற்று வாழ்ந்திடுங்கள்.

6-10-79

அச்சு ஒன்று பதித்து உருவம் ஒன்று ஆவதில்லை. எவ்விதை போடுகின்றோமோ அச் செடிதான் வளரும். நம் எண்ணத்தை எந்நிலையில் செயல்படுத்துகின்றோமோ, அந்நிலையின், தொடரின், வழி நிலையின் வாழ்க்கைதான் வந்தமையும் நமக்கெல்லாம். எண் ணப்படிதான் வாழ்க்கை. உன் எண்ணம் போல் வாழ்ந்திடு என்ற பெரியோரின் வாழ்த்தைத்தான் நாம் பெறுகின்றோம்.

ஒரே தாயின் வயிற்றில் பிறக்கும் பல குழந்தைகளின் குண நிலை ஒன்றுபோல் இருப்பதில்லை. குண நிலை மட்டுமல்ல, மண நிலையும், ஒவ்வோர் உடலுக்கும் ஒவ்வொரு வித மணமுண்டு. இப் பூமியில் உதித்த, ஜீவன் பெற்ற அனைத்திற்குமே, ஒவ்வொரு மணம் உண்டு. மணத்தைப் போலவே, ஒவ்வொன்றுக்கும் ஒவ் வொரு சக்தி நிலை உண்டு. ஒவ்வொரு ஜீவ உடலுக்கும், அவ ரவர்கள் எந்நிலை கொண்ட குண நிலையையும், சக்தி நிலையையும் வளர்த்துக் கொள்கின்றார்களோ, அந்நிலையின் வளர்ச்சிக்கு, அந் நிலைக்கு ஒத்த குண நிலைகளில் உள்ள, ஆவி உலகிலுள்ள ஆத் மாக்களின் தொடர்ப்பு நிலையும், இவர்களுக்கு வந்தடைகிறது.

இன்று இந்நிலத்தில் நீர் எங்குள்ளது? எந்நிலையில் ஊற்று நிலை உண்டு? என்பதனையறிய சிலரின் உடல் நிலையிலேயே அச்சக்தி நிலையுண்டு. யார் மாட்டும் அறிந்திடும் நிலையல்ல அது. அவர் உடலிலேயே அச்சக்தி நிலையும், அந்நிலைக்கு ஒத்த அவர் நிலையில் உள்ள, மற்ற ஆத்மாவின் தொடர்பும், அவர் உடலில் இருந்தால் தான் நீர் உள்ள நிலைகளைக் கண்டறிந்திட முடிந்திடும். நம் முன்னோரின் வழியில் வந்ததுதான் இந் நிலையின் வழி. இவை போலவே, இப்பூமியில் உள்ள உலோக நிலையையும் கண்டறிய லாம். இவ்வுடலில், இப்பூமி எச்சக்தியெல்லாம் எடுத்து வெளிப் படுத்துகின்றதோ, அந்நிலைக்குகந்த சக்தி நம் உடல்களிலும் உள்ளது. இக்காற்றில்தான் அனைத்து சக்திகளும் கலந்துள்ளன. எப்படி இப்பூமியில் பல நிலைகொண்ட உலோகங்கள் வளர்கின் றனவோ, அந்நிலைபோல் ஒவ்வொரு ஜீவ உடலுக்கும் பல நிலைகள் கொண்ட சக்தி நிலைகள் உண்டு. நமக்குகந்த சக்தி நிலையை வளர விட்டு, அவற்றின் நிலையை அறிந்து, அதன் வழிக்குச் செல்லும் பக்குவ நிலை புரியாமல் வாழ்கின்றோம். இன்று பல இடங்களில் மனோவசிய நிலை (மெஸ்மரிஸம்) என்னும் நிலையைச் சிலர் அறிந்து, ஒருவரது நிலை அனைத்தையும் கட்டுப்படுத்தி, இவர்கள் எச் சக்தியைப் பாய்ச்சுகிறார்களோ, அச்சக்தியின் நிலைகொண்டெல் லாம் மனோவசியத்திற்கு உட்பட்டவர் நடப்பதாகப் பார்த்தும் கேட்டும் இருப்பீர். இவற்றின் நிலையென்ன? அறிந்து, கல்வி

அறிவில் வந்த நிலை என்பர் பலரும். கல்வி அறிவில் மட்டும் வந்த நிலையல்ல அந்நிலை. அவர்கள் நிலையும், இன்று பல நிலைகொண்ட சாமியார்கள் மந்திரம் செய்து, பல பொருட்களை, விபூதி, புஷ்பம் இப்படிச் செய்யும் நிலைக்கும், இம் மனோவசியம் செய்யும் நிலைக் கும் ஒத்த நிலைதான். ஆவியின் தொடர்பு கொண்டு மனோவசியத் தால் யாரை அந்நிலைக்கு வசியப்படுத்துகிறார்களோ, அவர்களின் எண்ணத்துடன் இவ்வாவியின் எண்ண அலையும், சப்த அலையும் கலக்கவிட்டு வசியப்பட்டவரின் நிலையை அடக்கி, இவர்கள் ஏவிய ஆவியின் நிலைப்படியெல்லாம், அவ்வசியப்பட்டவர்கள் நடக்கும் நிலைதான் இம் மனோவசிய நிலை. யார் இம் மனோவசியம் செய்கி றாரோ, அவரது சொல்லும், அவரது எண்ணமும் இவ்வசியப் பட்டவரின் நினைவில் கலந்துள்ள ஆவியின் நிலைக்கும் தொடர்பு கொண்டு, இவ்வசியப்படுத்தியவர் சொற்படியெல்லாம் அவ்வாவி, அவ்வசியப்பட்டவரின் உடலில் இருந்து செயல்படுத்துகிறது.

அறிந்தோ, அறியாமலோ செய்யும் பிழை இது. வசியப் பட்டவரின் சக்தியும் பாதிக்கப்படுகிறது, வசியம் செய்தவரின் சக்தியும் இதனால் பாதிக்கப்படுகிறது. இதன் நிலையில் அடையும் நல்நிலை யென்ன? கால நிலையும் விரையமாகிறது. ஆண்டவன் அருளிய சக்திதனை அன்பென்னும் பொக்கிஷமாக்கி, அச்சக்தி யான ஜெபத்தைக் கொண்டு, பல உன்னத அறிவுச் செல்வத்தை நாம் பெற்று இவ்வுலகினைச் செழிப்பான உலகமாக்கி, செழித்து வாழ்ந்திடும் இயற்கையின் செழிப்பிற்கு நம் சக்திதனை ஒன்றச் செய்தால், இவ்வுலகமே செழித்து, இன்று இக்காற்றே கடும் விஷமாகச் சுற்றியுள்ள நிலையை மாற்றி, ஆனந்தமான மண நிலையைப் பரவச் செய்யத் தாவரங்களின் நிலையைத் துரிதப் படுத்தி, தாவரங்களை வளரச் செய்து நற்கனிகளையும், நல் தானி யங்களையும் நாம் பெற்றே, நற்சுவையுடன் நாம் உண்டே, நல் மணத்துடன் நாம் வாழும் நிலை ஏற்படுத்திட நாமெல்லாம் ஒன்று பட்டே, நம் சக்தியின் ஜெபத்தால் இயற்கைக்கே அடி பணிவோம்.

**7-10-79**

நமக்கு வழிகாட்டிய நம் முன்னோரும் நம்மில் கலந்து வாழ்ந்த சப்த ரிஷி நிலை பெற்றவர்கள் முதற்கொண்டு, இயற்கை யின் நிலையைத்தான் போற்றி வழி நடந்து வந்தார்கள். இன்றும் அவர்களின் செயல் பல ரூபத்தில் செயல்கொண்டு வழிநடத்தியும் வருகின்றார்கள். எந் நிலையில்? இன்று நீங்கள் பல இடங்களில் அகஸ்தியர் நாடி, போகர் நாடி, பிருகு மகரிஷியின் நாடி, இன்னும் இப்படிப் பல நிலைகொண்ட நாடிகள் சில இடங்களில் உள்ளதாக அந்நிலைக்குச் சென்று அதை ஓதுபவர்களின் வாயிலாக

அறிந்து வருகிறீர்கள். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுதிய அந் நாடிக்கும் இன்றைய நிலைக்கும் பெயர்—நாமம் முதற்கொண்டு ஒத்து வரும் தன்மை என்ன? அந்நாடியை ஓதுபவரின் ஜெபமும் எண்ணமும் எப்பெரியோரின் நாடியைத் தெய்வ நிலைகொண்டு, ஜெபம் கொண்டு அவர் ஏற்கும் பக்தி நெறியின் நிலைக்கு அந் நாடியை எழுதிய பெரியோரே, அதை வணங்கி ஓதுபவரின் சப்த அலையுடன் வந்து கலந்து ஓதச் செய்வதுதான். அந்நாடியில் உள்ள நிலை இன்று படிப்பவரின் அறிவுக்கெட்டாத இன்றைய கல்வித் திறனும், அதை எழுதிவைத்த காலத்தின் கல்வித்திறனும் மிகவும் வேறுபட்ட நிலையில் இருக்கும் நிலைகொண்டு இன்று ஓதுபவருக்கு அச்சொல்லின் நயமும், அழகும் அவரால் ஈர்த்துப் படித்திடவும் முடியாது. சில குறிப்புகள் மட்டும் இவரால் அறிந்திட முடியும். அந்நிலையில் வந்து சொல்வதெல்லாம், அந்நாடிகளை எழுதிய வர்களே தான் வந்து உணர்த்துகிறார்கள். காமாட்சி நாடி, மீனாட்சி நாடி என்றெல்லாம் சொல்லும் நிலையிலும் அந்நிலையி லுள்ள சித்துநிலை கொண்ட காமாட்சி அம்மனும், மீனாட்சி அம்மனுமே வந்து இவர்கள் நிலையில் உணர்த்துவதுதான். சிலரு ருக்கு நாடியில் வந்ததை அதன் சொல்லிய வாக்குப்படி எந் நிலையில் நம்புகின்றார்களோ, அந்நிலையின் பரிபூரண அருளாசி பெறுகிறார்கள்.

நம்பிக்கையில் நடப்பதுதான் இவ்வுலகமே. நாடியில் கேட்டதையே மனச் சஞ்சலத்துடன் வளரவிடுபவனுக்கு அனைத்து நிலைகளுமே தவறாகத்தான் நடந்திடும். ஆண்டவனே, ஆண்ட வனே என்பது, நாம் ஆண்டவனாக வணங்கும் பெரியோரின் நிலையையே சஞ்சலப்படுத்தும் நிலைதான் இவையெல்லாம். நம் பாடநிலையில்தான் ஆண்டவன் என்றால் யார் என்பதனைப் பல நிலைதனில் விளக்கியுள்ளோம். நம் பக்தியின் பக்குவ நிலைக்கு நாம் பெறும் சொத்துத்தான் ஆண்டவனின் அருள் சொத்து. ஆவி உலகில் அல்லல் பட்டுப் பல செயல்களை அதி கஷ்டத்துடன் செய லாற்றும் பல நிலைகொண்ட ஆவிகளுடன் நாம் கலந்து வாழ்வதி னால் நம்மில் இப்பக்தி நிலைகொண்ட செயலை வளர விடுவது ஒன்றுதான் இன்று இவ்வுலகினில் உள்ள நிலையிலிருந்து நாம் தப்பும் வழி. இப்படர்ந்த உலகினில் நம் எண்ணத்தில் சிறு சலிப் புக்கும், கோப, தாப, குரோதத்திற்கும் இடமளித்திட்டாலும் இவ்வாவியின் நிலையிலிருந்து தப்புவது கடினம். நம்முள் உள்ள இறை சக்தியை உணர்ந்தே அவ் ஈஸ்வர ஜெபத்தை, எந் நிலையி லும் நம் நினைவில் கொண்டு, நம்முள்ளே அவ் ஈஸ்வரன் உள்ளான் என்ற சத்தியத்தை மறந்திடாமல் ஒவ்வொருவரும் வழிபெற்று, வாழ்ந்தால்தான் இவ்வாவி உலகிலுள்ள ஜீவ ஆத்மாக்கள் அனைத்

தின் செயலிலிருந்தும் நாம் தப்ப முடியும். ஆவி உலகின் சூழ்ச்சியி லும் இவ்வுலக நிலை தத்தளித்த நிலையில் உள்ளது.

**9-10-79**

நம் பாட நிலையில் உடலில்லாத ஆத்மாவுடன் கூடிய ஆவி களின் நற்செயல்கள், தீமைகள் இவற்றையே பல நிலைகளில் சொல்லி வருகின்றேன். வாழ்பவரின் நிலையைக்காட்டிலும் அவர்க ளின் எண்ண சக்தியை இவ்வாவிகளின் செயல்தான் இவ்வுலக நிலையையே நடத்திச் செல்லும் தன்மை கொண்டதாக உள்ளது.

இன்று புனித கங்கை என்ற நிலையில் காசிக்குச் சென்று நம் பாவங்களைக் கழிக்கப் பல மைல்களுக்கப்பால் இருந்தும் அப் புண்ணிய நதியில் நீராடி வந்தால் பாவங்கள் குறையும் என்ற எண் ணத்தில் பக்திகொண்டு பல கஷ்டங்களுடன் பாவத்தைப் போக்க காசி, இராமேஸ்வரம் என்று புண்ணிய ஸ்தலங்களை நாடி மக்கள் செல்கிறார்கள். அக்காசி கோவிலில் உள்ள அத் தபசு ரிஷியான காசிவிஸ்வேஸ்வரரின் அருளைப் பெற்றிட அப்புண்ணிய ஸ்தலத் திற்குச் செல்கின்றார்கள். ஆனால் அங்கும் நடக்கும் நிலை என்ன? அப்புண்ணிய ஸ்தலத்தில் வாழும் மக்களின் எண்ணமெல்லாம் புண்ணியாத்மாக்களாக புண்ணிய பூமியாக்கிடவா செயல்கள் நடக்கின்றன? பாவத்தைக் கழிக்கும் இடமாக எண்ணிச் சென்று புண்ணியத்தை வாங்கியா வருகிறார்கள்? கொலையும் கொள்ளையும் மலிந்து அப்புனித கங்கையில் புனித நீரைக் குருதி நீராக்கிக் கலக்கிவிட்டுள்ளார்கள். பல மைல்களுக்கப்பால் இறந்தோரை எல்லாம் அவ்வுடல்களை இக் கங்கையில் செலுத்தினால் இறந்த வருக்குப் புண்ணியம் என்ற நிலையில், இந் நிலையில் கொண்டு வந்து விடுகிறார்கள். பாவத்தின் பிறப்பிடமாக இன்று உள்ளது புனித கங்கையும் காசியின் திருத்தலமும். அங்கு செயற்கொண்டு இருக் கும் ஆண்டவனின் அஜ்ஜோதி மகான் இன்றும் அங்குத்தான் உள்ளார். அனைத்துப் பாவங்களையும் அவரும் பார்த்துக் கொண்டே எண்ணத்திற்குகந்த அருளைத்தான் அவர் அளிக்கின் றார். பாவத்திற்கு அவர் என்ன செய்ய முடியும்? பாவத்தின் எண்ணம் கொண்டவன் இவன் செய்யும் பாவங்களின் அணு வையே மீண்டும் மீண்டும் தன்னுள் ஏற்றிக் கொண்டு எப்பாவத் திற்கும் துணிந்தவனாய் பல பாவங்களுக்கு உகந்தவனாய்த் தன்னை ஏற்படுத்திக்கொண்டு அப்புண்ணியக் கரையிலேயே பலர் இன்று வாழ்கிறார்கள். ஏன் அவ்வாண்டவன் இவர்களுக்கு நல்வழி புகட்டக் கூடாதா என்று கேட்பவர் பலர். ஆண்டவன் நிலையை யும், ஆவியின் நிலையையும்தான் நாம் பிரித்துப் பிரித்துப் பல நிலைகளில் சொல்லியுள்ளோம். எண்ணத்தின் பேய்க்கு அடிமைப் பட்டவனை எவ்வாண்டவனும் வந்து நல்வழியில் செலுத்திட

அவர்கள் நிலைக்குப் புரியும்படி பல அருட் சொற்களை வெளியிட்டு, பல ஜெபங்கள் இருந்து பல வழிகளைப் புகட்டினார். பலருக்குப் பல நல் நிலைகளைப் புகட்டிய அவர் உடலிலேயே பல நோய்கள் ஏன் தாக்கின. அவர் அவ்வுடலை அவரின் சொந்த மாகக் கருதவில்லை. போகரின் நிலை மாறுபட்ட நிலை. மக்களுடன் மக்களாக வாழ்ந்த இவரின் நிலை, இவரிடம் உபதேசம் பெற வருபவர்களின் எண்ணத்திற்கும் மற்ற நிலையில் வருபவர்களுக்கும் இவரின் நிலையை, ஆண்டவனாக எண்ணி அவர்களின் கஷ்டத்தை இவரிடம் செப்பிடும் பொழுது, இவரின் ஜெபத்தின் பயனால் இவரிடம் அருள் வேண்டி வருபவர்களின் உடல்களில் உள்ள உபாதைகளை, இவர் ஈர்த்து இவர் உடலில் ஏற்றுக்கொண்டு அவர்களை நலமுடன் வாழும் நிலைப்படுத்தி அனுப்பினார். இவர் பெற்ற சக்தி இவரைக் காண்பவரின் நிலையிலுள்ள உபத்தி ரவத்தை, தான் ஈர்த்து வெளிப்படுத்தும் நிலை பெற்றிருந்தார். அந்நிலையில் அஜ் ஜெப நிலை செய்யும் பொழுது, ஈர்த்து உடனே வெளிப்படுத்தாவிட்டால், இவர் இஜ் ஜெப நிலைக்கு வரும் காலத் திற்கு முதலில், இவர் உடலில் இருந்த அணுக்களின் வேகத்தினால், மற்றவரிடம் இருந்து இவர் ஈர்த்த அவ்வியாதியின் அணுக்கள், இவர் உடலிலேயே தங்கிவிடுகின்றன. இந்நிலையில் வந்ததுதான் அவரின் அந்திம காலத்தில் நடந்த நிலை. நிலை அறிந்தேதான் அவரும் வாழ்ந்தார். இத் தவயோக முனிவர்களின் நிலையெல்லாம் இதைப்போல்தான். உடல் உபாதையில் மற்றவர்கள் நிலை இருக்கும்பொழுது அவற்றைத் தான் ஈர்த்து வெளிப்படுத்திட முடியும். அவர்களைக் குணமாக்கிடவும் முடியும். இதுவே இவ் உடல் தசைப் பாகத்தில் மட்டும் இந் நிலையைச் செய்திட முடியுமே தவிர, இவ்வுடலிலுள்ள எலும்பின் நிலையில் உள்ள மாற்றத்தையும் பிணியையும், எம் முனிவனாலும் சித்தனாலும் ஈர்த்துச் செயலாக்கிட முடியாது. ஆவி நிலைகொண்ட தசையில் உள்ள நிலைகளை மட்டும் தான் குணப்படுத்திட முடியும். சக்திக்கும் சக்தி வாய்ந்த அச்சக்தி தேவனின் அருளை வென்றிட எந்த ரிஷிநிலை பெற்றாலும் அச் சக்தியேதான் ஓங்கி நிற்கும் நிலை உள்ளது. அச்சக்தியின் சொரூப நிலையை எண்ணியே வணங்கிடத்தான் முடியும். நம்மில், நம் எண்ணத்தை நல் நிலைப்படுத்தி முதலில் நாம் நம்மில் உள்ள, மற்ற அணுக்களின் செயல்களிலிருந்து நம்மை நாம் பாதுகாப்புடன் வாழும் நிலைக்குப் பக்குவம் கொண்டு வந்திட வேண்டும்.

**11-10-79**

அந்நிலைகொண்டு, நாம் நம்மைப் பக்குவப்படுத்தி, நம் ஜெப அருளினால், நமக்குப் பல முனிவர்களும் நம் ஜெபத்துடன் வந்து அருள் தருகிறார்கள். நம் முன்னோர்களும், முன்னோர்கள் என்பது,

நம் குடும்பத்தில், நாம் பிறவி எடுத்த இப்பிறவியில், உதிரத் தொடர்புடைய பெரியோர்களின் ஆசியும் நமக்குக் கிட்டும். ஒவ்வொரு குடும்பத்திலும், அக் குடும்பத்தின் மூதாதையர் அவர்கள் இறந்த பிறகும், உடனே மறு பிறப்பிற்கு வராமல், தனது உதிரத் தொடர்புடைய வம்ச வழிக்கு, ஆவி உலகில் இருந்து கொண்டே, பல நற்செயல்களைச் செய்து, அக் குடும்பத்தைக் காக்கும் தெய்வமாக, வாழ்ந்த நாளில் அக்குடும்பத்திற்காகச் செய்த நன்மையைக் காட்டிலும், ஆவி உலகில் இருந்து கொண்டே பல நற்செயல்களைச் செய்துவிட்டு, தான் வாழ்ந்த நாளில், தன் உதிரத் தொடர்பு உடையவர்கள் நிலையெல்லாம் மறைந்த பிறகுதான் மறு பிறப்பிற்கு வருகிறார்கள்.

இப் பிறப்பு இறப்பு என்னும் நிலைகளில் பல நிலைகள் உள்ளன. நம் முன்னோரை வணங்கி, நாம் ஆகாரம் படைத்து, அவற்றைப் பட்சிகளுக்கு வைக்கின்றோம். அப்பட்சிகள் வந்து உண்ணும் நிலையில், நாம் நம் முன்னோரே அதை வந்து உண்டதாக மகிழ்கின்றோம். நம் முன்னோர் அப்பட்சியின் நிலைக்கு எப்படி வருகிறார்கள்? அவர்களின் ஆத்மா அப்பட்சியின் உடலில் ஏறுவதல்ல. முனிவர்களும் ரிஷிகளும் செயல்படுவதைப்போல், இந் நல்நிலை பெற்ற குடும்ப முன்னோர்களும் அப்பட்சியின் எண்ணமுடன் கலந்து, அப்பட்சியையே தான் வருவதாக இயங்கச் செய்து, அப் பட்சி உணவு எடுக்குங்கால், நாம் படைக்கும் அவ்வுணவில் உள்ள மணத்தை அவர்கள் ஈர்த்து எடுத்துச் செல்கிறார்கள். நாம் அவர்கள் எடுத்தார்கள் என்பதனை அறிய அப்பட்சியை ஒரு கருவியாக்கி அவர்களே அப்பட்சியுடன் வந்து எடுத்துச் செல்வதுதான் நாம் படைக்கும் நிலையெல்லாம். பறக்கும் நிலைகொண்ட அப் பட்சியின் உடலில் செயல்படுவது எளிது. அதன் நிலைகொண்டு தான், நம் முன்னோர்கள் நிலையும் இங்கு நடக்கின்றது. எவ்வுடலையும் தன் செயலுக்குக் கட்டுப்படுத்திட எவ்வாவிகளுக்கும் முடியும். அவ்வாவிகளின் குண நிலைக்கு ஏற்பச் செயல்படுத்திடும் நிலைகொண்டவரின் நிலைக்கெல்லாம் அவ்வாவிகள் வருகின்றன. குறிப்பிட்ட காலங்களில், இன்னும் பல இடங்களில் பட்சிகளுக்கு உணவு வைத்து, அவ்வுணவை அதே நேரத்தில் வந்து அப்பட்சிகள் எடுத்துச் செல்வதைக் கண்டிருப்பீர்கள். இன்றும் அருணகிரி நாதர் தன் செயலை பட்சியின் மேல் வந்து அவருக்குப் படைக்கும் உணவை எடுத்துச் செல்கின்றார்.

இவ்வாவி உலக வாழ்க்கை ஒன்று உள்ளது. மனித வாழ்க்கையில் உண்டு, உறங்கி, உழைத்து வாழ்கின்றோம். இவ்வாழ்க்கைக்கே ஆவி உலகில் உள்ளவரின் வாழ்க்கையும் கலந்துதான்

செயல்படுகிறது. அவ்வாவி உலகில் உள்ளவரும் நம்முடனே சுற்றிக்கொண்டுதான் உள்ளார்கள். இன்று மனிதனையும் இப்பிம்பப் பொருள்களையும் நிழல்படம் எடுப்பதைப் போல் ஆவி உலகில் உள்ளவர்களையும் எடுத்திடலாம். இம் மனிதன் தன் சக்தியைச் செயலாக்கினால் ஆவி உலகினில் நடக்கும் நிலையை எல்லாம் அறிந்திடலாம். ஆவி உலகில் உள்ளவர்களும் எண்ணமும், செயலும் கொண்டுதான் வாழ்கின்றார்கள். தன் ஆத்மாவிற்கு அவர்களும் நுகரும் தன்மை கொண்டு பல சக்தி ஆகாரத்தை ஈர்த்துத்தான் ஆவி உலக ஆத்மாவும் வாழ்கிறது.

ஜீவ உடலில் உள்ள நாம் திடப்பொருளை உணவாக்கி உண்ணுகின்றோம். இவ்வுடலில்லாத சக்தியைப் பெற்றுள்ள ஆவி உலக ஆத்மாக்கள், தன் ஆத்மாவுக்கு வேண்டிய உணவை, ஆவியாகவே ஈர்த்து, தன் ஆத்மாவுக்கு உணவாக்கிச் சுற்றிக்கொண்டுள்ளன. நாம் படைக்கும் உணவையும், சில இல்லங்களில், அவ்வில்லங்களில் உணவைச் சமைத்து வைத்த நிலையிலும், அவ் இல்லத்தில் இறந்தோர்கள், தனக்கு வேண்டிய உணவை இன்றும் வந்து அதன் சுவையை ஈர்த்தெடுத்துச் செல்கின்றார்கள். சில இல்லங்களில் கேட்டிருப்பீர் உறக்கத்தில் உள்ளபொழுதே எழுந்து நடமாடி விட்டு வேலைகள் செய்து, உணவு சமைத்து உண்பதாக எல்லாம். உறக்கத்திலேயே அனைத்தையும் செய்து விட்டு, விழித்த பிறகு மறந்துவிட்டதாகச் சொல்லுவார்கள். உறக்கத்துடன் பல நிலைகளை இன்றும் பலர் செய்கிறார்கள். இவையெல்லாம் தன் ஆசை அடங்காத நிலைகொண்ட ஆவிகளின் நிலை. தன் நிலையை செயல்படுத்திட, தன் ஆசைக்கு, இவ் உடல்களைத் தன் எண்ணத்துடன் கலக்கச் செய்து, அவர்கள் நிலையை மறக்கச் செய்து, தன் செயலை, தன் ஆசையை இவ்வாவிகள் பூர்த்தி செய்து கொள்கின்றன. இவ்வாவிகளுக்கு மனிதர்கள் விழித்துள்ள நிலையில், அவர்கள் எண்ணத்தை அடங்கச் செய்து, தன் செயலைச் செயல்படுத்திட முடியாத நிலையில், தன் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளத்தான், பலர் இரவில் தன்னை அறியாமல் உறக்கத்தில் நடந்திடும் நிலையெல்லாம். இவ்வாவிகள் தன் ஆசையைச் செயல்படுத்திடும் எண்ணத்துடனேதான் இவ்வுலகினில் சுற்றிக்கொண்டே உள்ளன. நாம் பெறும் ஜெபம், நாம் முதலில் பிற ஆவியின் அணுக்களின் உந்தலில் இருந்து தப்பி, நம் சக்தியை நாம் உணர்ந்து, நம் சக்தியை ஓங்கச் செய்து, நாம் வாழ வேண்டும்.

**12-10-79**

வாழும் காலத்தில் அவரவர்களின் அந்தஸ்தைப் பொறுத்த வாழ்க்கை நிலை வாழ்வதாக இம் மனிதன் சொல்கின்றான்.

மனிதன் சொல்லும் அந்தஸ்து, இப்பொருள் சுகத்தைக் கொண்ட அந்தஸ்து. எப்படிப் பொருளை வைத்து, அவரவர்களின் கையி லுள்ள தனத்தை வைத்து இன்றுள்ள மனிதன், மனிதனை எடை காண்கின்றானே அந்நிலைக்கு மேல் இன்று நாம் வாழ்ந்த வாழ்க் கையில் நாம் பெற்ற வழி நெறிகளைக் கொண்டு, நம் ஆத்மா இவ்வுடலை விட்டுச் சென்ற பிறகும் நம் ஆத்மாவிற்கும் அந்தஸ்து நிலையுண்டு (தர நிலையுண்டு). வாழ்ந்த காலத்தில் மனிதன் தனத்தை வைத்துத் தரத்தை நிர்ணயிக்கின்றான். இத்தரம் எத்தரம்? மனிதனே மனிதனுக்கு அளிக்கும் தரம் இத்தரம். வாழ்ந்த வாழ்க்கையில் நம் எண்ணம், செயல் அனைத்தையுமே ஆத்மீக நெறி கொண்ட, அன்பு நிலைகொண்டு வாழ்பவனின் தரம்தான், உடலை விட்டு ஆத்மா பிரிந்து சென்ற பிறகும் நிலைத்து நிற்கும், நிர்மலமான ஜோதி நிலைகொண்ட தரம். அத்தரம் பெற்ற ஆத்மாவுக்கு ஆண்டவனாக வாழும் அரும்பெரும் பொக் கிஷ நிலை கிட்டி, வாழும் காலத்திலும், இவ்வாத்மீக நெறி கொண்டவன் அவ்வழிக்கு வந்துவிட்டால், மற்ற அணுக்களும் வந்து தாக்கிடவும் செய்யா. அவ்வழிக்குச் செல்லும் நாட்க ளுக்கு முதலில் அவ்வுடலில் இருந்த மற்ற அணுக்களின் சக்தியும் செயலற்றுப் போகின்றன. ஆத்மீக வழிக்கு வந்து, அறம் பெற்று வாழும் தரம் கொண்டே வாழ்ந்திட்டால் இவ்வுலக வாழ்க்கை யில் மனிதன் வாழும் நாட்கள் மிகவும் குறுகிய நாட்கள். நாம் பறந்த வாழ்க்கை வாழ்வதெல்லாம், இவ்வாவியான உலகில் ஆத்மாவுடன் ஆவி உலகில் வாழும் நாள்தான் நீடித்த நாள், இவ்வாத்மா இருக்கும் நாள். இவ்வுடலுடன் உள்ள நாட்களில், இவ்வுடல் பெற்று நாம், நமக்களித்த இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி நம் ஆத்மாவுடன் ஆவி உலகத்தில் வாழும் வாழ் நாட்களுக்கும், இவ்வுடலுடன் உள்ள பொழுதே, நாம் எடுக்கும் சுவாச நிலைகொண்ட எண்ணமும் செயலும்தான் நம்முடன் என்றும் சப்த அலைகளாக, சத்துக் கொண்ட ஆத்மாவாக ஆவி உலகில் வாழப் போகின்றோம். நாம் சேர்க்கும் சொத்தும் சுகமுமல்ல நம்முடன் வருவது; நாம் உடலுடன் உள்ள நிலையில் நாம் இப்பிறவி எடுத்து நம் ஆத்மா என்று பிரிகிறதோ, அன்று வரை நம் சப்த அலைகள் அனைத்துமே நம் ஆத்மாவுடன் நம் கூட வருகின்றன. எண்ணமும் செயலும் நன்றாக்கி வாழ்ந்திடுங்கள். நம் ஆத்மாவிற்கு நாம் சேர்க்கும் சொத்து அவைதாம் என்பதனை உணர்ந்தே வாழ்ந்திடுங்கள். ஆவி உலகிலிருந்து வரும் எண்ண, சப்த அலைகளையும் நம் மேல் நல்ல அலைகளை நாம் ஈர்த்து வாழும் பக்குவத்திற்கு வாருங்கள். பல நிலை கொண்ட தீட்சண்ய ஆவி களின் செயலில் இருந்து தப்பி வாருங்கள். இக்காற்றில்தான் அனைத்து சக்திகளும் உள்ளன. நம் உடலுக்கு மருந்தும், உணவும்,

நீரும், காற்றும், உலோகமும், பல நிலைகொண்ட திரவங்களும் இப் பூமித்தாய் பதித்துள்ள அனைத்து சக்திகளும் இக்காற்றி னிலே கலந்துள்ள பொழுது நமக்கு வேண்டிய நல் நிலைகளை நாம் ஈர்த்து வாழும் பக்குவம் பெறவேண்டும்.

**14-10-79**

நல்நிலை பெற்று நாம் எந்நிலை கொண்ட சுவாசம் எடுக் கின்றோமோ, அந்நிலைக்குகந்த உடல் வளர்ச்சியும், மன வளர்ச்சி யும், நம் ஆரோக்கிய நிலையும் நமக்குக் கிட்டுகின்றன. நமக்கு வரும் பிணிகள் எல்லாம் நம்மை வந்து அண்டுவது பிறரிடத்தில் இருந்தோ, அனைத்தும் வம்ச வழிகொண்டோ நமக்கு வந்து அடைகிறது என்பது மட்டுமல்ல. வம்ச வழியில் வருகின்றது, பல பிணிகள் என்கிறார்கள். வம்ச வழியில் உதிரத் தொடர்புடன் சில நிலைகள் நமக்கு வருகின்றன. ஆனாலும் நம்முடைய உணர்வும், உணவும், செயலும் கொண்டு, நம் எண்ணத்தினால் அவ் வம்சவழி யின் தொடரில் வரும் பிணிகள் நம்மை அண்டாமல், நம் உடல் நிலையை ஆரோக்கிய நிலையில், இஜ் ஜெப நிலை என்னும் ஆத்மீக வழிக்கு, நம்மை நாம் வழி நடத்தி வரும் பொழுது, எப்பிணியும் நம்மை அண்டா. இவ்வுடல் பிணிகள் அனைத்துமே, வருவதெல் லாம் இவ்வெண்ணத்திலிருந்துதான். மனிதனின் குண நிலை கொண்டுதான் அவனுக்கு வரும் பிணி எல்லாம்.

தலைவலி எந்நிலைகொண்டு வருகின்றது? சமமான நிலையில் மனநிலை உள்ள பொழுது ஆரோக்கிய நிலையில் நாம் உள்ளோம். எண்ணமுடன் எண்ணம் மோதும் பொழுது, நாம் உட்கொள் ளும் ஆகாரம் நமக்குச் செரித்து, நம் நிலையில் அவ்வுமிழ்நீர் சுரக்கும் தன்மை தடைப்படுகிறது. இவ்வுமிழ்நீர் சுரப்பியின் நிலை வேறுபடும்பொழுது, நாம் உட்கொள்ளும் உணவும் நமக்குச் செரிப்பதில்லை. அந்நிலையிலிருந்துதான் நமக்கு வரும் இத்தலைவலி, உடல் பிணி யாவற்றுக்குமே முன்னோடி, இச்சிரசில் வரும் வலியி னால்தான். இதன் தொடர்நிலைதான் நமக்கு வரும் வாந்தி, மயக்கம், காய்ச்சல் இப்படி வரும் அனைத்துப் பிணிகளுமே. இந் நிலையின் தொடர்தான் அடிக்கடி உடல் உபாதை உற்றவனுக்கு அவன் உடலில் சில உறுப்புகள் செயல்படும் தன்மையை இழந்து விடுகின்றன. சில உறுப்புகள் அதிகப் பிணி கொண்டு, அதன் செயல் தன்மை இழந்த பிறகு, எவ் வைத்தியத்தாலும் அதைக் குணப்படுத்துவது மிகவும் கடினமாகிறது. நாமே நமக்கு வர வழைத்துக் கொள்ளுவதுதான் நமக்கு வரும் பிணிகளெல்லாம். மன நிலையில் மாற்றமில்லாதவனுக்கு, என்றும் அமைதி கொண்டு

வாழ்பவனுக்கு, இவ்வலியும் பிணியும் வந்து அண்டா. நாம் மாறு பட்ட உணவை உட்கொள்ளும் பொழுது, அம்மாறுபட்ட உணவி னால், நம் உடல் நிலை சீர் கெட்டது என்று செப்புகின்றோம். மாறு பட்ட இடம், மாறுபட்ட உணவு என்று எண்ணும் பொழுதே, நம் எண்ணத்தையும் மாறுபடக் கொள்கின்றோம். அந் நிலையின் கலக்கத்தினால் நம் எண்ணமே அவ்வுணவை உட்கொள்ளும் பொழுதே நாம் எடுக்கும் சுவாசத்தினால், நம் உமிழ்நீர் சுரக்கும் தன்மையும் மாறுபடுகிறது. அந்நிலையிலேயே, அவ்வுணவு செரிக் கும் பொழுது, இவ்வுடலுக்கும் அதை ஏற்கும் தன்மை குறை படுகிறது. உணவின் மேல் நாம் பாரத்தைப் போடுகின்றோம். நம் உடல் நிலைக்கு நாம் புசிக்கும் உணவு, நாம் விரும்பி உண்ணும் பொழுது, அதன் சுவை நமக்கு அமிர்தம் போல் உள்ள நிலை உணர்ந்து உண்டிட வேண்டும்.

உணவின் நிலையைப் பற்றி நம் முன்னோர்கள் எழுதிய பல நூல்களில் உணவை உண்ணும் நிலையையும், நாம் உண்ணும் உணவினால் நம் உடல் பெறும் நிலைகளைப்பற்றியும், பல நிலைகளை நமக்கு உணர்த்தியுள்ளார்கள். நாம் உண்ணும் உணவையே நாம் சந்தோஷத்துடன், அவனளித்த அமிர்தத்தை, அமிர்தமாகப் புசித்திடல் வேண்டும். 'பசித்துப் புசி' என்று நம் முன்னோர் செப்பியுள்ளனர். பசித்த நிலையில் புசிப்பவனுக்குப் புசித்த உண வெல்லாம் அமிர்தம் போல் உட்சென்று, அதன் சத்தினை இவ் உடல் ஏற்கும் பக்குவ நிலைக்கு இருந்திடும். நம் முன்னோர்கள் நமக்குகந்த பல உணவுகளைப் பக்குவ நிலைப்படுத்தி நமக்கு உணர்த் திச் சென்றார்கள். உண்ணும் உணவை நாம் ஆசையுடன் புசித் திட்டாலே இவ்வுடல் நிலைக்கும், இவ்உள்ள நிலைக்கும் எப்பிணியும் வந்தண்டா. நம் எண்ணத்தில் பல நினைவுகளைச் சிதற விட்டும், மோத விட்டும், நம் கோபத்தையும் அதி சந்தோஷ நிலையையும் வளரவிட்டும் அந்நிலையில் நாம் உண்ணும் எவ்வுணவையும் நம் உடல்நிலை ஏற்பதில்லை என்பதனை அறிந்து, நமக்கு வரும் இவ்வலி யும், பிணியும், இம் மாறுபட்ட சஞ்சல நிலைகொண்ட எண்ணத்தின் மோதலினால்தான் நமக்கு வரும் பிணிகள் எல்லாமே. வியாதி உள்ளவனை நாம் சென்று பார்த்தால், அவன் உடல் நிலையிலுள்ள அவ்வியாதியின் அணுக்கள், நம்மையும் வந்து தாக்கி நமக்கும் அவ்வியாதி வரும் என்று சொல்கின்றோம். வியாதியஸ்தனைக் காணச் செல்பவனுக்கு நல் நிலையில், ஆரோக்கிய நிலையில் சம மான நிலையில், அவன் எண்ணத்தில் சிறு அணுவும் தனக்கு அந்த வியாதி அண்டிக்கொள்ளுமே என்ற பயமில்லாத நிலையில் செல் பவனுக்கு எந்த வியாதியஸ்தனின் உடலிலுள்ள எவ்வியாதி அணு வும் வந்து அண்டாது. ஆனால் அவ்வியாதியஸ்தனின் உதிரத்

தொடர்புடையவருக்கு, எண்ண நிலையில் ஒரு நிலைகொண்டவருக்கு, அவன் சுவாச நிலை பட்டாலே அக்கிருமிகள் வந்து தாக்கும் நிலை உள்ளன. சில வகை ஜுரங்களின் அணுக்கள் அவ்வியாதியஸ்தன் ஈர்த்து வெளிப்படுத்தும் சுவாசத்துடனே அவனைச் சுற்றிக்கொண்டே உள்ளன. உடல் நிலையில் ஆரோக்கியமில்லாதவரும், எண்ண நிலையில் கலக்கமுள்ளவர்களும் அந்நிலையிலுள்ள வியாதியஸ்தனின் சுவாசக் காற்று பட்டாலே அவனின் வினையான இவ்வியாதி அணு இவர்களையும் வந்து அண்டிக் கொள்ளும். இப் படர்ந்த பூமியில் உள்ள அணுக்கள்தான் யாவையுமே. வியாதியின் அணுவும் இக்காற்றில்தான் உள்ளது; அவ்வியாதியைக் குணப்படுத்தும் மருந்தும் இக்காற்றில்தான் உள்ளது. நாம் ஏற்கும் சுவாசம் கொண்டுதான் அனைத்து நிலைகளுமே நமக்கு வருகின்றன. இவ்வெண்ணத்தினால் வருவதுதான் எல்லாப் பிணியும். இன்று பல புதிய புதிய பிணிகளெல்லாம் எந்நிலையில் வந்தன? புதிய புதிய வைத்தியமும்தான் வளர்ந்துள்ளன. இக் காற்றையே இச் ஜீவராசிகளின் பெருக்கத்தினாலும், பல ஆலைகளிலிருந்து வெளிப்படும் கழிவின் புகையினாலும், விஞ்ஞானம் கொண்டு இப் பூமியின் பொக்கிஷத்தை நாம் பிரித்து எடுத்ததினாலும், தாவர வர்க்கங்களின் நிலையின் குறைவினாலும் வந்த வினைதான் இன்று உள்ள புதிய பிணிகளெல்லாம். இன்று இவ்வுலகம் உள்ள நிலையில் இச் ஜீவராசியின் அதி பெருக்கத்தைச் சமப்படுத்தினால்தான், இவ்வுலகம் இனி வரும் மாற்றத்திலாவது வளரும் இன வர்க்கங்கள், தாவர நிலையில், தாவரங்களாகச் செழித்து வந்திடும். தாவரங்களின் வளர்ச்சிதான் உலகத்தின் உண்மையான வளர்ச்சி. விஞ்ஞானம் கொண்டு வளரும் வளர்ச்சியல்ல இவ்வுலக வளர்ச்சி. இச் ஜீவராசிகளின் இனப்பெருக்கத்தைச் சமப்படுத்திடும் நிலை உணர்ந்தே வந்திடுங்கள்.

சில குழந்தைகளுக்குப் பிறக்கும்பொழுதே, குழந்தைப் பிராயத்திலேயே பல பிணிகள் வருவன எந்நிலைகொண்டு? இதன் தொடர் நாளையே.

**15-10-79**

''கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவி பாடும்'' என்ற பொருள்படி, கம்பராமாயணத்தை அக் கம்பர் எழுதும்கால், அவரின் எண்ணம், நினைவு எல்லாமே அவர் எவ்வெண்ணத்தை ஈர்த்துச் செயல்படுத்துகிறாரோ, அவ்வெண்ணத்தின் சுவாசக் காற்றுத்தான், அவர் உள்ள இடம்தனில் சுற்றிக்கொண்டிருக்கும். எவ்வில்லத்தில், எவ்வெண்ணத்தின் செயலுடன் துரிதமாகச் சுற்றிக்கொண்டுள்ளதோ, அந்நிலைக்கொப்பத்தான், அவ்விடத்தில்

உள்ள நிலைகள் நடந்திடும். அவ்வில்லத்தில் வாழ்பவரின் எண்ணமும், இவ்வெண்ணத்தின் சுவாசக் கலப்பினால், ஒவ்வோர் இல்லத்திலும், எச்சக்தியின் எண்ண நிலை ஓங்கி நிற்கின்றதோ, அந்நிலைகொண்ட செயல்தான் நடந்திடும். கவிபாடும் கவிஞரின் இல்லம் மட்டுமல்ல, ஒவ்வொரு குடும்ப நிலையிலும், அக்குடும்பத்தில் உள்ள தனித் தன்மையின் நிலை, அக்குடும்பத்தில் உள்ளோரின் நிலையும் ஒன்றுபட்டதாகவே இருந்திடும். பிறக்கும் குழந்தைகளில் நல் அறிவு கொண்ட குழந்தைகளும், சில குழந்தைகள் நல் அறிவு வளர்ச்சி பெறாமல் பிறப்பதுவும் கண்டிருப்பீர். முன் ஜென்மத்தில் செய்த வினைப்பயன் மட்டும் கொண்டு, அனைத்துக் குழந்தைகளும் பிறப்பதில்லை. பிறக்கும் ஒவ்வொரு சிசுவுக்கும் முன் ஜென்மத் தொடர் தொடர்வதில்லை. ஆதியில், ஆதியில் என்பது இவ்வுலகம் கல்கியில் பிறந்த நாளில் இருந்த உயிர் அணுவிற்கும், இப்பொழுதுள்ள உயிரணுவிற்கும் பல கோடி கோடி நிலைகள் அதிகரித்துள்ளன. அந்நிலையில் இப்பொழுது வாழும் அனைவருக்குமே முன் ஜென்மத்தில் வாழ்ந்ததின் தொடர் நிலைகள் எந்நிலையில் வந்திடும்? புதிய புதிய உயிரணுக்கள் தோன்றிக் கொண்டே உள்ளன. முன் பாடத்தில் சொல்லியபடி, ஒரு மனிதன் இறந்த பிறகு, அவன் உடலை அடக்கம் செய்த நிலையில், அவ்வுடலில் இருந்து பல உயிரணுக்கள் தோன்றி, சுற்றிக் கொண்டு உள்ளன என்றேனல்லவா? அந்நிலை கொண்ட உயிரணுக்களெல்லாம் தாயின் கர்ப்பத்திற்கு ஜீவன் பெற வந்திடும் பொழுது, அவ்வுயிரணுக்களுக்கு எண்ண நிலைகளும், செயல் திறமையும் பெறாத உயிரணுக்கள், தாயின் கர்ப்பத்திற்கு வரும் பொழுதுதான், சில குறைப்பிரசவங்களும், கருச்சிதைவுகளும் உண்டாவதெல்லாம்.

இவ்வுயிர் அணுக்கள், தன் ஜீவன் பெறும் துடிப்பில், எத்தாயின் கர்ப்பத்திற்கும் வந்து பிறக்கும் நிலையில், பிறப்பிற்கு வருகிறது. மனித உடலிலிருந்து உண்டான உயிரணுக்கள் எல்லாமே, மனித சுவாசம் நிலைகொண்ட மனித கர்ப்பத்திற்குத்தான் வருகின்றது. மிருக நிலையும் இந்நிலை கொண்டதுவே. வளர்ச்சி பெறாத நிலையில் கர்ப்பத்திற்கு வரும் உயிரணுக்கள் சில இந்நிலைபெற்று உடல் ஊனமுற்றுப் பிறக்கும் குழந்தைகளும் கருச்சிதைவுகளும் நடக்கும் நிலையெல்லாம். இந்நிலைகொண்ட இப்புதிய உயிரணுக்கள், ஜீவன் பெற, தாயின் வயிற்றில் உதித்து வளரும் பொழுது, எக்கரு, எத்தாயின் வயிற்றில் வளர்கின்றதோ, அத்தாயின் நிலை சமமான நிலைகொண்ட, சஞ்சலம் கொள்ளாத தாயாயிருந்தால், அத்தாயின் ஆரோக்கிய நிலையும், நல் நிலையிலிருந்தால், அத்தாயின் வயிற்றில் உள்ள கருவும், அத்தா

யெடுக்கும் சுவாச நிலைகொண்ட புத்தியின் வளர்ச்சி நிலைக்கும், அத்தாயின் வாழ்க்கையுடன் கலந்துள்ளவரின் சுவாச நிலைக்கும், அக்கருவையும் தன்னுள் வளர்த்துக் கொண்டு, நல்நிலைகொண்ட சிசுவாக வந்து பிறக்கின்றது. இன்னும் பல சிசுக்கள் தாயின் கர்ப்பத்தில் உள்ளபொழுதே, அத்தாயின் எண்ணநிலை கொண்டு, அந்நிலையின் தாக்குதலினால், இச் சிசுக்கள் பிறந்தவுடன், பிறவியிலேயே, பல நிலைகொண்ட வியாதியின் அணுவைத் தாங்கியே பிறக்கின்றது. இவ்வுலகத்தாய், பெற்றெடுத்த தாயானவள், தான் பெற்றெடுக்கும் சிசுக்களை நல்ல அறிவுள்ள பொக்கிஷமாகப் பெற்றெடுக்க, சூலுண்ட நிலையில் உள்ள ஒவ்வொரு தாயும், தன் எண்ணத்தை அன்புடனும், ஆசையுடனும் பண்பாக்கி, சம நிலைகொண்ட நிலையில் வாழ்ந்தே, அறிவுடன் கூடிய அன்புச் செல்வங்களைப் பெற்றெடுத்து மகிழ்ந்திடுங்கள். சூலுண்ட நிலையில் அன்பு, ஆசை, பண்பு என்ற ஆண்டவன் ஜெபம் கொண்ட அமுதுண்டே, அழகுடனே பெற்றிடுங்கள் அரும் செல்வங்களை. ஆண்டவன் வந்து அளிப்பதல்ல, நாம் பெறும் செல்வங்களை. நம்மை நாம் பக்குவம் கொண்டு வாழ்ந்திட்டாலே அவ்வாண்டவனின் செல்வம் நம்முள் வந்து பிறந்து, நாம் பெற்றெடுக்கும் செல்வமும் அவ்வாண்டவனின் சக்தி கொண்டு நமக்கு வந்து பிறக்கும். நமக்குப் பிறக்கும் செல்வங்கள் எல்லாம் அறிவின் சுடராய் வந்து பிறந்திட வேண்டும் என்ற ஜெப நிலைகொண்டே பெற்றெடுங்கள்.

**16-10-79**

நல் உணர்வுடைய நற்செல்வங்களை நாம் பெற்றே சமமான நிலையில் வாழ்ந்திட்டாலும், வாழும் நிலையில் சூழ்ந்துள்ள அசுத்தத்தன்மை வாய்ந்த மூச்சுக் காற்றுகளும், நல் நிலையில் வாழ்பவரையும் வந்து தாக்குகிறது. ஆரோக்கிய நிலையும் மாறுபடுகின்றது. இக்காற்றில் கலந்துள்ள சக்தியில் நச்சுத்தன்மையின் வீரியம் தான் இப்பொழுதுள்ள நிலையில் ஓங்கி நிற்கின்றது. இதிலிருந்து மீண்டு ஜெபநிலை பெற்றே வாழ்ந்திட வேண்டும். இவ்வுடல்களுக்குச் சில உபாதைகள் இக்காற்றிலிருந்து நாம் ஈர்க்கும் சுவாசத்துடன் நம்மை வந்து அணுகத்தான் செய்கின்றன. அந் நிலையிலிருந்து நாம் மீள, நாமும் சில வைத்திய முறைகளை ஏற்க வேண்டியுள்ளது. இக்காலநிலை மாறும் தன்மையிலும், இவ்வுடல் நிலை மாறும் தன்மையிலும் சில நிலைகொண்ட மாற்றங்கள் உடல் நிலைக்கும் வரத்தான் செய்கின்றன. இந்நிலையில் இருந்தெல்லாம் நம் உடல் ஆரோக்கியம் பெறச் சாதாரண வாழ்க்கை நிலையிலுள்ள நாம் சில மருந்துகளை உட்கொள்ள வேண்டியுள்ளது.

சித்தர்களும், முனிவர்களும், ஞானிகளும், ரிஷிகளும் போல் இக் காற்றிலிருந்தே உடலில் ஏற்படும் பிணிகளை மாற்றும் சக்தி கொண்ட காற்றினை ஈர்த்து வாழும் பக்குவ நிலை நாம் பெற முடியாததினால் நமக்கு வேண்டிய சில மருத்துவ நிலைகளை இப் பாட நிலையில் என் சிஷ்யனின் மூலமாகவும், இன்னும் பலரின் மூலமாகவும் வெளிப்படுத்துகின்றேன்.

சிறு குழந்தைகளுக்கு, பிறந்த சிசுவுக்கு, தாயின் கர்ப்பத்தி லிருந்து இவ்வுலகில் வாழ வந்த நாட்களில் அதைப் பேணிப் பாதுகாக்கப் பிறந்த நாளிலிருந்தே சில மருந்துகளை நம் முன் னோர்கள் அதற்கு ஊட்டித்தான் வளரும் பக்குவத்தை நமக்கும் வழிகாட்டித் தந்தார்கள்.

இன்று வாழும் மனிதர்கள் உணவைப் போலவே மருந்தை யும் உட்கொண்டே வாழும் நிலையில் உள்ளார்கள். இக்காற்றின் அசுத்தத் தன்மையினால் வளரும் பயிரின் செழிப்பும் குறைந்ததி னால், நாம் உண்ணும் உணவுத் தானியங்களைப் பெருக்கிட இன்றைய விஞ்ஞான உலகத்தில் பல இரசாயன நிலைகொண்ட உரங்களைச் செலுத்தியே உணவுத் தானியங்களின் உற்பத்தியை வளரச் செய்து நாம் அதை உண்ண முடிகின்றது. இயற்கையின் உரங்கள் செலுத்தி வளரச் செய்த காலங்கள் மாறிச் செயற்கை யான உரங்கள் செலுத்தித்தான் இன்றைய உணவு உற்பத்தி நிலையை நாம் பெற முடிகின்றது. இந்த இரசாயன உரங்களை ஈர்த்து வளர்ந்த பயிர்களில் இருந்து நாம் பெற்று உண்ணும் தானியங்களும் நம்மையும் அந்நிலைகொண்ட சத்து நிலை வந்து தாக்குகின்றது. இயற்கையில் வளரும் தன்மையும் இன்றுள்ள இக்கால நிலையில் முடியாததினால் இச் செயற்கையின் வளர்ச்சியில் வந்த செயற்கையான தானியத்தை உண்ட, செயற்கையுடன் ஒன்றிய நாமும் நம்மில் வரும் இவ்வுடல் மாற்றத்திற்கு இன்று புதிய புதிய மருத்துவத்தைச் செயல்படுத்தி நமக்கு ஏற்கத்தான் வேண்டியுள்ளது. நம் முன்னோர்கள் நமக்கு வழிகாட்டிய பல மூலிகைகளை இன்று இக்கால நிலையில் தவற விட்டுவிட்டோம். மூலிகையில் உள்ள மகத்துவத்தை நாம் எடுக்கும் நிலையில் இன் றில்லை. இன்று நம் மனோநிலையுமில்லை. நம் சித்தர்கள் நமக்கு உணர்த்திய பல மூலிகைகளை நாம் பெறுவதற்கும் இன்றைய மனித னின் மன வளர்ச்சியில் எதையும் துரித நிலைகொண்டு செயலாக் கும் மன வளர்ச்சியில் இன்றைய மனிதனின் பொறுமை நிலையும் இல்லை. இதில் வந்த வினைச் செயல்தான் இன்று இத்தேசத்தில் அன்று உணர்த்திய பல உன்னத மூலிகைகளின் பொக்கிஷமெல் லாம் மறைந்து, சிதைந்து விட்டதின் நிலை. ஞானத்தையும்,

நியானத்தையும், தெய்வீகத்தையுமே மிஞ்சும் விஞ்ஞானம் என்னும் துரித நிலையில் சென்றிடும் மனிதன் தன் காலத்தின் நிலையை மட்டும் உணர்ந்து வாழும் மனிதன், தன் ஆத்மா என்ற ஆண்டவனை எண்ணி வாழ்வதில்லை. துரிதமுடன் செயற்கைக்கு அடிமைப்பட்ட இன்றைய மனிதனுல் இவ்வாத்மீக வழியும் ஜெப வழியும் அறிந்தே வாழ்ந்திட்டால் தன் வாழ்க்கையின் முழுமை எங்குள்ளது என்பதனையே அறிந்திடலாம்.

**18-10-79**

இன்று நாம் வாழும் வாழ்க்கையில் நாம் உண்ணும் உணவும், நாம் எடுக்கும் சுவாசமும் விஷம் கலந்ததாக உள்ளதனுல் பல புதிய வியாதிகளை நாம் ஏற்க வேண்டிய நிலையும், நம்மைத் தாக்கும் நிலையில் உள்ளதினுல் இவையும் தவிர, இன்றைய இக் கலியில் வாழ்ந்த, நம்மில் வாழ்ந்த உடலில்லா ஆத்மாக்களின் எண்ணத்தில், செயலில் இருந்து, நம்முடன் வாழும் மனிதர்களின் எண்ணச் செயலில் இருந்து, நம்மையும், நம் மனேநிலையையும், இவைகளின் தாக்குதலில் இருந்தெல்லாம் காத்து, ஒரு நிலை கொண்ட வாழ்க்கையை ஒவ்வொருவரும் உணர்ந்து, ஆத்மீக வழியை அடைந்து வாழும் நிலைக்குப் பக்குவம் பெற்று வந்திடல் வேண்டும். நம்மை நாம் காத்து வாழ்வதற்கே இவ்வாத்மீகம் ஒன்றுதான் நம்மில் இன்று தெய்வம். தெய்வம் என்று ஒரு திடப் பொருள் கொண்ட, உருவ நிலைகொண்ட, உணர்ந்து செயல்படும் அப்பரம்பொருள் தெய்வம், ஒன்றே தெய்வம், தனித்து ஓங்கி நிற்கும் தனியான தெய்வம் ஒன்றில்லை என்பதனை உணர்ந்து, அவன் ஆட்டிப்படைக்கும் அனைத்து சக்திகளான நாமும், நம்மைப்போல்தான் இவ்வுலகமும், மற்ற அனைத்து உலகங்களுமே என்றுணர்ந்து, ஒவ்வொரு ஜீவராசிகளுக்கும் அதனதன் உடல் தன்மை எந்நிலைகொண்டெல்லாம் ஒவ்வொரு நாளும் செயல் படுகின்றதோ, அந்நிலைகொண்டே இப் பூமித்தாயும், உயிருடன், உணர்வுடன் வாழ்கின்றுள். இப்பூமியில் வளர்ந்து வாழும் நாம் மட்டும், ஜீவன் கொண்டு எப்படி வாழ்கின்றோமோ அப்படியே தான் இவ்வுலகத் தாயும் வாழ்கின்றுள், வ[illegible]கின்றுள், வளர்க்கின்றுள், காக்கின்றுள் அனைத்து சக்தியையும் வளர விடுகின்றுள். உயிரணுக்கள் ஒவ்வொன்றுக்கும் எந்நிலைகொண்ட உணர்வுத் தன்மை உள்ளதோ, அந்நிலையின் உணர்வுடனே, இவ்வுலகத் தாயும் வாழ்கின்றுள். இவ்வுலகத் தாயின் உணவாய், இவ்வுலகத் தாய்க்குச் சூரியனிலிருந்தும், மற்ற மண்டலங்களிலிருந்தும் கிடைக்கப் பெறும் அமுதுதான், பல சக்திகள் கொண்ட இக்காற்றினில் வந்து இப்பூமித்தாய் ஈர்க்கும் பல அணுக்களும் நீருமே. இப்

பூமித்தாய் உண்ணும் நீரும் அணுவும்தான் அவள் உண்டு, அவ் வமுதை நமக்கும் அளிக்கின்ருள். அவள் பெற்ற செல்வங்களுக்கு இந்நீர் இல்லாவிட்டால் இவ்வுலகுக்கே ஜீவனில்லை. இவ்வுலகி லுள்ள உலோகங்கள் தங்கம், தாமிரம், வைரம், நிலக்கரி இன் னும் பல நிலைகொண்ட உலோகங்களும், கல்லும், மண்ணும், மரமும் செடியும் எவையுமே, இப்பூமியிலிருந்து வளரும் எவை யுமே வளர்ந்திடா, நீர் இல்லாவிட்டால். இப்பூமியும் நீர் இல்லாவிட்டால் வாழ்ந்திட முடியாது. நீரையே ஜீவனுகப் பெற்று வாழும் இவ்வுலகிற்கு, உணரும் தன்மை அனைத்தும் உண்டு. இவ்வுலகில் பல இடங்களில் நெருப்புக்கோளும் வெளிப் படுகிறது, பனிமலையும் வளர்கிறது, பாலைவனங்களும் உள்ளன. பாலைவனங்களுக்கு சக்தியில்லை என்று எண்ணல் வேண்டாம். பாலைவனங்கள்தான் மற்ற நிலையிலுள்ள சோலைகளுக்கு உயிர் நாடி. சோலைவனங்களும், மலைகளும், கடலும், சில பள்ளத் தாக்குகளும் இப்படி இவ்வுலகிலேயே ஒன்றுபோல் இல்லாமல், ஒவ்வோர் இடத்திற்கு ஒவ்வொரு மாறுபட்ட தன்மைகளை இப் பூமித்தாய், தான் ஈர்த்து வெளிக் கக்கிடும் நிலையில் வளரச் செய்கின்ருள். பல சக்திகள் இக்காற்றில் சுற்றிக்கொண்டே உள்ளன. அனைத்து சக்திகளுமே மனிதனுக்கெப்படித் துடிப்பு நிலை, சுவாச நிலை, ஈர்த்து வெளிப்படுத்திக்கொண்டே உள் ளனவோ, அந்நிலைபோல்தான் இப்பூமியும் ஈர்த்து, துடிப்புடனே வெளிப்படுத்திக் கொண்டே உள்ளது. இவ்வுடலுக்கு நாம் உண் ணும் ஆகாரங்கள் அமிலமாகி, அவை ஜீரணித்து நமக்கு வேண் டிய சக்தியைப் பெற்று, நமக்கு வேண்டாத நிலையை வெளிப் படுத்துகின்றது.

நாம் எடுத்து உண்ட உணவையே இவ்வுடல் ஏற்று உதிரமாக வும், சிறு நீராகவும், மலமாகவும், காற்ருகவும்; வியர்வையாக வும் ஆக்குகின்றது. இவற்றில் உதிர சக்தியை மட்டும் உடல் ஏற்று, மற்றவைகளை வெளிப்படுத்துகின்றது. அந்நிலைகொண்டு தான், இப்பூமித்தாய் ஈர்க்கும் நீரையும், அணுவையும் எந்தெந்த நிலைகளில் எச் சக்திகொண்ட அணுவான அமிலத்தை ஈர்த் தனளோ, அவ் ஈர்த்த சக்தியின் நிலைகொண்டே, அச்சக்தியின் நிலைபெற்று, அந்நிலையில் வளரும் நிலைக்கேற்ப, சக்தியை அளிக்கும் (கொடுக்கும்) நிலையில், இப்பூமியின் உள் நிலையில், பல நிலை கொண்ட அமில சக்தியில் தங்கி ஈர்க்குங்கால், அந்நிலையில் அவை சுற்றிக்கொண்டுள்ள தன்மையில், ஒரு சக்தியுடன், ஒரு சக்தி என்பது, ஒரு நிலைகொண்ட அமிலத்துடன் மற்ருெரு சக்தி நிலை கொண்ட அமிலம் மோதும்பொழுது (சத்துரு, மித்துரு நிலை) ஒன்றுக்கொன்று ஏற்காத நிலையில், அவை வெடிக்கும் தன்மையில்

தான் இன்று, இன்று மட்டுமல்ல, பூமி அதிர்வு ஏற்படுவதெல் லாம். நிலநடுக்கங்கள் ஏற்படுவதற்கு முதலிலேயே, இன்றைய விஞ்ஞானத்தில் கண்டுபிடிக்கும் நிலையை உணர்ந்துள்ளார்கள். ஆனால் இந்நில அதிர்வு, பூகம்பம் இவை எல்லாம் எந்நிலையில் ஏற் படுகின்றன என்பதனை உணர்ந்திட்டால் இனி விஞ்ஞானத்திற்கு, இன்னும் பல வழிகள் புலப்பட்டிடும். ஒவ்வொரு ஜீவராசிகளுக் கும் இவ்வுலகிலிருந்து பூமி ஈர்த்து வெளிப்படுத்தும் அனைத்து சக்தியும் இக்காற்றில் இருந்து சுவாசத்திற்கு ஈர்த்து, இவ்வுலக சக்தியைப்போல் உள்ள சக்திகள் ஜீவராசிகளுக்கும் உண்டு. ஆனால் அவையவை எடுத்த சக்தியின் நிலைகொண்டு குறைந்தும் அதிகரித்தும் மாறுபட்ட தன்மையுண்டு. உலோகங்களில் மாறு பட்ட தன்மை உள்ளதுபோல். ஜீவராசிகள் ஈர்த்து வெளிப் படுத்திய சக்தியிலும் மாறுபட்ட சக்தி நிலையுள்ளது.

ஒன்றுபோல் ஒன்றில் சக்தி நிலை ஒன்றுபட்டு எவற்றுக்குமே இருந்திடாது. கனி வர்க்கங்களிலும் ஒரே மரத்தில் காய்க்கும் கனிக்கும் மாறுபட்ட சுவையும், மாறுபட்ட சக்தியும், மாறுபட்ட அளவு நிலையும் இருந்திடும் சிறிதளவேனும். ஒரே செடியில் பூக்கும் புஷ்பங்களின் நிலையும் இவைபோன்றே. இவ்வுலக நிலையும் இவை போன்றே. சுற்றிக்கொண்டே உலகில் அவை ஈர்த்து வெளிப் படுத்திய சக்தியில்தான் எத்தனை மாற்றங்கள்? எத்தனை நிலை கொண்ட தன்மைகள்? இவைபோல்தான் ஒவ்வொரு மண்ட லத்தின் நிலையுமே. இவ்வானமண்டலத்தின் நிலையும் ஜீவன் கொண்டேதான் சுற்றிக்கொண்டு உள்ளது. பால்வெளி மண்ட லம், சூனிய மண்டலம் என்றெல்லாம் செப்புகின்றோம். எவை சூனிய மண்டலம்?

சூனிய மண்டலம் என்ற தனித்த மண்டலம் ஒன்றில்லை. இப்பால்வெளி மண்டலம் என்ற மண்டலத்திற்கே ஜீவன் உண்டு.

**19-10-79**

இப்பால்வெளி மண்டலமும் பல மண்டலங்களில் இருந்து வெளிப்படும் சக்தியினைத் தன்னுள் வைத்துக்கொண்டேதான் சுற் றிக்கொண்டுள்ளன. பால் வெளி மண்டலம் சூன்ய மண்டலம் என்கின்றனர். இப்பால் வெளி மண்டலத்தில் இருந்து மழை வரும் பொழுது இடியும் மின்னலும் எந்நிலையில் வருகின்றன? இப் பால்வெளி மண்டலத்தில் பல சக்திகள் சுற்றிக்கொண்டுள்ள நிலை யில் மேகம் அடர்ந்து, மழை பெய்யும் பொழுது, பல அமில சக்திகள் சுற்றிக்கொண்டுள்ள நிலையில் இம் மழைத்துளிகள் அதன் மேல் பட்டவுடன் இரண்டு வெவ்வேறு நிலை அமிலங்கள் ஒன்றின்

மேல் ஒன்று மோதும் பொழுது ஏற்படும் நிலைதான் இடியும் மின்னலும், மழைவரும் காலங்களில் ஏற்படுவதெல்லாம். இரண்டு தன்மை கொண்ட சக்திகள் மோதுண்ட நிலையில், ஒன்றை ஒன்று ஏற்காத நிலையில் பூமி எப்படி பூகம்பத்தை, நிலநடுக்கத்தை வெளிப்படுத்துகின்றதோ, அந்நிலைபோலத்தான் இப்பால் வெளி மண்டலத்திலும் இச் சத்ரு, மித்ரு நிலை மோதுண்ட நிலையில் இடியும் மின்னலும் வருவதெல்லாம். இடியும் மின்னலும் வரும் பொழுது பூமியில் உள்ள எவ்வமிலத்தன்மை கொண்ட மின்னல் வெளிப்படுகிறதோ, அவ்வமிலத்தன்மை கொண்ட சக்தி இப் பூமியில், அது தாக்கும் இடத்தில் உள்ளதுவோ, அதனுடன்தான் இம்மின்னலுடன் வெளிவரும் அமில சக்தி வந்து கலக்கின்றது. சிலவகை மரங்கள் இவ்வமிலத் தன்மை கொண்டதாக உள்ளன. அவற்றின் மேல் இம்மின்னல் தாக்கும் பொழுது அம்மரம் இதனைத் தன்னுள் ஈர்த்துக் கொள்கின்றது. தன் சக்திக்கு உகந்த அணுசக்தியைத்தான், அச்சக்தியின் நிலைகொண்ட மரங்கள் ஈர்க்கும். எப்படி இப்பூமியில் பல நிலைகொண்ட தாவரங்களும், கனி வர்க்கங்களும், திரவங்களும் இக் காற்றினில் உள்ள அணுக் களைத் தனக்கு வேண்டியதைத் தன் நிலைக்கு ஒத்த அணுவைத் தான் ஈர்த்து வளர்ந்துகொண்டே உள்ளனவோ அவைபோல் தான் இப்பால் வெளி மண்டலத்திலும் சுற்றிக்கொண்டுள்ள அமில சக்திகளும் அதனதன் இனத்துடன் சுற்றிக்கொண்டே உள்ளன. அதன் மேல் நீர்நிலை படும்பொழுது ஒன்றுடன் ஒன்று மோதுண்ட நிலையில் வெளிப்படுகிறது இடியுடன் கூடிய மின்னல். இம் மின்னல் வரும்பொழுது ஓர் இடத்தில் அப்படரும் ஒளி ஆரம்பித்தவுடன் ஒரே நீர்க்கோடுபோல் நீண்டு அப்பட படக்கும் ஒலி ஒலித்துக்கொண்டே, அச் சக்திகள் உள்ள தூரம் வரை அப்படபடக்கும் ஒலியுடன் கூடிய ஒளியின் மின் காற்றும் ஒளித்து வருகின்றது. அம்மாறுண்ட சக்திகள் மோதுண்டு வரும் வரைதான் இடியின் ஒலியும், மின்னலின் ஒளியும் இவ் இடி இடிக்கும்பொழுது அதிலிருந்து வரும் ஒளிக்கதிர்கள் இப்பூமிக்கும் வந்து, இப்பூமியில் அதன் சக்திக்குகந்த தாவரங்களின் நிலையுடன் வந்து கலந்துவிடுகிறது. அதி மேகங்கள் கூடி மழை பெய்யும் காலங்களில் நம் முன்னோர்கள் மரங்களின் கீழ் நிற்பதாகாது என்று சொல்லி வந்ததின் உண்மை இது. இன்றைய விஞ்ஞானத் தில் இம் மின்னலைத் தாங்கும் கருவிகளைக் கண்டுணர்ந்து மின்ன லில் இருந்து மனிதரைக் காக்கும் நிலையில் அச்சக்தியை ஈர்க்கும் கருவிகளைப் பதித்து வைத்துள்ளார்கள்.

சில வகை தாவரங்களுக்கு இம் மின்னலை ஈர்க்கும் சக்தி நிலையுண்டு. மனிதரின் மேலும், மற்ற ஜீவராசிகளின் மேலும்

மாடு, மனை இவற்றின் மேலும் விழுந்தால் அந்நிலையில் தாங்கும் சக்தி இருப்பதில்லை. ஆனால் இந்நிலையில் சக்தி கொண்ட தாவரத்தின் மேல் அம்மின்னலின் ஒளிக்கதிர்கள் தாக்கினாலும் அவை ஈர்த்தே வளர்கின்றன. சில தாவரங்கள், மரங்கள் இவ் இடி மின்னல் பட்டவுடன் கருகும் நிலையும் பெற்றுள்ளன.

இடியும் மின்னலும் எந்நிலை பெற்று வருகின்றதோ, அந்நிலைபோல்தான் இவ்வான மண்டலங்களில் பலப்பல சக்தி நிலைகள் மாறுகொண்டு சுற்றிக்கொண்டுள்ளன. பல கோடி நட்சத்திர மண்டலங்களைக் காண்கின்றீர். வால் நட்சத்திரம், எரி நட்சத்திரம், இன்னும் பல நிலைகொண்ட நட்சத்திரங்களைச் சில நாட்களில் கூட்டம் கூட்டமாகவும் சில நாட்களில் குறைந்தும் காண்கின்றீர். இவை எல்லாம் எந்நிலையில்?

**22-10-79**

இன்று வான மண்டலத்தில் நாம் காணும் பல நட்சத்திரங்கள் அனைத்துமே ஒவ்வொரு மண்டலம் போன்ற நிலையில் இல்லை. பல நட்சத்திரங்கள் எரி நட்சத்திரமாக வந்து விழுவதை நாம் காண்கின்றோம். இப்பூமியின் மேல் சூரியனிலிருந்தும், மற்ற மண்டலங்களில் இருந்தும் வந்து விழும் அணுக்கதிர்களைப் போலவே இப்பூமியின் மேல் வான மண்டலத்தில் இருந்து பல எரி நட்சத்திரங்களும் வந்து விழுந்துகொண்டே உள்ளன. இப்பூமியும் வளர்ந்து கொண்டே உள்ளது. இவ்வளரும் நிலையின் துரிதத்தினால் அதன் உருவத்தன்மை சிறு மாற்றம் ஏற்படும் காலங்களில்தான் இவ்வுலகின் மாறும் தன்மை வருகின்றது. எரிநட்சத்திரங்கள் எந்நிலையில் வளர்ந்து எப்படி பூமிக்கு வருகின்றன? இப்பூமிக்கு மட்டுமல்ல, இப்பூமியைப் போல் உள்ள மற்ற மண்டலங்களின் தன்மையும் இதுவே. இன்று நாம் அடுப்பு எரிக்கும் பொழுது அதிலிருந்து வெளியாகும் புகைகள் ஒன்றுடன் ஒன்று கலந்து ஓர் இடத்தில் ஓடுகளில் அடைபோல் ஒன்றுசேர்ந்து அப்படியே படிந்துள்ளதைக் காண்பீர். அவையெல்லாம் மண்ணுடன் மண்ணுவதைப்போல், இன்று வான மண்டலத்தில் சூரியன் சுற்றும் வேகம்போல், சூரியனை ஒத்த பல சூரியன்களும் சுற்றும் நிலைகொண்டு அச்சூரியன் சுற்றும் பொழுது அதி துரிதநிலைகொண்டு சுற்றுவதினால் அதிலிருந்து வெளிப்படும் உஷ்ண அலைகள் ஆவியாகி ஒன்றுடன் ஒன்று படிந்து, எச்சக்தி நிலைகொண்டு அவ்வாவி நிலையான அமிலங்கள் வளர்ந்தனவோ அச்சக்தியின் தன்மையையே மேன்மேலும் ஈர்த்து அந்நிலையிலேயே அவை வளர்ந்து இவ்வான மண்டலத்தில் சுற்றிக் கொண்டே உள்ளன. ஜீவன் கொண்டு சுற்றும் ஒவ்வொரு நட்சத்திர மண்டலமும் தனக்கு வேண்டிய சக்தியை ஈர்த்துக்

கொண்டே, ஜீவனுடனே வளர்ந்து நட்சத்திர மண்டலமாய் உள்ள சிறிய மண்டலங்களாய் முதலில் தோன்றி மென்மேலும் வளர்ந்து கொண்டே தனித்து இயங்கும் தன்னுள், ஜீவராசிகளின் வளர்ச்சியையும் நீர்நிலையையும் செயலாக்கும் தன்மையுடன் தனித்த மண்டலங்களாய் செயல்படும் தன்மை கொண்டு புதிய புதிய மண்டலங்கள் வளர்ந்து கொண்டே உள்ளன, இன்று வான மண்டலத்தில்.

இன்றைய வான இயல் ஆராய்ச்சியின்படி பல புதிய கோளங்களைக் கண்டுணர்ந்ததாக வெளிப்படுத்துகின்றனர். பல கோளங்கள் வளர்ந்துகொண்டேதான் உள்ளன. இச் சூரியனைச் சுற்றியும் மற்ற சூரியனைச் சுற்றியும். சூரியனிலிருந்து வளரும் இந் நட்சத்திர மண்டலங்கள் அதன் சக்தியின் துரி தத்தினால் ஜீவன் கொண்டு துரிதமாக வளர்கின்றன, ஜீவன் கொண்டும் வாழ்கின்றன. ஆனால் இச்சூரியனைச் சுற்றியுள்ள 48 மண்டலங்களும், அதிலிருந்து வெளிப்படும் அமிலத்தின் சக்தி யைக் கொண்டு பல நிலைகள் வளர்கின்றன. ஆனால் மற்ற மண்ட லங்களிலிருந்து வெளிப்படும் அமிலத்தை ஈர்த்து வளரும் நட்சத் திர மண்டலங்கள் அந்தந்த மண்டலங்களில் ஈர்ப்பு சக்தியைக் கொண்டுதான் ஜீவன் கொண்டு வாழ்ந்திட முடியும். இன்று சூரிய மண்டலம் இப்பூமியைக் காட்டிலும் துரிதமாகச் சுற்றுவதினால் அதன் சக்தித் தன்மையும் அதிகம். அதிலிருந்து வளரும் புதிய மண்டலங்களின் செயலும் துரிதமாக வளர்கின்றது. ஆனால் சூரி யன் சக்தி பெற்று வளரும், இப்பூமியும், இப்பூமியை ஒத்த பிற மண்டலங்களில் இருந்து ஈர்த்து வளரும் நட்சத்திர மண்டலங் களும் சக்தியின் நிலையில் குறைவுபடுகின்றன. அதனால் அவற்றிலி ருந்து வளரும் நட்சத்திர மண்டலங்களும் வளரும் நிலை தடைப் பட்டு ஜீவன் அற்று அவை எம் மண்டலத்திலிருந்து எவ்வமிலத்தை ஈர்த்து வளர்ந்து ஜீவன் இழந்ததோ அம் மண்டலத்திற்கே ஜீவ னற்ற நிலையில் வந்து சேர்கிறது. இவ்வான மண்டலத்தில் ஜீவ னில்லாப் பல கோளங்கள் உள்ளன. நாம் இன்று காணும் எரி நட்சத்திரங்கள் எரிந்து விழுவதைப்போல் காண்பதெல்லாம் இதன் தன்மையில்தான். ஜீவராசிகளின் பிறப்பு இறப்பு நிலை, எந்நிலை கொண்ட ஆயுள் நிலை, வளரும் நிலை உள்ளனவோ, அதைப்போன்றே எல்லா மண்டலங்களுக்கும் ஆயுள் நிலை உள்ளது. மனிதனுக்கு மட்டும் ஆறிலும் சாவு அறுபதிலும் சாவு என்ற ஆயுள் நிலை குறிப்பிடுவதைப்போல் மண்டலங்களுக்கும் இவ் வாயுள் நிலை உள்ளது.

இப்பரமாத்மாவான சக்தி தேவனின் சக்திக் குழந்தைகள் தான் மனிதனும், மற்ற ஜீவராசிகளும், இப்பூமியும், இப்பூமியை

ஒத்த பல மண்டலங்களும், பல கோடி நட்சத்திர மண்டலங்களும், நம் சூரியனும் நம் சூரியனை ஒத்த பலப்பல சூரியன்களும். அனைத்துமே இச்சக்தியின் சக்தி பெற்ற வளர்ப்புக் குழந்தைகள்தான். ஒன்றில் ஒன்று சக்தி பெற்றே வாழ்ந்திடும் நாம், நாம் வாழும் இப்பூமிக்கு சக்தி தரும், நாம் காணும் நம் சூரிய தேவனையே, தேவனாக எண்ணி நாம் வணங்கிடுவோம். நம் சூரிய தேவனைக் காக்கும் தேவனாகப் பல சூரியன்கள் உள்ளன. அச் சூரியன்களுக்கும் மற்ற நிலையில் சக்தி பெற்றால்தான் அவையும் வாழ்ந்திட முடியும். நாம் அறியாமல் நம்மை உயிரணுவாய் உதிக்கச் செய்த உயிரணுவின் ஆத்மாவையே தன் ஆத்மாவி லிருந்து நம்மை ஆத்மாவாக்கிய அனைத்துலக ஆத்ம ஜோதி சக்தியையே வணங்கியே வாழ்ந்திடுவோம்.

**23-10-79**

இவ்வுலகம், இவ்வுலகைச் சார்ந்த மற்ற உலகங்கள், அத னதன் ஈர்க்கும் நிலை கொண்ட சக்தியைக் கொண்டு எப்படி வளர்ந்தனவோ அந்நிலைகொண்டே, வளர்ந்த சக்தியின் நிலை போன்றே, இப் பூமியில் உள்ள சக்தியும் இப்பூமிக்கு வந்த அணு சக்தியை ஆவியாக்கி வெளிப்படுத்துகிறது. இப்பூமியிலிருந்து வளரும் கனி (உலோக) வளங்கள் அனைத்துக்குமே ஆவியாகும் சக்தி உண்டு. ஆவியாகும் என்பது கரையும் சக்தி. அனைத்துக் கனி வளங்களும் ஆவியான நிலையில் இருந்துதான், அதனதன் இன சக்தியில், ஈர்ப்பின் நிலைகொண்டு ஒன்றுபட்டு வளர்கின்றது.

எந்நிலைகொண்ட கனி (உலோக) வளங்களை இப்பூமி ஈர்த்து வளர்க்கின்றதோ, அந்நிலைகொண்ட சக்திதான், அப்பூமியின் மேல் வளரும் தாவர வர்க்கங்களின் நிலையும் மற்ற ஜீவராசிகளின் நிலையும் ஒத்ததாக இருந்திடும். இப்பூமியில் மட்டும் பல நிலை கொண்ட கனி வர்க்கங்கள் அதற்கு வேண்டிய அமிலத்தை ஈர்த்து எப்படி வளர்கின்றனவோ, அந்நிலைபோல், இப்பூமியின் மேல் மட்டத்தில் வளரும் தாவரங்களும், மனிதன் முதல் ஈ எறும்பு வரை அனைத்து ஜீவராசிகளும், தன் தன் நிலைக்கு ஒத்த அணுக்களைத் தன் சுவாசத்துக்கு ஈர்த்து வளர்கின்றன. தாவரங்களிலும் தங்கம், வைரம், ஈயம், செம்பு, வெள்ளி, இரும்பு என்று மாறுபட்ட உலோக சக்தியைப்போல், பல தாவ ரங்களில் அதற்கு வேண்டிய ஈர்ப்பு சக்திகொண்ட அமிலத்தை ஈர்த்து வளர்கின்றது. நம் முன்னோர்கள் சிறுகீரை என்னும் கீரையை நம் உணவுடன் சேர்த்தால் அது ஈர்த்த தங்கத்தின் நிலை கொண்ட அமிலம் நம்முள் சேர்கிறது; நம் உடலும் தங்க நிலைக்கு ஒத்த நிலைபெற்றிடும் என்று உணர்த்தினர். இதைப்

போலவே, இரும்பின் சக்தியை ஈர்த்த பல தாவரங்கள் உள்ளன. அவற்றை நாம் உண்ணும் பொழுது, அவ்வமிலத்தன்மை நமக்கும் வந்து சேர்கின்றது. ஒவ்வொரு தாவரமும் தனக்கு வேண்டிய அமிலத்தை ஈர்த்துத்தான் வளர்கின்றது.

நம் முன்னோர்கள் நமக்கு உணர்த்திய தாவர வர்க்கங்களை, நாம் பக்குவப்படுத்தி உண்டிடும் நிலையில்தான் இன்றும் உள்ளோம். தாவரங்கள் எப்படித் தன் நிலைக்கொப்ப அமிலத்தை ஈர்த்து வளர்கின்றனவோ, அந்நிலைபோலத்தான் மற்றச் சில வகை வண்டுகளும் உள்ளன. தன் நிலைக்கொப்ப சுவாசத்தை மட்டும் ஈர்க்கும் சக்தி அவ்வண்டுகளுக்கு உண்டு. சிலவகை வண்டுகள் தங்கத்தைப்போல் பளபளத்து, மின்னிப் பறப்பதைப் பார்த்திருப்பீர். அவை அனைத்துமே தங்க சக்தி உடையவைதாம். பூமியிலிருந்து தங்கத்தை வெட்டி அதை எப்படிப் பக்குவம் பெறச் செய்கின்றார்களோ, அந்நிலைபோலவே இவ்வண்டுகளில் இருந்தும் தங்கத்தை எடுத்திடலாம்.

பட்டுப்புழுவிலிருந்து பட்டு எடுப்பதைப் போன்றும், ஆடுகளின் ரோமத்திலிருந்து கம்பளி நெய்வதைப் போலவும், பல நிலை கொண்ட கனி வர்க்கங்களின் நிலையை ஒத்த அமிலத்தை ஈர்த்து வளரும் தனித் தன்மை வாய்ந்த வண்டுகள் பல உள்ளன. சிங்கத்திற்கு அதனுடைய வீரிய சக்தி எந்நிலையில் வந்தது? அது ஈர்க்கும் பாதரச மணியின் நிலையை ஒத்த ஈர்ப்பு நிலையை அச்சிங்கம் அதிகமாக ஈர்த்து வளர்கின்றது. அதன் உடலிலேயே ரசமணியின் அமில சக்தி அதிகமாக உள்ளது. சிங்கத்தின் கண் பார்வையைக் கண்டிட்டால் அறிந்திடலாம். அப்பார்வையின் ஒளியே அதிக சக்தி கொண்டதாக ஒளிரும். அனைத்து ஜீவராசிகளுக்குமே அதன் அதன் கண்ணிலிருந்து வெளிப்படும் ஒளியின் சக்தி கொண்டே, அவற்றின் ஈர்ப்பு சக்தியை அறிந்திடலாம். எவ்வுலகத்தின் அமில சக்தியை அதிகமாக ஈர்த்து அவை வளர்கின்றன என்றே. இக்காற்றில் கலந்துள்ள அமிலத்தையே தன் தன் சக்திக்குகந்த அமிலத்தையே இப்பூமியிலுள்ள அனைத்து ஜீவன் கொண்ட சக்திகளும் ஈர்த்து, தன் தன் சக்தியை வெளிப்படுத்துகிறது. பல நிலை கொண்ட ஆவியான, அமில உருண்டைகள்தான் இப்பூமியும். இப்பூமி வெளிக்கக்கும் அமிலம்தான், மற்றப் பூமி ஈர்த்துச் செயல் படுகிறது. இப்பூமியை ஒத்த அமில சக்திக்கும், மற்றப் பூமியில் உள்ள அமில சக்திகளுக்கும் சில நிலைகொண்ட மாறுபட்ட சக்தி குணங்கள் உண்டு.

அதன் தன்மையில், நம் பூமியின் தன்மையைக் காட்டிலும், பல மாறுபட்ட உலோகங்களும் வளர்ந்துள்ளன. சில மண்டலங்

களில் ஒரே நிலையை ஈர்த்து, ஒன்றுபோல் வெளிப்படுத்தும் சக்தி நிலைகொண்ட, சிறிய சிறிய மண்டலங்கள், நட்சத்திர மண்டலங்களைப் போல் உள்ள மண்டலங்கள் உள்ளன. அவை ஒரே நிலையில் செயல்பட்டால் மாத்திரம்தான் அதன் சக்தி நிலையும் வளர்ந்துகொண்டே இருந்திடும். அதன் ஈர்ப்பு சக்தியில் அமிலத் தன்மையும் ஒரு நிலைகொண்ட அமிலத்தை ஈர்த்து வாழ்ந்த அம் மண்டலங்கள் அதன் மேல் பாயும் அமிலத்தின் சக்தி நிலை குறைந்தோ, நிறைந்தோ படும் பொழுது அதன் சக்தி நிலையும் மாறுபட்டு, அதை ஏற்கும் தன்மையில்லாமல், அம்மண்டலங்கள் தன் ஜீவன் இழந்து, அது சுற்றும் நிலைகொண்டு சுற்றிட முடியாமல் அவை சிதறி விழும் நிலையில், அதன் சக்தி நிலைகொண்ட அமிலத் தன்மையுடைய, மற்ற மண்டலங்கள் அவற்றைத் தன்னுள் ஈர்த்துக் கொள்கின்றது. இனம் இனத்துடன்தான் சேரும் என்னும் நிலைக்கு ஒப்ப. இப்படி இவ்வானமண்டலத்தில் ஒவ்வொரு நாளும் பல கோடி மண்டலங்கள், தன் தன் அமிலத்தை ஈர்த்தே வளர்ந்தும், வளர முடியாத மண்டலங்கள் அதன் வாழ்வை இழந்தும் மற்றப் பெரிய மண்டலங்களுடன் தன் சக்தியை சேர்த்துக் கொண்டு வாழ்ந்து கொண்டுள்ளன.

இவ்வனைத்து சக்தியையும் தன்னுள் கண்டுணர்ந்து அனைத்து சக்தியுடனும் தன்னை ஒன்றச் செய்து வாழ்பவர்கள்தான் நம் ரிஷிகள். நம் ரிஷிகளின் உன்னத சக்தியை உணர்ந்திடுங்கள்.

**24-10-79**

சூட்சும நிலையில் வாழ்ந்திடும் நம் ரிஷிகளின் தவப்பயனால், அவர்கள் பெற்ற சக்தியை நல் வழிக்கு, தெய்விக சக்தியால் செயல்படுத்தினால்தான், அவர்கள் பெற்ற சக்தி செயல் படுகின்றது. அவர்களின் தவப்பயனும் முழுமை பெறுகிறது. முற்றும் அறிந்த தவயோக தவ ரிஷிகள், தாம் பெற்ற சக்தி நிலையை கடுகளவும் வீண் விரயம் செய்திடாமல், அவர்கள் நிலையில் புகழ்ச்சிக்கும், இகழ்ச்சிக்கும், துவேஷம் கொண்ட ஆவேச நிலைக்கும், மற்ற தீய சக்திகளின் நிலைக்கும், அச்சக்தியை அடக்கிட, தன் சக்தியின் நிலையை மோத விடுவது இல்லை. எவற்றையுமே நான் என்ற நிலையில், அத்தீய சக்தியை ஒடுக்கும் நிலைக்கு, தன் சக்தியை அவர்கள் மோத விடுவதில்லை. நாமே அந்த ரிஷி நிலை பெற்றவர்களின் தொடர்பை, நம்முள் ஏற்படுத்திக் கொண்டு, அவரது அருளாசியைப் பெற்று வாழ்ந்து வந்தாலும், நம் வாழ்க்கை நிலையில் பிறரால் நமக்கு ஏற்படும் இன்னல்களுக்கு, நாம் அருளாசி பெற்ற ஆண்டவன் நிலையிலுள்ள அந்த ரிஷியை வேண்டினால், அவரின் ரிஷித்தன்மை வாய்ந்த அச்சக்தி நிலை நமக்கு இந்நிலை

தந்தவரை அடக்கும் நிலைக்குச் செயல்படுத்திட மாட்டார். நம்முடைய இந்நிலையில்தான், அந்நிலையிலிருந்து, நாம் மீளும் பக்குவ நிலைக்கு, நாம் சென்றிட, நாம் நல் சக்தியை ஈர்த்து, நம் உணர்வுடன் செயல்பட்டால், அந்த ரிஷிகள் பெற்ற தவத்திலிருந்து, அவர்களுடன் தொடர்பு கொண்டவர்களுக்கு, சூட்சும நிலை கொண்ட பல நல் உபதேச நிலைகளை, நாம் ஈர்க்கும் நிலைப்படுத்தி வந்திட, நமக்கு அருள் செய்வார்கள்.

நாம் ஆண்டவனையே வணங்கும் பொழுதும், நம்மைத் தாக்கும் தீய சக்திகளை, ஆண்டவா பார்த்துக்கொண்டே ஏன் இத்தீய சக்தியை வளரவிடுகின்றீர்? அத்தீய சக்தியை அடக்கிட லாகாதா? என் எண்ணத்தில் தீமையில்லை, என்னைத் தீண்டுபவரின் நிலையை நீயே அடக்கிடலாகாதா? ஆண்டவனே, உன்னால் முடியாதது ஒன்றுமில்லை; அத்தீய சக்தியை அடக்கிவிடு, என்றெல்லாம் வேண்டினாலும், அவ்வாண்டவன் சக்தி பெற்ற ரிஷிகள், நம்மைத் தாக்கும் தீய சக்திகளின் நிலைக்கு அடிமைப்பட்டவரையெல்லாம் அடக்கிக்கொண்டே வந்திட்டால், ஆண்டவன் என்ற நாமம் கொண்ட, அவ்வீசனின் சக்தி பெற்றவரின் சக்திக்குப் பொருளில்லை. எவ்வாண்டவனை வேண்டினாலும் இம் மன எண்ணத்தில், நம் வாழ்க்கையுடன் மோதும் தீய சக்திகளை நாம் எண்ணிடலாகாது. நம் மனமென்னும் கோயிலிலே நம்முள் உள்ள ஆண்டவனையே, நம் தூய்மையின் நிலையை மேன்மேலும் தூய்மை பெற்று வாழ்ந்திடவும், ஆசையான அவ்வன்பை நம்முள் அறன்படுத்தி, நம் எண்ணத் தூய்மையை என்றும் மாற்றிடாமல், நம்மைத் தீமைப்படுத்துபவருக்கும் நல் உணர்வு படுத்தி, அவர்களையும் நல் வழியில் நடத்திடவே, நம்முள் உள்ள ஈசனின் சக்தியைப் போல்தான் அனைத்து ஜீவராசிகளின் சக்தியும் ஒன்றே.

அனைவரையும் நல் உணர்வுடன் நடத்திடுங்கள் என்றே, நம்முள்ளேயே நல் உணர்வை மேன்மேலும் நாம் வளர்த்துக் கொண்டே, நாம் ஜெபிப்பதுதான் நாம் அவ்வாண்டவனின் சக்தி பெற்றவர்களாகின்றோம். நம்மை நாம் ஜெபப்படுத்தி நல் உணர்வு பெற்று, நல் உணர்வை அனைவருக்கும் பொதுவாக்கி, நம் வழியை நடத்திட்டால், அந்த ரிஷி நிலை பெற்றவரின் சக்தியின் அருள் நமக்கும் அதிவிரைவில் பெற்றிடும் பாக்கியம் வருகின்றது. மழை வரும் நாளில் நம்மைக் காத்திடக் குடையோ, ஒதுக்கிடமோ தேடி நாம் சென்றிடத்தான் முடியும். ஊருக்கே பந்தல் போட முடியுமா? அவரவர்கள் எடுத்த முன் ஜென்மப் பயன், இச் ஜென்மத்தில் அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை நிலையின்

தொடரும் அவர்கள் எண்ணமுடனும், அவர்களின் வாழ்க்கையுடனும் கலந்துள்ளதினால் எவ்வெண்ணம் கொண்ட நிலையில் வளர்கின்றார்களோ, அவ்வெண்ணத்தின் சக்தியைத்தான் மென்மேலும் வளரச் செய்து வாழ்கின்றார்கள். அவர்கள் அறிந்தோ அறியாமலோ அவ்வெண்ணத்தின் தொடருடனே வாழ்வதினால் நல் உணர்வை ஏற்கும் பக்குவ நிலை அவர்களுக்குக் கிட்டுவதில்லை. இயற்கையின் சக்தியில் மாற்றமில்லை. பிறப்பில் யாருமே நல்லவர், கெட்டவர் என்ற பாகுபாடு நிலை இல்லை. அவர்களின் நிலையிலும், அவர்களாக ஏற்படுத்திய தவறில்லை. வளர்ந்த நிலையும் அவர்களுடன் கலந்து வாழ்பவர்களின் நிலையும் அவர்களுக்கு ஏற்படும் சூழ்நிலையின் நிலையும்தான் அவர்களை அத்திய சக்திக்கு அழைத்துச் செல்கின்றது. அத்திய சக்திக்கு அடிமைப்பட்டால், மென்மேலும் அந்நிலைக்கே அடிமையாகி வாழ்ந்திடும் நிலைக்கு வந்திடுகின்றது. அந்நிலையின் தொடர்பு கொண்ட சக்தியும் அதிவிரைவில் இவற்றுடன் சேர்ந்து கொள்கின்றது.

இன்றுள்ள இவ்வுலகின் நிலையில் தீய சக்திகளின் நிலைதான் அதிகமாக உள்ளதினால், அவற்றின் சக்தி துரிதமாக வளர்ந்து கொண்டுள்ளது. இவ்வெண்ண சக்தியின் செயல்படுத்திடும் நிலை மிகவும் துரிதம் கொண்ட நிலை. இக்காற்றுடன் கலந்துள்ள எண்ண சக்திகளே, தீய நிலைகொண்ட சக்தி நிலைதான் அதிகமாக உள்ளது. நல் உணர்வை நாடிச் செல்பவர்களின் சக்தி நிலை குறைந்த நிலையில் உள்ளது. இச் செயற்கையான சக்திக்கு அடிமைப்பட்ட நிலையினால் வந்த வினையின் செயலை இனி வரப்போகும் காலங்களில் இன்னும் துரிதநிலைகொண்டுதான் சென்றிடும் நிலையுள்ளது. இன்றுள்ள பல கோடி ரிஷிகளின் சக்தியினால்தான், இன்று இவ்வுலகம் இந்நிலையிலாவது உள்ளது. இவ்வெண்ண நிலையின் தீய சக்திகளின் துரிதத்தினால், இயற்கை அன்னையே சிறப் போகின்றாள். இச்சிற்றத்திலிருந்து நல் உணர்வு பெற்றோரை நல் வழி நடத்திடத்தான் இன்று நாம் ஆண்டவனாய் வணங்கிடும் ரிஷிகளின் தவப்பயனெல்லாம் செயல்படுகின்றது. இனி வாழ்ந்திடும் வாழ்க்கையில் நாம் வாழ்ந்த வாழ்க்கையின் நம்முள் பல தீய சக்திகளின் தாக்குதல் கலந்திருந்தாலும் இவ்வெண்ணத்தை இனிப் புனிதமாக்கி, புனிதமான ஆத்மாவாக இவ்வுலகில் எப்படி அவதரித்தோமோ, அந்நிலையின் எண்ணத்தை எண்ணமுடன் சுழலவிட்டு, இனி ஈர்க்கும் சுவாசமும், எண்ணமும் அந்த ரிஷி நிலை பெற்றவரின் சக்தியின் எண்ணமுடன் சுழல விட்டே, அச் சூட்சும நிலைகொண்டோரின் அருள் பெற்று, நிலைபெற்றிடும் நிலைக்கு வந்திடுங்கள்.

25-10-79

ஞான மார்க்கத்துக்குச் சென்ற, அவ்வாத்மீக வழியின் ஞானத் தொடருக்கு வந்தவர்களும், சித்தர்களும், முனிவர்களும் அவர்கள் தியானம் பெறுவதற்கு மலைக்குகையையும், சோலைகள் அடர்ந்த காட்டுப் பகுதிகளையும், இப்பூமியின் மட்டத்திற்கு மேல் உயர்ந்த இடமான மலைச் சிகரங்களுக்கும் சென்றமர்ந்து தியானம் புரிவதின் உண்மை நிலையென்ன? இன்று நாம் வாழ்ந்திடும் ஊர்களிலும், நகரங்களிலும், இம்மனித ஜீவாத்மாக்கள் நிறைந்து வாழ்ந்திடும் இடத்திலும், மற்ற ஆலைகள் உள்ள இடங்களிலும், அங்குள்ள காற்று, அங்கு வாழும் மக்களின், அவர்கள் ஈர்த்து வெளியிட்ட எண்ண நிலைகொண்ட சுவாசமும், ஆலைகளிலில் இருந்து வெளிப்படும் கழிவுப் புகைகளும் இக்காற்றுடனே, அந்நிலை கொண்ட அவ்விடத்திலேயே சுற்றிக்கொண்டுள்ளன. மனித ஆத்மாக்களின் நல்லுணர்வும், தீய உணர்வும் கொண்டவரின் சுவாச நிலைபெற்ற காற்று, இக்காற்று மண்டலத்தில் ஒரு நிலைகொண்ட மட்டத்திற்குள் சுற்றிக்கொண்டிருப்பதினால், அந்நிலையில் அமர்ந்து தியானம் பெறும்பொழுது, அவர்களின் எண்ணமுடன், இவ்வெண்ணத்தின் அலைகள் மோதும்பொழுது, அவர்கள் ஈர்க்கும் சக்தி நிலையில் சில தடங்கல்கள் ஏற்படுவதினால், இக்காற்று மண்டலத்தைச் சுத்தப்படுத்தும் தாவர வர்க்கங்கள் அடர்ந்த காட்டுப் பிரதேசத்தில் அமர்ந்து, தியானம் செய்யும் பொழுது அத் தியானத்திற்குப் பல நல்லுணர்வுகளும், அவர்களின் ஆத்மாவிற்கு நற்பயனும் கிட்டுகின்றன. இதைப்போன்றே இப்பூமி மட்டத்திற்கு மேல் ஓர் அளவு கொண்ட உயரத்திற்கு மேல், மலைகளில் அமர்ந்து தியானம் செய்யும்பொழுது இவ்வசுத்தக் காற்று அத்தியானத்திற்கு வந்து அண்டுவதில்லை.

மலைக்குகைகளில் அமர்ந்து தியானம் செய்யும்பொழுதும், இப்பூமிக்கு அடியில் இவ்வசுத்தக் காற்று வந்து தாக்குவதில்லை; இதன் உண்மை நிலை இதுவே. வாழ்க்கையிலிருந்து மீண்டு துறவறம்கொண்டவர்களினால், இந்நிலைக்குச் சென்று, இத்தியானம் பெறுவது எளிது. வாழ்க்கையுடன் ஒன்றிய, நம் நிலைக்கு, நம் வாழ்க்கையையே, நாம் வாழும் நிலையையே தியானமாக்கி வாழும் பக்குவ நிலைதான் நமக்குகந்த உன்னத நிலை. உடல் உபாதை உறும் பொழுது எந்நிலைகொண்ட உபாதை பெற்றோமோ அந்நிலையை அடக்கும், அதற்கு மேல் சக்தி கொண்ட, வீரியமுற்ற மருந்தை உண்டால்தான் அவ்வுபாதை மறைகிறது. அதைப் போல் இவ்வாத்மீக வழியில் நல்லுணர்வு கொண்ட ஜெப நிலைக்கு வரும் பொழுது, இக்காற்றுடன் கலந்துள்ள நல் சக்திக்கு

மேல் தீய சக்திகளின் தாக்குதலில் இருந்து நாம் விடுபட்டு, நாம் செல்லும் பாதையில் பல மேடு பள்ளங்கள் வரத்தான் செய்யும். பள்ளம் உள்ள இடத்தையும், கல் தடுக்கும் இடத்தையும் அவற்றில் விழுந்தோ, தடுக்கியோ செல்லும் அபாயத்திலிருந்து எப்பாதை சரியான பாதையென்று நாம் உணர்ந்து செல்கின்றோமோ அதைப்போன்றே வாழ்க்கையில் வரும் இன்னல்களிலிருந்து நாம் மீண்டு சென்று, ஆத்மீகப் பாதையை அடையும் ஞான மார்க்கம் தான் உயர்ந்த ஞான மார்க்கம். இம் மார்க்கத்தை வெறுப்புடனே, சலிப்புடனே, சஞ்சல நிலைகொண்ட நிலையிலோ, நம்மைத் தாக்கிடும் இன்னல்களிலிருந்து பயந்தோ செல்வது முறையல்ல.

வரும் தடங்கலுக்கு வருந்திடாமல் அவற்றிலிருந்து அமைதியுடன் மீண்டு, ஆத்மீக வழிக்குச் செல்வதுதான், நாம் செல்லும் ஞான மார்க்கத்திற்கு உயர்ந்த நிலை. இந்த ஞான மார்க்கத்தை நம் முன்னோர் பல நிலைகளில் சூட்சுமம் கொண்டு, இவ்வுலகம் முழுவதுமே வெளிப்படுத்தியுள்ளனர். ஏற்று வழி நடந்து வந்திடுபவர் கோடியில் ஒருவராகத்தான் இன்று இவ்வுலகில் உள்ளனர். வாழ்க்கையின் உன்னத நிலையை உணர்ந்திடாமல், வளரும் பக்குவக் குழந்தைகளுக்கு உணர்த்திடும் நிலையும் இன்றில்லை. ஞான வழியையும் இத் தெய்வீக வழியையுமே இம் மனித ஜென்மங்கள் அடைய முடியாத நிலையென்று உணர்ந்து, அவ்வழிக்குச் செல்வதற்கே, பயந்த நிலைகொண்டு வாழ்கின்றனர். உயிரணுவாய், மனிதனாய், தாயின் கர்ப்பத்தில் பிறந்த சிசுக்கள்தான் நாம் ஆண்டவனாக வணங்கிடும் போகரும், முகமது நபியும், ஏசுபிரானும். இவர்களின் நிலையில் அல்லா என்ற இறைவனையும், பரம பிதா என்ற தேவனையும் முருகா என்ற சக்தியையும் இவர்களை வணங்குபவர்களும் வணங்குகிறார்கள். ஏசுவுக்கும், முகமது நபிக்கும், முருகர், வெங்கடாஜலபதி இப்படி நாமம் கொண்டவர்களின், இறைவனாய் இருந்து அருள் புரிபவன் சக்திக்கு மேல் உயர்ந்த சக்தி. அச்சக்தியின் சுடர் ஒன்றை அனைவரும் போற்றி வணங்குகின்றனர். அச்சக்தியின் செல்வப் புதல்வர்களான நாம், நம் வாழ்க்கையின் இருளைப் போக்கி, அச் சக்தியின் சுடரின் தொடர்பினை நம்முள்ளும் ஏற்றி, நற்சக்திகளாய் ஆத்மீக நெறிகொண்ட, ஞான வாழ்க்கையின் நெறியை நம் வழியாக ஏற்று, வழிப்படுத்தியே சென்றிடுவோம்.

**26-10-79**

புள்ளிகளோ, கோடோ மையமாக வைத்துத்தான் கோலம் போடுகின்றோம். அவற்றை அழகு பெறவும் செய்கின்றோம். நம்

ஆத்மாவை நாம் உணர்ந்து மையமாக அதை வைத்து, நம் எண்ணச் சிதறல்களுக்கு அடிமையாக்கிடாமல் அச் சக்தியின் சக்தி ஆத்மாவையே, நம்முள் உள்ள உண்மையை உணர்ந்து இவ் வுலகிற்கு எந்தெந்த நிலைகளெல்லாம் உள்ளனவோ அதைப் போலவே, நம் உயிர் ஆத்மாவிற்கும் அனைத்து சக்திகளும் உள்ளன. இப்பூமிக்கு எந்நிலைகொண்ட ஈர்ப்பு சக்தி, இப்பூமிக்கு மேல் மட்டத்திலிருந்து ஒரு பொருளைப் போடும்பொழுது, எந்தக் கால அளவில் இப்பூமி தன்னுள் ஈர்த்துக் கொள்கின்றதோ, அந்நிலைபோலவே, நம் உயிர் ஆத்மாவும் இவ் ஈர்க்கும் காந்த நிலைகொண்ட சக்தியைக் கொண்டதாகத்தான் உள்ளது. இன்று நாம் நம் செயற்கையில் ஓட விடும் அனைத்து இயந்திர நிலை கொண்ட சாதனங்களுக்கும் அதற்குகந்த சக்தி நிலையை வைத்து, மற்ற சக்தியை அதனுடன் மோதவிடும்பொழுதுதான் நாம் அமைக்கும் இயந்திர நிலைகள் செயல்படுகின்றன. எச்சக்தியை மோதவிடுகின்றோமோ அதனின் தொடரிலேயே, அச்சக்தி நிலை செயல்படுகின்றது. இந்நிலை போலவே, நம்முள் உள்ள இக்காந்த சக்திகொண்ட அனைத்து சக்தி நிலையையும் ஈர்க்கும் இவ்வாத்மா வைப் பெற்ற நாமும் பிறந்தோம், வளர்ந்தோம், வாழ்ந்தோம் என்று தானாக இயங்கும் இயந்திரமாக இவ்வுடலை எண்ணிடாமல், இவ்வுலகிலுள்ள, இவ்வுலகம் எந்தெந்த அமிலங்களை யெல்லாம் ஈர்த்து வளர்ந்து வாழ்கின்றதோ, அவற்றின் நிலைப்படுத்திய சக்தி அனைத்துமே இவ்வுடலுக்கும் உண்டென்பதை உணர்ந்து, நம் ஆத்மாவின் உன்னத சக்தியை நாம் விரயம் செய்திடாமல் நம் அறிவாற்றலை மென்மேலும் வளர்த்து நாமே நம் வாழ்க்கையில், நம் உடலில் அண்டவிடும் பிணிகளில் இருந்து விடுபட்டு, ஆரோக் கிய நிலையில் வாழ்ந்திடவும், இக் கோபம், குரோதம், சலிப்பு இவற்றில் இருந்து விடுபட்டு சாந்தம், அன்பு, ஆசை என்ற ஆத் மீக நெறியை அனைவரும் ஈர்த்து நமக்கு வழிகாட்டிய ஆண்டவன் நிலைபெற்ற சப்தரிஷிகளின் அருளாசியைப் பெற்று, இவ்வுலக உண்மை மட்டுமல்ல இவ்வுலகைப் போலுள்ள எல்லா மண்டலங் களின் நிலையையும் அதனதன் ஈர்ப்பு சக்தியையும் அறிந்திட லாம்.

ஒவ்வொரு மண்டலங்களுக்கும் அதற்குகந்த தனித் தன்மை யுண்டு. ஒன்றை ஒத்த நிலையில் ஒன்றில்லை. இன்றைய நம் பாட நிலைகளும் வழிமுறைகளுமே, பிறர் எழுதிய, பிறர் சொல்லும் நிலை யையும் கேட்டு வாழ்ந்திடும் நிலையில்தான் பெரும்பாலும் உள்ளன. ஆத்மீக நெறிக்கே, பிற ஏடுகளையும், பழங்கால கல்வெட்டுக்களை யும் ஆராய்ந்தே கால நிலையை விரயமாக்கி, பிறர் நிலை அறிந்து வாழும் எண்ண சக்தியைக் கொண்டதாக உள்ளது. சக்தியின்

சக்தி ஆத்மாதான் நாமும் என்றுணர்ந்து நம்முள்ளேயே நம் சக்தியை வளர்த்து, அனைத்து நிலையையும் நாமே அறிந்திடும் ஆற்றலை, நாம் உணரும் சக்தி நிலையை நாம் பெற வேண்டும். வழி அறிந்திட குரு வேண்டும். அக்குருவின் சக்திக்கு மேல் சக்தி பெறும் சக்திவானாகச் செல்வதுதான் குருவாய் நாம் ஏற்பவருக்கு நாம் அளிக்கும் காணிக்கை. ஒவ்வொருவரும் தனக்குகந்த ஈர்ப்பு சக்தியை உன்னத சக்தியாக்கி ஒரு நிலைபெற்ற உயிரோட்டம் கொண்ட சக்தி ஜெபம் பெற்றிடுங்கள்.

**27-10-79**

கால நிலை எப்பொழுதும் ஒன்றுபோல் இருப்பதில்லை. காலை, பகல், இரவு ஒவ்வொரு தன்மைக்கும் உகந்த உஷ்ண நிலையும் காற்று, மழை, இடி இவற்றைப் போன்ற சில நிலைகளும் மாறி மாறித்தான் இப்பூமிக்கும் அதன் சக்தி நிலை கிடைக்கின்றது. இப் பூமியில் வாழும் நாமும், மற்ற ஜீவராசிகளும் இக்கால நிலையின் மாற்றத்திலிருந்து நம்மைக் காப்பதற்கு அவரவர்களின் நிலைக் குகந்த காப்பிடம் அமைத்துக்கொள்கின்றோம். இச் ஜீவ உடல் பெற்ற, இச் ஜீவ பிம்பம் கொண்ட ஆத்மாக்கள் வெயில், மழை, காற்று, பனி, குளிர் இவற்றிலிருந்து இச் ஜீவ உடலைக் காப்பதற் காக இருப்பிடம் அமைத்துக் கொள்கின்றோம். ஆனால் இச் ஜீவனு டன் வாழ்ந்து ஜீவன் விட்டுப்பிரிந்த ஆவி நிலையில் வாழ்ந்திடும் ஆத்மாக்களின் நிலைக்கு அவ்வாவியுடன் ஆவியாக தன் சக்தியைத் தனியாகத் தன் ஆத்மாவுடனே கலந்து படர்ந்து வானமண்டலத் தில் சுற்றிக்கொண்டுள்ள இவ்வாத்மாக்களுக்கு அவற்றின் சக்தி யுடன் கலந்துவிட்டதினால் இந்நிலை தாக்கப்படுவது இல்லை. இவற் றில் சில ஆவி உலக ஆத்மாக்கள் வானமண்டலத்தில் சுற்றிக் கொண்டுள்ள நிலையில், அவ்வாத்மாவுடன் கூடிய ஆவி சக்தியுடன் இக்காற்றில் கலந்துள்ள அவற்றின் சக்திக்கு ஒத்த சக்தி, அவற்று டன் சேரும்பொழுது, அதன் கனம் அதிகரிப்பதினால் அதி மழை வரும்பொழுது இம்மழையின் தன்மையினால் இக்கனமான ஆவி நிலைகொண்ட சக்தியை ஈர்த்த ஆத்மா, இப்பூமியின் மேல் மழை வரும் காலங்களில் வந்து படர்கின்றது. அந்நிலையில் அச் சக்தி நிலைகொண்ட ஆத்மாவே, சில நிலைகொண்ட புதிய தாவர வர்க்கமாக, நச்சுத் தன்மை வாய்ந்த தாவர இனமாக வளர் கின்றன.

இவ்வுடலை விட்டு எந்த எந்த எண்ணம் கொண்ட நிலையில் ஆவி பிரிந்ததோ, அந்த அந்த நிலைகொண்ட எண்ணமுடன்தான் அனைத்து ஆவிகளுமே சுற்றிக்கொண்டுள்ளன. தன் எண்ண நிலை கொண்டே சுற்றிக்கொண்டுள்ள ஆவிகளின் நிலையைத்தான் அவ

ரவர்கள் வாழ்ந்த நாட்களில் ஈர்த்து வெளியிட்ட சுவாச நிலைப் படி, ஆவி உலகிற்குச் சென்றிட்டாலும், வாழ்ந்த நாட்களில் அவர்களின் குண நிலைப்படி உள்ள எண்ணத்தைக் கொண்டே ஆவி உலகினில் அவர்களின் எண்ணம் செயல்படுவதினால், இந் நிலையை வைத்தே அவர் முதல் பாதத்தில் உள்ளார், இரண்டாம் பாதத்தில் உள்ளார் என்று இப்படி பல பாத நிலைகளை வரிசைப் படுத்தி, ஒவ்வொரு பாதமாக மேல் நிலைக்குச் சென்று, அச் சிவ னிடம் ஐக்கியப்படுவதாகச் சொல்கின்றனர். இப் பாதம் என்னும் நிலையென்ன? வெறி உணர்வுடன் செல்லும் ஆத்மாக்கள் அவ் வெறி உணர்வுடனேதான் ஆவி உலகில் இருந்தும் மற்ற உடல் களில் ஏறியோ, மற்ற எண்ணங்களுடன் கலந்தோ, இன்று நாம் பேய், பிசாசு என்று செப்பிடும் நிலையில் ஆவி உலகிற்குச் சென்று லும், மிகவும் கீழ் நிலையான எண்ணத்துடனே, தான் பெற்ற சக்தியைச் செயலாக்கியும், சுற்றிக்கொண்டுள்ளன. சலிப்புடன் செல்லும் ஆத்மாக்கள் அச்சலிப்பு நிலைகொண்டே, பெரும் சோர் வுடனே ஆவி உலகிலும் சஞ்சரித்துக் கொண்டுள்ளன சில ஆத் மாக்கள். குடும்பப் பற்றுக்கொண்ட குடும்ப ஆசையுடன் செல் லும் ஆத்மாக்கள், அக்குடும்பத்துடனே, அக் குடும்பத்தைக் காக்கும் நிலையிலேயே சுற்றிக்கொண்டுள்ளன, சில ஆத்மாக்கள்.

தெய்வ பக்தியுடன் தன் எண்ணம் அனைத்தையும் பக்தி கொண்ட நிலையிலேயே செல்லும் ஆத்மாக்கள், கோயில்கள் உள்ள இடத்திற்குச் செல்வோரின் எண்ணத்திற்கெல்லாம், ஆவி நிலையில் இருந்து கொண்டும், அப்பூஜை நிலைக்கே செல்ப வர்களின் எண்ணத்தையும் செயலாக்கி, தானும் பூஜித்தே, தன் எண்ணத்தைக் கலக்கவிட்டு வாழ்கின்றன சில ஆத்மாக்கள். இந் நிலையைத்தான் எந்தெந்த எண்ணம் கொண்டு ஆவி பிரிந்து ஆத்மா செல்கின்றதோ அந்தந்த நிலையை முதல் பாதம், இரண் டாம் பாதம் என்று சூட்சுமமாக நம் முன்னோர் வெளியிட்டதை, நாம் இன்று பல நிலைப்படுத்திக் காண்கின்றோம். ஆனால் இவ் வெண்ணமுடனெல்லாம் செல்லும் ஆத்மாக்கள் எவ்வளவு காலங் கள் ஆவி உலகில் சுற்றிக்கொண்டிருந்தாலும் பல நிலையில் இப் பூமிக்கு ஏதாவது ஒரு பிறப்பிற்கு மீண்டும் மீண்டும் வரத்தான் செய்கின்றன. இம் மனிதப் பிறவிகள் ஏழு ஜென்மம்தான் எடுக் கின்றன என்றுணர்த்தினேன் முன் பாடங்களில். இவ் ஏழு ஜென் மத்தை மட்டிலும் எவ்வாண்டவன் செயல்படுத்தி அனுப்பினான் என்றுரைப்பீர். எவ்வாண்டவனும் செயல்படுத்திடவில்லை. இப் பூமியில் உயிர் அணுக்களாய் வந்து மோதும் அனைத்து உயிர ணுக்களுமே, மனிதப் பிறவியாய் வருவதில்லை. அப்படியும் இம் மனிதப் பிறவியாய் முதல் பிறவிக்கு வருவதற்கு முன்னே பல

நிலைகள் பெற்று, பல உயிராத்மாக்கள் மாறி மாறி உயிரணுவாய் இப்பூமியில் தோன்றிய நாள் தொட்டு, அவ்வுயிரணு ஈர்த்துச் சேமித்துக்கொண்ட சக்தியின் நிலைபெற்றுத்தான், பல நிலைகள் மாறி மனித கர்ப்பத்திற்கு இம்மனிதன் வருகின்றான்.

மனிதனாய் உருவம் பெற்று வரும் நிலையிலேயே இவ் ஏழு நிலைக்குகந்த சக்திகளை ஈர்த்துத்தான் மனித நிலைக்கு வருகின்றான். தான் ஈர்த்த சக்தியினை என்றும் அழியா சக்தியாக்கி, ஒரே பிறவியிலேயே ஆண்டவன் நிலைக்குச் சென்ற அரும்பெரும் ஜோதிகள் பலர் உள்ளனர். தான் பெற்ற சக்தியையே இவ் ஏழு ஜென்மத்திலும் தவற விட்டுப் பல ஈன நிலைகளுக்குச் செல்லும் எண்ணத்தையும் பல ஆத்மாக்கள் ஏற்படுத்திக் கொள்கின்றன. இன்று வாழும் வாழ்க்கை மட்டும் எண்ணம் போல் வாழ்வு என்பதல்ல. உயிரணுவாய் இவ்வுலகில் தோன்றிய நாள் தொட்டே இவ்வெண்ண சக்தியின் நிலைகொண்டே ஒவ்வோர் உயிரணுவின் சக்தி நிலையும் ஒவ்வொன்றுக்கும் கிட்டுகின்றது. உயிரணுவின் நிலைபெற்ற நாட்கொண்டு அறிந்தே நாம் நம் நிலையதனை செயல் கொண்ட வாழ்க்கையாய் வாழ்வதுவே இன்றைய நம் நிலை.

## 26-10-79

நாம் எடுக்கும் சுவாசம் ஒரே நிலைகொண்டதாக இருந்திடல் வேண்டும். பல எண்ணங்களின் நிலையுடன் எடுக்கும் சுவாசத்தில், நம் நிலைக்கு, நாம் பெறும் சக்தி நிலை தடைப்படுகிறது. வாழ்க்கையில் பல நிலைகள் மோதுண்டாலும் நம் எண்ண சக்தி அவ்வீசனின் ஜெபம் கொண்டதாக நம்முள்ளே உள்ள ஈசனை வணங்கியே நல் சக்திக்கு வர வேண்டும்.

(காட்சி) எப்படி இல்லத்தில் தூசி அண்டிக்கொண்டே இருந்திட்டாலும் அதனை நாம் பெருக்கித் தூய்மைப் படுத்திக் கொண்டே உள்ளோமோ, அந்நிலைபோல்.

இவ்வெண்ண சக்திக்கு நாம் தீபத்தை ஏற்றும்பொழுது அத்தீபத்தில் உள்ள எண்ணெய் குறையக் குறைய மீண்டும் அவ்வெண்ணெயை ஊற்றி அத்தீபத்தின் திரியைத் தூண்டினால்தான் அத்தீபம் ஒளி அளித்துக்கொண்டே இருக்கும். (காட்சி) அந்நிலை போல் நம் எண்ணத்தை எண்ணெயாக்கி, நம் ஆத்மாவின் ஜோதி என்னும் ஒளிரும் சக்தியில் இவ் எண்ணமான எண்ணெயை குறையக் குறைய ஊற்றினால் தீபம் சுடர் விட்டு எரிவதைப் போல் நம் சக்தியை நாம் உணர்ந்து நல் சக்தி பெற வேண்டும்.

தாவர வர்க்கங்கள் எப்படி ஒரே நிலைகொண்ட சக்தியை மட்டும் ஈர்த்து அச்சக்தியின் நிலைகொண்ட செயலில் வளர்கின்றனவோ, அந்நிலைபோல் நம் நிலையும் இருந்திடல் வேண்டும். தாவரங்கள் அதன் இயற்கையின் சக்தியில் ஒரே நிலைகொண்டு அவ்வணு வளர்வதினால், ஒரே சக்தியில் ஈர்த்து வளர்கின்றன.

இச் ஜீவ ஆத்மாக்கள் பல நிலைகளை எண்ணும் நிலையில் உள்ளதினால் எந்தெந்த எண்ணங்களை எண்ணுகின்றோமோ அந் நிலைக்குகந்த சக்தி நிலையும் நம் உடலுக்குள் செல்கின்றது. அதி கோப நிலையும், சலிப்பு நிலையும், பயந்த நிலையும் இப்படி ஒவ் வொரு நிலைகொண்ட எண்ணமுடன் நாம் உள்ள நிலையில், நாம் எடுக்கும் சுவாசத்தினால், இக்காற்றில் உள்ள அமிலத்திலிருந்து நாம் எடுக்கும் சுவாசமுடன், நம் உடலில் வந்து குவிந்து, நம் உடலின் நிலையை மாறுபடச் செய்கிறது. நாமாய் ஏற்பதுதான் நம் வாழ்க்கை நிலையும் ஆயுள் நிலையும்.

எண்ண சக்தி கொண்டு உயிராத்மாவாய்ப் பிறந்து, இவ் வெண்ணமுடனே வளர்ந்து, இவ் வெண்ணத்துடனே உடலைவிட்டு ஆத்மா பிரிந்தும், இவ் வெண்ணத்துடனே, ஆவி உலகில் சஞ்சரித் தும், பிறகு இவ்வெண்ண நிலைகொண்டுதான் இப்பூமிக்கு மறு பிறப்பிற்கும் வருகின்றோம். உயிரணுவாய்த் தோன்றிய நாள் தொட்டே, அந்நிலைகொண்டு வளர்ச்சியுற்று, எல்லா நிலைகளுமே இவ்வெண்ணத்துடன்தான் செயல்படுகின்றன. இவ்வெண்ண சக்தியை நாம் பெற்ற இம் மானிடனாய் இப்பூமியில் வாழ்ந்திடும் காலத்திலேயே, நாம் பிறந்ததின் பயனை உணர்ந்து நம் ஆத்மா தான் நமது தெய்வம், அவ்வாத்மாவிற்கு, நாம் ஈர்க்கும் சுவாசம் கொண்டும், நாம் சேமிக்கும் சக்தி நிலையைக் கொண்டும், நம் நிலை நல் நிலையாக்கிடும் நிலைக்கு நம்மை நாம் பக்குவப்படுத்தி வாழ்ந் திடும் எண்ணத்தை வழிப்படுத்திடல் வேண்டும். உயிரணுவாய் உள்ள தாவரங்களின் நிலையுடன் நமக்கு இனி இயற்கை அன்னை அளித்துள்ள நல் கனிகளையும் உண்டிட்டே நம் நிலையில் அவற்றின் சக்தியைக் கொண்டே வளர்த்திடல் வேண்டும். உயிரணுவாய் உள்ள இத் தாவரங்களுக்கு மட்டும் ஜீவனில்லையா? இவ் இயற்கை யுடன் பூமியில் உள்ள அனைத்துமே ஜீவனுடன் உள்ள பொழுது மிருகங்கள், பறவைகள் இவற்றின் மாமிசத்தைப் புசித்திடலா காது. இத்தாவரங்களை நசித்து உண்ணலாமா என்றுரைப்பீர். தாவரங்கள் இப்பூமியைப் போன்றநிலை பெற்றவை. உயிர் அணுவாய் ஒரே நிலைகொண்ட சக்தியை ஈர்த்து அச்சக்தியின் நிலையின் தொடர்புடன் நம்மை வளரச் செய்பவை. இத்தாவ ரங்கள் உயிரணுவாய் வளரப் பெற்றவைதான். ஆனால் இச்சரீர

நிலைகொண்ட ஆத்மாவுடன் கூடிய ஜீவத்துடிப்பு இல்லாதவை. இஜ் ஜீவனுடன் ஜீவன் பெற்ற அனைத்து ஆத்மாக்களுக்குமே, அது ஈர்க்கும் சக்தி கொண்ட உஷ்ண அலைகளின் வெக்கை நிலையும், அதன் உடல் ஆரோக்கிய நிலையைப் பொறுத்துக் கூடிக் குறையும் நிலை அஜ் ஜீவனுடனே, அஜ் ஜீவனே ஏற்படுத்திக் கொள்கிறது.

தாவரங்களின் நிலையில் இப் பூமி வெளியிடும் உஷ்ண சக்தியின் நிலைதான் அந்நிலையில் வளர்ந்திடும் தாவரங்களுக்கும் இருந்திடும். ஜீவத் துடிப்பும், ஜீவ எண்ணமும் இத் தாவரங்களுக்கில்லை. தாவரங்களின் சக்தியெல்லாம் ஒரே நிலைகொண்ட சக்தியை ஈர்த்து வளர்ந்திடும் நிலைதான்.

**29-10-79**

எறும்பிற்கும் உணர்வுண்டு; சிறு மண் புழுவிற்கும் உணர்வுண்டு, இஜ் ஜீவத் துடிப்பு நிலையுள்ள அனைத்து ஜீவராசிகளுக்குமே இவ்வுணர்வு நிலையுண்டு. ஆனால் தாவர வர்க்கங்களுக்கு இஜ் ஜீவத் துடிப்பு நிலை இல்லாததினால் தாவரங்களுக்கு உணரும் தன்மை இல்லை. சில வகைத் தாவரங்கள் மனிதனின் உடல் உறுப்புகள் பட்டவுடனே சுருங்கும் தன்மை பெறுகின்றன. உணர்வில்லாமல் அவை எப்படிச் சுருங்குகின்றன, என்று எண்ணுவீர். இவ்வுணரும் சக்தி பெற்ற ஜீவஜெந்துக்கள் அதற்குகந்த, அவை ஈர்த்து வளர்ந்த அமிலத் தன்மைக்குகந்த காந்த சக்தி நிலையுண்டு. இச்சக்தியினால் அத்தாவரங்களின் மேல் இஜ்ஜீவஜெந்துவின் சக்தி நிலை பட்டவுடன் அத்தாவரம் எந்நிலைகொண்ட சக்தி பெற்று எவ்வமிலத்தை ஈர்த்து வளர்ந்ததோ அந்நிலைக்கும் இந்நிலைக்கும் எதிருண்ட நிலை அடைவதினால் மற்ற ஜீவ ஜெந்துவின் உறுப்புகள் பட்டவுடன் அது சுருங்கும் நிலைக்கு வருகின்றது. அஜ் ஜீவஜெந்துவின் வெப்ப நிலையும் அத்தாவரத்தின் வெப்ப நிலையும் மாறுபட்ட நிலையில் உள்ளதினாலும் இந்நிலை பெறுகிறது. சில வகைத் தாவரங்கள் சில நிலைகொண்ட மனிதரின் தீய எண்ணத்தையே ஈர்த்து நச்சு நிலையில் வாழ்பவரின் உஷ்ண நிலை, அவர் அந்நிலையில் எடுக்கும் சுவாச நிலை அத்தாவரங்களின் மேல் பட்டாலே அத்தாவரம் கருகும் நிலை பெறுகிறது. இன்னும் சிலரின் நிலையில் அவர்கள் விதை விதைத்தால் அவ்விதை வளர்ந்திடாது. அவ்விதையையே இவர் கையில் ஏந்தி வைத்துள்ள நிலையிலேயே அவர் எடுக்கும் சுவாச நிலைகொண்டு, அவர்களின் அங்க சக்தியைக் கொண்டு அவ்விதைக்கு வளரும் சக்தியற்றுப் போகிறது. அந்நிலையில் அவர் விதைக்கும் விதையும் வளர்வதில்லை. சிலரின் சுவாசத்தினால் இவ்வுலக சக்தியையே சக்தியாகக் காணும்

நல் நிலை உள்ளது. சிலரின் சுவாசத்தினால் அவர்களின் எண்ணத்தின் நிலையினாலேயே எந்நிலைக்குச் சென்றிட்டாலும் சோர்ந்த நிலை பெறுகின்றனர். சக்தி நிலை பொதுவானதே. இவ்வெண்ண நிலையினால்தான் மாறுபட்ட நிலைகளெல்லாம். தாவரங்களின் நிலைக்கு இவ்வுணரும் நிலையும், எண்ண நிலையுமில்லை.

உயிரணுவாய் ஒரே நிலையில் சக்தியை ஈர்த்து எந்நிலை கொண்ட அமில சக்தியை ஈர்த்து வளர்த்தனவோ அந்நிலைக் கொப்பத்தான், அவற்றில் விளையும் பூவும், காயும், கனியும், தானிய வகைகளும் இருக்கும். தாவர வர்க்கங்களை நாம் அதில் வளரும் பூவையும், காய்கனியையும், சில கீரைகளின் மேல் நிலையில் உள்ள கொழுந்துகளையும் நாம் பறித்து எடுக்கும் பொழுது அதன் நிலை மென்மேலும் வளரத்தான் செய்கிறது. அவற்றுக்கு ஜீவத் துடிப்பும், உணரும் தன்மையும் இல்லாமல் ஒரு நிலைகொண்ட சக்தியை ஈர்த்து, வளரப் பெற்றதினால் ஒவ்வொன்றும் அதனதன் குறிப்பிட்ட கால நிலைப்படி அதன் பயன் நிலைகொண்டு சக்தி யளித்து நமக்குப் பயன் தருகின்றது. இவ் இயற்கையின் சக்தியில் பல நிலைகொண்ட ஒவ்வொன்றிற்கும் மாறுபட்ட நம் எண்ணத்திற்கும், நம் உணர்விற்கும் எட்டாத பலகோடி நிலைகள் உள்ளன. தாவரங்களில் சில பல நாட்கள் வளர்ந்தாலும் பலன் தராததை வைத்தும், இன்னும் சிலவகைத் தாவரங்களுக்கு ஒன்றுக்கெதிரில் அதே நிலைகொண்ட (ஜாதி) அதன் நிலைபெற்ற தாவரம் இருந்திட்டால்தான் இவை இரண்டுமே பலனளிக்கும். தாவரங்களில் சில பலன் தராத நிலைபெற்றதை ஆண் தாவரம் என்கின்றனர். தாவரங்களுக்கு இவ் ஆண், பெண் என்ற நிலையில்லை. உயிரணுவாய் இப்பூமியில் தோன்றிடும் எவ்வுயிரணுக்களுக்குமே, இவ் ஆண் பெண் நிலையில்லை. உயிரணுவாய் இருந்து ஜீவ ஆத்மாவிற்கு வந்த பிறகுதான் இவ் ஆண் பெண் நிலையெல்லாம். ஆவி உலகத்திலும் இவ் ஆண் பெண் நிலையில்லை. இவ்வாவி உலகிலிருந்து ஜெனனத்திற்கு வருபவர்களின் ஆவி ஆத்மாவின் எண்ணப் படிதான், இஜ் ஜீவ ஆத்மாவிற்கு ஆணாகவும் பெண்ணாகவும் வந்து பிறப்பது எல்லாம். அவரவர்கள் எண்ண நிலைக்கும், உணர்வு நிலைக்கும் தக்கபடிதான் அவ்வாவி உலக ஆத்மா இஜ் ஜீவ உடலுக்கு வருகின்றது.

இஜ் ஜீவ உடல் பெற்ற நிலையை உணர்த்திடுவேன் நாளையே.

**31-10-79**

சூரியனிலிருந்து வெளிப்படும் அமிலத்தன்மையான, பல நிலைகொண்ட உயிரணுக்கள், இப்பூமி, தன்னுள் ஈர்த்து, அவ்

வுஷ்ண அலைகளை வெளிப்படுத்தி, பல மாறுபட்ட நிலைகள் கொண்ட, அமில சக்திகள் இப்படர்ந்த காற்றினில் உள்ளதினால், அவ்வமிலத்தின் மேல் இச் சூரிய ஒளி பட்டவுடன் மென்மேலும் பல நிலை கொண்ட இவ்வமிலத் தன்மையும் வளர்ந்து, உயிரணுக் கள் வளர்ந்து கொண்டேதான் உள்ளன. இப்பூமியின் வளரும் நிலைகொண்ட அனைத்து சக்திகளுமே ஜீவன் கொண்ட உயி ரணுக்கள்தான். ஒவ்வோர் உயிரணுக்களும் எச்சக்தியில் உயிரணு வாய், எவ்வமில சக்தியைப் பெற்று உதித்தனவோ, அவ் அமிலத் தன்மை உடைய, காந்த சக்தியை உடைய உயிரணு அச்சக்தி நிலைகொண்ட அமிலத்தைக் காந்த நிலையுடனே மென்மேலும் ஈர்த்து, அது அது ஈர்த்த நிலைகொண்டு தாவரங்கள், கல், மண், நீர், மற்ற பூமிக்கு அடியில் உள்ள திரவப் பொருள்கள், உலோ கங்கள் (கனி வளங்கள்) இப்படி வளரும் உயிரணுக்கள் சில. இன்னும் சில நிலைகொண்ட உயிரணுக்கள் ஜீவ உடல் பெற வருகின்றன.

இப்பூமியில் இருந்து வளரும் இப்பொழுது சொல்லிய உயி ரணுக்கள் எல்லாம் இப் பூமியின் மேல் படர்ந்து பூமியுடனே ஐக்கியப்பட்டு பூமிக்குள்ளே இருந்து வளர்ந்த நிலைபெற்ற இயற்கை வளம் கொண்ட உயிரணுக்களின் நிலை இவையெல்லாம். ஆனால் இஜ்ஜீவ உடலை ஏற்கும் உயிரணுவானது, இக்காற்றில் படர்ந்து கொண்டே, இக்காற்றில் உள்ள அமில சக்தியை மென் மேலும் தன்னுள் ஈர்த்துச் சுற்றிக்கொண்டுள்ள நிலையில், தன் நிலையை வளர்ச்சி கொண்ட நிலையில் உள்ளபொழுது, இத்தாய், தந்தையென்ற இரண்டு ஜீவ உடல் நிலைகொண்ட இனங்கள் ஒன்றுபடும்பொழுது, இவ்விரண்டு ஜீவ உடல்களின் அமில சக்தி ஒன்றுபட்டவுடன் காற்றில் கலந்துள்ள உயிரணு தன் நிலைக்கு ஒப்ப அமில நிலைகொண்ட காந்த சக்தியுடைய உயிரணுவின் சக்தி இவ்வொன்றுபட்ட சக்தியுடன் வந்து உயிர் கொள்கின்றது. இவ்விரண்டு ஜீவ உடல்களின் அமில சக்தி ஒன்றுபட்டவுடன் அவ் வுயிரணுவின் சக்திக்குகந்த பிறப்பிடமாக இவற்றை ஏற்றுத்தான் அவ்வுயிரணு கருவாக வளர்ந்து, அத்தாயின் கருவிலேயே தான் ஈர்த்துப் பழக்கப்பட்ட அமில சக்தியைத்தான் அத்தாய் சுவா சிக்கும்பொழுது, தன் நிலைக்கு ஒப்பத் தனக்கு வேண்டிய அமி லத்தை மட்டும் தான் ஈர்த்து, வளர்ச்சி பெற்று வளர்கின்றது, சூழுண்ட நிலையில் உள்ள ஜீவ உடல் கொண்ட தாயின் ஜீவ ஆத்மாவிற்குத் தனித்த நிலையிலுள்ள ஜீவ உடல் கொண்டவரின் துடிப்பு நிலைக்கும், சூழுண்ட நிலையிலுள்ள ஜீவ உடல் கொண்ட ஜீவன்களின் துடிப்பு நிலைக்கும் மாறுகொண்ட நிலை இருந்திடும்.

தாவர வர்க்கங்களின் நிலையை ஜீவ அணுவாய் வளர்ந்த நிலை என்று உணர்த்தினேன். ஜீவன் கொண்ட, ஜீவ அணுக்கள்தான் துடிப்பு நிலையில்லா வர்க்கங்கள். இஜ்ஜீவ ஆத்மாக்கள்தான், இஜ் ஜீவ உடல் கொண்ட ஆத்மாக்களாய் உதிர ஓட்டமுடன் துடிப்பு நிலைகொண்ட அங்கங்களை உருவாக்கி வளர்ந்திடும் ஜீவ ஆத்மாக்கள். அனைத்துமே உயிரணுவாய் இயற்கையுடன் இவ்வுலகில் உயிர் பெற்றாலும் ஒவ்வொன்றிற்கும் அவையவை ஈர்த்த காந்த அமில சக்திகொண்ட இப்பூமியில் படர்ந்து, பூமியுடன் ஐக்கியப் பட்டு, பூமியிலிருந்து வெளிப்படும் உஷ்ண அலைகளை ஈர்த்தே இயற்கை வளங்களாகவும், காற்றுடனே ஆவியாகப் படர்ந்த நிலையில் தன் சக்திகளை ஈர்த்தும் வளர்ந்திடும் உயிரணுக்கள்தான் ஜீவ உடல் கொண்ட ஆத்மாவாக ஊர்வன, பறப்பன, நீரில் வாழ்ந்திடும் நீரினங்கள், மிருக வர்க்கங்கள், இம் மனித உடல்கள் எல்லாமே. உயிரணுவாய்த் தோன்றிய நாளிலேயே அது ஈர்க்கும் அமில சக்தியைக் கொண்டு தன் தன் பிறப்பு நிலை எய்து கிறது. உயிரணுவாய் உதித்த நாளிலேயே தன் தலை எழுத்தைத் தானாகவே எழுதிக்கொள்கின்றது. இக்காற்றில் படர்ந்துள்ள உயி ரணுக்கள்தான், ஜீவாத்மாவாகி என்றும் அழியாமல் மீண்டும் மீண்டும் ஜென்மம் பெறுவதற்கு வருகிறது என்பதல்ல. இப் பூமியுடன் ஐக்கியப்பட்டு வளர்ந்த அனைத்துமே இந்நிலையில்தான் தத்தம் இனத்துடன் அவையவை சேருகின்றன.

அணுவாய் உதித்த நாளிலேயே நீங்கள் சொல்லும் நிலைப் படி (அதன் தலையெழுத்து) அதன் நிலை உருவாகிறது.

**2-11-79**

இவ்வுலகமே அணுவாய் உதித்து அணுவுடனே தனக்கு வேண்டிய சக்தியைச் சேமித்துச் சேமித்துத்தான், பரந்த இப் பூமி உருவாயிற்று. தன்னுள் தான் வளர்த்த சக்தியைக் கொண்டு, இப்பூமி ஈர்த்து எடுத்து வெளியிடும் சுவாச நிலைப்படி, இப்பூமிக்கு வேண்டிய சக்திகள் அனைத்துமே, காற்றாய்த்தான் இப்பூமி ஈர்த்து வெளியிடுகின்றது. இப் பூமியில் வளர்ந்திடும் அனைத்துமே ஆவிதான் என்று உணர்த்தினேன் முந்தைய பாடங்களில். இப் பூமியிலிருந்து பிரித்தெடுக்கும் உலோகங்கள் எந்நிலையில் அவற்றை நாம் பொருள்களாக்கி உபயோகப்படுத்தினாலும், இக்காற்றின் நிலை அதன் மேல் படும்பொழுது, எல்லாவகை உலோகங்களும் கரையத்தான் செய்கின்றன. இப்பூமியிலிருந்து நாம் அவற்றைப் பிரித்து எடுக்கும் நாள் முதலே, அப்பிரித்த நிலையில், வளர்ச்சியின் நிலையும் தடைப்பட்டு, கரையும் நிலைக்கு எல்லா உலோகங்களுமே

வருகின்றன. இப்பூமியிலிருந்து பிரித்து எடுக்கும் நிலக்கரியிலிருந்து அனைத்துக் கனி வளங்களுமே கரையும் நிலைக்குத்தான் வருகின்றன. இவ்வுலோகங்களின்மேல் காற்றுப் பட்டவுடன் இக்காற்றில் உள்ள அமில சக்தியில் அததற்குகந்த அமிலத்தை ஈர்த்துக்கொள் கின்றது. ஈர்த்த நிலையில், அந்நிலைகொண்ட, அவ்வினமுடைய சக்தியுடன் அதன் வளரும் நிலைகொண்ட இனத்துடனே சென் றடைகிறது.

நாம் பல ஆபரணங்களை அணிகின்றோம். அனைத்துமே கரையும் நிலைபெற்ற உலோகங்கள்தான். காற்றுப் படாத நிலையில் பாதுகாத்திடும் உலோகங்கள் மட்டும் கரையும் நிலை எய்துவ தில்லை. காற்றின் நிலை படும் இடத்திலுள்ள அனைத்து உலோகங் களுமே கரையும் நிலைபெற்றவைதான். இரும்பு மனிதன் என்கின் றார்கள். இரும்பும் கரையும் நிலை கொண்டதுதான். ஆவியான உலகத்தில், ஆவியுடனே தோன்றிய அனைத்துப் பிம்பங்களுமே ஆவியாகும் நிலை கொண்டவைதான். இன்று, இப்பரந்த பூமி உள்ள நிலையில், இப் பூமியின் பொக்கிஷமான கனி வளங்களையும் திரவ சக்திகளையும் நாம் பறித்தெடுக்காமல் இருந்திருந்தால், நம் தாய் பூமியும், இன்று வியாழன் மண்டலம், சூரிய மண்டலம், இவற்றுக்கு மேலும் படர்ந்து, மென்மேலும் வளர்ந்து, பல சக்திகளை நமக்கு அளித்து வரும். நாம் செய்த வினையினால், நம் பூமி இன்று மாற்றம் பெறும் நிலையில் உள்ளது. மாற்றம் பெறும் நிலையில், இன்று உள்ள நிலையைக் காட்டிலும் நீர்நிலை அதிகப்படும். அந்நிலையில், இப்பூமியின் சக்தி ஈர்த்து வெளிக் கக்கும் நிலையில், இப்பொழுது ஆவியாகும் நிலையைக் காட்டிலும், அதிக சக்தி ஆவியாக மாறும் நிலைக்கு இப்பூமி வருகிறது. இப்பூமியே இன்று இன்னும் சிறிது காலத்தில், மாற்றம் பெறும் நாளிலிருந்து, இப்பூமியே சிறுகச் சிறுகக் கரையும் சக்திக்கு ஆட்படுகிறது. இக்கரைந்த நிலையில் ஆவி நிலை யில் மற்ற மண்டலங்களின் சக்தி இப்பூமியின் தொடர்புடைய மண்டலங்களின் சக்தியுடன், இப்பூமியின் சக்தி சென்றடைகிறது.

இப்பொழுது இங்கு செப்பிடும் நிலை ஒன்றல்ல இரண்டல்ல, பல ஆயிரம் கோடி காலங்கள் ஆகிடும் இந்நிலை பெறுவதற்கு. இப்பூமியின் சக்தி இன்னும் குறுகிய சிறிது காலங்களுக்குத்தான் வளரும் சக்தியில் இருந்திடும். இந்நிலையை எவ் விஞ்ஞானத்திலும் ஆராய்ந்தும் கண்டிடலாம். இக்கலியில் வந்த செயற்கைக்குட் பட்ட சோம்பேறி நிலைகொண்ட பேராசையினால் பல கோடி ஆண்டுகளாக வளர்ந்திட்ட இப்பூமியையே, அறிவாற்றல் உடைய மாமனிதன் என்றிடும் நம் கலியுடன் தோன்றிய, நம்மால்

தோன்றிய வினைச் செயல்தான் இயற்கையையே மாற்றியதின் நிலையினால் அவ் இயற்கை சக்தியின் சீற்றத்திற்கு ஆளாகும் இம் மனித உடல் கொண்ட நாம் கடைசி நிலைக்கு வந்துள்ளோம். விதியின் செயல் என்கின்றனர். விதியை யார் அமைத்தது என்பதனை உணர்ந்தீரா? இவ்வுலக விதியையே இக் கலியில் வந்திட்ட செயற்கைக்குப் பேராசை கொண்ட இக் கலியின் மனிதனால் வந்த விதிதான் இவ்வுலகுக்கே தலைவிதி. இன்றைய இப் பாட நிலையிலிருந்து விதியின் நிலை புரிந்ததா?

**3-11-79**

இப்பூமியின் நிலை இரண்டு பாகம் நீரும், ஒரு பாகம் நிலமும் உள்ளது. அவற்றிலும் அவ் ஒரு பாகத்தில் ஏரி, குளம், கிணறு, ஆறு இப்படி நீர் நிலைகள் உள்ளன. இன்று நில அதிர்வு ஏற்படுவது இந்நில வெளியில் மட்டுமல்ல. பூகம்பமும் எரிமலையும் இப்பூமியின் நீர்நிலை இல்லாத இடங்களில் மட்டும் ஏற்படுவது அல்ல. இப்பூமியுடன் கலந்த கடலிலும் இப்பூகம்ப நிலை அதிகமாக ஏற்பட்டுக்கொண்டேதான் உள்ளது. இக்கடலில் சில நிலைகளில் இப்பூகம்ப நிலை ஏற்பட்டு அதனால் அக் கடலுக்குள் திடீர் திடீரென்று மலைகள் வளர்கின்றன என்கின்றனர். கடலுக்கடியில் வளர்ந்திடும் மலையின் நிலையென்ன? இப்பூமித்தாய் வெளியிடும் உஷ்ண அலைகள் வெளிப்படும் தன்மையினால் பூமியில் ஏற்படுவதைப் போன்ற நில அதிர்வு இக்கடலிலும் ஏற்படுவதினால் அந்நிலையில், பொங்கும் நிலையில் வளர்வதுதான் இப்படி திடீர் திடீரென்று தோன்றிடும் மலைகளின் நிலையெல்லாம். இக்கடல் நீரிற்கும், இம் மனித ஜீவ ஆத்மாவின் உடல் தன்மைக்கும் அநேக ஒற்றுமை நிலைகள் உண்டு. இம் மனித உடலின் சுவாசத்தன்மை உப்புக் கலந்த அமிலத்தைத்தான் அதிகமாக ஈர்த்துச் சுவாசிக்கின்றது. கடல் நீரின் உப்புத் தன்மையும், இம் மனித ஜீவாத்மாவின் உடல் தன்மையும் ஒன்றுபட்டதே. இம்மனித உடலைப் புதைத்தால் அவ்வுடலின் மேல் மற்றத் தாவர இன வர்க்கங்கள் வளர்ந்திடா. இன்று தாவரங்களுக்குப் பல இரசாயன உரங்களைச் செய்வித்து வளரச் செய்கின்றனர். அவற்றினுள் இம் மனிதனின் உடல் தன்மையை வைத்து ஓர் இரசாயனத்திற்கும் பயன்படுத்திட முடியாது. இன்று சில இடங்களில் சில தாவர வர்க்கங்களுக்கு நாய், நரி இவற்றின் உடல்களை அத்தாவரங்களின் வேர்களுக்கு உரமாக இட்டால், அத் தாவரம் செழித்து வளர்ந்திடும் என்ற நிலையில் பயிர் செய்கிறார்கள். ஆனால் இம்மனித உடல் உப்புக் கலந்த அமிலத்தன்மை பெற்றதினால், எத் தாவரமும் இவ்வுடலில் இருந்து வளரா. இவற்றைப் போன்றே தாவரங்களுக்கு இப்பூமியில் மூன்றில் இரண்டு பாகமாக உள்ள இக் கடல் நீரைப் பயன்படுத்திட முடிவ

தில்லே. அந்நிலேயிலேயே அச் சுவாசமுடனேயே வளர்ந்திடும் சில தாவர வர்க்கங்கள் உண்டு. ஆனல் அதே இனம் கொண்ட இத் தரையுடன் உள்ள நீர்நிலேயில் வளர்ந்திடாது. இயற்கையிலேயே பலப்பல மாற்றங்கள் கலந்தே உள்ளன.

இவ்வியற்கையின் சக்திக்குட்பட்ட இவ்வியற்கை எய்தும் ஜீவ ஆத்மா பெற்ற நாம், நம் சக்தியை இயற்கையுடன் கலக்க விடும் நிலேயினேயே உணர்த்திடுவேன் நாளேயே.

**5-11-79**

இயற்கை சக்தியில் ஆவியாய், அணுவாய் உயிர் பெற்று அவ் ஆவியிலே உள்ள சக்தியினே உயிரணுவிற்கு ஊட்டமாக்கி அவ் வாவியின் பிம்பமாய் ஜீவ ஆத்மாவிற்கு வந்து, ஜீவனுய், மனித பிம்பம் பெற்று, பிம்பமாய் வாழ்ந்திட்டு, ஆத்மா பிரிந்து பிறகும் அவ்வாத்மாவுடன் ஆவியான சக்தியை ஈர்த்தே, இப்படி மாறி மாறி ஆவி உலகம் பிம்ப, ஜீவன் கொண்ட ஜீவ ஆத்மா வாழ்க்கை வாழ்ந்திடும் உயிரணுக்கள் யாவற்றுக்குமே அனேத்து சக்திகளும் அடைந்திடும் சக்தி உண்டு. எவ்வுயிரணு எவ்வழியில் தன் சக்தியினே வளர்த்துக் கொள்கின்றதுவோ அவ் வழியில் சென்றிடலாம். தன் சக்தியைத் தான் உணர்ந்திடாமல் இருந்தி டும் மனித ஆத்மாக்களாகத்தான் இன்று வாழ்ந்திடும் நம் வாழ்க் கையுமே. சக்தியினேச் சிதறவிட்டு இப்பேராசை நிலேயையே வளர்த்துக் கொண்டு வாழ்வதின் வினேயினுல். வந்ததுதான் இன்றைய நம் வாழ்க்கையின் நெறிமுறைகளாக உள்ளன. பல மகான்கள் இப்பூமியில் அவதரித்து ஆண்டவனுய் இன்றும் அருள் புரிகின்றனர். நாமோ நம் சக்தியினே வீண் விரயம் செய்திட்டும், நம் இவ்வுடலுடன் கூடிய ஆத்மார்த்த, ஆத்மீக நெறி உடைய அன்பு கொண்ட வாழ்க்கைதனே இம்சையிலும்; பேராசையிலும் பல நெறி கெட்ட காமச் சூழ்நிலேயிலும் தன்னடக்கம் இல்லா நெறிகெட்ட வாழ்க்கையிலும், குரோதம், விஷமம் இப்படி நமக் குள் பல தீய சக்தியினே வளரவிட்டு, நல்லொழுக்கம் பெற்றிடும் நற்பயன் கொண்ட வாழ்க்கைதனேச் சிதற விட்டு இவ்வாத்மீக நெறி கொண்ட இல்வாழ்க்கைதனே இன்பமுடன் வாழ்ந்திடாமல் வாழ்ந்தென்ன பயன்?

நம்மைப்போன்ற உயிரணுவாய் உதித்திட்டு உயிர் ஆத்மா கொண்டு ஜீவ ஆத்மாவாகி, இஜ் ஜீவ வாழ்க்கைக்கும் வந்து இவ் உலகில் உதித்ததின் உண்மை சக்தியினே உணர்ந்து, தன் ஆத்மா வின் சக்தியினுல் இவ்வுலக சக்தி அனேத்தையும் எந்நிலேயில் பெற்றனர் பல மகான்கள் என்பதனே இப்பாட நிலேயில் வெளி

யிடுகின்றேன். பல ரிஷிகள் நம்மைப் போல் வாழ்ந்த வாழ்க்கையில் பல இன்னல்களில் வாழ்ந்துள்ளார்கள். வாழ்க்கைச் சுற்றலில் குடும்பப் பற்றுடன்தான் வாழ்ந்தார்கள். அந்நிலையில் இருந்து கொண்டே, அவர்கள் எடுத்த ஜெப நிலையால், ஜெப நிலை என்பது, எவ்வெண்ணத்திற்கும் அடிமை ஆகாமல், எவ்வெண்ணத்திற்கு என்பது, வாழ்க்கைக்குகந்த நெறி முறையில் மாற்றம் காணுமல், வரும் இன்னலுக்குச் சோர்வு நிலைப்பட்டோ, சந்தோஷ நிலைக்கு அடிமைப்பட்டோ, பாசத்திற்குத் தன்னைக் கட்டுப் படுத்தியோ வாழ்ந்திடாமல் இவ்வெண்ண சக்தியினை வாழும் காலத்திலேயே, அனைத்து சக்திகளையும் தன்னுள் ஈர்க்கும் பக்குவ நிலைபெற்று, ஆத்மீக நெறிக்குகந்த ஞான வழிக்கு வித்திட்ட வழியில் வந்தவர்கள்தான் அனைத்து மகான்களும்.

வாழ்க்கை நிலையில் ஞான நிலை பெற்ற முதல் நிலைக்கு வந்தவர்கள் அந்நிலையின் தொடர் நிலையை வளர்த்தே சித்து நிலை பெற்றிடலாம். சித்து நிலை பெற்றவர்கள் முனிவராய், ரிஷியாய், சப்த ரிஷியாய் வந்திடலாம். இவ் வழியில் வந்தே தன் உயிரணுவாய் உதித்து, ஆத்ம நிலைக்கு வந்தவர்கள் பெற்ற சக்தியினுல் எவ் உலகில் உதித்தனரோ, அவ் உலகில் இருந்து எவ் உலகிற்கும் (மற்ற மண்டலங்களுக்கு) சென்றிடும் நிலைபெற்றும், மற்ற மண்டலங்களின் நிலையிலிருந்து பல சக்தியினைத் தன் உயிராத்மாவுடன் சேமித்துத் தனி ஓர் ஆத்மாவைத் தனக்குகந்த பல சக்தியினை ஈர்த்து, தன்னுள்ளே சுழலச் செய்து தனி ஒரு மண்டலமாக உருப்பெறச் செய்தும், அந்நிலையிலிருந்து தனி ஓர் உலகமாகத் தன் மண்டலத்தினுள்ளே பல ஜீவன்களின் வளர்ச்சியைத் தானே வளரச் செய்தும், மண்டலங்களாகின்றன. இவ்வியற்கையின் சக்தியில் எண்ணில் அடங்காப் பல உண்மைகள் உள்ளன. உயிரணுவாய் நம்மைப் போல் உதித்திட்டவைதான் இன்றுள்ள பல மண்டலங்கள்.

இந் நிலைக்கு வருவதற்கு உயிரணுவாய் இருந்து, உயிர் ஆத்மாகொண்ட, செயலாற்றும் நிலைபெற்ற இம் மனித உடலினுல் மட்டும்தான் முடிந்திடும். இந்நிலையில் இருந்து வந்தவர்கள் தான் பல மகான்கள். இன்னும் சிலரின் நிலையினை விளக்கிடுவேன்.

**6-11-79**

நம் வழக்கத்திலுள்ள சொல் நாமங்கள் நம்மால் வழக்கத்திற்குப் பேசுவதற்காக நம் முன்னுேர்களின் ஒவ்வோர் இன வழிப் படி பல நாமச் சொற்களை இவ்வுலகினிலே பல பாகங்களில், பல நிலைகளில் அவரவர்கள் வந்த வழிப்படி பேசி வருகின்றும். ஆண்ட

வனின் நாமத்தையே பல நாமங்கள் சூட்டி, அவரவர் வழக்கப்படி வேண்டுகின்றோம். முருகா என்ற மந்திர ஜெபம், போகரினால் இவ் ஆறு வகைக் குணங்களை நாம் போற்றி வணங்கிட இக் குணங்களையே முருகனுக்கி அம் முருகா என்ற நாமகரணம் சூட்டியவர் போகர்தான். அம் முருகா என்னும் நாமகரணம் சூட்டிக் கொண்ட தனித்த ஆண்டவன் ஒன்றில்லை. ஆனால் முருகா என்ற ஜெப மந்திரம் எவ்வுள்ளங்களில் இருந்தெல்லாம் எழுகின்றதோ, அவ்வுள்ளங்களுக்கெல்லாம் நம் போகரினால் வந்த வழிப்படியும், அவர் ஜெபத்தின் நிலைப்படியும் அழியா உடல் கொண்ட ஆத்மா நிலைபெற்ற அப்போகர் தன் சக்தியுடன் இம் முருகா என்ற மந்திர ஜெபம்கொண்ட நிலைக்கு அவர் சக்தியில், அவர் உடலிலேயே அவர் ஆத்மாவுடன், அவர் உடலிலுள்ள, அவர் ஈர்த்துச் சேமித்த முருகா என்ற மந்திர சக்தியின் நிலையினை ஒளியாகத் தன்னுள் ஈர்த்துக்கொண்டே இன்றும் உள்ளார். அந்நிலையில் முருகா என்ற மந்திரம் எவ்வுள்ளங்களில் இருந்தெல்லாம் எழுகின்றதோ அம்மந்திர சக்தி போகரின் சக்தியுடன் நினைத்த மாத்திரத்தில் வந்து மோதி ஒளியாய், ஜெபிப்பவரின் உள்ளத்திற்கெல்லாம் போகரின் நிலையிலிருந்து அச்சக்திதனை வழங்கி வருகின்றார்.

அழியா உடல் பெற்ற ஆத்ம சக்தியுடன் தனக்குகந்த நாமத்தையே ஜெபமாக்கி அஜ் ஜெப நாமத்தை எண்ணுபவரின் சக்தியுடன் இன்றும் இந்நிலையில் கலக்கவிட்டு எண்ணுபவரின் ஆத்மாவிற்குகந்த அவர்களின் நிலைக்கெல்லாம் தான் பெற்ற சக்தியைப் பகிர்ந்து அளித்து வருகின்றார். அம் முருக நாமம் கொண்ட அம் முருகேஸ்வர போக நாதர். போகரின் சக்தி அழியா சக்தி. இன்றும் அச் சக்தியினை இக்காற்றிலிருந்து பலவாக ஈர்த்து அருளிக்கொண்டே உள்ளார். அவர் எடுத்த சக்திப்படி இன்றும் மனிதருள் மனிதராகச் சில நிலைகளில் வந்து செல்கின்றார். எந்நிலையில் என்று உணர்ந்தீரா? அப்போக நாதரின் உடல் கூடு எந்நிலைக்கும் அவர் ஜெபம் கொண்டு இன்றுள்ள அப் பழனிக் குகை வாசஸ்தலத்தை விட்டு வெளிப்படுவதில்லை. ஆனால் முருகராகவும், மற்றும் பல நிலைகளிலும் மக்களுடன் மக்களாக அவர்களின் இன்னலைத் தீர்க்க வந்து செல்கின்றார். போகரின் ஆத்மாவுடன் அவர் சேமித்த சக்தி சுற்றிக்கொண்டுள்ள நிலையில் ஆத்மாவுடன் கூடிய அவரின் சக்தி நிலையை உடல் கூட்டிலிருந்து பிரித்துக் காண்பவருக்கு அவ்வாவி சக்தியை இக்காற்றிலிருந்தே பல சக்திகளை ஈர்த்து, ஆத்மாவுடன் கூடிய அவரின் சக்தியை பிம்பமாக்கி வந்து செல்கின்றார். ஆவியான அமில சக்தியை எந்நிலையிலும் விரிந்து கூடும் நிலைப்படுத்திடும் நிலையைப் பெற்றுள்ளார் முருக நாமம் கொண்ட நம் போகர். ஒரே நாளில் பல

இடங்களில் அவரின் பிம்பத்தை அவரால் காணச் செய்திடவும் முடிந்திடும். அமர்ந்த நிலையிலேயே அம் முருக நாமத்துடன் பல செயல்களைச் செயலாக்குகின்றார் நம் போகர்.

ஆவியான அமில சக்திகள்தான் அனைத்து சக்திகளுமே. இவ் வுடலும் ஆவியான பிம்பம்தான். இப் பிம்பத்திலிருந்து நம் ஆத்மா பிரிந்து சென்றாலும், நம் ஆத்மாவுடன், நம் உடலுடன் கூடிய ஆவியான நமக்குகந்த அமில சத்துக்கள், நம்முடனே நம் ஆத்மாவுடன் ஈர்த்துத்தான், ஆவி உலகில் நாமும் இருந்திட முடியும்.

இவ்வுலக சக்தியையே நம் சக்தியாக்கி, நாமும் நிலைத்து வாழ்ந்திட முடியும். இன்று நாம் வாழும் வாழ்க்கை நம் வாழ்க்கையல்ல. நம் வாழ்க்கை என்பது இவ்வுடலுடன் கூடி வாழ்ந்திடும் வாழ்நாட்கள் மட்டுமல்ல. இவ்வுடலுடன் வாழ்ந்திடும் வாழ்க்கை நமது அரும் பெரும் பாக்கியத்தை நாடுவதற்கு நமக் குக் கிடைத்த சந்தர்ப்பம்தான். ஒவ்வொருவரும் இவற்றை உணர்ந்து வாழ்ந்திடும் நாளில் பல நிலைகளுக்கு ஏன் எண்ணம் கொண்டு வாழ்நாளை தன்னிச்சைக்கு வாழாமல் இவ்வுலக இன் பத்தைத் துறந்து வாழ்ந்திடல் வேண்டும் என்ற எண்ணத்தை வளரவிடாமல் இவ்வுடலுடன் நாம் இன்று பெறும் நிலைக்குகந்த சக்தி, அழியா சக்தியாக நம்முடன் வரும் சக்தி என்பதனை உணர்ந்து, நம் போக நாதரின் சக்தியின் அருளை, நாம் ஜெபிக்கும் மந்திரமுடன் அவர் அருளும் சக்தியையும் ஈர்த்து, நல் வழியில் வாழ்ந்திடலாம். இவ்வுலகம் முழுவதிலுமே ஒவ்வொருவரும் ஒவ் வொரு நிலைக்குகந்த சக்தி பெற்று செயலாக்கி வருகின்றனர்.

**7-11-79**

ஏசுகிருஸ்துவைக் கல்லறையில் அடக்கம் செய்த பிறகு, அவர் மூன்றும் நாளில் எப்படி வெளிப்பட்டார்? முன் பாட நிலைப் படி, அவ் உடலை ஒரு முனிவர் ஏற்றார் என்று செப்பியுள்ளேன். அவ்வுடலை இவர்கள் அடக்கம் செய்த பிறகு, அவ் உடல் என்னும் கூட்டிற்கும், அவ்வுடலில் ஏறிய முனிவரின் ஆத்ம சக்திக்கும் தொடர்பற்ற நிலையில், இவர்கள் இம்சித்ததெல்லாம், உடல் என்னும் கூட்டைத்தான். அவ்வுடலின் சக்தி நிலையும் ஆத்ம நிலையும் முனிவருடையதாய், அம் முனிவர் அவ்வுடலில் ஏறிய நாள் முதலே ஏங்கியதினால் இவர்கள் இம்சித்ததெல்லாம் அக் கூட்டைத்தான். இவர்கள் இம்சித்த நிலையில், இவர்கள் எண் ணத்தில்தான், அத்தீய சக்தி இவர்களையே தாக்கிற்று. ஏசுபிரா னின் ஆத்மாவையோ, அஜ் ஜீவ சக்தியையோ இவர்கள் செய்த

இம்சை நிலை பாதிக்கவில்லை. எப்படி எப்படி எல்லாம் இம்சைப் படுத்திடலாம் என்ற எண்ணம் கொண்டார்களோ, அவ்வெண்ண முடனே சுவாசித்த சக்தி நிலையெல்லாம் இவர்கள் உடலில்தான் ஏறியது. அம் மகான், இவர்கள் அடக்கம் செய்திட்ட பூத உடலில் இருந்து அம் முனிவரின் சக்தி வெளிப்பட்டு, ஆவியான அமில நிலைகொண்ட ஆத்மாவுடன் கூடிய, ஆவி பிம்பத்தைத்தான் ஏசு பிரானை இவர்கள் மூன்றாம் நாளில் கண்ட ஏசுபிரான்.

இந்நிலை பெறுவதற்கு அவ்வுடலில் ஏறிய, அம்மகான் இச் சுவாச சக்தியை எங்கும் பிம்பப்படுத்திடும் நிலை பெற்றார். ஆனால், அங்கு வாழ்ந்த மக்களிடையே இன்று அவ்வழியில் வந்திட்ட, அந் நிலையைப் போதிக்கும் ஜெப நிலையில் அவரை ஜெபப்படுத்தும் நிலையே, மாறுகொண்ட நிலையில் உள்ளது. சக்தியின் ஜெபத்தை ஈர்த்து ஜெபிப்பார் இல்லை. ஞான ஒளியைத் தன் ஞானமுடன் ஜெபம் கொண்டு ஈர்த்து, ஏசுபிரான் நாமத்தில் வந்திட்ட மாபெரும் முனிவர் ஒருவர் உள்ளார். அவரின் சக்தியை ஈர்த்து அவருடன் தொடர்பு கொண்டு செயல் படுத்திடும் நிலை அவர்களின் மத குருக்கள் என்பவரின் நிலைக்கு எட்டவில்லை. பல ஜெபங்கள் செய்கின்றனர், வளர்ந்துள்ள நாகரிக நிலைக்கொப்ப. ஆத்ம ஜெபம் கொண்டு, அவரின் தொடர்பைப் பெற்றிடும் நிலை கொண்டிடவில்லை. பக்தி நிலையை வளரவிட்டு சக்திக்கு அடி பணியும் நிலை உள்ளது. அவ் வழியினை இன்று அவர்களின் மத குருவே வழிப்படுத்திடும் நிலையினை அறியவில்லை. அந்நிலையில் இவர்கள் அம் மகானின் தொடர்பைப் பெற்றிருந்தால், இன்று இம் மனித உள்ளங்களின் வெறி உணர்வை மாற்றும் நிலையைப் போதித்திடலாம். இன்றுள்ள எண்ண நிலையே அங்கு வெறி உணர்வும், காம இச்சையின் நிலையும், பேராசையின் நாகரிக நிலையும் அதி வேகமாக எண்ணமுடன் கலந்து வளர்கின்றன. இந்நிலையின் வளர்ச்சியினால் வரும் அபாயத்தையோ, உடலை விட்டுப் பிரிந்து செல்லும் ஆத்ம சக்தியையோ கடுகளவும் எண்ணு வார் இல்லை.

ஆத்மிகத்தை மத குருமார்கள் வழிப்படுத்திட்டால் இன்றுள்ள இவ்வெண்ண நிலைக்கு அமைதி கொள்ளும் அன்பு நிலையைச் செயலாக்கிடலாம். இன்றும் அங்குள்ள மக்களின் நிலை யில் பக்தி என்னும் பய நிலை உள்ளது. வழிப்படுத்திடத் தக்க குரு இல்லை. மற்ற மேலை நாடுகளில். எண்ணத்தில் உள்ள கறையை இன்றுள்ள ஜெபாலயங்களில் வெளியிட்டால் எண்ணக் கறை நீங்கிவிடுவதாகப் போதனை நிலையுள்ளது. இந்நிலையினால் இவர்கள் இக் கறையுடன் கறையைச் சேர்த்து ஒரே சூனிய நிலை யாக்குகின்றார்கள் மனித ஆத்மாக்களை. சக்தியின் சக்தியாய் ஆத்ம

ஜீவன் கொண்ட மக்களெல்லாம், இன்று வாழ்ந்திடும் அன்பு நிலையிலும், பந்த பாசம் கொண்ட, ஆத்மீக நெறியில்லாமல் மிகவும் கீழ் நிலைகொண்ட, அவல நிலையிலும் வாழ்கின்றனர். மாபெரும் முனிவரின் சக்தி பெற்ற இந்நிலையுள்ள அவ்விடம் இன்று சூனிய நிலையாக உள்ளது, செயற்கைக்கு அடிமைப்பட்டுப் பேராசைப் பேயின் பிடியில் சிக்கி, நாகரிகப் போர்வை போர்த்தியே, ஆத்மீக நெறியினை அறிந்திடாமல். இப்பாட நிலையை யாவருக்கும் பொதுவான நிலைப்படுத்தி வழங்கி வருகின்றோம். தனக்குகந்த வினாவை யாரும் கேட்டிடலாம் இந்நிலையில்.

**8-11-79**

வளர்ந்து வரும் செயற்கையுடன் கூடிய கால நிலையில், ஆவி உலகின் செயலும், நம்முடனே வருகிறது என்பதனை உணர்ந்தே நாம் வாழ்ந்திடல் வேண்டும். இன்று வாழ்ந்திடும் மக்களின் அளவை விடவும் அதிகமாக, இவ்வாவி உலகில் ஆத்மாக்களின் தாக்குதலினால் இன்றுள்ள மக்களின் வெறி உணர்வு அதிகரித்துள்ளது. உயிரணுவாய் உதித்து ஆத்மாவுடன் கூடிய ஜீவ நிலை பெற்று, ஒவ்வொரு காலத்திலும் வாழ்ந்திடும் வாழ்க்கையிலெல்லாம் நாம் உண்ணும் நிலை கொண்டும், எண்ண நிலை கொண்டும், நம்முடன் பல உயிரணுக்கள் நம்முள், நம் உயிர்—ஜீவ ஆத்மாவுடன், நம் உடலில் ஏறுவதினால் நம் செயல் எல்லாம், நம் ஆத்மாவுடன் கூடியதாக மட்டும் இருந்திடாமல், பல உயிரணுக்களின் நிலைக்கு ஒத்த சக்தியெல்லாம் நம் உடலில் இருப்பதினால், பல நிலைகொண்ட சக்தி நம் உடலுடன் வளர்கின்றது.

ஒவ்வொருவரின் உடலிலும் பல நிலைகள் உள்ளன. நம் ஆத்மாவை நாம் செயலாக்கிட ஒரே வழியான ஜெபம் கொண்ட வழியை நாம் செயலாக்கும் பொழுது, நம் உடலில் உள்ள பல நிலைகொண்ட அணுக்களின் சக்தி குறைந்து, நம் உயிராத்மாவிற்கு, நம் பூமியின் தொடர்பு கொண்ட சூரியனில் இருந்து வெளிப்பட்டிடும் உயிரணுக்களின் சக்தியை, நம் உயிராத்மா தன்னிச்சையில் ஈர்க்கும் பக்குவம் பெற்று விட்டால் அதிலிருந்து வருவதுதான் நமக்குகந்த ஜெப நிலை. பல தீய அணுக்களின் சக்திக்கு அடி பணிந்தே வாழும்வரை, தெய்வீக சக்தி நிலையை அடையும் நிலைக்கு நாம் வருவது மிகவும் கடினம். நம் உயிராத்மாவிற்கு வேண்டிய சக்தியினை ஈர்க்கும் நிலைப்படுத்தி வாழுங்கால் நமக்கு அச் சூரியனிலிருந்தும், மற்ற மண்டலங்களின் தொடர்பிலிருந்தும் சேமிக்கும் நிலையைச் சூரியனே நமக்கு அளித்திடும். ஜெபம் என்னும் பல எண்ணங்களின் பிடியிலிருந்து விடுபட்டுத் தெய்வீக சக்தியை ஈர்க்கும் நிலை பெற்றுவிட்டால், பல ஞான வழிகளையும்,

சித்து முறைகளையும், சப்த ரிஷியின் நிலையையும் நம் உயிரணுவே ஈர்த்துச் செயல்கொண்டிடும். இவ்வுயிரென்னும் ஜீவக்கூட்டை இருந்த இடத்தில் விட்டுவிட்டு நம் ஆத்மாவுடன் கூடிய சத்து (அமில) நிலையை ஈர்த்துக்கொண்டே பறக்கும் நிலைபெற்று, எந் நிலைக்கும் சென்று, நம் ஆத்மாவுடன் கூடிய சத்து நிலையுடன், பிம்ப நிலையையும் ஏற்படுத்தி, ஒவ்வொரு மண்டலங்களின் நிலை யையும், இக்காற்றுடன் நாம் எந்தெந்த ஜென்மங்கள் எடுத்து, அச் ஜென்மத்தில் நாம் வெளியிட்ட மூச்சு அலையினால் சப்த அலை யின் நிலைகொண்டு, பல ஜென்மங்களில் வாழ்ந்த நிலையையும் அறிந்திடலாம். இவ்வுலகினிலும் மற்ற மண்டலங்களின் நிலையை அறிந்திடலாம். இவற்றினால் யாது பயன் என்றும் கேட்டிடுவீர்.

இவ்வுயிர் ஆத்மாவின் சக்தியை இக் காலமுடன் காலமாக இவ் உடலுடன் கூடிய குறுகிய வாழ்க்கையுடன் சுழல விடாமல், இம் மாற்றம் கொண்டு சுழலப்போகும் இக்கலியின் நிலையிலிருந்து மீளத்தான், இவ்வழியினை வெளியிடுவதெல்லாம். நம் சக்தியுடன் பல மண்டலங்களின் சக்தியையும், இணைத்துச் செயல்படுத்திட முடியும். இவ்வழியினை யாவருமே அடைந்திடலாம் இவ்வாழ்க்கை யென்னும் பிடியில் பேராசையில் வாழ்ந்திட்டால் செயலாக்குவது கடினம். அன்பு கொண்ட ஆண்டவனாய் வந்திட்டாலே இச்சக்தி நிலையை நம் ஜெபமுடன் பெற்றிடலாம். இந்நிலையில் வந்த சித்தர் களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலைகொண்டு வந்துள்ளனர். வாழ்க்கையுடன் இன்னலில் இருந்து சலிப்புற்ற நிலையில் வந்த பலர் உள்ளனர். போகரின் நிலையைப் போல் வாழ்க்கையுடன் கூடிய நிலையில் வருவதுவே மகத்துவம். கோலமா மகரிஷியவர்கள் தன் சக்தியையே ஆதிசங்கரரின் சக்திக்கு அளித்திட்டார். ஒவ் வொரு ரிஷியும் ஒவ்வொரு நிலைகொண்டு வந்தவர்கள்தான். புத்தரின் நிலை அனைத்திற்கும் மாறுகொண்ட வெறுப்பற்ற நிலை யில் வந்த நிலை. பல முனிவர்கள் வந்த நிலையெல்லாம் குடும்பத் துடன் ஒன்றிய ஆத்மீக நெறி கொண்ட அன்பு வழியில்தான். இவ் வழி அடைவதற்கே சந்நியாசி நிலை உகந்ததல்ல. ஆத்மீக நெறி பெறுவதற்கே வயது வரம்பைக் காணுவதல்ல. இந்நிலைகளை உணர்ந்து ஒவ்வொருவரும் வழி பெற்றிடுங்கள்.

**13-11-79**

இவ்வுலகம் இன்றுள்ள நிலைக்கொப்ப, இக்கலியின் நிலைக் கேற்ப ஆத்மீக நெறியைப் போதிக்கும் நிலையும், அவ்வழிக்கு வழி நடத்திட வந்திடும் நிலையும் கால நிலைபோல் மாற்ற நிலை யில் உள்ளன. இப் போதனை நிலையே பல நாட்களுக்கு, முதலில் பின் நோக்கிச் சென்றிட்ட, அன்று வாழ்ந்திட்ட எண்ண நிலைக்

கொப்ப, வழிமுறைகள் தான் இவ்வாத்மீக நெறிமுறையுடன் கலந்துள்ளன. இன்று நாம் வாழ்ந்திடும் இக்கலியுகத்தில் நாம் இவ் வளர்ந்துவிட்ட நாகரிகத்துடன், ஒன்றியுள்ள நிலையில் இவ்வாத்மீக நெறியை எந்நிலையில் ஏற்று வழி நடந்திடல் என்பதனை உணர்த்திடவே, இப்பரந்துள்ள உலகில் ஈஸ்வரப்பட்டராகிய யான் என் சிஷ்யனாக வேணுகோபாலனை இவ்வெண்ணத்தை ஈர்க்கும் சக்தி கொண்ட உன் தந்தையாரை என் பூர்வ ஜென்மத்தின் தொடர்பு கொண்ட என் உதிரமுடன் உதித்திட்ட என் எண்ணத்தின் செயலை ஒத்த என் மகனையேதான் யானும் என் நிலைதனைச் செயலாக்கிடப் பல நிலைகொண்ட மனிதர்களுடன் என் சிஷ்யனை மோதவிட்டும், பல நாட்கள் செயல்படுத்திட முடிந்திடாமல், என் மகனின் நிலையிலேயே இக்கலியுடன் என் மகனின் உதிரத் தொடர்பு கொண்ட பந்தத்தின் நிலையில்தான், இச் சத்தியத்தின் சக்தி நிலையைப் போதனைப்படுத்திட முடிந்தது.

இந்நிலைக்கு ஒப்பத்தான், இவ்வுலகு அனைத்திலுமே, ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்ட, ஒரு நிலைப்பட்ட சக்திகள் தான் ஒன்றுபடுகின்றன. இனம் இனத்துடன் எப்படிக் கலக்கின்றதோ அந்நிலைபோன்றே.

எவ்வினமும் தன் இனத்துடன் மற்ற நிலை மோதும்போது சத்ரு மித்ரு நிலை ஏற்பதில்லையோ அந்நிலைபோன்றே இவ் உலகில் இவ்வெண்ண நிலைக்கும் தொடர்பு நிலை உள்ளது. இத் தொடர் நிலை கொண்டுதான் பிறப்பும் இறப்பும் உள்ளன, இச் ஜென்மம், மறு ஜென்மம் அனைத்துமே. இக்கலியில் மனித ஜென்மங்களாய், அறிவாற்றலும் நற் செயலைச் செயல்படுத்திடும் அங்கங்கள் பெற்றிட்ட நாம், நமக்குகந்த நம் உடலுடன் உள்ள, இக்காந்த சக்தியை அறிந்திடாமல், நம் கால நிலையைக் களிப்பு நிலை என்ற உல்லாச நிலைக்கு அடிமைப்படுத்தி நம் ஆத்மாவை அடிமையாக்கி வாழ்கின்றோம். இன்று வளர்ந்துள்ள இவ் விஞ்ஞான யுகத்திற்கு வேண்டிய சக்தி அனைத்துமே இக்காற்றில் உள்ள காந்த சக்தியை ஈர்த்து இன்றைய மின்சாரமாகவும், இன்னும் இப்பூமியிலிருந்து ஈர்த்தெடுத்த திரவத்தைக் கொண்டு பல மண்டலங்களுக்குச் சென்றிடும் பல கோளங்களைச் செய்வித்தும் செயலாக்குகின்றனர். நம் எண்ணத்தில் நம்மையும் விட இயந்திரத்தின் சக்திக்கு அடிமைப்பட்டிடும் நிலையான வாழ்க்கை இக்கலியில் உள்ளது.

பல நிலைகளைப் புகைப்படமாக எடுக்கின்றீர், பல நாட்களுக்குப் பிறகு பழைய நினைவுகளைக் காண்பதற்கே. பதிவேட்டில் நம் சப்த அலைகளைப் பதித்துக் கேட்கின்றீர். இவ் இயந்திரத்தின் உதவியுடன் செயற்கையாகக் காணும் இந்நிலை அனைத்துமே நம்

ஆத்மாவின் சக்தியில் உள்ளன. இன்று எடுக்கும் மின்சாரத்திற்கு, காந்தத்தின் ஈர்ப்பு நிலைகொண்டு அச்சக்திகளை ஈர்த்து நமக்கு ஒளி யளிக்கின்றது. இவ்வுடல் என்னும் கூட்டில் நாம் அங்கமாகப் பெற்றிட்ட, நாம் செயல்படுத்திடும் நம் கைகளுக்கு அக்காந்த சக்தி நிறைந்துள்ளது. நம் ஆத்மாவின் நிலையினை நாம் உணர்ந் தால் இவ்வுலகனைத்தும் தோன்றிய நாள் முதற்கொண்டு இன் றைய நாள் வரை அனைத்து நிலைகளையுமே நாம் பிம்பமாக எந் நிலையை எண்ணுகின்றோமோ, அந்நிலையின் ஆரம்ப நாள் தொட்டு, இன்று நடக்கும் நாள் வரை ஒளிக் காட்சிகளாகக் கண்டிடலாம். சப்த அலைகளையும் அந்நிலையிலேயே கண்டிடலாம்.

நம் ஆத்மாவுடன் கூடிய காந்த சக்தியை நாம் எவ்வெண்ணம் கொண்டு ஈர்த்து எடுக்கின்றோமோ அவ்வெண்ணத்தின் சக்தி அனைத்தும் தொடர் நிலையாக நாம் அறிந்திடலாம். இவ்வெண்ண நிலையின் பிறவி நிலையிலும் இத் தொடர் நிலையுள்ளது. அவ் வெண்ணமேதான் அனைத்து நிலைகளுக்கும் முதல் நிலை. இவ் வெண்ணத்தின் நினைவுடன் நாம் எடுக்கும் சுவாசமேதான், நம் ஆத்மாவின் செயல்நிலை. ஒவ்வொருவரும் இவ்வுலக சக்தியினை இவ் உடல் என்னும் கூட்டில் உள்ள நம் ஆத்மாவின் ஜோதி யையே நற் சக்தியாக்கிடும் நிலைப்படுத்திடுங்கள்.

**14-11-79**

மனித உடலுக்குத்தான் பல நிலைகொண்ட அமில சக்தியும், காந்த சக்தியும் கலந்த நிலை நிறைந்துள்ளது. இவ்வுடலுடன் பல அணுக்களின் நிலையும் ஏறி உள்ளது. ஒவ்வொன்றுக்கும் ஒவ் வொரு சக்தி நிலையும், குண நிலையும் உண்டு. நம் ஆத்மாவை நாம் செயல் படுத்திடும் நிலைகொண்டு, எந்நிலைக்குகந்த எண்ண சக்தியை ஈர்க்கின்றோமோ, அந்நிலைக்குகந்த சக்தியுடன் கூடிய நிலைகளையெல்லாம் இவ்வாத்மாவுடன் ஒன்றச் செய்திடலாம். இன்றைய செயற்கையில் விஞ்ஞான நிலைப்படுத்தி இரசாயன முறையில் பல செயல்களைச் செய்கின்றனர். ஒன்றிலிருந்து ஒன் றைப் பிரிக்கவும், ஒன்றுடன் ஒன்றைச் சேர்க்கவும் பல நிலைகளை இன்றைய விஞ்ஞானத்திலும் செயலாக்குகின்றனர். விஞ்ஞான சக்திக்கும் இம் மெஞ்ஞான சக்திக்கும் அனைத்துக்குமே இக்காற்றி லிருந்து நமக்குக் கிடைத்திடும் சூரியன் அளித்திட்ட அமில சக்தி கொண்டுதான், இவ்வுலக சக்திகளும் செயல்படும்பொழுது நம் ஆத்மாவின் துணையினுலேயே, நாம் நம்முள்ளேயே அனைத்து சக்தியையும் ஈர்த்துச் செயல் கொண்டிடும் உன்னத, தெய்வீக அருள்கொண்ட நாம், இன்றைய கலியில் மிகவும் ஈன நிலையில், அடிமைகொண்ட பேராசையில், இக்குறைந்த வாழ்நாட்களை

விரயம் செய்தே வாழ்கின்றோம். இன்று விஞ்ஞானத்தில் கண்டிட்ட சக்தியின் நிலைக்கு மேலே, இவ்வாத்மாவின் சக்தியை ஈர்த்தே, பல நிலைகளை ஒவ்வொருவரும் செயலாக்கிட முடியும். பண்டைய காலம் தொட்டே, பல ரிஷி நிலைகொண்ட தேவர்கள் எல்லாரும் அவர்கள் இப்பூமியில் வாழ்க்கையுடன் வாழ்ந்திட்ட நாட்களில் அவர்களால் எழுதப்பெற்ற, பதிவு செய்வித்த, அனைத்து உண்மை நிலைகளையுமே, இன்றுள்ள, இக்கலியின் எண்ணத்திற்கு செயல்படுத்திட முடியாவண்ணம், பல நிலைகள் மறைக்கப்பட்டன. இன்றுள்ள இவ்வெண்ண நிலை, ஒரு நிலை கொண்டிட்டால், அவர்களின் துணையுடனே, பல நிலைகளை நாம் இன்று பெறலாம்.

தாவரங்களின் நிலையெல்லாம், ஒவ்வொரு தாவரமும் ஒரே நிலைகொண்ட சக்தியைத்தான் (அமிலம்) ஈர்த்து வளர்கின்றது. சில வகைத் தாவரங்களின் நிலையுடன், சில அமிலங்களைக் கலக்கும் பொழுது, இப் பூமியில் இருந்து நாம் எடுத்திடும் கனிவளங்களைப் போன்ற பலவகை உலோகங்களை நாம் செய்திடலாம். தங்கம், தாமிரம், ஈயம், செம்பு இப்படிப் பல நிலைகளை நாமே செய்திடலாம். செய்து என்ன பயன்? இப்பேராசையின் நிலைக்கு வளர்ப்பு நிலைதான் ஏற்பட்டிடும். இத்தாவரங்களைப் போன்றே சில ஊரும் நிலைகொண்ட அட்டை என்னும் இன வர்க்கத்தை உடைய புழுவும், இன்னும் சில புழுக்களும் ஒரே அமில சக்தியை ஈர்க்கும் நிலையுடையதாக உள்ளன. இவ்வட்டைப் புழுவின் நிலையெல்லாம் தாமிர சக்தியை ஈர்த்து வளர்ந்த நிலை. இவ்வுலகினில் இப்படிப் பல நிலைகள் உள்ளன. எவ்விஷத்தையும் எடுத்திடும் தாவர வர்க்கங்கள் பல உள்ளன.

அனைத்து நிலைகளுக்கும் குறிப்பு நிலைகளும் நம் சித்தர்களால் பதியச் செய்து, மறைக்கப்பட்டுள்ளன. அனைத்து நிலைகளையும் வெளியிடும் நிலையில் இப்பாட நிலையைப் படிப்பவர்க்கும் அவ்வெண்ணத்தின் நிலைக்கு அடிமைப்பட்டிடலாகாது என்பதற்காகவே பல நிலைகளை மறைத்தே வெளிப்படுத்துகின்றோம். சக்தியின் நிலையில், இம் மனித ஆத்மாவின் தெய்வீக சக்தியை உணரும் பொருட்டே, இச் சக்தியின் செல்வங்களுக்கு, நம் ஆத்மாவின் தெய்வ சக்தியை உணர்த்திடச் சில குறிப்புகளையும் இந்நிலையில் வெளியிட்டோம்.

**16-11-79**

*(15-11-79—நம் குழந்தை விஜியின் திருமணத்திற்குச் சென்றதால் தியானத்தில் அமரவில்லை)*

இவ்வுலகினில் தோன்றிய உயிர் அணுக்களுக்கும், உயிரணு வாய் ஜீவ ஆத்மா கொண்ட, உடல் பிம்பம் கொண்ட அனைத்திற் கும் எப்படி மறு ஜென்மம் ஒன்றுள்ளதோ, அந்நிலைபோன்றே இவ் வுலகிற்கும் இவ்வுலகைப் போன்ற வளர்ச்சி நிலை பெற்ற ஒவ் வொரு மண்டலங்களுக்கும், இச் ஜென்ம நிலை உள்ளது.

மண்டலங்களின் நிலையினை, ஒவ்வொன்றின் தன்மையையும், இந்நிலையில் விளக்கியுள்ளோம்.

ஜீவன் கொண்டு தனி ஒரு சக்தி நிலைபெற்ற இப்பெரிய மண்டலங்கள் அனைத்திற்குமே, இச் ஜென்ம நிலையுண்டு. இவ் வுலகம் மாறுகொண்ட நிலையில், கல்கியில் தோன்றிய நாளில், உதித்திட்ட உயிரணுக்களின் செயல் சக்தியினை விளக்கியுள்ளோம். கல்கியில் தோன்றிய உயிரணுக்கள் அன்றிருந்த நிலை ஜீவன் கொண்டு, பிம்பக் கூடுகள் பெறும் நிலையில் அதிகச் சதை நிலை கொண்ட எலும்புகளின் வளர்ச்சி நிலையில்லா நிலையில்தான், பிம்ப உருவங்கள் இருந்தன.

கல்கியில் இருந்து தொடர்ந்த நிலைகொண்ட, மாறி மாறி வந்திட்ட ஜென்மத் தொடரில் ஈர்த்த சக்தி நிலைதான் இன்றுள்ள மனிதர்களும் மற்ற இன வர்க்கங்களின் வளர்ச்சி நிலையும். இந் நிலை போன்றே இவ்வுலக நிலையும். அதிசக்தி நிறைந்த வளர்ச்சி யில் வந்த நிலைதனை இன்றைய வளர்ச்சி கொண்ட, இக்கலியின் செயற்கையின் நிலையினால் இப்பூமியின் சக்தியையே சிதறும் நிலைப் படுத்திவிட்டார்கள். ஆனால் நம் பூமியின் தொடர்பு நிலை கொண்ட இச் சூரியனைச் சுற்றியுள்ள, நம்மை ஒத்த மனித பிம் பங்களும் இச் செயற்கையின் நிலையும் அந்நிலையில் இல்லாததினால், அம் மண்டலங்களின் சக்தி, நம் பூமியையும் விட மென்மேலும் வளரும் நிலையில் அதிக சக்தி கொண்டதாக உள்ளது. நம் பூமியும் வளர்ந்துகொண்டுதான் உள்ளது; பலன் இல்லாத நிலையில். அறிவு வளர்ச்சி கொண்ட, செயலாற்றும் திறமையும் அதற்குகந்த அங் கங்களும் பெற்ற பிறவியிலேயே, உன்னதப் பிறவி பெற்ற இம் மனிதனால் தன் சக்தியை உணர்ந்திடாமல் வந்ததின் வினைதான் இன்றுள்ள நம் பூமியின் நிலை. தனக்குகந்த அறிவின் செல் வத்தைப் பேராசைக்கு அடிமை கொண்டு வாழ்வதின் நிலை, இன்றைய மனிதனின் நிலையும். இம் மனிதனை வளர்க்கும் பூமிக் கும் உள்ளது.

இன்றைய பாடநிலையிலிருந்து ஜென்ம நிலையை உணர்த்திய தின் நிலை புரிந்ததா? இப்பூமியின் பொக்கிஷத்தைத்தான் இக்கலி யின், மனிதனின் பேராசைக்காக எடுத்துவிட்டார்கள். இவ்வுலக

னைத்தும் உள்ள எண்ண நிலையே இப் பேராசைப் பிடியில் சிக்குண்டு தவித்த நிலையில் உள்ளபொழுது, இந்நிலையில் இருந்து விடுபடும் எண்ணத்தை இவ் உலகனைத்திற்கும் போதிக்கும் சக்தி நிலை, இவ் உலகைக் காத்திடும் சக்திக்கே இல்லை. இவ் உலக நிலை மாறு கொள்ளப்போகின்றது. அழிவு என்னும் நிலையே எதற்கும் இல்லை. எதுவுமே அழிவதில்லை, மாறுகொண்ட நிலைதான் ஏற்பட்டிடும். மாறுகொண்ட நிலையில் இவ் உடல் என்னும் கூட்டிலிருந்தும், அனைத்து ஜீவராசிகளும் மாறுகொள்ளத்தான் போகின்றன. எவ்வாத்மாவும் அழிந்திடாது. இவ்வுலகம் மாறுகொண்டு சுழலும் நிலையில், இவ் உடல் கூட்டை விட்டு வெளிப்படும் உயிராத்மாக்களின் நிலைக்காகவே இந்நிலையில் அளித்திடும் பாட நிலைகள் எல்லாம்.

இப்பூமியில் வாழ்ந்திடும் இன வர்க்கங்களைப் போன்ற நிலை மற்ற மண்டலங்களில் மாறுகொள்கின்றது. இவ்வுலக நிலை மாறுபட்டு, உயிராத்மாக்கள் இப் பால் வெளி மண்டலத்தில் உள்ள நிலையில், இப்பூமியில் வாழ்ந்த நாட்களில் இருந்த நிலை கொண்டு, மற்ற மண்டலங்களின் நிலைக்குச் சென்று உடல் பெறலாம். அந்நிலைக்காகத்தான் இப்போதனை நிலை. இப்பாட நிலையே இவ்வுலக நிலை. மாறுகொள்ளும் நிலை நெருங்குவதினுல் அந் நிலையை உணர்ந்து ஒவ்வொரு மனித ஆத்மாவும், ஆத்மீக நெறிக்கு வந்திட்டு, அந்நிலையின் மூலமாக மீட்சி பெறுவதற்காகத்தான்.

**17-11-79**

*(திருமண அழைப்புக்குச் சென்றதால் தியானத்தில் அமர வில்லை)*

**18-11-79**

இம் மாறப்போகும் கலியில், இன்றுள்ள இக்கலியில் வாழ்ந்திடும் அறிவாற்றல் கொண்ட மனித ஆத்மாக்களின் நிலையை, இம் மனிதரின் நிலைக்குணர்த்தவே, இப் போதனை நிலையையும். பல காலங்கள் வெளியிடாமல் இருந்திட்ட சக்தியின் உண்மை நிலையையும், இங்கு போதனைக்கு அளித்திட்ட நிலை. இன்றைய மனிதரின் வாழ்க்கை முறையும், எண்ணக்கலவையும், இன்று வாழ்ந்திடும் மனிதனுல் ஏற்பட்டதல்ல. கல்கியில் தோன்றிட்ட கால நிலை தொட்டே வருவதுதான்.

மனிதருடன் எண்ண நிலை, சப்த அலையாக எப்படிச் சுற்றிக் கொண்டு உள்ளதோ, அந்நிலையின் தொடர்ச்சியுடன், ஒவ்வொரு உயிராத்மாக்களின் எண்ணத்துடன் கூடிய சப்த அலைகளும், இப்

பூமியில் சுற்றிக்கொண்டுள்ள நிலையில், இப்பூமிக்கே உகந்த சப்த அலை ஒன்றுண்டு என்று உணர்த்தினேன். ஓங்கார இசையுடன், ஓம் என்ற பிரணவ நாதத்தில் உருளுகின்ற இவ்வுலகினில், உயிராத்மாக்களின் சப்த அலையின் தொடர்ச்சியில் இவ் உலகிற்கு எண்ண நிலையுமுண்டு. இவ்வுலகனைத்திலுமே உள்ள அனைத்திற்கும் சப்த அலையுமுண்டு.

சுவாசம் எடுத்திடும் நிலையிலேயே சப்த அலையுண்டு. ஒலி நிலை இல்லாமல் இவ் உலகமே இல்லை என்று உணர்த்தினேன். இயற்கையில் அமைத்திட்ட உன்னத ஒலிதனை இன்றைய செயற்கையும் கலந்து செயல்படும் நிலையில், இப் பூமியே மிகவும் தத்தளித்த நிலையில் உள்ளது. இன்றுள்ள நிலையினால் இப்பூமியில் அறிவாற்றல் கொண்டு வாழ்ந்திடும் இம்மனிதர்களினால், தன் சக்தியை உணர்ந்து செயல்படாமல் வாழ்ந்ததின் வினையினால், இவ் வினையின் செயல் இவ்வுலகுக்கு மட்டுமல்ல, இவ்வுலகைச் சார்ந்த அனைத்து மண்டலங்களுக்கும், மாறுகொள்ளும் நிலை, மிகவும் குறுகிய கால நிலையில் உள்ளன. பயந்த நிலையில், எண்ணத்தைச் செயல்கொண்டு பேராசைக்கு அடிமைப்பட்டிடாமல், ஆத்மீக நெறியறிந்து, ஒவ்வோர் உயிராத்மாக்களும் மனித ஆத்மா மட்டுமல்ல, நினைவாற்றல் உடைய மற்ற ஜெந்துக்களிலும், வெறியுணர்வு, பேராசை நிலை இவற்றிலிருந்து விடுபட்டால்தான், இம் மாறப்போகும் இக் கலியிலாவது, நாம் மீட்சி கொண்டிட்டு வரப் போகும் கல்கியில், இன்று இப்பூமியில் அவதார புருஷர்களாக அவதரித்தவரின் எண்ண நிலைகொண்ட பிறப்பு நிலையின் தொடரினால், வரப்போகும் கல்கியில் நல்நிலையில் அவதரிக்கலாம். இவ் வுலக நிலையே மாறப்போகின்றது. நம் உடல்களும் அனைத்து ஜீவ ராசிகளும்தான் இயற்கை எய்தப்போகின்றனவே, அடுத்த நிலைக்காக ஏன் நம்மை இப்பொழுது செயல் கொண்டிட வேண்டும்? நடப்பது நடக்கட்டும், அனைவருக்கும் ஆனது நமக்கும் என்று எண்ணிடலாம்.

இயற்கையின் நியதியும், இயற்கையின் சீற்றமும், இயற்கையின் சக்தியுடனேதான் செயல்படுகின்றன.

இவ் இயற்கையில் தோன்றிய உயிரணுக்களிலிருந்தும், அந் நிலையின் தொடரினால் சக்தி கொண்டு, உயிராத்மாவாகி, செயலாற்றும் திறமையுடைய, அதிசக்தி நிலைகொண்ட, இம் மனித ஆத்மாக்கள் வாழ்ந்திடும் மண்டலங்கள் சிலதான். இவ்வுன்னத பூமித்தாயின் குழந்தைகளாய் இப்பூமியின் சுவாசமுடன் கலந்துள்ள உயிராத்மாக்களான நாம், நம் ஆத்மாவும், நம் எண்ணமும், நம் சப்த அலைகளும் என்றுமே அழிவதில்லை என்பதின்

உண்மையினை ஒவ்வோர் ஆத்மாவுடனும் ஒன்றச் செய்து, இம் மாறப்போகும் இக்கலியில், நம் ஆத்மாவை, உன்னத பொக்கிஷ மாக நாம் உணர்ந்திட்டு, பல தீய சக்திகளுக்கு நம்மை அர்ப்ப ணித்திடாமல், நம்முடன் தொடர்பு கொண்டவரின் நிலைக்கும், நம்மிடமுள்ள தீய சக்தி பாய்ந்திடாமல், நல்லுணர்வுகளை அவர் களுடனும் கலக்கவிட்டு, அவர்களின் நற்சொற்களால், நம் ஆத்மா விற்கும் சுழலச் செய்து, இவ்வுலக சக்தியையே, இவ்வியற்கையின் மாற்றத்தில் வரப்போகும் கல்கியின் சுழற்சியில், நல் நிலையாக்கி டத்தான் இப்போதனை நிலையெல்லாம்.

மனிதர்களின் இன்று வாழ்ந்திடும் எண்ணநிலை, இன்று அவர்களால் ஏற்படுத்திய நிலைமட்டுமல்ல, கல்கியிலிருந்து கலி வரை வந்த நிலை. இவ்வுலகுடன் கலந்துள்ள சப்த ஒலிகளில் ஈர்த்து, எண்ணமுடன் கலந்திட்ட நிலை. இந்நிலையிலிருந்து மீளும் நிலையைத்தான் நாம் அறிந்திடல் வேண்டும்.

உயிராத்மாக்களின் பொக்கிஷ சக்தி நிலையை, ஆத்மீக நெறி தனில் அழைத்திடவே இப்போதனை நிலையெல்லாம்.

**19-11-79**

நாம் ஈர்த்து வெளியிடும் சுவாசத்திற்கு, ஈர்க்கும் நிலையை ஒத்த சக்தியே, நாம் வெளியிடும் சுவாச சக்திக்கும் உண்டு. நாம் எடுக்கும் சுவாசத்தை நேராக நம் உயிரணு ஈர்க்கிறது. உயிராத்மா ஈர்த்த நிலையில், அச்சக்தி நம் நெற்றியில் வந்து பாய்ந்து இவ் வுடல் அனைத்திற்கும் நாம் ஈர்க்கும் சுவாசம் பரவுகிறது. எந் நிலையில் ஈர்த்த நிலை செயல்படுகின்றதோ, அந்நிலை போன்றே நாம் வெளிப்படுத்தும் சுவாசமும் வெளிப்படுகின்றது. நாம் எடுத்து வெளிப்படுத்தும் சுவாசத்தின் நிலையினுல்தான், நம் நினை வலைகளும், சப்த ஒலிகளும், நாம் காணும் பிம்ப ஒலிகளும் நமக்குத் தெரிகின்றன. இச்சுவாசத்தின் நிலைகொண்டேதான், அனைத்து சக்தி நிலைகளையும் நாம் செயல்படுத்துகின்றேம். இந் நிலையில், நாம் செயல்படுத்திடும், நாம் ஈர்த்து வெளிப்படுத்தும் சுவாச நிலை, நம் உயிராத்மாவுடன் கலந்துதான், நம் உடல் நிலையும், நம்மைச் சுற்றியுள்ள ஒலி, ஒளி அலைகளும் உள்ளன. இச்சுவாச நிலை என்னும் இப்பொக்கிஷ நிலையை, நாம் உணர்ந்து எந்தெந்த நினைவலைகளுடன் நாம் இருக்கின்றேமோ, அந் நினை வலைகளுடன் நம் எண்ணநிலை உள்ள பொழுதில், நாம் ஈர்த்து வெளிப்படுத்தும் சுவாசத்தில் நம்முடன் ஒலியாகவும், ஒளியாக வும் அனைத்து நிலைகளும் சுற்றிக்கொண்டுதான் உள்ளன. நம் வாழ்க்கையில் நடந்த பழைய நினைவுகளை நாம் எண்ணிடுங்கால்

அன்று நாம் கண்ட, அக்காட்சியின் பிம்பமும் ஒலி அலைகளும் நாம் கண்டுகொண்டுதான் உள்ளோம். நாமாக நினைவுபடுத்தி, கற்பனையாக அக்காட்சியை நம்முள் காண்பதாக எண்ணுகின் றோம். நாம் எண்ணும் நிலைப்படி அல்லாமல், ஒலி அலைகளைப் போலவே, இவ்வொளி அலைகளும் நம் உயிராத்மா தோன்றிய நாட்கொண்டு, நாம் எடுத்திட்ட சுவாச நிலையுடன், நம்மைச் சுற்றிக்கொண்டே உள்ளன. நம் நினைவை ஒரு நிலைப்படுத்தி, பல எண்ணங்களின் நினைவின் மோதலைத் தாக்க விடாமல், ஒரே நினை வுடன், நல்லுணர்வு கொண்ட, அவரவர்களுக்கு உகந்த அன்புரு வம் கொண்ட, எவற்றையும் ஒரே நிலையில் நம் எண்ண சக்தியில் செலுத்தி, அந்நிலையில் நாம் எடுத்திடும் சுவாசத்தின் சக்தியினுல், நம் உயிராத்மாவில் கலந்து வெளிப்பட்ட அனைத்து நிலைகளையும் அறிந்திடலாம். நாம் நம் ஆத்மாவுடன் கூடிய நிலையினைத்தான், அறிந்திடும் நிலையை, இந்நிலையில் வெளிப்படுத்தியுள்ளேன். இந் நிலைபோன்றே, நாம் உள்ள நிலையில், நம் எண்ண நிலையை ஒரு நிலைப்படுத்தி இப்பூமியும், இப்பூமியைச் சார்ந்த அனைத்து நிலைகளையும் நம் எண்ண சக்தியையும் ஒரே நிலையில் பாய்ச்சும் கால், நாம் ஈர்த்து வெளிப்படுத்தும், அக்காந்த நிலைகொண்ட, இச்சுவாச சக்திக்கு, நம் எண்ணமுடன், நாம் எண்ணிடும் இடத்தி லுள்ள நிலைகளையெல்லாம் அறிந்திடலாம். இன்றைய விஞ்ஞானத் தில் வானொலியிலும், தொலைக்காட்சிகளிலும் அக்காந்த நிலை கொண்ட அமிலக் கற்களைப் பதியவைத்துப் பல அலைவரிசைகளை ஓர் இடத்தில் ஒலிபரப்பிடும் ஒலியையே, இருந்த நிலையில், இவ் வானொலியின் மூலமாக அவ்அலை வரிசையிலேயே மோதவிடும் பொழுது, அங்கு நடக்கும் ஒலியின் அலையையே வானொலியின் மூலமாக நாம் கேட்கின்றோம்.

இக்காற்றினில் கலக்கவிட்டுத்தான் விஞ்ஞானியும் பல செயல்களைச் செய்கின்றன். இக்காற்றையே சுவாசித்து நம் உயி ராத்மாவுடன் மோத விட்டு அந்நிலையிலேயே, எம்மண்டலத்திற் கும் நம் எண்ண நிலையைப் பாய்ச்சி, நாம் அந்நிலையில் எடுத்திடும் சுவாசத்தின் அலைகள், நாம் வெளிப்படுத்திடும் நிலையில், அங்கும் பாய்ந்து எங்குள்ள நிலையையும் நம் உயிராத்மாவின் சக்தியுடன், நாம் இருந்த நிலையிலேயே அறிந்திடலாம். இத் தியான நிலையில் ஆரம்ப பக்குவ நிலையில், ஞானம் கொண்ட நிலைக்கு வந்திட்டால், நம் விழியை நாம் மூடி அமர்ந்துள்ள நிலையிலேயே அறிந்திட முடியும்.

பக்குவ நிலைக்குப் பதம் பெற்றுச் செல்லச் செல்ல, இவ் விழியைத் திறந்தே, உள்ள நிலை அனைத்தையும், நம் எதிரிலுள்ள பிம்ப நிலைகளையும் தாண்டி, எங்குள்ள நிலையையும் நாம் அறிந்திட

முடியும். ஞானமும், சித்தும் இவ்வாத்மீக நெறியிலுள்ள எந் நிலைக்குகந்த சக்தி நிலை பெறவும், இவ்வெண்ண சக்தியை ஒரு நிலைப்படுத்தி, சிறுகச் சிறுகத்தான் பெருகச் செய்து வழி நடந் திடல் முடிந்திடும்.

**20-11-79**

இவ்வுலகின் ஈர்ப்பு நிலைபோன்றே எண்ணத்தின் நினைவும், தொடர் நிலை கொண்டதாக ஒவ்வோர் உயிரணுவும் தோன்றிய நாள் தொட்டே உயிராத்மாவுடனும் சேர்ந்து வருவதுவே. இவ் வுலகின் சுழற்சியின் நிலைகொண்ட அவ்வேகத்தின் நிலைபெற்ற ஈர்ப்பு சக்திதான் இவ்வுலகிற்கு உண்டு. அந்நிலை போன்றே நம் முடனே வளர்ந்திட்ட அமில நிலைக்குகந்த எண்ண சக்திதான் ஒவ்வொருவருக்குமுண்டு. பல நிலைகொண்ட குண நிலைகள் அமைவதெல்லாம் நம்முள் உள்ள, நாம் ஈர்த்துச் சேமித்த உயி ரணுவாய்த் தோன்றிய நாள் தொட்டே, வளர்ந்த நிலைகொண்ட, குண நிலைகொண்ட நாம், அந்நிலைக்கே, அச்சுழற்சியுடனே இன்று வரை வழி நடந்தும், எண்ண நிலை பெற்றும் வாழ்ந்து வருகின்றோம்.

எப்பிறவிக்கு வந்தாலும் நாம் நம் உயிரணுவுடன் சேமித்த அமில சக்தியுடன்தான் இன்றளவும் வாழ்ந்து வருகின்றோம். பல உலோகங்களும், தாவரங்களும் அதனதன் நிலைக்குகந்த அமி லத்தை ஈர்த்து ஒரே நிலைகொண்ட தன்மையில் வளர்கின்றன. பல உலோகங்களும், திரவங்களும் ஆவியான தன் இனத்திற்கு உகந்த இனத்தையே மேன்மேலும் ஈர்த்துச் செயல்படுகின்றன.

வானமண்டலத்தில் இடியும், மின்னலும் ஓர் இனத்துடன் மற்றோர் இன அமில நிலை மோதிடும்பொழுது, சத்ரு மித்ரு நிலையி னால் ஏற்காத நிலையில் இடியும் மின்னலும் ஏற்படுவதாக உணர்த்தியுள்ளேன்.

இவ்வுலகினில் மற்ற எல்லா மண்டலமும் அதனதன் இனத் துடன்தான் வாழ்கின்றன. ஆனால், இம் மனித ஆத்மா நிலை கொண்ட நம்மால் நம் இன நிலையான இவ்வெண்ண நிலையை நாம் எடுத்திடும் சுவாச நிலையினால் நல் நிலைப்படுத்திட முடியும்.

மண்டலங்களுக்கும், மண்டலங்களில் தோன்றி வளர்ந்திடும் இயற்கை வளங்களுக்கும், மற்றத் தாவர இன வர்க்கங்களுக்கும் எவற்றுக்குமே இம் மனித உடல் கொண்ட ஆத்மாவுடன் கூடிய நாம் வாழ்ந்திடும் இச்ஜென்ம நிலைபோன்ற (மனிதனாய்) இப் பாக்கியத்தை நம்மால், நம் நினைவினில், நமக்குகந்த நிலையினை ஈர்த்து வாழ்ந்து காட்ட முடியும்.

எண்ணத்தில் அடிமைப்பட்டு உள்ளவரை (இருப்பவரை) என்றென்றும் மாற்றுவது கடினம். வெறி உணர்வுக்கும், பேராசைக்கும் அடிமைகொண்டு பக்தி நிலையை வளர்த்தாலும் பலன் பெறுவது கடினம்.

பக்தி என்பதனையே அடிமைப்படுத்திடும் நிலையாக்கிடாமல், அவரவர்களின் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, அன்பாக்கி அந்நிலையின் தொடரினால் ஜெபநிலையில் நல்லுணர்வு கொண்ட அமிலத்தையே, நம் ஆத்மாவின் சொத்தாக்கி, இம் மாறப்போகும் கலியில் இருந்து மீண்டு, பல சித்தருடன் கலந்து உள்ளவர்கள் தான், கல்கியில் மகா புருஷர்களாக இன்று இவ்வுடலில், நாம் சேமித்த அமில சக்தியின் தொடர்புடனே, இம் மனித வாழ்க்கைக்கும் உயர்ந்த வாழ்க்கையான நல் நிலைக்கு இப்பூமியிலேயே பிறவிக்கு வந்திடுவோம்.

இப்பூமியின் அமில சக்தி உன்னத சக்தி. அனைத்து நிலைகளும் கலந்த சக்தி. இப்பூமியின் தன்மை மாறுபடத்தான் போகின்றது. ஆனால், இப்பூமி சிதறுண்டு, ஜீவனற்றுப்போகும் நிலை எண்ணிலடங்காக் காலங்கள் தள்ளித்தான் வந்திடும். சூரியனிலிருந்து சூரியனின் சக்தியே சிதறிடும் நிலை உள்ளது என்று இன்றைய நிலையில் உணர்த்துகின்றனர். சூரியனின் அமில சக்தி மேன்மேலும் ஈர்த்துப் பல சிறிய மண்டலங்களைத் தன் நிலைக்கொத்த அமில சக்தியின் தொடர்பு கொண்ட அனைத்து நிலைகளையும் தன்னுடன் சேர்த்தே இயங்கிடும் நம் சூரியனின் நிலை சிதறிடும் நிலையோ, மாறுகொண்ட நிலையோ நம் எண்ணத்தில் எண்ணிடும் நிலையிலெல்லாம் இல்லை.

சூரியனையே நெருப்புக் கோளமாக எண்ணுகின்றனர். இப்பாட நிலை வெளியிட்டதன் பிறகு இந்நிலைக்குகந்த வினாக்கள் எழும் நிலையில் பல நிலைகளை உணர்த்திடுவேன்.

இம் மனித சக்தியினால் எச் சக்தியையும் அறிந்திடும் நிலை இம் மனித ஆத்மா ஒன்றுக்குத்தான் உண்டு. நாம் உணர்ந்த ஆத்மீக நெறியையே அனைத்து உலக நிலைகளையும் உணர்த்திட்டால், நான் என்ற அந் நான் நிலை வந்துவிடும்.

ஆத்மீக நெறியினில் அன்பு கொண்டே, ஜெபம் கொண்டு அறிய வருபவர்களுக்கு, அந்நிலையின் தொடரை வழிப்படுத்தி அனைவருக்கும் பொதுவான சக்தியின் சக்தி நிலையை, உணரும் நிலையை நமக்குக் கிட்டிய இச் சக்தியின் வழித் தொடரை வழிப்படுத்துகின்றோம்.

21-11-79

உன் எண்ணத்தில் அனைத்து நிலைகளையும் அறியும் சக்தித் திறனுண்டு. நீயாக அமைத்துள்ள, உன் வழியில் வந்த உன் தொடர்புப்படி உடையவரின் எண்ணக் கலவையின், இளமையில் உன் நினைவுடன் கலந்ததின் ஒரு நிலைபெற்ற வழித்தொடரிலேயே இன்றளவும் உன் எண்ண நிலையுள்ளது. இவ்வுலகில் உதித்திட்ட அனைத்து உயிராத்மாக்களும் உயிரணுக்களும் அனைத்துமே தெய்வம்தான்.

தெய்வம் என்று அன்பு கொண்டு நாம் காணும் சிறு துரும்பும், நாம் தெய்வம் என்று எண்ணும் நிலையிலேயே நம் உயிராத்மாவும் அத் தெய்வ சக்தி பெறுகிறது.

கல்லையும் மண்ணையும் ரூபப்படுத்தி, தெய்வமாக வணங்குவதெல்லாம், நம் ஆத்மாவையே அத் தெய்வ நிலையில் அன்பு கொண்டு வணங்கிடுங்கால், அச்சக்தியின் திறன், நம் ஆத்மாவிற்கே பதிவு கொள்கின்றது.

உருவ வழிபாடெல்லாம், குண நிலையை உணர்த்திட நம் முன்னோர்கள் வழி நடத்திட்ட வழிமுறைகள்தாம். பக்தி நிலையை வளர்த்தால்தான் இம் மனித எண்ணங்களில் வாழ்க்கையுடன் கூடிய, பல நிலைகள் கொண்ட, எண்ணக்கலவையிலிருந்து, அப் பூஜிக்கும் ஆண்டவனின் பக்தி நிலை ஏற்படும்பொழுதே ஒவ்வோர் ஆத்மாவும் அமைதி கொள்கின்றது.

பாட நிலையில் இந்நிலைகள் அனைத்திற்கும் எல்லா நிலைகளையும் புரியும்படி விளக்கியுள்ளோம். வழிப்படுத்தும் முறைக்காகத் தான் இப்பக்தி நிலை. நீ புகுந்த இல்லத்தில் இப்பக்தி நிலை வளரச் செய்யும் அத்தாய் மனம் ஒன்றில்லாவிட்டால், உன் புகுந்த இல் லத்தில் சிதறுண்ட நிலைக்கும், ஒருவரை ஒருவர் பொறுமை கொள் ளும் நிலைக்கும் அவ்வில்ல நிலை சென்றிருக்கும்.

நாம் வாழ்ந்த, வாழும் இந்நாட்டில் உள்ள பக்திநிலையின் தொடர்பினால்தான், இங்குள்ள மக்களின் எண்ணத்தில் அன்பு நிலையும், சில இடங்களில் ஆத்மீக நெறி முறையும் உள்ளன. ஆனால், இப்பூமியிலேயே மற்ற மேலை நாடுகளில் உள்ள நிலையினை நீயும் அறிந்திருப்பாய்.

அந்நிலையினை நம் பாட நிலையில் குறிப்பிட்டுள்ளோம். உன் புகுந்த இல்லத்தின், இவ்வாத்மீகத் தொடர் நிலை என் மகனாகிய உன் தந்தையின் மூலமாக வழிப்பட்டுள்ளதினால் இந்நிலையில்

உன்னை, உன் எண்ணத்தில் பதிந்துள்ள இவ்வினாவினை எழுப்பச் சொன்னதின் நிலையெல்லாம்.

ஆத்மீக நெறியின் வழிமுறைதான் புகுந்த இல்லத்தில் ஆரம்ப நிலை பெற்று வருகிறது. அங்கு உணர்ந்திடும் சில நிலைகளும் இன்னும் இக்காலத்திற்கொப்ப வழிமுறையின் கோவைப் படிதான் செயல்படுத்தி வருகின்றோம்.

உன் எண்ணத்தில் எவ்வினா ஏற்பட்டாலும் இவ்விடத்தில் பகர்ந்திடம்மா உன் வினாவினையே.

**27-11-79**

உணர்வுடனே கலந்திட்ட நல் நிலை பெற்றோரின் எண்ணச் சக்திக்கு இவ்வெண்ணத்துடன் கலந்திட்ட இயற்கை சக்தியின் உறுதுணை நிற்கும் இயற்கையின் தன்மையில் ஒரே நிலை இருப்பதில்லை.

காற்றும், மழையும், குளிரும், உஷ்ணமும் கால நிலைக்கேற்ப மாறிக்கொண்டு வருகின்றன. இயற்கை அனைவருக்கும் பொதுவான சக்தி. அச்சக்தியின் அருளை சாதக நிலைப்படுத்தி, எண்ணத்தில் உயர்வு கொண்டோரின் நிலையின் ஜெபத்திற்கு, அவர் எண்ண ஜெபத்தின் நிலைக்கு இயற்கையும் ஒத்துழைக்கும். எண்ணத்தில் ஏற்றுவித்த இந் நல் சக்தியின் நிலைகொண்டு இயற்கையின் சீற்றத்தையும் நாம் கட்டுப்படுத்திடலாம்.

நம் எண்ணமே அத்தெய்வ சக்தியை ஈர்த்து ஜெப நிலையில் உள்ள பொழுது, இவ் இயற்கையில் கலந்திட்ட பல நிலைகொண்ட அமில சக்தியை, நம் எண்ணத்தின் சக்தியைக் கொண்டு, திசை திருப்பிடவும் ஜெபப்படுத்தி அவ் இயற்கையின் சக்தியையே, நம் எண்ண நிலைக்கொப்ப நிலைப்படுத்திடலாம்.

எண்ணத்தில் கறையுண்டோருக்கு இயற்கையும் ஒத்துழைப்பதில்லை. இன்றைய மனித ஆத்மாக்கள், தன் நிலை உணர்ந்திடாமல் நாம் பிறவி எடுத்து வாழ்ந்த நிலையையும், மடியும் நிலையையும் எண்ணத்தில் கொண்டு, இவ் இடை கொண்ட வாழ் நாட்களில் இருந்தென்ன பயன் என்றும், இவ்வுடலுடன் நாம் இருந்து அடையும் நன்மையென்ன என்றும், இயற்கை எய்திடும் நாம் இவ்வாழ்க்கையில் சிக்கி, மனக் கலக்கப்பட்டு வாழ்ந்தென்ன பயன் என்றும் எண்ணும் எண்ணத்தில்தான் பல ஆத்மாக்கள் உள்ளன.

எண்ணத்திலேயே தன் நிலையை வினவாக்கி வாழ்பவருக்கு இவ்வுடலுடன் மட்டுமல்ல, இவ்வுடலை விட்டுச் சென்றிட்ட ஆத்ம நிலையிலும் இவ்வினை நிலைதான் சுற்றிக்கொண்டே இருக்கும்.

இயற்கையின் சக்தியில் இயற்கையே அளித்திட்ட இயற்கையுடன் ஒன்றிய நம் உயிராத்மாவை, இவ்வுடலுடன் வாழ்ந்திடும் நாட்களிலும் சரி, ஆத்மா பிரிந்து சென்று ஆவி நிலையில் சுற்றிக் கொண்டுள்ள நிலையிலும் சரி, இவ் இயற்கையுடன் ஒன்றியே தான், உயிரணு உதித்த நாள் முதல் கொண்டு, நாம் எடுத்திட்ட சுவாச நிலையும், அமில சக்தியும் நம் எண்ண சக்தியுடன் என்றென்றும் அழியாமல் சுற்றிக்கொண்டுள்ளன. இப் பிறவிக்கு நம் எண்ணம் கொண்டுதான் வருகின்றோம். ஈன்றவரின் நிலையினால் மட்டுமல்ல.

நாம் பிறவி எடுத்த நற்பயனையே, நற் சக்தியாக்கி, இவ்வுலகுடன் ஒன்றியே, நம் உயிராத்மாவும் தொடர்பு கொண்டு, நம் பிறவிப் பயனைப் பெற்று, நாம் பிறந்திட்ட உண்மை சக்தியினை, இவ்வுலகில் நிலைநிறுத்தி வாழ்ந்து காட்டிடல் வேண்டும்.

போகனைப் போன்றும், கொங்கணவரைப் போன்றும், ஒவ்வொரு நிலையிலும் நல் உணர்வு கொண்டு நம்முடன், நம்மை வழி நடத்திச் செயல் கொண்டு செயலாக்கிடும் பல ரிஷிகளின் நிலை பெற்று வாழ்ந்து காட்டிடல் வேண்டும்.

இயற்கையின் சக்தி அனைத்திற்கும் பொது சக்தி. அச்சக்தியின் நல் உணர்வை ஈர்த்து நம் ஆத்மாவை நிலைப்படுத்தி வாழ்ந்து காட்டிடல் வேண்டும்.

(கேள்வி) தியான நிலைக்கு வந்த ஒருவர் கேட்ட கேள்வி:— எண்ணத்தில் தூய்மையும் நற்செயலுடனும் இருக்கும் ஒருவருக்கு தியானம் அவசியமா? மற்றவரை நோக வைக்கும் எண்ணமோ, செயலோ இல்லை. தான் செய்யும் காரியமும் எண்ணமும் சரியானதாகவும் இருப்பதாக இருக்கிறது. தான் செய்வது சரியா? நியாயமா? என்பது தெரியவில்லை. எனக்கு நியாயம் என்று தோன்றுகிறது. மற்றவர்கள் அதை ஏற்பது இல்லை. என் நினைவிலும், செயலிலும் தவறு இருந்தால் அதைத் திருத்திக் கொள்வதற்குத் தயாராக இருக்கிறேன்.

பதில்:—எண்ணமுடனும், உணர்வுடனும் நல் நிலை பெற்றிருந்தாலும், அப்பக்தியென்னும் அன்பு நிலையை வளரவிடாமல் நான் என்ற நிலைப்படுகிறது, இவ் வினவின் நிலை.

கேள்வி கேட்டவர்:—அது சரியா, தவறு என்பது தெரிய வில்லை. நான் என்று எனக்கு உணரும் நிலை எனக்கு நன்றாகத் தெரிகிறது. (அது எனக்கு நன்றாகத் தெரிகிறது).

பதில்:—உணர்வுடனே தன் நிலையை நல் நிலை என்றுணர்ந்து நான் என்ற உணர்வையும் கலக்கவிட்டதினால் வந்த நிலை உன் நிலை. ஒன்றுடன் ஒன்று தொடர்பில்லாமல் இவ் இயற்கையின் சக்தியில் எவையுமே இல்லை. இந் நிலையில் தன் உணர்வை நல் ஒழுக்கப்படுத்தி, அவ்வொழுக்க நிலைக்கே, அடிமைப்பட்டு அந் நிலையையே தெய்வமாக்கி, தன் உணர்வுடன் நானாக இருந்து என்னம்மா பயன்?

அனைத்து நிலைகளை அறிந்த சப்த ரிஷிகளுமே தனித்த நிலை யில் இயங்குவதில்லை. உணர்வுடன் உணர்வை ஒன்றச் செய்து தான் செயலாக்குகின்றார்கள்.

நீ அமைத்துக்கொண்ட இந் நிலையிலிருந்து விடுபட்டால் தான் உன் உணர்வுடன் சேமித்துள்ள நற்சக்திகள் செயல் கொண் டிட முடியும். நல் எண்ணமும் அவ்வெண்ணமுடன் கூடிய உணர்வி னால் நம் பார்வையின் சக்தியும், நாம் செப்பிடும் சொல் அழகும், அன்பான ஆசை வாழ்க்கை நிலையும்தான் ஜெப வாழ்க்கையம்மா.

ஜெபம் என்பதுவே வாழ்க்கையுடன் ஒன்றிட்ட நல் உணர் வைப் பெற்றதுவே. எண்ண நிலையை ஒரு நிலைகொண்டு உண்மை யுடனும், அன்புடனும் அன்பாசையுடனும் உள்ளவர்களுக்குத் தெய்வ நிலை கிட்டுமம்மா. தெய்வம் என்பதுவே இந் நிலை பெற் றோரைத்தான். ஆதிசக்தியின் இயற்கை சக்திகள்தான் அனைத்து சக்திகளும். நம்மையே நாம், இவ் இயற்கையுடன் தெய்வ மாகக் கலக்கவிட்டு வாழ்ந்து காட்டிடல் வேண்டும். இப் பேரா சைக்கும், வெறி உணர்வுகளுக்கும், மற்றத் தீய சக்திகளின் உணர்வு களுக்கும் நாம் அடிமை கொண்டு வாழ்ந்திடாமல், நல்லுணர்வு கொண்டு வாழ்வதற்கே நற் ஜெபம் எடுத்திடுங்கள் என்று செப்பிடும் நிலை.

(**28-11-79**-அப்பா வீட்டில் தியானம்)

**29-11-79**

இம் மாறப்போகும், இக்கலியின் கால நிலைக்காக, இக் கலியுடனும், இக்கலிக்கு முந்தைய காலங்களிலும், இப் பூவுலகினில், இப் பூமியில், உயிரணுவாய் உதித்திட்டு, உயி ராத்மாவாகி உங்களுடனே வாழ்ந்திட்ட, இவ்வுலகுடன் ஒன்றிய

நிலைகொண்ட ரிஷிகளின் அருளாசியினால், இவ்வுலகத் தன்மை மாறப்போகும் இந் நாளில் உங்களுடன் கலந்து வாழ்ந்த எங்களின் ஆசையினால் இம் மாற்றத்திலிருந்து அணுவாய் ஆத்மாவாய் அனைத்தறிவும் ஆற்றலும் சக்தி கொண்ட, இம் மனித உடல் பெற்ற, ஆத்மாக்களை இப்பேறு பெறும் பாக்கிய நிலை அடைந்தவரை, நம்முடனே அழைத்திடவே (ரிஷிகளுடன்) இந் நிலையில் இப்போதனை வழியினை உணர்த்தி வருகின்றோம். இவ்வுலக நிலை, கால நிலைக்கேற்ப, உஷ்ண நிலையும் மாறுகொள்கின்றது. காற்றும், மழையும், பனியும், குளிரும் அனைத்துமே மாறி மாறி வருகின்றன. இப்பூமியின் பூமத்திய ரேகையின், நிலையில் அதன் சுற்றும் தன்மையில், சூரியனின் நிலைக்கு, சூரியனின் தூர விகிதப்படி இவ் இயற்கையின் நியதிகள் மாறுபட்டு வருவதாகப் பண்டைய காலம் தொட்டு, இன்றளவும் உணர்ந்து வருகிறீர்கள். (காட்சி:—அப்பாவைப் பார்த்து குருநாதர் இல்லையா? என்று கேட்டு நகைக்கிறார்).

சில நாட்களில், பல நாட்களுக்கு முதலிலேயே, வான சாஸ்திரப்படி என்றென்று சந்திர, சூரிய கிரகணங்கள் வருகின்றன என்று உணர்த்துகின்றனர்.

இவ்வான மண்டலங்களில், சுழற்சியில் ஏற்படும் நிலைகளையெல்லாம் பல நிலைகளில் அறிந்துள்ளனர், அறிவாற்றல் மிக்க நம் மக்கள். இப் பூமியின் மாற்ற நிலையையும் அறிந்துள்ளனர். வெளியிடும் அச்ச நிலையில் உள்ளனர்.

இம் மாறப் போகும் கலியில், இப்பூமியில், இன்று இச் சுழலும் தன்மையில் ஏற்படும் ஒளி நிலை சில இடங்களில் படுவதே இல்லை. இருண்ட பூமியாக என்றும் சில இடங்கள் உள்ளன.

இப்பூமியின் அசைவு காலத்தில், அவ்விருண்ட நிலைகொண்ட இடங்களெல்லாம் ஒளிக்குச் சிக்கிடும் இடங்களாக வந்து விடும். சில இடங்களை இப்பூமியின் மாற்றத்தின்போது ஏற்படும் அசைவுக்குக் குறிப்பிடுகின்றேன்.

இன்று மக்கள் நிறைந்து வாழ்ந்திடும் சீனாவும், அமெரிக்காவும் இம் மாற்றத்திற்குச் சிக்கிடும் நிலையில் உள்ளன.

அதிக மாற்றம் கொள்ளும் நாடுகள் இவை இரண்டும்தான். மற்ற நாடுகளில் மாற்றம் வந்தாலும் சில நிலைகளில் அந்நீரின் மட்டம் ஏறாமல் நிலமாக இருந்திடும்.

இவ்வுலக மாற்றத்தினால் இன்று இருண்ட நிலையில் உள்ள பூமிகள் எல்லாம் ஒளிக்கு வந்துவிடும். இன்று ஒளியுடன், செயற்

கையுடன் ஒன்றிய, வளர்ச்சியடைந்த நாடுகள் என்று நாம் செப்பிடும் பூமிகளில் சில இருண்ட நிலைக்குச் சென்றிடும்.

இம் மாறப்போகும், இப்பூமியின் தன்மையுடன் இயற்கை சக்தியும் இன்றுள்ள நிலையிலிருந்து மாறும் தன்மைப்படுகின்றது. சித்திரையில் உள்ள வெய்யிலும், மார்கழியின் குளிரும், இம் மாற்றம் கொள்ளும் இப்பூமியின் நிலையினால் மாற்றம் கொண்டு சுழலப் போகின்றது.

அனைத்து நிலைகளையும் நீங்களும் காணப் போகின்றீர்களே. இவ்வெண்ண சக்தியின் செயலைக் கொண்டு ஜெப சக்தியை உயர்வாக்கி ஜெபம் கொண்ட வாழ்க்கையை, ஜெயித்தே வந்திடுங்கள். வழியின் தொடர்பினை அறிந்துள்ளீர். இனி வருவதற்குச் சிரமம் இல்லை.

ஞானத்தின் வழியறிந்து, ஞானத்தின் முதல் நிலைக்கே வந்துள்ளீர். ஞானியாகி, சித்தனாகி வழித்தொடரினை வழிப்படுத்தியே சப்த ரிஷியுடன் சங்கமித்தே சகல நிலையுடன் கலந்திடுவோம் என்ற ஓம் என்ற நிலையினிலே மன நிலையை ஒன்றச் செய்திடுங்கள்.

இவ்வுலகம் மட்டுமல்ல, அனைத்து உலகங்களுமே நமதாக்கி அனைத்து உலகங்களுக்கும் சொந்தமான அவ் ஆதி சக்தியுடனே கலந்திடுவோம் என்ற, ஒரு நிலைகொண்ட தைரியமுடன் கலந்திடுங்கள்.

எவ்வாண்டவனும் வந்து அழைத்துச் செல்வதல்ல அந்நிலைக்கு. நம்முடன் கலந்துள்ள, நம் ஆத்மாண்டவனை நாம் வழி நடத்திட்டால் நம்முடனே அனைத்து ரிஷிகளின் அருளைப்பெற்றே அனைத்துடனும் கலந்திடலாம்.

ஒன்றிடும் பக்குவ நிலையையே பக்குவப்படுத்தி வந்திடுங்கள்.

**30-11-79**

தியானத்தில் அமர்ந்த போதும், உடல் சோர்வினால் ஈர்த்துச் சொல்லிட முடியாததால் பாடம் எழுதவில்லை.

**1-12-79**

**புத்தர்**

இன்று புத்தரை ஆண்டவனாய் வழிபடுகின்றோம். புத்தரின் நிலையென்ன? சித்தார்த்தராய் அரச குடும்பத்தில் அவதரித்து வாழ்ந்தவருக்கு ஒரே நாளில் துறவு நிலைகொண்ட ஞான நிலை

போதி மரத்தடியில் பெற்ருர். எந்நிலையில் அவரின் நிலை வந்தது? பிறவியிலிருந்து, ஆரம்ப நாள்தொட்டு, வாழ்ந்த காலத்தில் அவரின் நிலை, எல்லோரின் நிலையை ஒத்த வழியில்தான் வந்திட்டது. ஞான நிலைக்கு, அவர் வாழ்க்கையுடன் தொடர்பு படுத்திடாமல், அப்போதிமரத்தடியில் வந்ததின் நிலையென்ன? அவரின் நிலை, அச் சித்தார்த்தராய்ப் பிறவி எடுத்து, அவர் அரச காலத்துடன் மட்டும் ஏற்பட்டதல்ல.

இவ்வுலகில் உயிரணுவாய் உதித்து, உயிராத்மாவாகி பல ஜென்மங்கள் வாழ்ந்த நாட்கள் தொட்டே அந்நிலையில் அவரின் தொடர்புடைய ரிஷிகளின் நிலையிலிருந்தெல்லாம், அவர் சேமித்து வைத்து, அவருடனே வளர்ந்த ஜீவ சக்தி எப்பிறவியிலும் செயல் படாமல் அவர் கடைசியாக எடுத்த உடலில், ராஜ வம்சத்தில் பிறந்ததின் நிலையினுல் வளர்ந்த சூழ்நிலை, வளர்ப்பின் நிலை, இவற்றினுல் அவரின் முன் ஜென்ம சேமித்த நிலையெல்லாம் வழிப் படாமல் இருந்த நிலையில் போதி மரத்தடியில், அவர் எடுத்த சுவாசத்தில் அம் மரத்தின் அமில சக்தி இவர் ஆத்மாவுடன், இவர் உடலில் முன் ஜென்மத்தில் சேமித்த நற்சக்தியுடன் மோதுண்டவுடனே, இக்கலவையின் சக்தி கூடி அந்த ஞான வழிதனை அவரும் வழி நடத்தி, ஞானுேதயம் பெற்று, இன்று சூட்சும உலகினில் பலருடன் கலந்து, இன்று ஆண்டவனுய் அருள் செய்திடும் அன்பு நிலையில் உள்ளார்.

இவ்வுலகினில் உதித்து உலகுடனே ரிஷிகளாய், சப்த ரிஷிகளாய்க் கலந்தவர்களின் எண்ணக் கலவைகள், நற்சக்திகள் அனைத்துமே ஒன்றுகொண்டு, இப்பூவுலகிற்கே பூ மழையாய்ப் பல நிலைகளைச் செய்விக்கின்றன.

ஆத்மீக நெறிதனில், ஞானியாய், சித்தனுய், முனிவனுய், ரிஷியாய், சப்த ரிஷியாய் ஓங்கி நிற்கும் அனைத்து நற்சக்திகள் கொண்ட, நல் ஆத்மாக்களின் நிலையில் இன்று நீங்கள் வழிபடும் ஆலயங்களில் இருந்தெல்லாம், அவரவர்களின் எண்ண நிலைக்கேற்ப, அவர்களின் சக்தி நிலை ஒன்றுகூடியே ஆண்டவனுய்ச் செயல்படுகின்றது.

''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'', ''கோயிலில்லா ஊரில் குடியிருத்தல் வேண்டாம்'' என்றெல்லாம் உணர்த்தினர் நம் முன்னுேர்.

பக்தி நிலையை வளர்க்கவும், ஆத்மீகத்தை நிலைநிறுத்தவுமே இந்நிலைகளை எல்லாம் நமக்குப் போதித்தனர்.

(காட்சி:—ஒரு பெரிய யானை விபூதிப்பட்டையுடன் காட்சி யளித்து பக்தர்களுக்கு, பக்தரின் சிரசில் தும்பிக்கை வைத்து ஆசீர்வாதம் செய்கின்றது. அவ் யானையே ஒரு மகா ரிஷியாய் உருமாறிக் காட்சியளித்து ஆசிர்வதிக்கின்றார்) மக்களின் எண்ணத் தில் அவ் யானையையே ஆண்டவனாய் வணங்கிடும் பொழுது, அவ் யானையின் உணர்வுடனும், நிலையிலும் அந்த ரிஷிகளே வந்து வணங்கிடும் ஆத்மாக்களுக்குச் சில நிலைகளில் பக்தி கொண்டவ ருக்கு ஆசிர்வதிக்கின்றனர்.

(காட்சி: பாடை கட்டி நான்கு பேர் ஒரு பிரேதத்தைச் சுமந்து செல்வது போலவும், கோவிந்தா கோவிந்தா என்ற கோவிந்த ஜெபம் செய்து கொண்டே செல்வது போலவும், காரியம் முடிந்து வந்து, கை கால் அலம்பி ஜோதியைக் காண்பது போலவும் காட்சி)

ஆண்டவனின் நிலையை உணர்த்திவிட்டு, இந்நிலையின் காட் சியை ஏன் அளித்தேன் என்ற பதறல் வேண்டாமம்மா. புத்த ருக்கே இந்நிலையைக் கண்டபிறகுதான் ஞான நிலையே வந்ததம்மா. எந்நிலையையும் ஒரு நிலையாய்க் காணும் ஆத்ம ஜெபம் வேண்டு மம்மா.

ஆண்டவனின் அருள் ஆலய நிலையில் மட்டும் கிட்டும் என்பதல்ல. ஆலயங்களுக்குச் சென்று, ஆத்ம ஜெபம் பெறும்பொழுது, நம் ஆத்மா அமைதி பெறுவதுவே வாழ்க்கையுடன் கண்டிடும் இந்நிலைகளில், இன்னும் பல நிலைகளில் இருந்தெல்லாம், நம் எண்ணப் பயத்தையும், எண்ணச் சோர்வையும், அந்நிலைக்குச் சென்றிட்டால் அமைதி கொண்டு வந்திடவே நமக்கு வழிப்படுத்தி வைத்தனர் நம்மில் கலந்த ஆண்டவன்கள் எல்லாம்.

(காட்சி:—ஜெகத் ஜோதி மயமாய் தேர் தானாக ஆடிவருவது போல் காட்சி. அத் தேரே புஷ்பமாய், ஒரு மகா சப்த ரிஷியால் அருள்புரிந்து ஆசிர்வதித்திடும் காட்சி) காட்சியில் கண்டிடும் இந்த ரிஷியின் அருள் அனைத்துமே இந்நிலையை இன்று காண்பவருக்கு மட்டுமல்லாமல் இதை எழுதுபவருக்கும் இவற்றைப் படிப்பவருக் கும் இந் நிலையில் வந்து இரட்சித்து, இவ்வுயிரணுக்கள் அனைவ ருக்குமே என் ஆசிகள்.

தேரில் வந்தவர் புத்தர்.

**2-12-79**

தீப ஜோதியைக் கண்டிடவே தீபங்களை ஏற்றி வைத்து, புனித நன்னாளாய்க் கார்த்திகைத் திருநாளை, தீபத்தின் ஜோதி யிலே ஜோதியாய் வணங்குகின்றீர்.

தீபம் ஏற்றி வணங்கிடும் இந்நாளில், தீப ஜோதியையே உம்முள் ஐக்கியப்படுத்திடும் ஜோதி தீபங்களாய் வாழ்ந்திடும் எண்ண தீபத்தை ஏற்றிடுங்கள். எண்ணெயும் திரியும், ஏற்றுவ தற்குத் தீக்கோளப் பெட்டியும் செயற்கை கொண்டு தீபம் ஏற்றி, தீப விழாவாக்கி மகிழ்ந்திடும் இந் நன்னுளை என்றுமே தீபமாய்ச் சுடர்விடும் ஆத்ம விளக்கை, எண்ண தீபத்தில் இயற்கையின் சக்தியில் கலக்க விடுங்கள்.

நம் பூமியின் ஒலியினுல் ஒளியாகி, ஒளியுடனே வாழ்ந்துள்ள நாம், நம்மைப் போன்ற ஒவ்வொரு மண்டலமும், ஒலிகொண்டு, ஒளிபெற்று வாழ்வதைப் போல், மற்றச் சாதனங்களினுல் எரிந்து, ஒளிவிடும் ஒளியாய் இல்லாமல், தானுய் ஒளிரும் ஜோதி ஒளியை, ஒவ்வொருவரும் தன்னுள் ஏற்றி ஒளி பெற்றிடுங்கள்.

சூரியனும் மற்ற அனைத்து மண்டலங்களும், தானுகவே, தன்னுள்ளேயே, ஒளியினுல் ஒளி பெற்றுச் சுற்றிடும் ஜோதி மயம் போல், ஒவ்வோர் ஆத்மாவுமே, அவரவர்களின் ஆத்மாவுடன், ஜோதியின் சக்தியைப் பெற்று, ஜோதி மயமான, ஜோதியுடனே கலந்தும் தனிப்பெரும் சக்தியினைப் பெற்றிடலாம்.

நம் ஆத்மாவிற்கு உள்ள சக்தியினை நாம் உணர்ந்திடல் வேண்டும். நம் ஆத்ம சக்தியை நற் சக்திகளின் சக்தியாய் ஒளிரச் செய்திடல் வேண்டும். நம் சக்தியை நாம் அறிந்திடாமல் பல தீய சக்திகளுக்கு நம்மை அடிமைப்படுத்தி வாழ்கின்றேம்.

இன்றைய உம் தியானத்தில் நீர் கண்டதின் உண்மை நிலை என்ன? சத்தியத்தின் சக்தி நிலையின் தொடர்பினுல் சொல் வாக்கியத்தை எழுத்துருவத்திற்கு எழுதி வந்த பக்குவ நிலையி லேயே உம் தியான நிலையும் வளர்ச்சி பெற்று இன்றைய தியானத் தில் நீர் கண்டதையும் உம் சொல் கோவையில் எழுதவும்.

(இன்று பாடம் எழுதுமுன் நாங்கள் இருவரும் குருநாதர் அருளிய பாடல்களைப் பாடும்பொழுது குருநாதர் படத்தில் இருந்து பூ விழுந்தவுடன், பாட்டு முடித்து தியானத்தில் இருந்தபோது இராமர் பட்டாபிஷேகக் காட்சி தங்க நிறத்தில் ஜோதியாகக் காட்சி கிடைத்தது).

வாழ்க்கையுடனே தியான வழியின் ஜோதித் தொடரை வளரவிட்டு வாழ்பவருக்கு நம் ஆத்ம ஜோதியின் சக்தியினைப் பூர்ணமாக அறிந்திடும் சக்தி நிலை வந்தடையும். வாழும் காலம் குறுகியதுதான். இம் மனித ஆத்மாவாய் வாழ்ந்திடும் காலத்தில் தான், நம் ஆத்மாவிற்கு நாம் சேமிக்கும் வளர்ச்சி நிலையெல்லாம்

கிட்டுகின்றது. உடலை விட்டுப் பிரிந்து செல்லும் ஆத்மாக்களுக்கு ஆத்ம வளர்ச்சி, வளர்ச்சி என்பது சக்தி நிலை கூடிடும் நிலையில்லை. உடலுடன் கொண்ட ஆத்மாக்களினுல்தான், வாழ்ந்திடும் பக்கு வத்தில் ஆத்மாவை ஜோதியாக்கிட முடிந்திடும்.

வாழ்வும் சாவும் என்ற இரண்டு நிலைகளைத்தான் உணர்ந்து பிறந்த பின் நம் நிலையை நாம் உணரப்போகின்ருேமா என்ற பக்குவம் பெருத நிலையிலும், நாம் பிறப்பதுவே நம் தாய் தந்தையரின் நிலையினுல் வந்தது. நாமாகப் பிறவிக்கு வரவில்லை. வாழும் காலத்தை அனுபவித்து வாழலாம் என்றெல்லாம் நம் ஆத்ம சக்தியைப் புரிந்திடாமல் எண்ணி வாழ்ந்திடும் நாம் இனி வரும் காலத்தை நாம் எடுத்திடும் சுவாச நிலையின் ஒளியினுல் நம் ஆத்மாவை ஒளிகொண்ட ஒளியாக்கித் தீபமாய்ச் சுடரவிடுங்கள். இத் தீப நன்னுளைப்போல் என்றுமே தீப ஒளியாக வாழ்ந்திடுங்கள்.

(குருநாதர் பாடம் சொல்லிய பிறகு இராமலிங்க அடிகளா ரின் காட்சி).

**3-12-79**

கண்ட மணி, துளசி மணி, அகஸ்திய மணி இப்படிப் பல மணிகளைத் தன் ஜெபத்தினுல் செய்வித்து சித்து நிலை பெற்ற வர்கள், தம் உடலில் இம் மணிகளை அணிந்து கொண்டு, அவற்றின் ஈர்ப்பு சக்தியின் நிலையினுல், தன் ஆத்மாவிற்குச் சில நிலைகளை அறிந்திட, இப்படிப் பல நிலைகளை ஜெபம் கொண்டு செய் வித்தனர்.

இரசமணியின் சேர்க்கையுடன், இவ்வியற்கையின் மூலிகை களை, இவ்வியற்கையின் அம்மாவாசை, பௌர்ணமி இப்படி சந்திர மண்டலத்தில் இருந்தும், சூரிய மண்டலத்திலிருந்தும், நம் பூமியின் தொடர்புடைய மற்ற மண்டலங்களில் இருந்தும் நமக் குக் கிடைக்கும் அணுக்கதிர்களின் சக்தியை உணர்ந்து, அமா வாசையில் சந்திரனின் சக்தி இல்லாமல், சூரியனின் ஒளிக் கதிரையே பெற்றிடும் இப்பூமியை நிலைப்படுத்தி, மூலிகைகளை வளரச் செய்யும் நாள் கணக்குப்படி, அதை நீர் மட்டத்தின் தூர விகிதப்படுத்தி, இம் மூலிகைகளை ஒன்றுக்கு நேர்படுத்தி, மற்ற வற்றை வைத்து, அதன் நாள் கணக்கில் வளரும் நிலைப்படுத்தி, பக்குவமுடனே இரசமணியுடன் கலந்த ஜெபம் செய்கின்ருர்கள்.

துளசி நாமத்தையும், அகஸ்தியர் நாமத்தையும் எம் மணியை உருவாக்குகின்ருர்களோ, அம்மணிக்குகந்த நாமத்தை ஜெபித்து, தம் உடலுடன் அச் ஜெபம் கொண்ட அம் மணிகளை

அணிந்துகொண்டு, அதன் ஈர்ப்பு சக்தியின் தொடரினுல் பல நிலைகளைச் செய்கின்றுர்கள்.

இவ்வுடலையே ஒருவர் கண்ணுக்கும் காணுத நிலையெல்லாம் செய்விக்கின்றனர். இவ்வுடலை விட்டு ஆத்மாவைப் பிரித்து, பல சக்தி நிலைகளை அறிந்திடும் நிலைக்கும் பல நிலைகளைச் செய்கின்றனர்.

இயற்கையுடன் வளர்ந்திட்ட இம் மூலிகையின் நிலையறிந்து, இயற்கையின் சக்தியினுலேயே, ஞான வழியில் சித்து பெற்ற வர்கள் செய்திடும் நிலை இவையெல்லாம். ஆனுல் சூனிய நிலை கொண்ட தீய சக்தியிலும் இந் நிலைகள் செயல்படுகின்றன. குடு குடுப்பை ஆண்டிகள் இன்னும் இச் சூனிய சாமியார்களின் நிலையி லும் மை போட்டு, மந்திரித்து, கறுப்புக் கயிற்றில் தாயத்துக்களை அளித்துப் பல நிலைகளை இச் சூனியக்காரர்கள் செய்கின்றனர்.

இன்றைய இப்பூமியிலே இவ் இந்தியாவிலும், மற்றைய சீனுவிலும், திபெத்திலும் இன்னும் ஒருசில நாடுகளிலும் இச் சூனியக்காரர்களின் ஆதிக்க நிலை நிறைந்துள்ளது.

குறைப்பிரசவத்தில் போன சிசுக்களையும், பிறந்த சிசுவையும், அதைப் புதைத்த நிலையிலிருந்து எடுத்துச் சென்று, அதன் ஜீவ சக்தியைத் தன் உடலுடன் ஏற்றிக் கொள்ளும் மந்திர ஜெபங்கள் செய்து, தன் உடலுடன் ஏற்றிக் கொள்கின்றுர்கள்.

குட்டிச்சாத்தான் வேலையும் இதுவே. இவர்களிடம் கூடு விட்டுப் பறந்து செல்லும் நிலையும், தன் உடலையே பிறர் கண் ணிற்குக் காணுமல் ஆவி உருவப்படுத்தும் நிலையும் ஏற்படுத்தி வைத்துள்ளார்கள். இவர்களினுல் பல தீய நிலைகள் இன்றும் நடந்து வருகின்றன. தீய எண்ணத்திற்கு இத்தீய சக்தியின் தொடர்பும் கிட்டுகின்றது.

நல்வழிக்கும் தீய வழிக்கும் இந்நாடு கலந்த நிலையில்தான் உள்ளது. இவ்வெண்ண சக்தியை மேம்படுத்தி இவ்வுலக சக்தியில் ஆத்ம சக்தியை ஒன்றச் செய்தால் நம் ஆத்மாவுடன் நாம் வளர விடும் நற்சக்தியின் பயனுல், நாம் வாழ்ந்திடும் காலத்தில் இக் காற்றுடன் கலந்துள்ள தீய சக்திகளின் அணுக்கதிர்கள் நம்மைத் தாக்கிடாமல் நல் சக்திகளின் அணுக்கதிர்களை வளரவிட்டு, சோர்வும் நலிவும் இவ்வுடலை அண்டாமல், இவ்வுடல் அகால மரணம் எய்திடாமல், அன்பு கொண்ட ஜீவாதார அறம் கொண்ட நல் வாழ்க்கை வாழ்ந்தே சூட்சும உலகிற்குச் சென்றி டும் பக்குவ நிலைக்குச் சென்று வாழ்ந்திடலாம்.

தீயோரின் சக்தி நிலை வளர்ந்து, நற் சக்தியைக் குறைத்துக் கொண்டு வருவதினுல், நம் சக்தியையும், நம்மைச் சார்ந்தோரின்

சக்தியையும், அவர்களின் தொடர்பு கொண்டோரின் சக்தியையும் இன்று எப்படித் தன் இனத்துடன் தன் இனத்தைச் சேர்த்தே ஒவ்வொரு மண்டலமும் ஈர்த்து வளர்ந்ததுவோ, அந்நிலை போன்றே, இவ்வுலகில் உதித்த ஆத்மாக்கள், அனைவருமே ஒன்றுடன் ஒன்றை நற்சக்திகளாக்கி, இவ்வுலகையே நல் உணர்வு கொண்ட, நல் பூமியாக வாழ்ந்திடும் பக்குவம் பெற்ற ஆத்மாக்களாய் வந்திட, நல்லுணர்வையே நலமாக்குங்கள் என்றே வழிப் படுத்தி வாழ்த்துகின்றேன் நல் வாழ்த்துக்களை.

**4-12-79**

எண்ணத்தில் உயர் ஞானத்தையும், நற்செயலையும், ஆத்மீக நெறி கொண்ட அன்பு வாழ்க்கையையும் வழிநடத்திட்டால், அந்நிலையில் பெறும் சக்தியின் திறன்தானப்பா, நாம் அடைந்திடும் பேரானந்த வாழ்க்கை. ஆரம்ப வழித்தொடர் வாழ்க்கையுடனும் பிற எண்ணங்களின் மோதலினாலும், தொடரை வழிப்படுவதற்கு சிரம நிலை கொண்டிடலாம். அச்சிரம நிலையிலிருந்து வழி நடந்து, வந்திட்டால் இப்பேரின்ப நிலையை அடைந்திடலாம்.

இன்றைய விஞ்ஞானத்தினால் செயற்கைக்கோளை, இப்பூமியிலிருந்து மற்ற மண்டலங்களின் நிலை யறிய ஏவுகின்றனர். இப் பூமியின் காற்று மண்டலத்தையும், இப்பூமிக்கு மேல் சில தூர விகிதத்திற்கு, அவ் ஏவுகணையைச் செலுத்திட, இவ்வமிலங்களின் (அணுகாந்த மின் அலை) உதவியினால் செலுத்தி அதற்கு மேல் உள்ள நிலைகளுக்கு எத்திரவ அமில சக்தியின் நிலையில்லாமலே இயக்கிடும் நிலைக்கு அவ் ஏவுகணை செல்கின்றது. குறிப்பிட்ட தூர விகிதத்திற்குத்தான், மற்ற அமில சக்தியின் நிலையினால் இயங்குகிறது அவ் ஏவுகணை. பிறகு செல்லும் நிலைக்கெல்லாம் இப் பெட்ரோலியச் செலவு நிலை இல்லாமலே செல்லும் நிலையைத்தான் செய்வித்து அனுப்புகின்றனர். அதைப்போலவே இவ்வெண்ண சக்தியின் வழித் தொடரினை நற்சக்திக்கு வழிப்படுத்திட்டால் ஆத்மீக நெறிக்கு நம்மை வழி நடத்திட நம் உயிராத்மாவின் சக்தியினால் முடிந்திடும்.

இவ்வுடல் என்னும் அமிலங்கள் நிறைந்த இப்பிம்பத்தின் காந்த சக்தியின் நிலையை நாம் உணர்ந்திட்டால் இப் பிம்பத்தையே பறக்கும் நிலைக்கும் பதப்படுத்திடலாம். நம் உடலிலுள்ள அமில சக்தியின் சக்தியே பெரும் சக்தி. இச் சக்திதனை நாம் உணர்ந்திடாமல் நம்மையே நாம் விரயப்படுத்தித்தான் வாழ்கின்றோம். செயற்கையினால் இன்று கண்டிடும் அனைத்து நிலைகளையுமே, அனைத்து நிலையென்பது, ஒலி, ஒளி இவற்றின்

ஈர்ப்பு சக்தி கொண்ட நிலையையெல்லாம் இவ்வுடல் என்னும் அமில சக்தியின் தொடர்பினாலேயே கண்டிடலாம்.

இவ்வெண்ண சக்தியின் வழித்தொடர் பெற்றோரின் சொல், செயல், பார்வை இவற்றின் சக்தி நிலையினால் அவர்கள் சொல்லும் சொல்வாக்கு பலித்தம் கொள்ளும். ஒருவரைக் காணும்பொழுது, அவரின் மேல் எவ்வெண்ணத்தின் நினைவுடன் அவரின் சுவாசக் காற்றுப் பட்டுக் காண்கின்றாரோ, அவ்வெண்ண நிலைப்படியே அவர்களைக் காண்பவரின் நிலையும் நடக்கும்.

ஆத்மீக நெறியறிந்து சக்தி நிலைபெற்றோரின் சொல்வாக்கும், எண்ணத்தில் பாய்ச்சிடும் விழியின் ஒளி நிலையும் பலிதம் கொள்ளும்.

ஒவ்வோர் ஆத்மாவிற்கும் இப்பேரின்ப சக்தியுண்டு. மகான்களின் நிலையிலெல்லால் இந்நிலையுண்டு. மகான்கள் சென்ற இடமெல்லாம் சிறப்பு. அவர் புண்ணிய பாதம் பட்ட இடமெல்லாம் செழிப்பு. அவரின் பார்வை பட்டாலே புண்ணியம். அவரின் ஆசியினால் பேரின்பம் கிட்டும் என்ற வழித் தொடரிலுள்ள நாம் அத்தொடரினையே அம் மகானின் புண்ணிய நிலையே நம் ஆத்மாவுடனும் கலந்தே, நாமும் அம்மகானைப் போன்ற மகான்கள் ஆகலாம் என்ற உண்மை உணர்ந்து, உயர்ந்த நிலையிலுள்ளோரைத் தாழ்ந்தே வணங்கி, தாழ்ந்த நிலையிலேயே இருந்திடாமல், அவரின் அடிச்சுவட்டைப் பற்றியே, உயர்ந்தே, அவரின் நிலையுடனே,. நிலைபெறும் மகான்களாய், நல் ஆத்மாவாய், நாமும் கலந்திடல் வேண்டும், என்ற உண்மையை உணர்ந்து ஒவ்வொருவரும் வாழ்ந்திடல் வேண்டும்.

அடிமைகொண்டே வணங்கி வாழ்ந்திடுவதல்ல வாழ்க்கை. அன்பு கொண்டே வணங்கிடல் வேண்டும். அன்புடனே அன்பாய்க் கலந்து வாழ்ந்திடல் வேண்டும். நம் வழி முறையும் செயல் முறையும் அடிமை கொண்ட நிலையில்தான், மகான்களின் நிலையையும் பணிந்து, பற்றி வாழ்கின்றனர். மகானுடனே மகானைக் கலக்கும் மனப்பக்குவ நிலையை வளர்த்தே, , இவ்வுலகின் சக்திச் செல்வமான, சக்தி ஆத்மாக்கள் அனைவருமே சக்தி ஜோதியாய்த் திகழ்ந்திடும் உண்மையினை உணர்ந்து, உன்னத வழி பெற்றே மா மகான்கள் ஆகிடுங்கள்.

**5-12-79**

(தியானத்தில் அமர்ந்தவுடன் குருநாதரின் காட்சியும் பின் விவேகானந்தரின் காட்சியும் கிடைத்துப் பின்னர் பல விவேகானந்தர்கள் வட்டமாக அமர்ந்திருக்கும் காட்சி).

காட்சியின் எண்ணத் தொடரின் ஜெபத்தை ஈர்த்தே ஒரு வழியில் எண்ணத்தை நிலைநிறுத்திடும் வழி முறைக்கு வந்திடப்பா. அந்நிலையிலிருந்து சூட்சும உலகின் உண்மை நிலையின் தொடரை வழிப்படுத்திடலாம்.

எண்ணச் சிதறலின் நிலையினைச் சிறுகச் சிறுக ஒரு நிலைப் படுத்திடும் நிலைக்கு வந்திட என் தொடர்பாசிகள் என்றும் உன்னுடன் உள்ளன.

பாடம்:—ஸ்ரீ ராமஜெயம் என்ற மந்திர நாமத்தை ஜெபித்திடும் ஜெபம் பெறும் ஆத்மாக்களுக்கெல்லாம், அம் மா மந்திரத்தின் தெய்வீக, பெரும் சக்திநிலையின் தொடர்பு அவ்வாத்மாவுடனே வந்தடைகிறது. ஸ்ரீ ராமஜெயம் என்ற மந்திர சக்தியின் ஜெப அருளை ஜெபிக்கவே, ஒவ்வோர் ஆத்மாவுக்கும் அச்சக்திநிலை வேண்டுமப்பா.

சொல்லிலும் செயலிலும் ஆத்மீக அறத்துடன் ஜெபித்திடும் அம்மந்திர ஜெபத்தின் நிலையினால், நம் ஆத்மாவிற்கு நாம் அடைந்திடும் நற்பாக்கியத்தை, பேருண்மையின் சக்தியின் ஜெபத்தின் அருளை நாம் பரிபூரணமாகப் பெறுகின்றோம்.

ஸ்ரீ ராமனாய், வால்மீகி முனிவரினால் எழுதப்பட்ட அக்காவியக் கதையில் ஸ்ரீ ராமருக்கு உகந்த குணநிலைகளை அப்பாத்திரத்திற்கு ஏற்றே ஒவ்வோர் ஆத்மாவும் ஸ்ரீ ராமனின் குண நிலைக்கொப்ப வாழ்ந்திட வேண்டும், என்ற ஆசை நெறியில்தான், அன்று அம்முனிவரால் ஜெபம் கொண்டு இயற்றப்பட்ட காவிய சக்தி ஸ்ரீ ராம நாதனின் ஜெபசக்தி.

ஒவ்வோர் ஆத்மாவிற்கும் குடும்பச் சூழ்நிலையில் ஏற்படும் தாய், தந்தை, சகோதர பாசங்கள் வாழ்க்கையுடன் கூடிய எதிர்ப்பு நிலைகள், வாழ்க்கையுடன் உள்ள இயற்கையின் சூழ் நிலைகள், வாழும் நெறி இவற்றையெல்லாம் பிணைத்து, தாய், தந்தையரையே தெய்வமாக்கி, கற்புக்கு நெறி வழியமைத்து, வீரத்திற்குத் தக்க மன பலம் ஏற்றியும் அமைக்கப்பட்ட காவியத்தை வாழ்க்கை நெறியுடன் ஒவ்வோர் ஆத்மாவுமே, வழி வந்திட இயற்றப்பட்ட காவியம். ஸ்ரீ ராமனுக்கு மட்டும் அப்பலமும், செயல் திறமையும், அன்பும், பாசமும் சொந்தமல்ல. ஒவ்வோர் ஆத்மாவுமே ஸ்ரீ ராமனின் குண நிலைக்கொப்ப வாழ்ந்திடல் வேண்டுமென்ற நெறிமுறையின் காவியத்தை, அன்றிலிருந்து பல கோணங்களில் மாற்றப்பட்ட அக்காவியத்தையே, இக்கலியில் நாம் அச் ஸ்ரீ ராமனின் குண நிலையை நெறி வாழ்க்கையாக வழிபட்டே, வழிநடத்தி வந்திடும் மன நிலையுடன் வாழ்ந்து காட்டிடல் வேண்டும்.

இராமர் வாழ்ந்ததாகச் சொல்லிடும் அக்காவியத்தின் பிறப்பிடமான இராமேஸ்வர ஆலயத்தில் வால்மீகியின் சக்தி நிலை இன்றும் செயல் கொண்டு வழி நடக்கின்றது.

அந்நூலின் உண்மை நிலையும் சக்தி நிலையும் இவ்வியற்கையின் சிற்றத்திலிருந்தும், கால நிலையின் மாற்றத்திலிருந்தும், அவ்வாலயம் இன்றளவும் தப்பி வருவதின் உண்மை நிலையே அங்கு ஜெபித்த முனிவர்களின் சக்தியின் நிலையினால்தான்.

அவ்வாலயத்தில் அம்முனிவரின் எண்ண நிலையே சுழல்கின்றது. உள்ளத்தின் சபல நிலை இல்லாமல் ஸ்ரீ இராமேஸ்வரத்தில் இராம தீர்த்தம் பெறுபவரின் உடலுக்கும் உள்ளத்திற்கும் அந் நல்லருளின், ஜெபத்தின் சக்தி பெற்றே வருகின்றனர். இவ்வெண்ணமேதான் ஒவ்வோர் ஆத்மாவிற்குமே வழி தெய்வம். எவ் வழியில் வழி நடக்கின்றதோ, அவ்வழியின் சக்தி நிலை ஒவ்வோர் ஆத்மாவுமே பெறுகின்றது.

எண்ண வழியில், ஆலயத்தில் வழிபடும் முறைகொண்ட சக்தி நம் ஆத்மாவிற்கும் உடனே வந்தடைந்து, அச் சக்தியின் அருள் பெற்று வந்திடலாம்.

ரிஷிகளினால் ஜெபம் கொண்ட ஆலயங்களெல்லாம் அவ்வாலயங்களுக்குச் சென்று, நம் எண்ண வழியைச் செலுத்திடும் நிலைக்கொப்ப, அவர்களின் அருளாசி நம்முடன் வந்து கலக்கின்றது.

பல நிலைகளை ஆண்டவன் ஜெபம் செய்திட நம் ரிஷிகளினால் வழிநடத்தித் தந்திட்ட பொக்கிஷ வழியுடன் வாழ்ந்திடும் நாம், அந் நல்வழியின் தொடரையே நமதாக ஏற்று, ஒவ்வோர் ஆத்மாவுமே ஸ்ரீ இராம நாதம் கொண்ட, ஸ்ரீ ராம ஜெபத்தின் சக்தியுடனே வாழ்ந்து காட்டிடுங்கள்.

நம்முள் உள்ள ஆத்மாவையே ஸ்ரீ ராம ஜெயம் ஆக்கிடுங்கள்

**6-12-79**

வால்மீகி முனிவரால் இயற்றப்பட்ட இக் காவியத்தைக் காலப் போக்கிற்கும், அவரவர்கள் வாழ்ந்த எண்ண நிலைக்கொப்பவும் மாற்றப்பட்ட இக்காவிய நூலைப்போலவே இன்று இவ்வுலகினில் தோன்றிய ஒவ்வொரு நூலும் கால நிலையில் எண்ண நிலைக்கொப்ப மாற்றம் கொண்ட உருவில் வந்த நிலைதான் இன்றுள்ள பல உண்மை நூல்களின் நிலையெல்லாம்.

இயேசு கிறிஸ்து இயற்றியதாக பைபிளை வெளியிட்டு அவ்வுருவில் அவரின் செயலை வெளிப்படுத்துகிறார்கள். எழுதியவர் யார்? வழிப்படுத்துபவர் யார்? இவ்வுலகம் எந்நிலையில் உருப்பெற்றது? மனித ஆத்மாக்கள் தோன்றிய நிலையையே ஆதாம், ஏவாள் என்ற இருவரால் மனித வர்க்கம் வளர்ந்தது என்கின்றனர். அப்படி இருக்க இயேசு கிருஸ்துவின் உண்மையின் சக்தியான அன்பு, ஆசையுடன் கூடிய எல்லா உயிரினங்களையும் ஒன்றுபோல் அன்புபடுத்திய அவ்வுடலில் ஏறிய மகானின் சக்தியையே பைபிளின் நிலையினால் உயிரணுக்களை உணவாக்கி உண்டிடும் நிலையில் அம் மகான் இருந்தார் என்று உணர்த்துகின்றனர். அவரது சக்தி நிலையில் பொறுமை கொண்டவரின் எண்ணத்தினால் அம் மகானின் உடலையே அழித்து, அன்று வாழ்ந்த மக்களின் எதிர்ப்பிலிருந்து மீள, இவர்களாய் அவர் வாழ்ந்த காலத்தில் வெளியிட்ட சக்திச் சொல்லை, பிறர் ரூபத்தில் வெளியிட்டதின் நிலைதான் இன்றைய பைபிளின் நிலை.

நீங்கள் புசித்திடும் அனைத்துமே அணுக்கள்தான். ஒன்றை அழித்து ஒன்று வாழ்கின்றது என்பதனைத்தான் முன் பாடத்தில் உணர்த்தியுள்ளேன்.

உயிரணுவாய் வளர்ச்சி பெற்று மனித ஆத்மாவாய், பல எண்ணங்களுடன் பல ஜென்மங்கள் பெற்று, இவ்வெண்ண நிலையில் வந்திட்ட மிருகத்தின் நிலையையே உணவாக உண்டிடும் நிலையினால் நாம் இவ்வுடலுடனும், ஆத்மீக நெறியுடனும், நல் நிலையில் உணர்வு பெற்று மனித ஆத்மாக்களாய் உள்ள நிலையில், நம்மிலிருந்து கீழ் நிலைக்குச் சென்றிட்ட எண்ண அணுக்களின் பிம்ப உடல்களைச் சமைத்து உண்ணும் பொழுது, நம் எண்ணமுடன் நம்மைக் காட்டிலும் பல எண்ண நிலைகளுடன் வாழ்ந்திட்ட அணு சக்திகள், நம் உடலில் ஏறி, நம் நிலையும் அவற்றின் நிலையுடன் சென்றிடும் நிலையிலிருந்து தப்புவதற்குத்தான் நம் உணவுடன் நாம் இம் மாமிச உணவுகளிலிருந்து மாறுகொண்ட உணவை உண்டிட்டால் நம் உடலுடன் பல தீய சக்திகளின் நிலைகள் ஏறாமல் காத்துக் கொண்டிட முடியும்.

அனைத்துமே அணுக்கள்தான். அணுவில் வந்த கனியும் ஒன்றுதான், பட்சிகளும் ஒன்றுதான். எண்ண நிலையை ஒரு நிலைப்படுத்திய பிறகு பட்சியைப் புசிப்பதுவும், கனியைப் புசிப்பதுவும் ஒன்றேதான்.

இயேசுபிரான் தான் வாழ்ந்த காலத்தில் அவர் உடலில் ஏறிய அம் மகானுக்கு அனைத்துமே ஒன்றேதான். அன்புடன் அளித்திட்ட உணவு வகைகளை மறுத்திடாமல் எல்லாமே ஒன்றாய் எண்ணிப் புசித்திட்டார்.

பாமர ஜென்மங்களாய் வாழ்ந்திடும் நாம் ஆத்மீக நெறி வழியில் ஆண்டவனின் சக்தி பெற்ற ஜோதிகளாய் வந்திட நம் ஆத்மாவுடன் நாம் வாழ்ந்திடும் இவ்வுடலில் மற்ற அணுக்களின் எண்ணத்தாக்குதலில் இருந்து மீளத்தான் சில வழி முறைகள்.

எண்ணத்தை ஒரு நிலைப்படுத்தி அவ் ஓங்கார இசையுடன் இவ்வுலகுடனே கலந்திட்ட சக்தி நிலையில் நிலைபெறும் பக்குவம் வந்தடையும் நிலை எய்தத்தான் நம்மைத் தீய சக்திகள் தாக்காம லிருக்கச் சில வழி முறைகளைக் கைக்கொள்ளல் வேண்டும்.

**7-12-79**

இன்றைய இப்பூமியின், பூமத்திய ரேகையின், நேர் கோட்டை வைத்து, அந்நிலையில் இன்றைய விஞ்ஞானிகளால் இவ் வானமண்டலத்தின், வான இயல் நுட்பக் கருவிகளை வைத்து, இப்பூமியில் ஏற்படும் இயற்கையின் மாற்றத்தைக் கண் டறிவதைப் போல், இப்பூமத்திய ரேகையின் மையத்தில், இப் பூமியின் உள்பாகத்தில், சில நிலைகளைச் செய்வித்தால், இப் பூமி ஈர்த்து வெளிப்படுத்தும் சுவாசத்தின் தன்மையைக் கொண்டு, இப்பூமியில் தற்பொழுதும் இனி நடக்கப்போகும் காலத்தின் இயற்கையின் சீற்றத்திலிருந்து, எந்தெந்த இடங்களில் நிகழப் போகும் பெரும் மாற்றத்தைக் கண்டறிந்து அந்நிலைகளிலுள்ள ஆத்மாக்களைக் காத்திட முடிந்திடும்.

வான நிலையில்தான் இவர்களின் ஆராய்ச்சி நிலை உள்ளது. இப் பூமி வெளிப்படுத்தும் நிலையிலிருந்துதான், இப்பூமியைச் சுற்றியுள்ள வான நிலையும் உள்ளது. வளர்ந்திட்ட விஞ்ஞானத் தின் சக்தியறிந்த ஆத்மாக்களினுல், அவர்களின் சக்தியையே செயல் கொண்டு காத்திடும் நிலைப்படுத்திடும் ஆத்மீக நெறியை யும் கலக்கவிட்டே, செயல் கொண்டிடும் விஞ்ஞானத்திற்கு இவ் வுலகையே செயலாக்கிடும் சப்த ரிஷிகளின் சக்தி கொண்டு மனித உடலுடன் உள்ள விஞ்ஞான ஆத்மாக்களினுல், இவ்வுலகை, இக் கலியின் கடைசி மாற்றத்திலிருந்து காத்திடும் சக்தி நிலை உண்டு.

ஒவ்வோர் ஆத்மாவிற்குமே ஆதி சக்தியின் செயல் சக்தி அனைத்தும் உண்டு. செயல்படுத்திட்டால் அச் சக்தியுடன் கலந்தே செயலாக்கிட முடியும்.

இன்று சஞ்சிகையில் சில நிலைகளில் கண்டிடும் சில இயற்கை யின் சக்தியையே பல ரூபப்படுத்தி, சஞ்சலம் கொண்ட நிலையில் மறைத்தும், திரித்தும் உண்மையினை வெளியிடாமல் சில நிலைகளை வெளிப்படுத்துகின்றனர். சஞ்சிகையில் வெளி வந்ததை எச் சஞ்சிகை, எந் நாள் என்றே இதில் எழுதிடுங்கள்.

8-12-79

(5-12-79 தேதியில் தினமணி சஞ்சிகையில் வெளிவந்த செய்தி:—பறக்கும் தட்டு தூக்கிச் சென்ற வாலிபர் திரும்பினர்..

பாரிஸ் (பிரான்ஸ்) டிச. 4—சென்ற மாதம் பறக்கும் தட்டு தூக்கிச் சென்றதாகக் கூறப்பட்ட வாலிபர் நேற்று மீண்டும் அதே இடத்தில் தோன்றினர்.

சென்ற மாதம் 26ஆம் தேதி பாரிஸுக்கு மேற்கு செயிண்ட் குன் பகுதியைச் சேர்ந்த பான்டைன் என்ற 19 வயது வாலிபரும் அவரது இரு நண்பர்களும் தங்கள் வீட்டு வாசலில் துணிப் பெட்டிகளை ஏற்றிக்கொண்டிருந்தனர். அப்போது காருக்குச் சிறிது தூரத்தில் ஒளியுடன் கூடிய பந்து போன்ற ஒரு பொருள் தெரிந்தது. அது வரவர மிகப் பெரிதாகிக் கொண்டே வந்தது. அதன் ஒளியும் கண்ணை எரிக்கும் அளவுக்குப் பிரகாசமானது. கார் அருகே இப்பொருள் வந்தபோது பெரிய பந்து போன்று இருந்தது. பான்டைன் மட்டும் நின்றுகொண்டிருந்தார். மற்ற இருவரும் இதை 'போட்டோ' எடுக்க வீட்டிற்குள் ஓடினர்.

கேமிராவுடன் திரும்பி வந்தபோது, பான்டைனைக் காணோம். காரைச் சுற்றி ஒரு பிரகாசமான ஒளி இருந்தது. பின் அதுவும் மறைந்தது.

தகவல் அறிந்த பிரெஞ்சு போலீசார் உடனடியாக பான் டைனைத் தேடுவதில் முனைந்தனர்.

பறக்கும் தட்டு இறங்கிய இடத்தில் கதிரியக்க சோதனையை போலீசார் நடத்தினர். அங்கு கதிரியக்கம் இல்லை என்று கண்டு பிடிக்கப்பட்டது.

பான்டைனுடைய இரு நண்பர்களையும் போலீசார் தீர விசாரித்தனர். இதற்கிடையே எந்த இடத்தில் பறக்கும் தட்டு பான்டைனை எடுத்துச் சென்றதாகக் கூறப்பட்டதோ அதே இடத்தில் நேற்று அவர் தோன்றினர்.

பறக்கும் தட்டு எடுத்துச் சென்ற அன்று என்ன உடை அணிந்திருந்தாரோ அது சிறிது கூடக் கலையாமல் இருந்தது. இவர் பையில் வைத்திருந்த பணம் அப்படியே இருந்தது.

தாம் பறக்கும் தட்டால் எடுத்துச் செல்லப்பட்டதைக் கூறும் பான்டைன் அதற்குப் பின் ஒரு வாரத்தில் என்ன நடந்தது என்று தெரியவில்லை, திடீரென்று தாம் பழைய இடத்தில் இருப்ப தாகத் தெரிய வந்தது என்று கூறினர்.

இது பற்றி ''இனம் புரியாத பறக்கும் பொருட்கள்'' பற்றி ஆராயும் பிரெஞ்சு விண்வெளி விஞ்ஞானிகளிடம் தெரிவிக்கப் பட்டுள்ளது.

இவ்வினவுக்குண்டான பதில்:—

பந்து போன்ற அவ்வொளி பிறரால் ஏவப்பட்ட பறக்கும் தட்டு என்ற சாதனமல்ல. இப்பறக்கும் தட்டு என்று பீதி கொண்ட நிலையில் எண்ணம் கொண்ட இச்செயல், எந்நிலையில் ஏற்படுகின்றதென்பதனை உணர்ந்திடல் வேண்டும்.

இம் மனித ஆத்மாவிற்குப் பல அமில சக்திகளைத் தன்னுள் ஈர்த்து, மனித பிம்பமாய் வாழ்ந்திடும் சக்திநிலை யுண்டு. அணுவி லிருந்து பல நிலை மாறி, மனித ஆத்மாக்களாய் வாழ்ந்திடும், இப் பிம்ப சக்திகளுக்குத் தாவர வர்க்கங்களைப் போன்றும், மற்றைய கனி வளம், திரவங்கள் இப்படித் தனித்த ஒரு நிலைகொண்ட ஈர்ப்பு சக்தியிலிருந்து, மாறு கொண்ட அனைத்து அமிலங்களையுமே தன் எண்ணத்திற்குகந்த எவ் வமிலத்தையும் ஈர்க்கும் சக்தி நிலை மனித ஆத்ம பிம்ப உடலுக்குண்டு.

நம்மைச் சுற்றியுள்ள நம் பூமியும், நம் பூமியுடன் தொடர்பு கொண்ட மண்டலங்களின் சக்தியும், நம் சூரியனின் சக்தியி லிருந்து வந்திடும் அணு பிம்பங்களின் தொடர்பினால் இம் மனித ஆத்மாவை எந்நிலைக்குகந்த ஒரு நிலைகொண்ட அணு சக்தியையே, இவ்வெண்ணத்திலேற்றி, இவ்வெண்ணத்தின் தொடர்பினால், ஈர்த்து வெளிப்படுத்தும் சுவாசத்தின் சக்தியினால், இன்று ஒரு நிலைகொண்ட ரிஷிகளின் நிலையைப் போல் உடலையே ஒளியாக்கி ஆவி பிம்பமாய், ஜோதியாய் செயல்படுத்திட முடிந்திடும்.

ஒவ்வோர் உடலையுமே இப் பிம்ப நிலை தெரியாமல், ஒளி யுடன் ஒளியாகப் பறந்த நிலைப்படுத்திட முடிந்திடும். இன்று அங்கு நடந்திட்ட இந்நிலை விஞ்ஞானத்தில் வழி வந்த சித்துநிலை பெற்றோரின் சக்திநிலை செயல் கொள்கின்றது. சித்துநிலை பெற்ற விஞ்ஞானியினால் தன் உடலையே ஒரு நிலைகொண்ட அமிலத்தை ஈர்த்து, தன் பிம்பத்தையே ஒளிப்படுத்தி, அவ்வொளியுடனே மற்ற ஆத்ம பிம்பத்தையும் ஒளிப்படுத்தி, தன்னுள் ஈர்த்து, தான் அடைந்த ஒளிபெறும் சக்தியின் நிலையினால் தன்னுள் சேர்த்த மற்ற ஆத்ம உடலையும் அந்நிலையிலேயே ஈர்த்திடும் ஆராய்ச்சி நிலையில் நடந்த நிலைதான் அங்கு நடந்த நிலை.

ஆவியின் தொடர்பு கொண்டு மனோவசியம் செய்வதைப் போல், ஆத்ம பிம்பத்தையே ஒளிப்படுத்தி மற்ற ஆத்ம பிம் பத்தையும் தன்னுள் ஈர்க்கும் நிலைதான் அங்கு நடந்ததின் நிலை.

விஞ்ஞானத்தின் செயலெல்லாம் இயற்கையுடனும், மற்ற அணுக்களின் தொடர்புடனும் செயற்கையாய் செயல்பட்டு விளை யாடியது, இப்பூமியில், இக்கலியில். இன்று இவ்விஞ்ஞான வழி வந்த சித்து நிலையினால் ஆத்மாவுடன் ஆத்மாவை இணைக்கும் ஒளி நிலை விளையாட்டு நிலைக்கு வந்துள்ளது.

பிம்பத்தையே ஒளியாக்கிடும் சக்தி பெற்றவன், அந்நிலையின் சக்தித் தொடரைச் செயல்படுத்திட, மற்ற ஆத்மாவை ஈர்த்து ஏன் செயல் கொண்டிட வேண்டும்?

மனித ஆத்மாக்களின் எண்ணத்தையே கலக்கம் கொண்டி டும் நிலைக்கு, தான் பெற்ற சக்தியை விரயம் ஆக்கிடாமல், இன்று, இப்பூமியில், இவ் இந்தியாவில் கோயில்களை நம் சித்தர்களினால் செயல்படுத்திடும் புண்ணிய ஸ்தலப்படுத்தி, அங்கு பக்தி நெறியில் வந்திடும் ஆத்மாக்களுக்கு, ஒளியுடனே ஒளியாக மற்ற ஆத்மாக்களுக்கு, தான் பெற்ற சக்தியை, ஒளியின் வழியில் நல்லருளைப் பாய்ச்சிடும் நம் சித்தர்களின் வழியையே தான், மாற்று வழியில் செயல்படுத்துகின்றனர். அவ்வெண்ணத் தின் தொடர்புடனே அவ்வழியில் வந்த அவ் விஞ்ஞானச் சித்த னும். இங்குள்ளதைப்போல் பக்தி நெறிகொண்ட கோயில் நிலை அங்கில்லாததின் நிலையினால் வந்த விளையாட்டு நிலையது.

இன்று பல கோடி பக்தர்கள் மகர விளக்கின் ஜோதியைக் காணச் சபரி மலைக்கு யாத்திரை செல்கின்றார்கள். நம் ஐயப்பனால், தன் உடலையே ஜோதியாக்கி, பக்தர்களின் ஆர்வத் திற்கெல்லாம், அப் பக்தி நிலையில் அருள் அளித்திட ஜோதியின் ஜோதியாய் தன்னையே ஜோதியாக்கி அனைத்து ஆத்மாக் களுக்குமே, அஜ் ஜோதியின் சக்தியைக் கலக்க விடுகின்றனர், நம்மில் வந்திட்ட, நாம் ஆண்டவன் என்று வணங்கிடும் அவ் ஐயப்ப சுவாமிகள்.

**9-12-79**

இப்படித் தெய்வ நிலைகொண்ட ரிஷிகளின் சக்தியினால் இப் பூமியின் நிலையில் இன்று வாழ்ந்திடும் மனித இன வர்க்கத்தின் தொடர் நிலையை, இக்கலியில் மாறப்போகும் இப்பூமியின் நிலை யில், அடுத்த கல்கியில் வந்திடும் உயிரினங்களின் சக்தியை, இன்று வாழ்ந்திடும் எண்ண நிலைகொண்ட ஆத்மாக்களின் சக்தியைக் காட்டிலும் வளர்ச்சியுற்ற நிலை வரப்போகின்றது.

இப்பூமி தோன்றிய நாள் தொட்டு, இம் மனித ஆத்மாக்க ளாய் வளர்ச்சி கொண்டு வாழ்ந்திட்ட நிலைகள், மாறி மாறிப் பல தடவை (மூன்று) ஏற்பட்டுள்ளன.

இப்பூமி தோன்றிய நாள் கொண்டு பல கோடி ஆண்டுகளுக் குப் பிறகுதான் இயற்கையின் தாவர வர்க்கத்திலிருந்து மாறு கொண்ட உயிரினங்கள் வளர்ச்சி பெற்றன.

பல கோடி ஆண்டுகளுக்குப் பிறகுதான் மனித உடல் கொண்ட ஆத்ம நிலை வந்தது. அந்நிலையின் வளர்ச்சி கொண்டு, இப்பூமியின் பிரளய நிலை மாறி மற்ற நிலை வந்தபொழுதும் ஆரம்ப நாளில் இப்பூமியில் தோன்றிய உயிரணுக்களின் நிலைக்கும் இரண்டாவது மாற்றம் கொண்டு வளர்ந்திட்ட உயிரணுக்களின் நிலைக்கும் மாறு கொண்ட நிலை வந்தது.

அந்நிலையின் தொடர்ச்சியில் பல கோடி ஆண்டுகள் இப்பூமி யின் தொடர்ச்சி நிலை இருந்தது. ஒவ்வொரு மாற்றம் கொண்ட நிலையிலும், இப்பூமியின் நிலையும், உயிரினங்களின் நிலையும். இப் பூமியில் வளர்ந்த தாதுப் பொருட்களின் நிலையும் மாறி மாறித் தான் வந்துகொண்டுள்ளன.

இன்று நம் பூமியில் பல நிலைகொண்ட உலோகங்கள் சில சில இடங்களில் வள்ர்ந்து வருகின்றன. ஆனால் உலோக சக்தியிலேயே உருளுகின்ற மண்டலங்கள் சில உள்ளன. மற்ற அமில நிலைகளை ஈர்க்காமல் ஒரு நிலைகொண்ட, ஒரே அமில சக்தியின், சக்தியை மட்டும் ஈர்த்து வளருகின்ற சிறிய மண்டலங்கள் சில உள்ளன. நட்சத்திர மண்டலமாக உருளுபவை நிலையெல்லாம் இந் நிலையில் தான் பெரும்பாலும் உள்ளன. மாற்றம் கொண்ட மண்டலமும் உண்டு. இப்பூமியின் நிலைக்கே வந்திடுவோம்.

நம் பூமியில் மாறி மாறி வந்திடும் இப் பிரளய நிலையில் உயிரினங்களும் மாற்றம் கொண்டே சுற்றி வருகின்றன. உயி ரினங்கள் சுவாசித்து வெளிப்படுத்தும் நிலைக்கொப்ப அவற்றின் சக்தி நிலையுள்ளது. இப்பூமி ஒவ்வொரு தடவையும் மாற்றம் கொண்டு சுழலும் நிலையில், இப்பூமியின் சுவாச நிலையும் மாற்றம் கொண்ட நிலையின் தொடரினால், அந்நிலையிலிருந்து வளர்ச்சியுறும் இன வர்க்கங்கள் அதற்குகந்த நிலையில்தான் வளர்கின்றன.

மாறப்போகும் இப்பூமியின் பிரளயத்தினால் அடுத்த கல்கி யில் வந்திடும் உயிராத்மாக்களின் வளர்ச்சி நிலை இன்னும், இன் னும் என்பது இன்றுள்ளதைக் காட்டிலும் சக்தி கொண்டதாய் வந்திடும்.

ஆரம்ப நாளில் உலகம் தோன்றிய நிலையிலிருந்து பல பிரளய நிலை ஏற்பட்டு அன்று தோன்றிய உயிரினங்கள் அன்றி லிருந்தே எவையுமே அழிந்திடாமல், பல எண்ண நிலையில், சக்தி

நிலையின் தொடர்பு கொண்டு இன்றளவும் என்றென்றும் வாழ்ந்து கொண்டேதான் உள்ளன.

இன்று நீங்கள் பல புராணக் கதைகளைக் கேட்டு வருகின்றீர் இவற்றின் நிலையெல்லாம் என்ன? இப் பிரளயம் நடப்பதற்கு முந்தைய வாழ்க்கையில் நடந்த நிலைகளை அவ்வாத்மாவின் தொடர் கொண்டு வந்திட்ட அடுத்த பிரளயத்தில் சக்தி கொண்ட நிலை பெற்றவர்களின் எண்ணத்தில் உதித்திட்ட நிலைகள்தான், இன்று நாம் நம்பமுடியாமல் கேட்டிடும் புராணக் கதைகளெல்லாம்.

எவ்வெண்ணமும் முன்தொடரில்லாமல் வருவதில்லை. கனவுகளில் பல நிலைகளை, வாழ்க்கையில் நடப்பவைக்கும், கனவில் காண்பவைக்கும் மாறுபட்டுக் காண்கின்றோம். எவையுமே பொய் யல்ல. இன்று நாம் வாழ்ந்திடும் இந்நிலையே இவ்வழியா ஆத்மா விற்கு இவ்வுலகம் எத்தனை பிரளய நிலை ஏற்பட்டுச் சுற்றிக் கொண்டு வந்தாலும், இவ்வெண்ணமும், இவ்வெண்ணத்தின் கலப்பினால் நாம் கண்டு, பேசி, வாழ்ந்திடும் நிலையெல்லாம் நம்மைத் தொடர்ந்து கொண்டேதான் வரும்.

**10-12-79**

மாறப்போகும் இஜ் ஜீவ உடலையோ, மாற்றம் கொண்டு சுழலப்போகும் இப்பூமியின் நிலையையோ, சலிப்பு நிலைப்படுத்தி எண்ணத்தை வளரவிடாமல், நம் ஆத்மாவின் உயர்ந்த நிலையை உயர்த்திடும் எண்ணத்தில் செயல்கொண்டு நடந்திடல் வேண்டும்.

(காட்சி:—குருநாதர் நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் காண பித்தல்).

பூமி ஆரம்ப நாள்தொட்டு வந்திட்ட உயிரணுவாய், உயி ராத்மாவாய், நற்ஜோதியின் நல்தெய்வங்களெல்லாம் இப்பூமி யில் ஒவ்வொரு பிரளயத்திலும் பல நிலைகளில் வாழ்க்கையுடனும் சூட்சுமத்திலும், ஒவ்வொரு நிலையிலும் வாழ்ந்து, அந்நிலையின் தொடரினால், இன்றளவுமுள்ள, நல் நிலையில் வந்திட்ட, நல் ஆத்மாக்களின் சக்தி நிலையின் தொடர் சூட்சும உலகத்தில் இருந்துகொண்டே, இன்று பல நிலைகளுக்கு நல் ஆத்மாக்களாய், பலரை ஈர்க்கும் நிலைகொண்டு செயல்படுகின்றன. இன்று இவ் வுலகில் இவ் இந்தியாவில்தான் ஞானிகளும், சித்தர்களும் வழி வந்ததின் நிலை அதிகம். இவ்வுலகனைத்துமே இவ் இந்தியாவில் இருந்துதான் பல சித்தர்கள் சென்று ஆத்மீக வழியை வழி நடத்தினார்கள்.

இயேசுகிருஸ்து இந்தியாவில் சில இடங்களில் வந்து வாழ்ந்து சென்றார். முகமது நபியும் இவ்விந்தியாவில் வந்து வாழ்ந்தவர்தான். புத்தரின் நிலையும் அதுவே.

இவ் இந்தியாவை உயர்ந்த எண்ணத்தில் காட்டல் வேண்டும் என்ற நிலையில் விளக்கவில்லை. இப்பூமியில் உள்ள அனைத்து நிலைகளும் பொதுவானவையே. ஆத்மீக நெறியில் தொடர் நிலை, வழி வந்த முதல் நிலை இங்குதான். ஆனால், இன்று நாம் எல்லாரும் முருகராய் வழிபடும் அப்போகரின் ஆரம்ப ஞான சித்துநிலை பெற்ற இடம் சீனாவில்தான்.

இன்று, இன்றைய மக்களினால் பிரித்த நிலைதான் சீனா, இந்தியா என்ற நிலையும். அந் நிலையில் வழிவந்தவர்தான் நம் போகர். போகர் சித்து நிலையின் தொடர்நிலையில், சூட்சுமத்தில் செயல் கொண்டிடும் சக்தி பெற்ற பிறகு, இன்று மெக்கா, மதீனா என்று புண்ணிய யாத்திரை ஸ்தலமாகச் சென்றிடும் இடத்தில், இதே நம் போகர்தான் முகமது நபியின் நாமத்தில் செயல் கொண்டு அந்நாட்டில் இப்பக்தி நிலையை அல்லா என்னும் நாமத்தில் வளரவிட்டார்.

இன்றைய புண்ணிய ஸ்தலமாய் செயல்கொண்டு துதித்திடும் அம் மெக்கா, மதீனாவின் (காட்சி—யானைச் சிலையின் மேல் லிங்க ஜோதியின் காட்சி) திரைகளுக்குள் பூஜிக்கும் சக்தி நிலை என்ன?

பல கோடி மக்கள் தரிசிக்கச் சென்றிடும் அந்நிலையிலுள்ள திரையின் மர்ம நிலையென்ன? ஆண்டவனின் சக்தி நிலை ஒன்றே. இஜ் ஜாதி, இனம் போர்வையில் வழி வந்ததின் நிலைதான் இன்றுள்ள நிலை. அங்குள்ளவர்கள் சிலருக்கு மட்டும் உண்மையின் நிலை புரியும்.

அல்லாவாய் அங்கு செயல்படுத்துபவர் யாரென்ற நிலையில் (காட்சி—மேடையில் ஜிப்பா அணிந்து தலையில் துணியுடன் ஒரு பெரியவர் காட்சியளிக்கின்றார்; புன்னகைத்தே தலையை மட்டும் அசைக்கின்றார்) (காட்சி—பெரிய வேல் எதிரில் வந்து நிற்கிறது).

யாரென்று எண்ணுகின்றீர்? அல்லாவாய் செயல்கொண்டவரும் முருகனாய் வழிவந்தவரும், இன்று இலங்கையில், கதிர்காமத்தில் சில நிலைகளைச் செய்தவரும், அனைவருமே ஒரே சக்தி நிலை கொண்ட போகரின் நிலைதான். சூட்சும நிலையில் எவ்வுடலையும் தனதாக ஏற்கும் சக்திபெற்ற போகரினால், பல நாடுகளில் அவரது எண்ணத்தின் செயல், ஜோதி சக்தி இன்றும் செயல்கொண்டு வருகின்றது. அவர் வாழ்ந்த ஒவ்வொரு சூட்சும நிலையிலும் பல

போதனை சக்திகளை வளரவிட்டு, சக்தியளித்துச் செயலாக்கியுள்ளார். ஜாதகம், நாடி, மருத்துவம் இப்படிப் பல நிலைகளைச் சித்து நிலைகொண்ட நாளிலேயே படரவிட்டுள்ளார். இன்று இவ்வுலகெங்கும் வெடி நிலையை ஆரம்பித்தவரே நம் போகர்தான். ஒன்றுடன் ஒன்று மோதவிட்டு வெடி நிலையினால் பல நிலைகளை ஆரம்ப நாளில் செயலாக்கிக் காட்டியவர் நம் போகர்தான்.

சித்துநிலையில் அவர் அறிந்த நிலைதான் இன்று இவ்வுலகம் முழுதும் பரவியுள்ள மருத்துவ நிலையும். அந்நிலையின் தொடரை வைத்துத்தான் இன்றைய வளர்ச்சி நிலையெல்லாம். அவர் சீனாவில் வாழ்ந்த நாளில்தான், சூட்சுமத்தின் ஆரம்ப நிலையில், பல நிலைகளை முதல் முதலில் செயலாக்கி வெளிப்படுத்தினார். அன்றே பல சக்தி நிலையை சித்துநிலையினால், சூட்சும நிலை பெறும் நிலையெல்லாம் அறிந்து, செயலாக்கிய நம் போகர், இன்று 'முருகா' என்ற மந்திர ஜெபம் கொண்டே, அழியா உடலுடன் பழனி மலையில் ஆண்டவனின் சக்தியாய், மந்திர ஜெபத்துடனே தன் சக்திநிலையைச் செயலாக்கி வருகின்றார்.

இந்நிலைபோன்றே இவ்வுலகம் தோன்றிய நாள் தொட்டு தன் சக்தியைச் செயல்கொண்டு வந்திடும் நல் ஆத்மாக்களெல்லாம், இக்கலியில் வாழ்ந்திடும் பிம்ப நிலை கொண்ட ஆத்மாக்களை நல்லுணர்வு கொண்டு வந்திடும் சக்தி நிலைக்கு அழைத்துச் சென்றே இம் மாறப்போகும் கலியின் பிடியிலிருந்து மீட்டே கல்கியில் நல் ஆத்மாக்களாய் செயலாக்கிட அழைத்துச் செல்கின்றனர்.

**11-12-79**

இன்றும் இக்கலியில் ஆத்மீக நெறியும், நல்லொழுக்கம், அன்பு, பாசம், பக்தி, தர்மம், நியாயம், சமத்துவம் இப்படி நல்லுணர்வுகளும் சத்தியத்துடன் வளர்ந்து கொண்டுதான் உள்ளன.

இந்நிலையில் வாழும் ஆத்மாக்களின் நல்லுணர்விற்காகவே, இப் பூமியின் நிலை இன்றளவும் நிலைத்துச் செயல்படுகிறது. எண்ணத்தில் நல் சக்தியும் தீய சக்தியும் உள்ள நிலையில், நல்லுணர்வைக்காட்டிலும் தீய உணர்வின் வழி நிலைதான் பெருகும் நிலையில் உள்ளது.

இன்று வாழ்ந்திடும் மனித ஆத்மாக்கள் மட்டுமல்ல, தீய உணர்வுடன் வாழ்வது. இவ்வுடலை விட்டுப் பிரிந்த ஆத்மாக்களிலும் தீய சக்தி நிறைந்த எண்ண நிலைகள்தான் நல்லுணர்வைக் காட்டிலும் பெருகிய நிலையிலுள்ளன.

ஆவி உலகிலும் நல்லுணர்வு கொண்ட ஆத்மாக்களின் நிலை யுண்டு. வாழும் மனித ஆத்மாக்களிலும் இந் நல்லுணர்வின் நிலை உள்ளதினால்தான், நம் ரிஷிகளின் சக்திநிலை இன்றளவும், இப் பூமியின் நிலையைக் காத்தருளும் நிலையில் செயல்கொண்டு நடக் கின்றது.

இன்றைய விஞ்ஞானத்தினால் செய்து வைத்துள்ள அணு குண்டுகளும், விஷ மருந்துகளும் நிறைந்துள்ள இந்நிலையிலும், ஒரு நொடியில் அனைத்துமே மாற்றம் கொள்ளும் விஷ சக்தியை இயற்கையின் தாக்குதலிலிருந்தும், மனித எண்ணத்தின் விஷ நிலையை மோதவிடும் நிலையிலிருந்தும், இவ் உலகில் இன்றும் நல்லுணர்வு உடையோர் வாழ்வதினால். இவ்வுலக நிலையே நம் ரிஷிகளினால் காக்கப் பெற்று வருகிறது.

நல்லுணர்வையே உலகெங்கும் பரப்பிடும் நிலைக்காக, பக்தி நிலையை வளரவிட்டதின் நிலையே, இன்று, பக்தியையே தன் பேராசைக்கு உகந்த சக்தியாக, நாடும் நிலையாக, இன்றைய எண்ண நிலை உள்ளதினால், இப்பூமிக்காகவும், இப்பூமியில் வாழ்ந்திடும் உயிராத்மாக்களுக்காகவும், தன் சக்தி நிலையைச் செயல்படுத்திய, நம் ரிஷிகளின் சக்தி நிலைதான் செயல்படாமல் மீட்டுச் செல்லும் நிலைக்கு இன்று வந்துள்ளது.

மீட்டுச் செல்லும் நிலையென்பது, இம் மாறப்போகும் கலி யில் வாழ்ந்திடும் மனித ஆத்மாக்கள், இக்கலியுடனே, ஈன நிலை பெற்று, கல்கியின் ஆரம்ப நிலை, உயிரினமாகிப் பல நிலைகளை எய்தி, பல கோடி ஆண்டுகள் இவ்வெண்ண சக்தியுடனே அல்லல் கொண்டு, மனித ஆத்மாக்களாய் ஜீவன் பெற நடக்கும் கால நிலையை எண்ணத்தில் கொண்டு, இக்கலியிலேயே நமது மனித ஆத்மாவை, மனிதனாய், ஞானியாய், சித்த அருள் பெற்று, சூட்சும நிலைக்குச் சென்றிடச் செயல்கொண்டிடும் நிலைதான் இன்றுள்ள நம் ரிஷிகளின் செயல் நிலை.

இந்நிலையை உணர்ந்தே மாறப்போகும் இக்கலியின் நிலையை எண்ணத்தில் கொண்டு, இவ்வெண்ண சக்தியினால் செயல் கொண்டே வாழ்ந்திடுங்கள்.

**12-12-79**

இவ்வெண்ண நிலைப்படிதான் அனைத்து நிலைகளையும் இன்று உணர்த்தி வந்தேன். இந்நிலையில் சூட்சும நிலையை இங்கு, இன்று உணர்த்துகிறேன்.

முன் பாட நிலைப்படி மகிழ்ச்சியாக உள்ள இடத்தில் அனைவ ரின் எண்ண நிலையும் மகிழ்ச்சி கொண்டதாகவும், துக்கம் அனுஷ்

டிக்கும் இடத்தில் அந்நிலைக்கொப்ப அனைவரின் நிலையிலுமே, அவ் வெண்ண நிலை சாடும் என்றுணர்த்தினேன்.

இவ்வெண்ண நிலையின் சுவாசநிலைகொண்டுதான், இன்றைய கைரேகை, ஜோதிட நிலையும், மனோவசிய நிலையும் உள்ளன.

அந் நிலையிலுள்ளோர் (மனோவசியம் செய்பவர்) தன் எதிரில் அமர்ந்துள்ளவரின் எண்ணத்துடன் தன் எண்ணத்தை ஒரு நிலைப் படுத்தி, அவரது எண்ணத்துடன் ஈர்க்கும் நிலையில் மனோவசியம் செய்யப்படுபவரின் அனைத்து நிலைகளுமே இச்செய்யப்படுபவருக்கு, இவரின் எண்ணக் கலவையுடன் வந்து மோதி அனைத்து நிலைகளும் அறிகின்றனர்.

இந் நிலை அறிபவர்கள் மற்ற ஆவியின் தொடர்பை வைத்து ஈர்க்கும் சக்தியைச் செயல்படுத்துகின்றனர். ஆனால் நம்மில் உயர்ந்த ரிஷிகளின் நிலையும், இவ்வெண்ண சக்தியின் சக்தி நிலைத் தொடர் கொண்டுதான், அவர்கள் சூட்சும நிலைக்குச் சென்றதின் நிலையும்.

இவ்வுலகினில் பிறந்திட்ட அனைவருக்குமே ஒவ்வொரு நிலையான எண்ணக் கலவையின் வாழ்க்கை நிலையுண்டு. அவ்வழியில் நல்லுணர்வுகொண்ட சக்தி நிலையின் எண்ணக் கலவையுடன் வாழ்க்கையில் வழி வந்தவர்களின் நிலையிலிருந்துதான் இவ்வுலகம் தோன்றிய நாள் கொண்டே பல சக்தி நிலையை இவ்வெண்ணத் துடனே ஈர்த்து, இன்று ஆண்டவனுய்ச் செயல்படுகின்றனர். இம் மனித ஆத்மாவாய் நம்மைப் போன்ற நிலையில் வந்தவர்கள்.

எண்ணமுடன் தீய சக்தியை வளரவிட்டவர்களின் நிலையைத் தான் எந் நிலைக்குச் சென்றிட்டவர் என்று முன் பாட நிலையிலேயே உணர்த்தியுள்ளேன். நல்லுணர்வின் வழி வந்தவர்களின் வாழ்க்கையில் நடந்திடும் கஷ்ட நஷ்டங்களையும் ஜெயித்த நிலை கொண்டு உள்ளவர்களின் நிலையிலிருந்துதான், இன்றைய இவ் உலகில் தோன்றிய மகான்கள் எல்லாரும்.

இந்நிலையில் வழிவந்தவர்களின் உடல்களைத்தான் இந்நிலையிலுள்ளோரின் நிலையைக் காட்டிலும் சக்தி கொண்ட ரிஷிகளே இந்நல்லுணர்வு பெற்றோரின் உடலையே தன்னுடலாக ஈர்த்துச் செயல்படுத்துகின்றனர்.

ஆதிசங்கரர் போன்றோரும், மற்றும் அருணகிரி நாதர், முகமது நபி, புத்தர், இயேசு பிரான், ஐயப்பர், கோலமா மகரிஷி இக்கலியில் வந்திட்ட இராமகிருஷ்ண பரமஹம்சரும், விவேகா நந்தரும் இன்னும் பல ரிஷிகளும் இவ்வழியில் வந்தவர்தாம்.

நம் போகரே பல உடல்களைத் தனதுடலாகச் செயல் கொண்டு செயல்படுத்தி வந்தார். இவ்வுலகினிலே ஆறுமுகனாய் இவர்கள் புராணக் கதையில் சொல்லிய நிலையில்லாமல், ஆறு உடல்களைத் தனதாகச் செயல்படுத்தி வந்தார். பிறவி எடுத்து, பிறந்து வளர்ந்து வழிப்படுத்தவில்லை, தன் சக்தி நிலையை நம் போகர். பல உடல்களை, பல ஆத்மாக்களுக்கு நம் போக நாதரின் சக்தியருள் பெற்று, அவரால் ரிஷியின் நிலைக்குச் சென்றிடும் பக்குவ நிலை ஏற்படுத்தித் தந்தார் நம் போகர் பலருக்கு. இன்று அனைவருக்கும் முருகனாய், ஜோதி அருள் அளித்திட ஆண்டவனாய்ச் செயல் கொண்டுள்ளார்.

இவ்வெண்ண நிலையில் தொடர் நிலையை வைத்துத்தான் நம் ரிஷிகளின் சக்தி நிலையெல்லாம் செயல் கொண்டு நடக்கின்றது.

முருகருக்கு ஆறுமுகம் என்ற நாமச் சொல்லின் மந்திர நிலையும் இதுவே.

சூட்சுமத்தில் மறைக்கப்பட்ட நிலை பல போகரைப் போன்றே, இந்நிலையில் பல சித்தர்கள் இவ்வுலகெங்கும் செயல் நிலைப்படுத்தி நல் உணர்வுகளை இன்றும் செயலாக்கி வருகின்றனர்.

இக்கலியில் பக்தி நிலையும் தன் உணர்வும் குறைந்ததினால் பல நிலைகள் செயல்படாமல் இச்செயற்கைக்கு அடிமைப்பட்டுச் சென்றுவிட்டனர்.

இவ்வெண்ண சக்தியின் தொடர் நிலையை ஈர்த்து, நல்லுணர்வுகொண்ட எந்த ரிஷியின் சக்தியின் தொடரையும், நாம் ஈர்த்துச் செயல் கொண்டிட முடிந்திடும் என்று இன்றளவும் பாட நிலையில் உணர்த்தி வந்த நிலை இதுவே.

**13-12-79**

நல்லுணர்வு கொண்ட வழி நிலையின், சக்தியின் ஈர்ப்பு நிலையினால் இவ்வுடலையே அச் சக்தியின் ஜோதியுடன் ஜோதியாய்க் கலந்திடும் நிலைபெற்றவுடன், இவ்வெண்ண சக்தியின் நிலைக்கும் ரிஷிகளின், முனிவர்களின், இப்படி நல் ஆத்மாக்களின், எண்ண சக்தியும் ஒன்றுபட்டு நாம் வேறல்ல, அவர் வேறல்ல என்ற கூட்டு நிலையாய் ஐக்கியப்படும் ஜோதி நிலையின் சக்தி நிலையை நாம் பெறுகின்றோம்.

(காட்சி:—பெரிய நல்ல பாம்பு படம் எடுத்துக் கொண்டு ஆடிக்கொண்டிருத்தல்—நாகப்பாம்பின் கண் இரண்டுக்கும் இடையில் குருநாதர் காட்சி கொடுத்து ஆசீர்வதித்தல்)

குருநாதர் கூறுதல்:—உனக்குக் காட்சி நிலையருளினால், பாட நிலையை ஈர்க்கும் சக்தியில்லாமல், காட்சியைக் காணும் ஆனந்த நிலையிலேயே லயித்து விடுகின்றாய். தொடர்ந்து பாடத்தை ஈர்த்துச் சொல்.

இந்நிலை பெற்ற பிறகு நாகத்தின் விஷமும், அமுதின் சுவையும் ஒன்றுதான். வாழ்க்கையுடன் கலந்துள்ள மேடு பள்ளங்களைச் சமநிலம் போன்றே வழி நடந்து வந்திடல் வேண்டும்.

அருணகிரி நாதருக்குச் சிறு பிராயம் தொட்டே வாழ்க்கையில் பல இன்னல்கள் தோன்றி ஜெயித்து வாழ்ந்திடும் நிலை அற்ற நிலையாகி, பல இன்னல்களுற்று, வாழ்ந்தென்ன பயன் என்ற சலிப்பு நிலையும் பட்டு, ஜெயம் கொண்டு வாழ்ந்திடப் பல நிலைகளைச் செயலாக்கி, அவரின் கடைசியில், அவ்வுடலின் நிலையில், பற்றற்ற நிலை என்னும் நிலையைத் தன் உடலில் ஏற்றுக்கொண்டார்.

தன் உடலுடனே, உணர்வுடனே, எண்ணமுடனே தன் ஆத்மாவையே அப்பற்றற்ற நிலையாக்கிக் கொண்டார். அவர் ஏற்படுத்திக்கொண்ட பற்றற்ற நிலையின் பொருள் நிலை யென்ன?

சலிப்பையும், கோபத்தையும், குரோதத்தையும், இன்னலையும், கவலையையும் தன் எண்ணத்துடன் பற்றச் செய்யாமல், அவர் உடலையும், உணர்வையும், அவர் ஆத்மாவையும் இந்நிலை பற்றாமல் அவர் எண்ண நிலையைப் பற்றற்ற நிலையாக்கிக் கொண்டு, அருணகிரிநாதரின் அவ்வுடல் ஆத்மாவிற்கு, எந்நிலையும் மோதாத நிலையில் அவர் உடலையும், உணர்வாத்மாவையும் சமமாக்கிக் கொண்ட நிலையில், அவ்வுடலைப் போகரின் சக்தி நிலையைச் செயலாக்கும் தன்மைக்கு ஏற்று, வழிநடத்தித்தான் அருணகிரிநாதரையே பல செயல்கள் இவ்வுலகிற்குச் செயலாக்கிடும் சக்தியை போகரின் நிலையினால் செயல்படுத்தி வந்தார்.

அவர் செயல் கொண்ட நிலைகள் அவருக்கே தெரியா வண்ணம்தான், அவரின் நிலை உணரும் நாள் வரை நடந்து வந்தது.

கிளியின் காட்சி:—

உணர்ந்த நிலையில் அவர் அவ்வுடலையே போகருக்கு அளித்து விட்டு, தன் ஆத்மாவை ஓர் இறந்த பட்சியின் உடலில் ஏற்றிக் கொண்டு, அப்போகரின் நிலையுடனே தன் ஆத்மாவிற்கு அப்பட்சியின் உடலில் இருந்து கொண்டே, சேமித்து, செயல்படுத்தி, இன்றும் சூட்சும நிலையில் தன் ஆத்மாவையும் கலக்க விட்டுள்ளார்.

எண்ண சக்தியில் ஒன்றுகொண்ட அனைவருமே ஒன்றுதான். நான் நீ என்ற பிரித்த நிலையில்லை.

இந்த ஞான நிலை பெறுவதற்கு முன், இந்நிலையின் தொடர் நிலைக்கு வந்தவர்களின் வாழ்க்கை நிலையெல்லாம், பல இன்னல் கள் பட்டு, ஜெயித்து வழிவந்த நிலை. வாழ்க்கையில் இன்னல் கொண்ட நிலையில் ஏற்படும் மனத்தெளிவின் ஜெபநிலைதான் தெய்வ சக்தியின் நிலை.

இன்று சௌண்டம்மனைத் தெய்வமாய் வழிபடுகின்றீர். அவ்வம்மனின் பிறந்த இடத்திலிருந்து புகுந்த இடத்திற்குச் சென்று அவ்வாழ்க்கையில் அடைந்திட்ட பேரின்னலிலிருந்து தன் மனதையே உரமாக்கி, எவ்வுரம்? இவ்வுலகையே ஜெயிப்பேன் என்ற ஜெயம் கொண்ட உரமாக்கி, தெய்வ சக்தி பெற்று, இன் றும் சூட்சுமத்தில், தன் எண்ணத்துடன் கலப்பவர்களுக்கு, தான் பெற்ற சக்தியின் அருளைச் செயலாக்கி செழிக்க விடுகின்றாள் அச் சௌண்டம்மன்.

சூட்சும நிலையில் உள்ளவர்களைத்தான், பல நிலைகளில் ஆண்டவனாய் வழிபடுகின்றோம். நம்முடனே வாழ்ந்து, செயல் சக்தி பெற்றவர்களின் நிலை பெற்றோர் இக்கலியிலும் பலர் உள்ளனர்.

ஒவ்வொருவரும் தனக்கேற்படும் வாழ்க்கையின் சோதனை யில், சத்திய சோதனையாய் ஜெயம் கொண்டு சலிப்பு நிலையையும், விரக்தி நிலையையும், கோப நிலையையும் தன்னை அண்ட விடாமல், பற்றற்ற நிலையாக்கி, நம் ஆத்மாவையே ஜோதியுடன் ஜோதி யாய்க் கலக்கிடுங்கள்.

**14-12-79**

இன்றளவும் இங்கு செப்பிய பாட நிலையை உணரும் நிலைப் படுத்தியவர்களுக்கு அந்த ஞானத்தின் தொடர் நிலை, உணரும் நிலை வந்தடைந்திருக்கும்.

எண்ணத்தில் ஈர்த்து, செயல் கொள்ளும் ஒவ்வோர் ஆத்மாவிற்குமே இந்த ஞான அருள் கிட்டும். ஞானத்தின் அருள் பாக்கியத்தை நாம் பெற்ற சொத்தாக, பொக்கிஷ நிலைப்படுத்தி, பாதுகாத்துச் செயல் கொண்டிடல் வேண்டும்.

நல்லுணர்வு, இந்நல் ஜெபத்தொடரின் இத் தூல உடம்பிலுள்ள, தீய சக்திகளெல்லாம் மறைந்து, நாம் ஈர்த்த ஜெப சக்தியினால் நம்மையே ஒளி சக்தியாக ஒளிரச் செய்யும்

பக்குவ ஜெபத்தில் செயல் கொண்டுள்ள நாம் இவ்வழித் தொடரில் வந்த பிறகு, நாம் சேமித்த இச் சக்தியை மிகவும் ஜாக்கிரதையாக இயற்கையுடனும், மற்ற தீய சக்தி நிலை கொண்டவரின் நிலையை அடக்க மோதவிடாமலும், தெய்வீகப் பெரும் சக்தியை மிகவும் பொக்கிஷ நிலைப்படுத்தி, விரயப்படுத்திடாமல் வழித் தொடரில் தெய்வ சக்தியாய் மிளிரச் செய்திடல் வேண்டும்.

இயற்கையின் நிலையையே நமக்குச் சாதகமாக்க, ஜெபம் கொண்டு ஜெயித்திடல் என்னும் நிலையையும், இயற்கையுடன் மோதும் நிலையையும், நம் சக்தியைக் கொண்டு விரயப்படுத்திடல் ஆகாது.

இந்நிலைபோன்றே, பல தீய சக்தியின் தொடர் நிலையிலுள்ளவர்களை, நம் எண்ண நிலையில் எண்ணி, உள்ள நிலையிலேயே அத் தீய சக்தியுடையவரின் நிலையின்' பாதிப்பு நிலை நம்மையும் வந்தடைகின்றது.

இஜ் ஜெப நிலையின் தொடர் நிலை ஏற்படுத்திக்கொண்ட பிறகு நம் எண்ணம், சொல், செயல் எல்லாமே நம் முன்னோர்கள் வழிநடத்தியதற்கொப்ப ''தீயோரைக் காண்பதுவும் தீதே, தீயோர் சொல் கேட்பதுவும் தீதே'' என்னும் நிலைக்கொப்ப, நம் எண்ணத்திலேயே குரோதம் கொண்டவரின் நிலையை எண்ணும் பொழுது, அந்நிலையின் தொடரினால் நம் சக்தி ஜெபம் தடைகொள்கின்றது.

நல்லுணர்வை அவர்களுக்கு அருள வேண்டி, நாம் ஜெபம் கொள்ளும் நிலையில், நம்முணர்வேதான் ஜெபம் கொள்கின்றது.

அவர் சுவாச நிலையையோ, அவர் சேமித்து வழி வந்த தீய சக்தியின் பிராப்த நிலையையோ யாராலும் மாற்றிடல் முடிந்திடாது.

அத்தீய நிலைகொண்டவரின், எண்ணத்தின் நிலை நம்மைத் தாக்காமல் இருக்கத்தான், அவரின் நிலையை நல் நிலையாக்கிட நாம் வேண்டிடல் வேண்டும்.

என் சிஷ்யனின் மந்திர ஜெபமே இதுதான் என்ற நிலையும் உன் நிலைக்குப் புரிந்திருக்கும். நம் ஆத்ம ஜெபத்தைத்தான் நாம் பெரும் சொத்தாகச் சேமித்து வழி நடந்திடல் வேண்டும்.

'சாமி' சொல்லிய ஜெப வாக்கியம்:—

''எனக்கு நல்ல எண்ணத்தையும்,
என்னைப் பார்ப்பவருக்கு நல்ல எண்ணத்தையும்,
என் வழி நல் வழியாகவும்,
எனக்கு உன்னை மறவாத எண்ணமும் வேண்டும் ஈஸ்வரா''

என்றே நம்மை நாமே ஜெபம் கொண்டு ஞான வழி பெற்றிட்டால், அத் தொடரின் நிலையினால், நாம் ஈர்த்துச் சேமிக்கும் சூரியனின் சக்தியே நாம் வேறல்ல, மற்ற நல் சக்தி நிலை வேறல்ல என்னும் கூட்டு நிலையினால், நம் ஆத்மாவிற்கு எல்லா உணர்வு நிலைகளும் கண்டிடும் நிலையும், எச் சித்தர்களையும், ரிஷிகளையும் தொடர்பு கொண்டு, நல்லாசி அருள் பெற்று, அவர்களின் தொடர்பு நிலைச் சக்தியினால் நம் சக்தியை வளர்த்துக் கொண்டே, நாமும் நல் சக்தியுடன், சக்தி ஜோதியாய்க் கலந்திடும் பொருள் நிலை இதுதான்.

வாழ்க்கை நிலையிலிருந்துதான் இந்நிலையைப் பெறல் வேண்டும். துறவறம் கொண்டு, கடும் ஜெபம் பெறும் நிலையாக எண்ணத்தில் கொண்டு, பல போதை வஸ்துக்களை தன்னுணர்வை மறக்கச் செய்ய உண்டு, காடுகளிலும் மலையிலும் சந்நியாசி நிலை பெற்று ஜெபம் கொண்டு ஜெபிப்பவர்களுக்கு மட்டும் இப்பாக்கிய நிலை வந்தடைவதில்லை.

கடும் குளிரிலும், காற்று மழையிலும் தன்னையே மறக்கச் செய்து, ஜெபம் பெற்று, அருள் பெறுவதல்ல அவ்வீசனின் அருள். வாழ்க்கையுடன் பெறும் ஜெபம்தான் உன்னத ஜெபம்.

நேற்றைய பாட நிலைப்படி வாழ்க்கையைப் பற்றற்ற நிலையாக்கிப் பாங்குடனே ஜெபம் பெறுங்கள். சப்த ரிஷியின் நிலையிலுள்ளவர்களின் நிலையும் வாழ்க்கையுடன் வந்ததுதான்.

**15-12-79**

இவ்வுலகம் தோன்றி மாறு கொண்ட மூன்று நிலை மாறி வந்த பிறகும், இன்று நாம் வாழும் இம்மனித உடல் கொண்ட ஆத்மாக்களாய், இவ்வளர்ந்துள்ள அறிவு நிலையின் தொடரினால், நம் ஆத்மாவிற்கு நாம் சேமித்து வைத்துள்ள இன்றைய நிலையின் தொடர்ச்சி கொண்டு, ஆத்ம ஜெபம் கொண்டே ஆத்மீக நெறியின் வழித்தொடரை ஈர்த்துப் பக்குவ நிலை பெற்றுவிட்டால், மாறப்போகும் இக்கலியின் மாற்றத்திலிருந்து, கல்கி அவதாரத்தில் வழித்தொடரின் நம் ஆத்மாவின் சக்தி, எந்நிலை பெறுகின்றது? நம் எண்ணமும் நம் செயலும் ஆத்மாவுமே நல் ஆத்மாக்களாய் சூட்சும நிலைகொண்டு செயல்புரிபவருடன் கலந்து வாழப்போகும் ஆனந்த நிலைக்கு வந்திட, இன்றுள்ள இவ்வுடல் கொண்ட ஆத்மாவிலேயே, நாம் வழிகொண்டு செயல்படுத்தும் நிலைதான், நாம் அடையப் போகும் சொர்க்க நிலை. ஆரம்பப் பாடத்திலேயே நரகத்தையும் சொர்க்கத்தையும் உணர்த்தி வந்துள்ளேன். நம் ஆத்ம ஜெபத்தைச் சொர்க்கமாக்கி வழி வந்திடுங்கள்.

வாழ்க்கையுடன் விளையாடிடுங்கள். விளையாட்டே வாழ்க்கையல்ல. இவ்வெண்ணத்தில் மோதும் மாறுகொண்ட இன்ப துன்பத்திற்கு அடிமைப்பட்டிடாதீர்.

பாசமும் அன்பும் வாழ்க்கைக்கு உகந்ததுதான். அவ்வன்பிற்கும் ஆசைக்குமே அடிமைப்பட்டிடும் நிலையும் நம் ஆத்மாவிற்கு உகந்ததல்ல. எந்நிலைக்கும் அடிமை கொண்டிடாமல், அந்நிலையில் பற்றிடாமல் பற்றற்ற நிலைகொண்டே, என்றும் எண்ண ஜெபத்தை ஒரு நிலைகொள்ளும் நிலைக்கே வாழ்ந்து காட்டிடுங்கள்.

**16-12-79**

திருவாய்மொழி அமுதம்:

### இவை என்ன உலகு இயற்கை!

**(தினமணிச்சுடர் 16-12-1979 இதழில் வெளியானது)**

அயல் நாட்டுக் கார் ஒன்று நீரில் மிதக்கும் நீண்ட படகு போல் வீதியில் வேகமாகச் செல்கின்றது. அதைப் பார்க்கும் ஒருவர் அருகில் நிற்பவரிடம் சொல்லுகிறார்.

''அந்தப் பெரிய காரில் போவது யார் தெரிகிறதா? உணவுப் பொருள்களைப் பதுக்கி வைத்த குற்றத்திற்காகத் தண்டனை பெற்றாரே அவர்தான்!''

''ஆமாம்! அவர்கள்தானே இப்படி ஆடம்பரமாக வாழ முடியும்!'' என்று பெருமூச்சுடன் கூறுகின்றார் மற்றொருவர்.

அந்த வியாபாரிக்குத் தண்டனை விதித்த மாஜிஸ்டிரேட் அந்த வீதியில் உள்ள பஸ் ஸ்டாண்டில் பஸ்ஸுக்காகக் காத்து நிற்கின்றார். இரண்டு மூன்று பஸ்களில் ஏகக் கூட்டம். அவரால் ஏற முடியவில்லை. கோர்ட்டுக்கு நேரமாகிவிட்டதே என்ற துடிப்போடு அடுத்த பஸ்ஸை எதிர்பார்த்து நிற்கின்றார் அவர்.

அந்த வீதியிலேயே பெரிய வீடு; ஆடம்பரமான பங்களா; தொடர்ந்து இலஞ்சம் பெற்றதற்காக வேலையில் இருந்து அண்மையில் நீக்கப்பட்ட அரசாங்க அதிகாரி ஒருவருடைய வீடு அது என்பது எல்லாருக்கும் தெரியும்.

அதே வீதியில் கொஞ்சம் தள்ளி சின்னஞ்சிறு வீடு ஒன்று; வேலை நீக்கம் பெற்றவருக்கு மேலதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவரின் வீடு அது. நேர்மையான அதிகாரியாகப் பணியாற்றியவர். எல்லோராலும் பாராட்டப் பெற்றவர். வேலையில் திறமையானவர். ஆனால் இலஞ்சம் வாங்கும் திறமை அவரிடம் இல்லை!

நான்கு பெண்களைப் பெற்ற அவர் ஓய்வூதியத்தை வைத்துக் கொண்டு குடும்பத்தை நடத்த முடியாமல் தவிக்கும் நிலையில் வாழுகின்றார்.

இவ்வாறு, கலப்படம் செய்பவர்களும், கள்ளச் சந்தை வணிகர்களும், கையூட்டுப்பெற்றுக் கணக்கில்லாமல் சேர்த்தோரும் செல்வத்துடன் வாழ்கின்றனர். சீரோடும் சிறப்போடும் இருக்கின்றனர்.

அது மட்டுமல்ல; ஊராரும் அவர்களைத்தான் போற்றுகின்றனர், புகழ்கின்றனர்.

கள்ளச் சந்தையில் ஈடுபடாத வணிகர்களைக் கையாலாகாதவர்கள் என்று இழிவாகக் கருதுகின்றனர். கலப்படம் செய்வதற்குப் பயப்படும் வியாபாரிகளைத் துணிச்சல் இல்லாதவர்கள் என்று கேலி செய்கின்றனர்!

கயவர்களைப் போற்றும் உலகம் கண்ணியமானவர்களைத் தூற்றுகின்றது!

இதன் பயனாக, தீயோர்கள் பிறர் மதிக்க வாழுகின்றனர். பகட்டாக வாழுகின்றனர். நல்லோர்கள் இதயம் நலிந்து ஏங்கி நிற்கின்றனர்!

இந்த விசித்திரமான நிலை இன்று போல் அன்றும் இருந்திருக்கிறது!

மனித குலத்தின் இயல்பு மாறவில்லை அல்லவா?

பணத்தைப் புகழ்வதும் பண்பாட்டைப் புறக்கணிப்பதும் மனிதனின் மாறாத தன்மை போலும்!

இந்த இழிநிலையினைக் காணும் நல்லோர்கள் மனம் நொந்து வருந்துவது இயல்புதானே? ஒழுக்கமான வாழ்வே உயர் ஞானத்தின் பயன் எனக் கொள்ளும் மெய்யடியார்கள் இதைக் கண்டு இதயம் இடிந்து போகின்றனர்.

''தீது அவம் கெடுக்கும் அமுதம்'' என்று இறைவனை ஏத்தும் ஞானிகளால், தீமை ஓங்குவதையும் நன்மை நலிவதையும் கண்டு எப்படி சகிக்க முடியும்?

இதோ உளம் நொந்து பாடுகின்றார் உத்தம ஞானி நம்மாழ்வார்.

''பண்புகளுக்கெல்லாம் பகைவர்களாக உள்ளவர்கள் புன்முறுவலோடு பொலிவுடன் வாழ்கின்றனர்! பண்பு நிறைந்த நல்லோர்கள் நலிந்து ஏங்குகின்றனர். எண்ணிலா இத்தகைய துயர்

விளைக்கும் இது என்ன உலகத்து இயற்கை! கண்ணனே! கடல் கடைந்த வண்ணனே! தாளாது அடியேனை உன் கழலிணை சேரு மாறு அருள் புரிவாய்! இந்த வாழ்வு வேண்டாம்!'' என்று இதயம் கரைந்து பாடுகின்றார் ஆழ்வார்.

நண்ணாதார் முறுவலிப்ப, நல்
உற்றார் கரைந்து ஏங்க,
எண் ஆராத் துயர் விளைக்கும்
இவை என்ன உலகு இயற்கை
கண்ணாளா! கடல் கடைந்தாய்!
உன கழற்கே வரும் பரிசு,
தண்ணாவாது அடியேனைப் பணி
கண்டாய் சாமாறே.

(4—9—1)

நல்லோர்கள் நலிவதும், நல்லோர் அல்லார்கள் நன்கு வாழ் வதும் எதனால்? மனிதன் தனக்கு வரித்துக்கொண்ட சமுதாய அமைப்பு முறையின் விளைவுதானே?

அறத்திற்கு மாறான இந்த அவல நிலை அடியார்களின் உள் ளத்தை உலுக்குகிறது. இதைக் கண்டு சகித்துக்கொண்டு இருப் பதைவிட உலக வாழ்வை விட்டு மறைவதே உகந்ததாகப் படு கின்றது உயர்ந்த ஞானிகளுக்கு!

உலக வாழ்வில் உள்ள உறுத்தல்கள் இவை மட்டுமா?

தான் உண்ணுவதற்கென்று பிற உயிர்களைக் கொல்லுகின் றானே மனிதன்! ஏமாற்றிப் பிடித்தும், வலைகளில் சிக்க வைத்தும் உயிரினங்களைப் பிடித்து அவற்றைக் கொன்று உண்ணுகின்றான். அறம் என்பது என்ன என்று அறியாத நிலையில் இவ்வாறு மனி தன் பிற உயிர்களைக் கொன்று உண்ணுகிறான். கொல்லாமையை விட வேறு அறம் ஏது? இதனை அறியாதவர்கள், உயிர்களைக் கொன்று பசியாறுகின்றனர். இதைக் கண்டு சகிக்க முடியவில்லை. ஆராவமுதனே! என்னை உன் திருவடிக் கீழ் அழைத்துக் கொள், என்னைக் கூவி அழைத்துக்கொள் என்று இறைஞ்சுகிறார் ஆழ்வார்:

மறுக்கி, வல் வலைப்படுத்தி,
குமைத்திட்டு, கொன்று உண்பர்,
அறப் பொருளை அறிந்து ஓரார்
இவை என்ன உலகு இயற்கை!
வெறித்துளவ முடியானே!
வினையேனை உனக்கு அடிமை

அறக் கொண்டாய்; இனி என்
ஆரமுதே கூயருளாயே!

(4–9–6)

புலால் உண்பதன் புன்மையினை அறப் பொருளை அறியாதவர்களின் செயல் என்கிறார்.

அறவினை யாதெனில் கொல்லாமை, கோறல்
பிறவினை எல்லாம் தரும்.

என்பது குறள்.

பிற உயிர்களைக் கொல்லாமைதானே அறத்திற்கு அடிப்படை.

''மறுக்கி, வல்வலைப்படுத்தி, குமைத்திட்டுக் கொன்று'' உண்பது அறத்தின் அடிப்படையினை அறியாதார் செயல்தானே?

தன் உடம்பு பெருக்க வேண்டும் என்பதற்காகத் தான் மற்றோர் உயிரின் உடம்பைத் தின்பவன் எவ்வாறு அருளுடையவனாக இருக்க முடியும்? என்று வினவுகிறார் திருவள்ளுவர்.

தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிதின் ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்?

பிற உயிர்களைக் கொன்று உண்ணும் பழக்கம் அறத்திற்கும் அறத்தின் பயனாக அருளுக்கும் மாறுபட்டது என்பதால் அது விலக்கப்படுகிறது.

உலக வாழ்விலே அருளும் அறமும் நலிகின்ற போதெல்லாம் நல்லோர்கள் மனம் நலிகின்றது.

அறம் போற்றி வாழ்பவர்கள் அல்லற்படுவதும், அல்லாதவர்கள் ஆடம்பரமாய் வாழ்வதும், உயிர்களைக் கொன்று உண்டு தம் ஊனை வளர்ப்பதும் உலகத்து இயற்கை ஆகிவிட்டது! உலக வாழ்வோடு ஒன்றிய இயல்பாகி விட்டது.

இப்படிப்பட்ட உலகில் வாழ்வதைவிட்டு இறைவன் திருவடியினை விரைவில் சேர்வதே வித்தகர்களின் விசாரமாகி விடுகிறது. உலக இயற்கையினைக் கண்டு உள்ளம் கரையும் ஞானி,

நண்ணாதார் முறுவலிப்ப, நல்
உற்றார் கரைந்து ஏங்க,
எண்ணாராத் துயர் விளைக்கும்
இவை என்ன உலகு இயற்கை?

என்றும்,

மறுக்கி, வல்வலைப் படுத்தி,
குமைத்திட்டு கொன்று உண்பர்,
அறப்பொருளை அறிந்து ஓரார்,
இவை என்ன உலகு இயற்கை!

என்றும் இதயம் இடிந்து பாடுகின்றார்!

இவை என்ன உலகு இயற்கை? என்ற வினாவிற்கு விடை ஏது?

குருதேவர் இன்று மேற்கண்ட கட்டுரைக்கு அளித்த பதில்:

இன்று நம்மாழ்வார் இயற்றி வெளியிட்ட அருட்பாக்களை ஆராய்ந்து, அந்நிலையின் பொருளை விளக்குகின்றனர். நீதியைப் புகட்டும் நீதிபதியின் வாழ்க்கைத் தரத்தையும், அந் நீதிபதியினால் தண்டனைக்குட்பட்ட குடிமகனின் வாழ்க்கை நிலையையும் இரண்டு வெவ்வேறு நிலைகொண்ட பொருளாதார அடிப்படையில், இந்த ஞான வழிக்கும், ஆத்மீக வழியின் தொடர் நிலைக்கும், ஒப்பிட்டுப் பதம் காண்கின்றனர்.

அவன் சென்ற வியாபார நோக்கின் வழி எண்ணத் தொடரின் செயலுக்கும், நீதிபதியின் நற்போதனை நிலைக்கும், வாழ்க்கை நிலையை, இப் பொருளாதார ஏற்றத் தாழ்வை, ஒப்பிட்டுச் செயல் காண்பது எவ்வழியில்? எந்த ஞானியாய் இருந்தாலும் உத்தமம்.

ஆத்ம நிலையை அறிய இறை பக்தியை ஏற்றம் கொண்டு வழி நடந்திடும் இவ்வுணர்வுடையோர், இந்நிலையை ஒப்பிட்டு, இந்நிலையினால் தன் எண்ணத்தை விரக்திப்படுத்தி, இறைவன் அடி ஒன்றுதான் உத்தம நிலையென்று, விலகிச் சென்று, ஆத்ம ஜெபம் என்ற இறை பக்தியை வளர்க்கின்றார்களாம்.

நீதிபதி, தான் வந்த வழியில் நீதிக்காகச் செயல் கொண்டு செயலாக்குவதற்கும், அவர் வாழ்க்கையின் பொருளாதார நிலைக்கும் ஒப்பிடலாகாது. வியாபாரியின் நோக்கில் பல தவறுகள் நீதிக்குப் புறம்பட்டதாக இருந்தும், பொருளாதார ரீதியில் உயர்ந்துள்ளதை வைத்து, இறைவனின் பாகுபடுத்திட்ட நிலை தான் இன்றைய மனிதர்களின் எண்ண நிலையெல்லாம்.

சத்தியத்திற்கும், தர்மத்திற்கும் அடி பணிந்தே வாழ்ந்தும் பல இன்னல்களை ஏற்க வேண்டியுள்ளதே, ஆண்டவனின் சோதனை நிலை என்ற எண்ண நிலையிலேயே, அப்பாகுபாடு என்னும் எண்ணமே, தர்மவான், சத்தியவான் என்று வாழ்ந்தாலும்,

தன்னையே குறுக்கிக் கொள்ளும் இவ்வெண்ணத்தினுல்தான். இன்றைய இவ்வுலகிலுள்ள சத்திய நியாயமும் மறைந்து வரும் நிலை.

சத்தியத்திற்குச் சோதனை வரும் என்ற எண்ண நிலையிலேயே அச்சோதனை நம்மைப் பற்றிக் கொள்கிறது. இந்நிலையில் சத்தியம் என்பது எப்படி ஜெயம் கொள்ளும்? எண்ணத்திலுள்ள சத்தியத்தையும், தர்மத்தையுமே இன்றைய மனிதன் சோதனையாக எண்ணி நழுவவிட்ட காலமிது.

வாழ்க்கையில் பல தவறுகளைத் தவறென்று உணர்ந்தே செய்பவனும், தன் எண்ண நிலையைச் சோர்வுக்கும், தோல்விக்கும் அடிபணிந்திடச் செய்திடாமல், நன்மை, தீமை கொண்ட எவ் வழிக்கும் ஒரே எண்ணமுடன் சோர்வை அண்டவிடாமல் செல்பவனின் பொருளாதார வாழ்க்கை நிலையும், குடும்பத்தின் செயல் நிலையும் வளமுடன்தான் வாழ்கின்றன.

பல தவறுகள் செய்கின்முன் அவனை ஆண்டவன் பார்ப்பது இல்லை, நல்லுணர்வு கொண்ட நமக்கேன் சோதனை? என்ற எண்ணத்திலேயே, நம்மைத் தாழ்த்தி, அதனுல் வரும் நம் ஆத்ம நிலையின் சோர்வினுல், நல்லுணர்வு நாம் பெற்றிருந்தாலும், நம் நிலையும் குன்றி, நம் பொருளாதார நிலையும் கீழ்ப்பட்டு, நம்மையே நாம் குன்றச் செய்து கொள்கின்ருேம்.

இவ்வெண்ண நிலையில்தான் ஆண்டவ ஜெபமும், ஞான நிலையும், இறை பக்தியும், இவ்வுலகமும் இவ்வுலகைச் சார்ந்த அனைத்து உலகங்களுமே அடக்கம் பெற்று வாழ்ந்திடும், இவ் வாத்மாண்டவனின் எண்ணத்தை உணர்ந்திடாமல் வாழ்ந்திடும் மக்களின் எண்ணத்தையும், நம் முன்னேர் சூட்சுமத்தில் வெளிப் படுத்திய நூல்களில் உள்ள உண்மை நிலையை உணர்ந்திடாமல் மக்களின் எண்ணத்தையே கேள்விக் குறியாக்கிவிட்டார்கள், இன்று சில நிலைகளினுல்.

பக்தி, ஞானம், பரம்பொருள், பரமாத்மா என்றே பல நிலைகளைப் போதனைப்படுத்தி இறை பக்தியாய் ஆத்ம ஜெபம் எடுக்கும் நிலையை இன்று உணர்த்துவாருமில்லை, செயல் கொள் வாருமில்லை. இறைவனை எண்ணுவதே இப்பொருளாதார ஆசையின் அடிப்படையில்தான்.

இவ்வெண்ண நிலைகொண்ட நாம் எடுக்கும் சுவாசத்தினுல் மட்டும்தான், ஒவ்வோர் ஆத்மாவின் வழித் தொடர் நிலையுண்டு. ஒரு குடும்பத்தில் உள்ள மூத்த தலைவனின் நிலைக்கொப்பத்தான்,

அவன் சேமித்துச் செயல் கொள்ளும் வழித்தொடரின் நிலையின் எண்ணத்தினுல், அவனைச் சார்ந்துள்ளோரின் நிலையின் எண்ணக் கலப்பும், வழித்தொடரின் செயல் நிலைகொள்கின்றது.

நம்மாழ்வார் இயற்றிய செய்யுட்களில் உள்ள நிலையின் அர்த்தத்தையே, கால நிலைக்கேற்ப இன்று உணர்த்துகின்ருர்கள். உண்மையின் தத்துவ நிலையெது? உணர்ந்து செயல் கொண்டிடல் வேண்டும்.

இப்பூமியின் உண்மை நிலையை இன்றளவும் பெரும் கேள்விக் குறியாகத்தான், உண்மை நிலையை அறிந்திடாமல் ஆராய்ந்து வருகின்றனர்.

வழித்தொடர் நாளை.

**17-12-79**

இப்பூமி தோன்றிய நிலையை, சூரியனிலிருந்து சிதறி வந்த கோளங்கள் பல ஒன்று சேர்ந்து ஆரம்ப நிலையில் ஆவியாய்க் குளிர்ந்து ஒன்றுபட்டு, இப்பூமியாய் சுழல்கின்றது என்ற யூக நிலையில் உள்ளனர்.

இப்பூமி தோன்றிய நிலையை ஆரம்ப நிலைப்படுத்திப் பல நிலைகளில் செப்பிவந்துள்ளேன். வரிசைத் தொடரை இன்று உணர்த்துகின்றேன்.

இப்பூமியே ஆண்பால், பெண்பால் கொண்ட இரண்டு ஆத் மாக்களின் ஜோதிக் கலப்பினுல் உற்பத்தியானது. இப்பூமியைப் போன்ற, இன்று வாழ்ந்திடும், வளர்ந்த, அறிவு நிலைபெற்ற, ஆத்ம உடல்கொண்ட மனித இனம் இப்பூமியில் வளரும் நிலைக்கும் முதலே, இச்சூரியனைச் சார்ந்துள்ள 48 மண்டலங்களில்லாமல், மற்றச் சூரியனைக் காட்டிலும் சக்திகொண்ட நிலையில் வாழும் மண்டலங்களில் பல நூறு கோடி ஆண்டுகளுக்கு முன்பே மனித ஆத்மாக்கள் உண்டு.

இப்பூமியில், இம்மனித இன வர்க்கங்கள் தோன்றியதெல் லாம் மூன்று மாற்றங்களுக்குப் பிறகு, இராமாவதார காலத்தில் தான் மனித இன வர்க்கமே, அறிவு நிலைபெற்று, வளர்ச்சி நிலை யில் வாழ்ந்து வருகின்றது. அதுவும் இக்கலியினுல் மாற்றம் கொண்டு கல்கியில் இன்னும் மாற்றம் கொண்ட நிலையில்தான் செயல்படப் போகின்றது. ஆனுல் இந்நிலையில் செப்பியபடி மனித ஆத்மாக்கள் வளர்ச்சி கொண்ட மண்டலங்கள் பல நூறு கோடி ஆண்டுகளுக்கு முன்பே இருந்து வருகின்றன. அம் மண்டலங்களில் வாழ்ந்த அறிவு நிலை பெற்ற, ஆத்ம உடல்கொண்ட, சூட்சும நிலையைக் கொண்டோரின் நிலையினுல், எம் மண்டலமாகவும் தன்

நிலையைச் செயலாக்கும் பக்குவத்தில்தான், ஜீவன் கொண்ட ஆத்மாக்களினால்தான், ஒவ்வொரு மண்டலமுமே, ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டு, ஈர்ப்பு நிலையின் சக்தியினால் ஒவ்வொரு மண்டலமாக உருப் பெறுகின்றது.

சப்த ரிஷியின் மண்டலம் ஏழு என்று உணர்த்துகின்றனர். இவ் ஏழு நட்சத்திர மண்டலம் மட்டும் சப்த ரிஷியினால் உருக் கொண்டு செயல்பட்டு வாழ்வதென்பதல்ல பொருள்.

இவ் ஏழு சப்த ரிஷி மண்டலம் என்பதின் பொருள், இப் பூமியிலிருந்து இம் மனித ஆத்மா பெற்று, ஜெப நிலைகொண்ட ஆத்ம மண்டலங்கள்தான் இவ் ஏழு சப்த ரிஷி நட்சத்திர மண்டலங்களும்.

அனைத்து மண்டலங்களுமே ஆத்ம நிலை பெற்ற ஜீவன் கொண்டு வாழ்ந்து, வழிவந்த ஆத்ம மண்டலங்கள்தான். இப்பூமி தோன்றிய நிலையும் இரண்டு ஒன்றுபட்ட ஆத்மாக்களின் அன்புக் கலவையினால் ஆண், பெண் என்ற சக்தி நிலையில் உருவான மற்ற மண்டலத்தில் இருந்து வீரிய ஜெபம் கொண்டு, ஒரே நிலையில் சூட்சுமம் பெற்று, இப்பூமியை இரண்டு ஆத்மாக்களுமே ஒன்று பட்டு ஈர்த்து ஆவி நிலையாய், ஆத்மாவுடன் இரண்டு ஆத்மாவுமே, அவ்வாத்மாவுக்குகந்த சக்தியின் ஈர்ப்புத் தன்மையினால் பல சக்திகளைத் தன்னுள் ஈர்த்தே, சிறுகச் சிறுக வளர்த்துத்தான் உயிருடனே உணர்வுடனே இப்பூமியை இன்றளவும் வளர்த்துக் கொண்டே, தன் சக்தியின் செயலினால் சுற்றிக்கொண்டு, பல உயிரினங்களை வளர்த்துக் கொண்டே வாழ்கின்றது இப்பூமி.

இப்பூமியில் ஆண், பெண் என்ற பிணைப்பு நிலையினால் மற்ற உயிராத்மாக்களின் உற்பத்தி நிலை ஏற்படுவதின் நிலையும், இப் பூமியின் நிலையும் ஒன்றுபட்டதுதான்.

இப்பூமி தோன்றி உயிரணுக்கள் உதித்துச் சில காலங்களி லேயே இனத்துடன் இனச் சேர்க்கையினால், இன வளர்ச்சி பெறும் நிலை வந்துவிட்டது.

உயிரணு உதித்தால், அவ்வுயிரணுவிலிருந்து பலகோடி உயி ரணுக்கள் வளர்ச்சி பெறுகின்றன. அதன் தொடர்ச்சியிலேயே எவ்வுயிரணுக்களுமே அழிவதில்லை. உயிரணுவாய் உதித்த பிறகு அவற்றின் உடல் பிம்ப நிலைதான் மாறு கொள்கின்றது.

இந்நிலையில் வளர்ச்சி பெறும் உயிராத்மாவாய், ஞானி, சித்தன், முனிவன், ரிஷி, சப்த ரிஷி ஆன பிறகுதான், சூட்சுமம் கொண்ட பிறகு, ஒவ்வொரு சப்த ரிஷியின் நிலையிலும், தான் ஈர்த்து செயல் கொண்ட ஆசை நிலைக்கொப்ப, மற்ற மண்டலத்து டன் சேர்ந்தும், தனி மண்டலமாய் உருப்பெற்றும், தான்

வாழ்ந்து வழிவந்த மண்டலத்தை ஆண்டவனுய்க் காத்திடும் நிலையிலும், தன்தன் சக்தி நிலைக்கொப்ப, இவ்வுலகில் மட்டு மல்லாமல், மற்ற மண்டலங்களிலும் பால்வெளி மண்டலத்திலும், ஜோதியின் ஜோதியாய் எம் மண்டலத்திற்கும் சென்று வரும் நிலையிலும், தான் பெற்ற சக்தியைச் செயலாக்குகின்றனர் சப்த ரிஷிகளெல்லாம்.

இப்பூமியில், இன்று மனித ஆத்மாவாய் வளர்ச்சி கொண்ட நிலையில் சேமிக்கும் சொத்து நிலைதான் அப்பேரானந்த நிலை.

வழியின் நிலையை அறிந்திடாமல் வாழ்ந்திடும் நிலைதான் இன்றுள்ள நிலை. இன்றுள்ள மக்களின் எண்ண நிலையே ஆராயும் நிலையையும், தர்க்க நிலையையும் வளர்த்துக்கொண்ட நிலையி லுள்ளது.

எந்நிலையையும் ஆராய்ந்து அறிவு நுட்பத்தின், வழித் தொடரின், ஞான வழியில் வந்திட்டால் உண்மை நிலையின் வழித் தொடர் அறிந்திடலாம். ஆனல் இன்றுள்ள இவ்வாராயும் நிலை, சஞ்சலமுடன் செயல்படுவதினுல் தக்க நிலை அறிந்திட முடியாமல் உள்ளது. இந்நிலையின் தொடரை நாளை உணர்த்துவேன்.

**19-12-79**

சூட்சும நிலையில் செயல் கொண்டும் பல சித்தர்களின், ரிஷிகளின் தொடர்பு கொண்டும் செயல் கொண்டு பல நிலைகளை இந்நிலையில் உணர்த்தி வந்த நிலையிலேயே, நாளை உணர்த்திடு வேன் என்ற என் சக்தி நிலையை இம் மனித ஆத்மாக்களின் நிலையில் செயல்படுத்திட சூட்சும நிலைகொண்டோரினுலும் முடிய வில்லை.

ஒன்றுடன் ஒன்று கலந்த நிலையில்தான், இங்கு செயல் நிலைப்படுகின்றது. இந்நிலையில் சூட்சுமம் கொண்டு செயல்படும் யான் என்ன செய்ய முடியும்? என் சிஷ்யனுன இங்கு இந்நிலையைப் பதிவு செய்பவன்தான் என்ன செய்ய முடியும்?

ஈர்த்துச் செப்பிடும் உன் நிலையை மாற்றிக்கொண்டு, பூஜையில் நேற்றைய பாடத்தை ஈர்த்துச் செயலாக்கிடாமல், விளையாட்டின் வேடிக்கைக்காக தவறவிட்டதின் நிலையைப் பார்த்தாயல்லவா?

இவ்வுலகுடன் உள்ளோரின் எண்ண நிலையும் குடும்பத்தின் சூழ்நிலையும் ஒத்துத்தான் ஒவ்வோர் ஆத்மாவின் எண்ண நிலையும் செயல்கொள்ள வேண்டியுள்ளது. இப்பூமி தோன்றிய நாள் கொண்டே, இப்பூமிக்கும் ஓர் எண்ண நிலையுண்டு.

இரண்டு ஆத்மாக்கள் ஒன்றுபட்டு சக்தி நிலையைச் சேமித்து, இப்பூமி என்னும் பிம்பத்தை வளர்த்து, ஒவ்வொரு மண்டலத்திலிருந்தும் கிடைக்கக் கூடிய சக்தி நிலையை வைத்து, இப்பூமிக்குப் பல நிலைகளிலிருந்தும், பல சக்திகள் ஈர்க்கும் நிலைப்படுத்தி இப் புண்ணிய பூமியைச் சிறுகச் சிறுக வளர்த்துத்தான், இன்று இப் பூமியே தன் எண்ண நிலையில், தானே சுற்றும் நிலையில் உள்ளது.

இப்பூமி வளர்த்த உயிரணுக்களின் சுவாச நிலையுடன், தன் சுவாச நிலையைக் கலக்கவிட்டே, இப்பூமியே சுவாச நிலை எடுத்து ஓம் என்ற ஓங்கார நாதத்தில் சுழல்கின்றது.

இப்பூமியில் உள்ள அனைத்து சப்த அலைகளையுமே, இப்பூமி ஈர்த்து வெளிப்படுத்திக்கொண்டேயுள்ளது. சிறு எறும்பு முதற் கொண்டு, எவ்வெண்ணங்கள் கொண்டெல்லாம், சுவாச நிலையை ஈர்த்து வெளிப்படுத்தும் அனைத்து ஜீவராசிகளின் சுவாச நிலையும், தாவர வர்க்கங்களின் சுவாச நிலையும், இயந்திர வர்க்கங்களின் சப்த ஒலியும் அனைத்துமே இக்காற்றுடன் கலந்து, இப்பூமியின் சுவாசத்திற்கு வந்து சென்றுகொண்டுள்ளன.

இப்பூமிக்கும் ஜீவனுண்டு, எண்ணம் உண்டு, சுவாச நிலையுமுண்டு, அழியா ஆயுட்காலமுமுண்டு. மாறி மாறிப் பிரளய நிலை ஏற்படுவதெல்லாம், இன்று நாம் எப்படிப் பிறப்பெடுத்து, வாழ்ந்து இவ்வுடல் என்னும் இப்பிம்பம் செயல்படாமல் போகும் நிலையில், நம் ஆத்மா பிரிந்து செல்கின்றதோ, அந்நிலைபோன்றே இப்பூமியின் பிரளய நிலையினுல், இப்பூமியின் ஆத்மா ஜீவன் இல்லாமல், பிரிந்து செல்லாமல், ஜீவனுடனே தன் ஆத்மாவைக் காத்துக்கொண்டே, பிரளய நிலை ஏற்படுத்தி, தான் வளர்த்து, செயலாக்கிய உயிரணுக்களின் மற்ற இயற்கையின் தன்மையைச் சிறிது மாற்றிக்கொண்டே, இப்பிரளயம் என்ற மாற்றத்தினுல் சுற்றிக் கொண்டே வாழ்கின்றது.

இப்பூமி சுழல இச்சப்த அலைகள்தான் இப்பூமிக்கு உயிர் நாடி. பேரிரைச்சல் கொண்ட இக்கடல் அலைகளும், ஜீவராசிகளின் சுவாச நிலையும் இருந்தால்தான் இப்பூமியைச் சுற்றியுள்ள இக் காற்று மண்டலத்திற்கே செயல் நிலை வருகின்றது.

இப்பூமி தோன்றிய நாளில் இன்றைய இவ் ஓங்கார நாதத்தின், உயிர் நாடியின் சப்த அலையே, இன்றுள்ளதைப் போல் ஒலியின் சப்த நிலை குறைவாகத்தான் இருந்தது.

இப்பூமி வளர வளரத்தான் இச் சப்த அலையும், ஓங்காரமுடன் வளர்ந்துகொண்டு வந்துள்ளது.

இப்பூமியைக் காட்டிலும், சூரிய மண்டலமும், வியாழன் மண்டலமும் பெரியவைதான். அவற்றின் சுழலும் வேகமும் இதை விடப் பல மடங்கு அதிகமென்று உணர்த்தியுள்ளேன்.

சூரிய மண்டலத்தில் உள்ள உயிரணுக்களின் தன்மையும், நம் பூமியின் தன்மையும், மற்ற மண்டலங்களின் தன்மையும் மாறுகொள்கின்றது என்று உணர்த்தினேன். அந்தந்த மண்டலத்தின் சீதோஷ்ண நிலைக்கொப்பத்தான், அம் மண்டலத்திலுள்ள உயிரணுக்களின் நிலையும் இருந்திடும்.

எம் மண்டலத்திலும் உயிரணுக்கள் இருந்து சுவாசம் எடுத்திடாமல் இருந்திட்டால், அம் மண்டலத்திற்கே ஜீவனில்லை. நடமாடும், பறக்கும், ஊரும் ஜெந்துக்களுக்கு மட்டும்தான் ஜீவனுண்டு என்ற பொருளில்லை. ஒவ்வொரு மண்டலத்திலும், அம் மண்டலத்துடனே வளர்ந்துள்ள கல், மண், நீர் அனைத்திற்குமே ஜீவனுமுண்டு, சுவாசமுமுண்டு. கல் பேசும், மண் பேசும் என்பதின் பொருளென்ன? அதனதன் சுவாசமே அதனதன் சொற்கள்தான்.

சுவாசமில்லாமல் எம் மண்டலமுமில்லை, சுவாசம் எடுத்திடாமல் எவ்வுயிரணுக்களுமில்லை.

இஜ் ஜீவத்துடிப்பின் ஒலியினால்தான் ஒவ்வொரு மண்டலமும் வாழ்கின்றது. நம் பூமியின் சக்தி நிலை கூடிக்கொண்டே வருகின்றது.

இக்கலியின் பிரளயத்திற்குப் பிறகு வரப்போகும் கல்கியின் வளர்ச்சியிலிருந்து, நம் பூமி இன்னும் சக்தி நிலை நிறைந்ததாகத்தான் சுழலப் போகின்றது.

இன்று சூரியனின் சக்தியினால் சக்தி கொண்டு சுழலும் நம் பூமியே, சூரியனின் நிலைக்கொப்பச் சுழலப்போகின்றது. ஒவ்வொரு பூமியின் நிலையும் ஒவ்வோர் உயிராத்மாவின் சக்தியினால் செயல் கொண்டு சுழல்கின்றது அதனதன் நிலைக்கொப்ப. தொடர் நிலை நாளை.

**20-12-79**

எல்லா மண்டலமுமே இந்நிலையில்தான் வளர்ச்சி பெறும் என்பதல்ல. வானமண்டலத்தில் நட்சத்திர மண்டலமாகவும், சிறு சிறு கோளமாக உள்ள மண்டலங்களும், ஜீவனற்று உள்ள மண்டலங்களும் இப்பெரிய மண்டலங்களின் ஈர்ப்பு சக்தியில், அதன் சக்தி நிலையும் (அமில நிலை) பெரிய மண்டலங்களின் அமில

நிலையும் ஒன்றுபடும்பொழுது, இதன் ஈர்ப்புடன் வந்து சேர்ந்து, அந்நிலையிலேயே கலந்து சுழல்கின்றது.

இம் மண்டல வளர்ச்சி கொண்ட சிறு சிறு நட்சத்திர மண்டலங்களாய், சுற்றிக்கொண்டுள்ள இக் கோளங்கள் எல்லாம், இப் பெரிய மண்டலங்களின் பிரளய நிலையின் காலங்களில்தான் வந்து சேருகின்றன.

இப்பூமியின், பூமத்திய ரேகையின் இன்றுள்ள நிலை இப் பிரளயத்தின்போது, பிரளயத்தின் அசைவினால் மற்ற இடத்திற்கு, மற்ற இடமென்பது சிறிது மாறுபட்ட இடத்தில் வரப் போகின்றது.

இன்று நீர்நிலைகளாய், ஆழ்கடலாய்ச் சூழ்ந்துள்ள இடமெல்லாம் சமதரையாகச் செயல் கொள்ளப் போகின்றது. இம் மனித ஆத்மாக்கள், ஜீவராசிகள் மட்டும் மாறப்போகின்றன என்பதல்ல.

இன்று வளர்ச்சியில் உள்ள தாவர வர்க்கங்களின் நிலையும் மாறப்போகின்றது. இன்னும் 15, 16 வருடங்களுக்குள் இப் பூமியின், இன்றைய இயற்கைத் தன்மையே மாறிச் செயல்படப் போகின்றது.

இன்று சில சில இடங்களில் பூமி அதிர்வு ஏற்படுவதெல்லாம் வரப்போகும் மாற்றத்தின் அறிகுறிகள்தான். இன்று ஆத்மீக நெறியறியும் சக்தி நிலையே குறைந்துள்ளது. செயற்கைக்கு அடிமைப்பட்டுள்ள ஆத்மாக்கள் எல்லாம், இயற்கையின் சீற்றத்திலிருந்து தப்பும் நிலையை உணர்ந்திடல் வேண்டும்.

வாழும் வாழ்க்கை செயற்கைக்கு அடிமைப்பட்டுள்ளதை மாற்றி இவ் இயற்கையின் கால மாறுதலை உணர்ந்தே வாழ்ந்திடுங்கள்.

பல சித்தர்கள், ரிஷிகள் வாழ்ந்து செயலாக்கி, இன்றும் ஆண்டவன் ரூபம் கொண்டு, கோயில்களின் மூலமாகப் பல சக்தி நிலைகளை பக்தி நிலையாய் உணர்த்திடும் இப்பாக்கியம் பெற்ற நாம், பக்தியின் நிலையில் நம் ஆத்மாவிற்கு, சக்தியின் நிலையைச் சேமிக்கும் சக்தி பெற்று, நம் சக்தியைச் செயற்கைக்கும், விளையாட்டிற்கும், வீண் விவாதத்திற்கும், இன்றைய அரசியல் ஆட்டத்திற்கும் அடிபணியச் செய்திடாமல், நாம் நம்மைப் பற்றிக் கொண்டுள்ள அடிமைப்படுத்திடும் எந்நிலையிலிருந்தும் மீளும் நிலையில் நம் சக்தியை ஓங்கச் செய்தே இக் குறுகிய காலத்தில் அன்பு என்ற பக்தி ஜெபம் கொண்டு, செயல் கொண்டு, நம் ஆத்ம சக்தியை வளர்க்கும் பக்குவ நிலையில் வாழ்ந்திடுங்கள்.

21-12-79

நம் ஆத்மாவான நம் சக்தியை நாம் உணர்ந்து செயல் கொண்டால்தான் இம் மாறப்போகும், இக்கலியின் மாற்றத்தி லிருந்து நம் ஆத்மாவை ஒளிரச் செய்திட முடிந்திடும்.

ஆத்ம சக்தியை உணர்ந்திடாமலும், அவரவர்களிடத்தி லுள்ள இவ்வெண்ண சக்தியின் தொடரைக் கொண்டு இக் கோளம் மட்டுமல்ல, இப் பிரம்மாண்ட அனைத்துக் கோளங்களை யுமே நமதாக்கும் சக்தி ஒவ்வோர் ஆத்ம சக்திக்குமுண்டு.

இன்றைய இப்பூமியின் பல எண்ண சக்தியினால் கணிதத்தின் தொடர்பு கொண்டு, செயற்கையினால் இயந்திரத்தின் துணை கொண்டு, ஒருவர் இருவர் அறிந்த சக்தியை, இயந்திரங்களின் வழியில் செயல்படுத்தி, மற்ற ஆத்மாக்களின் சக்தியை இவ்வியந்தி ரத்தின் கணிதத் தொடர்பு கொண்டு, சக்திக்கு அடிமைப்படுத்திச் செயலற்ற, சோம்பேறி நிலையில் சென்று கொண்டுள்ளது இன்றைய இவ்வுலகம்.

உலகம் எப்படித் தோன்றியது? எந்நிலையில் உயிரினங்கள் வளர்ச்சி கொண்டன? என்ற நிலையை அறியவும் ஆராயவும் இன்றளவும் இம் மனித எண்ணங்களின் நிலையுள்ளது. பிறரின் தொடர்பை மட்டும் இயக்கி உள்ள நிலை இது.

தான் பிறந்து, வளர்ந்து செயல்கொண்டு வாழ்ந்திட, தனக் குள்ள சக்தியையும், தான் வாழவே தன்னுள் உள்ள தன் ஆத்மாண்டவனையும் வணங்கிடல் வேண்டும் என்றுணராமல், பிறரின் சக்தியில் அடிமைகொண்டு வாழ்ந்தென்ன பயன்?

நாம் பிறவியெடுத்த பயனை உணர்ந்து, ஆத்ம ஜெபம் கொண்டால் நம் சக்தியுடன், அனைத்து நற் சக்திகளை ஈர்த்து, செயல்படுத்தி வாழ்ந்திடலாம். அனைத்துக் கோளங்களுமே நமக்குச் சொந்தமானவைதான்.

இப்பூமியில் உயிரணுவாய், உயிராத்மாவாய் வாழ்ந்திடும் நாம், நம் சக்தியைச் செயல்கொண்டதாக்கி வாழ்ந்துகாட்டிடல் வேண்டும்.

ஜீவன் பிரிந்த பிறகு, ஆவி உலகில் இவ்வுடலில்லாமல் நம் சக்தியை வளர்த்திட முடியாது. இம் மாறிடும் கலியிலும், பிறகு வரும் கல்கியிலும் ஆவி உலகில் ஆத்மாக்களாய்ச் சுற்றிக்கொண் டுள்ள நிலையில், இவ்வுடலில் இருந்து பிரிந்து சென்ற நிலையிலுள்ள எண்ண நிலைக்கொப்ப, பிறவி எடுத்திடும் நாள் வரை, இவ்வாவி

உலகில் சுற்றிக்கொண்டேதான், எண்ணத்தவிப்புடனே இருந்திடல் வேண்டும்.

இம்மனித ஆத்மாக்களின் எண்ண நிலைக்கொப்ப, அடுத்த கல்கியில் தொடரும் ஜீவ அணுக்களின் வளர்ச்சி நிலை, வளர்ந்து செயல் கொண்டிட இன்னுல் பல நூறு கோடி ஆண்டுகள் ஆகிடும்.

அந்நாள்வரை இப்பிறவியில் பிரிந்து செல்லும் நம் ஆத்மா, இவ்வெண்ணநிலையுடனே படும் ஈன நிலையுணர்ந்து, செயல்கொண்டு, நல்லுணர்வு பெற்று, ஜெபம் கொண்டே இக்கலியிலேயே, இன்று நாம் வாழ்ந்திடும் இம் மனித ஆத்மாக்கள் நிலைகொண்ட வாழ்வை நமக்குக் கிடைத்த பொக்கிஷமாய் உணர்ந்து வாழ்ந்திடல் வேண்டும்.

இந்நிலையை அனைவருக்கும் உணர்த்திடத்தான் இக்கால நிலையை அனைத்து நல்லுணர்வு கொண்ட, நல் ஆண்டவனுய் உள்ளவரின் துணையுடனே வழிப்படுத்தி வருகின்றோம்.

இந் நிலையில் வெளிப்படுத்திடும் இச் சத்தியத்தின் சக்தி நிலையை உணர்ந்து, ஜெபம் கொண்டே நல் வழி பெற்றிடுங்கள்.

**22-12-79**

இன்றைய இவ்வுலக நியதியிலே நீதி என்னும் சொல்லே இக்காலத்திற்குகந்ததாக இன்றைய மனிதர்களின் எண்ணத் தொடரினுல் மாறி மாறி வரும் இவ் அரசியலின் நிலைக்கொப்ப சாதகப்படுத்தி அநீதியையே நீதி என்ற சொல்லாக்கி நிலைநாட்டுகிறார்கள்.

இன்றைய இவ்வுலகின் நியதியில் நீதியும் சத்தியமும் எங்கு ஓங்கி நிற்கின்றது? தனக்குகந்த பொருளாதாரத்தின் செல்வத்திற்கு அடிபணிந்த நிலையில்தான் இன்றைய உலக நீதியே உள்ளது.

சத்தியமும், ஜெயமும் ஒன்றுமறியா பாமர மக்களுக்கு, இன்றைய உலக நியதிப்படி சொந்தமில்லா நிலையில், அடிமைப் படுத்திட்ட நிலையில்தான் நீதியும் சத்தியமுமே நிலைத்துள்ளன.

இச்செல்வத்திற்கு அடிமைப்பட்டும், செயற்கையில் வாழ்ந்திடும் இவ்வுலக நியதியில் தர்மமும், நியாயமும் தலை நிமிர்ந்திட வழியுமில்லை. இன்றைய நிலைக்கொப்ப நீதியுமில்லை. அவரவர்களே தான் தன் உணர்வை நல் நிலையாக, தன் எண்ண ஜெபத்தில்

வழிப்படுத்தி நம்முள் உள்ள பலகோடி அணுக்களையும், பல நிலை கொண்ட அணுக்களையும் நம் ஜெபத்தினால் நல்லணுவாய் அடக்கச்செய்து, நம் ஆத்மாவை வளர்ச்சி கொண்டிடல் வேண்டும்.

நம்மையே நாம் ஓர் ஆண்டவனாய் அனைத்து சக்திகளுமுள்ள கோளமாய் உணர்ந்து, நம்முள் உள்ள மற்ற அணுக்களின் உந்தலுக்கு அடிபணிந்திடாமல் நம் உணர்வே ஒரு நிலைகொண்ட நீதியாய், சத்தியமுடன் செயல்படல் வேண்டும்.

இன்றைய இவ்வுலகின் ஜீவஜெந்துக்களின் எண்ண நிலையே மாறு கொண்டு தீய சக்திகளுக்கு அடிபணிந்தே இந்நிலையின் தொடரின் எண்ண சக்தியால் காற்றின் அசுத்த அணுக்கள் நிறைந்து பரவி வருகின்றது.

இன்றைய நிலைக்கொப்ப புதிய புதிய வியாதிகளின் தொடர் நிலை பரவும் நிலையும் வெகு துரிதமாக உள்ளது. விஞ்ஞானத்திலும், மருத்துவ ஆராய்ச்சியிலும் பலப்பல புதிய மருத்துவத்தைக் கண்டுணர்ந்து செயலாக்கினாலும், இக்காற்றிலுள்ள விஷத் தன்மையை மாற்றும் நிலை எங்குள்ளது? இச் சுவாசத்தின் எண்ண சக்தியின் நிலைதான் இன்றைய இவ்வுலகின் நிலையுடன் கலந்துள்ள நிலை.

இவ்வுலகின் மேல் கலந்துள்ள சுவாசத்தையேதான் நம் பூமியும் ஈர்த்துச் சுவாசமெடுத்து வெளிப்படுத்துகிறது. இவ் அசுத்தக் காற்றை உயிராத்மாக்கள் மட்டும் சுவாசித்து வெளிப்படுத்தவில்லை. இப்பூமியும் அக் காற்றையேதான் தன் சுவாசத்தில் ஈர்த்து வெளிப்படுத்துகிறது.

இக்கலியில் மாறுகொண்டதுதான் இக்காற்றின் அசுத்த நிலையெல்லாம். இக்கலியில் வந்த மனிதர்களின் பேராசையினால் தான் இவ்வுலகின் நியதியே மாறுகொள்ளப் போகின்றது.

இப்பூமியில் மனித ஆத்மாவாய் வாழ்ந்திடும் நாம், நம் ஜெப நிலையை ஒருநிலைப்படுத்தினாலன்றி, இம்மாறப்போகும் கலியின் பிடியில் சிக்கி மீள வழிபெறாமல் அல்லல் படும் நிலையில் இருந்து மீண்டு சூட்சும நிலை பெற்றாலன்றி இன்று மனிதராய் வாழும் இப்பாக்கியத்தை நாமே நசியவிடும் நிலைதான் நமது நிலையாகிவிடும்.

ஒவ்வோர் ஆத்மாவுக்கும் நல் சக்தி உண்டு. தன் எண்ணத்தையே வாழ்க்கையில் நடந்த பல தீய நிலைகளுக்குச் சோர்வை அண்ட விடாமல், இனி நடக்கும் நிலையுணர்ந்தே செயல்பட்டு,

ஒவ்வோர் ஆத்மாவுமே சக்தி ஜெபம் பெற்று, சக்தியுடன் சக்தியாய் ஒளியுடன் ஒளியாய்க் கலந்துள்ள, நம் சப்தரிஷிகளின் நிலையுடனே கலந்திடலாம்.

இம்மனித ஆத்மாவிற்கு ஒன்றுதான் இக்காற்றினில் கலந்துள்ள பல அமில நிலைகளில் தனக்குகந்த அமில சக்தியை ஈர்க்கும் பக்குவ நிலை பெறலாம், தாவர நிலைக்கொப்ப. மற்ற ஜீவ ஜெந்துக்களின் நிலையில் இச் சக்திநிலை இல்லை. இம் மனித ஆத்மாவினால் அனைத்து சக்தியும் ஈர்த்து உணரும் காந்த சக்தி இம்மனித ஆத்மாவில் நிறைந்துள்ளன.

சாதாரண வாழ்க்கையில் பார்த்தும், கேட்டும், சுவாசத்தில் உணர்ந்தும், பேசியும் வரும் நாம், நமக்குகந்த சக்தியை உணராமல் செயல் கொள்கின்றோம்.

இயந்திரத்தின் துணையுடன் சில கருவிகளை அதற்குகந்த அமிலத்தைச் செலுத்தி ஒளிப்படங்களை பிம்பப்படுத்திக் கண்டிடும் நாம், அவ்வமில சக்தியையே நம் உணர்வுடன் ஈர்த்து, இக்காற்றினில் கலந்துள்ள அச் சக்தியை ஒருநிலைப்படுத்தி எங்குள்ள நிலையையும், உள்ள நிலையிலேயே நாம் கண்டிடலாகாதா என்றுணரல் வேண்டும்.

இவ்வுடல் என்னும் கோளத்திற்குகந்த காந்த சக்தியினால் இக்காற்றில் கலந்துள்ள எவ்வமில சக்தியையும் ஒலி, ஒளி இவற்றின் சக்தி நிலையையும் நம் உயிராத்மாவினால் செயல்படுத்திட்டால் முடிந்திடும்.

வானொலியின் துணையுடனும், தொலைக்காட்சியின் துணையுடனும், இயந்திரத்தின் துணையுடனும் செயல்கொள்ளும் இந்நிலையை இம்மனிதனால் செயல்படுத்திய இச்செயற்கையை நம் இயற்கை ஆத்மாவினால் அனைத்து சக்திகளையுமே அறிந்திட முடிந்திடும்.

இவ்வுடல் என்னும் இப்பிம்ப நிலை பெற்று இன்று நாம் வாழ்ந்திடும் இன்றைய நாள் முதல், உயிரணுவாய்த் தோன்றிய நாள் முதற்கொண்டு, பல நிலைகளை எடுத்து, பல சுவாச நிலைகளின் தொடருடன் வாழ்ந்து, நம்முடனே கலந்து வந்துள்ள இவ்வமில சக்தியில், நம் ஆத்மாவுடன் பல நன்மை, தீமை கொண்ட பலகோடி அணுக்களைச் சேமித்தேதான் வழிவந்துள்ள நாம் இனி வாழ்ந்திடும் வாழ்நாட்களில் நம்முள் உள்ள, நாம் பழக்கப்படுத்தி அடிமை கொண்டு வாழ்ந்து வந்த தீய சக்திகளின் நிலைக்கு அடி பணிந்திடாமல் நல்லுணர்வைச் சேமித்து, நம் நியதியையே நீதியாக உணர்ந்து செயல்படல் வேண்டும்.

**23-12-79**

இறைவனின் சக்திபெற்ற இறைவன்தான் நாமுமே. நம் சக்தியை உயர்ந்த நிலைப்படுத்தி நாம் இவ்வளவு காலங்களும் நம்முள் வளர்த்துவந்த தீய சக்திகளை அடிபணிய வைத்து நம் இறை சக்தியை உணரும் முறை அறிந்தே வழி நடந்திடல் வேண்டும்.

இக்கலியின் கடைசி இந்நூற்றாண்டில் தோன்றி, மகானாய் அவதரித்த அவரும் அவதாரத்தில் மகானாய்த் தோன்றவில்லை. எல்லோரையும் போல் பிறவி எடுத்து, பிறப்புடன் பல தவறு கொண்ட வாழ்க்கையில் வழி நடந்து வாழ்ந்துதான், அந்நிலையை உணரும் தருவாயில் தன் ஞான சக்தியை வளர்த்து, அந்நிலையை அனைவரும் உணர்ந்திட, பல இன்னல்களை ஏற்று அந்த ஞானத் தின் தொடரைத் தனதாக நிலைநாட்டி இன்றைய மக்கள் உணரும் மகாத்மாவாக வாழ்ந்து காட்டினார். தன் வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் இவ்வரசியலின் போர்வையினால்தான் மக்களை ஈர்த்திட முடியும் என்று சிறு சஞ்சலத்தின் எண்ணத்தினால் சப்த ரிஷிநிலைக்குச் செல்லும் தன் பாக்கியத்தை நழுவவிட்டார்.

அந்நிலையிலும் தான் என்ற தனதாக்கும் இறை பக்தியின், வழியின் பேராசை இல்லாததினால், சக்தி நிலைகொண்ட மகாத்மா வாய் இன்றும் நிலைத்திட்டார்.

நாம் கண்டு, நம்முடன் ஒன்றிய ஓர் ஆத்மாவே மகாத்மா வாய் உயர்ந்துள்ளதை உணர்ந்து, அவரையே ஆண்டவனாய் அவர் அடி நடந்திட்டாலே நம் ஆத்ம ஜெபமும் கூடும் என்ற உணரும் நிலை, அவருடன் கலந்து வாழ்ந்தவருக்கும் அன்றும் இல்லை இன்றும் இல்லை.

அன்று நடந்ததுவும், இன்று நடப்பதுவும், நாளை கனவு தான். நிலைத்து நிற்பவை அம் மகாத்மாவைப் போன்றோர் சேமித்து வளரவிட்ட, அவர் ரூபத்தில், அவரால் ஏற்படுத்திய நற்போதனை நிலைகள்தான் கனவில்லா உண்மை சக்தி நிலை.

இப்பூமியில் வாழ்ந்திடும் இப்பாக்கியத்தை நம் உடலில் உள்ள இவ் ஈர்க்கும் சக்தியைக் கொண்டே அனைத்து சக்தியையும் கண்டிடும் பக்குவ நிலையை உணர்ந்தே இறை பக்தியின் தொடர்பை ஈர்த்து அவ் இறை ஞானம் பெற்றவர்களின் நல் வழித்தொடரில் சென்றிடுங்கள்.

இப்பூமி எப்படித் தன்னுள் இப் பால்வெளி மண்டலத்தி லிருந்து அச்சூரியனின் ஒளிக்கதிரினால் வந்துள்ள அணுக்கதிர்களைத்

தனதாக ஈர்த்துப் பல கனிவளங்களை வளர்க்கின்றதோ, அந் நிலைபோல் இப்பூமி என்னும் மண்டலத்தில் நம் ஆத்ம மண்டலம் எச் சக்தியையும் கண்டுணரலாம்.

இப்பூமியில் சூரியனின் ஒளிக்கதிர் பட்டு, இப்பூமியும் நாமும் மட்டும் பயன் பெறவில்லை. இப்பூமிக்கும் மற்ற எல்லா மண்ட லங்களுக்கும் பொதுவான இப் பால்வெளி மண்டலத்தில் உள்ள சக்தி நிலையை யார் அறிவார்?

இப் பால்வெளி மண்டலத்திலும் பல கோடி உயிரணுக்கள் உயிர் பெற்று வாழ்ந்து, அந்நிலையிலேயே மாற்றுடல் பெற்று, பல நிலைகள் நடக்கின்றன.

இப் பால் வெளி மண்டலத்தில் பல அமில சக்திகள் நிறைந்தே திரவ நிலையில் படர்ந்துள்ளன. இன்றைய நம் விஞ் ஞானிகள் அந்நிலையை உணர்ந்தாலும், அத்திரவத்தையும் நம் பூமிக்கு ஈர்த்து எடுத்திடும் நிலைப்படுத்தி அவ் இயற்கையின் சக்தியையே தன் செயற்கையின் அழிவுக்குச் செயல்படுத்திடுவர்.

இன்னும் இவ் வானமண்டலத்தில் எண்ணிலடங்கா சக்தி நிலைகள் படர்ந்துள்ளன. நாம் காணும் நிலைக்கு மேகங்களும், பால்வெளி மண்டலமாகவும் காட்சி அளித்திடும் இப் பால்வெளி மண்டலத்தினால்தான் அனைத்துக் கோளங்களுமே ஜீவன் கொண்டு சுழல்கின்றன.

இப்பூமியும், சூரியனும், சந்திரனும், மற்ற எல்லா மண்டல முமே தன் நிலையில் ஒரே இடத்தில் தன்னைத்தானே சுற்றிக் கொண்டுள்ளது என்பதல்ல. சுழன்றுகொண்டே ஒன்றின் ஈர்ப்பில் ஒன்று சிக்கா வண்ணம் சுற்றிக்கொண்டே ஓடுகின்றன.

புதிய புதிய நட்சத்திர மண்டலங்கள் காண்கின்றோம். ஆனால் தொடர்பு கொண்டு என்றும் காணும் நட்சத்திர மண்ட லங்கள், இப்பூமியின் ஈர்ப்பு சக்தியின் நிலைகொண்டும், இப்பூமி யின் அமில சக்தியின் தொடர்பு கொண்ட நட்சத்திர மண்டலங் களாய் வாழ்ந்திடும் மண்டலங்களும், இப்பூமியின் ஓட்டத்துடன், தன் ஈர்ப்பு சக்தியையும் ஒன்றுபடுத்தியுள்ளதால் இப்பூமியுடனே அவற்றின் நிலையும் சுழன்றே இதன் ஈர்ப்புடனே வருகின்றன. அவற்றின் நிலையும் சுழன்றே இதன் ஈர்ப்புடனே வருகின்றன.

இப்புதிய நட்சத்திர மண்டலங்கள்தான், இப்பூமியின் ஓட் டத்தினால் அங்கங்குள்ள இப் பால்வெளி மண்டலத்திலிருந்து ஒன்றுபட்ட அமிலத்தினால் சிறு சிறு நட்சத்திர மண்டலங்களாய் ஆங்காங்கே சுழலும் நட்சத்திர மண்டலங்கள்.

இச்சுழலும் வேகத்தில் ஒன்றின் ஈர்ப்பில் ஒன்று சிக்குகின் றன. சில நட்சத்திர மண்டலங்கள் மாறுகொண்ட அமில சக்தி கலந்துள்ளனவாய் இருந்தால் இவ் ஈர்ப்பில் வந்தடையாமல் அதன் நிலையையே உருகும் நிலையாக, பரந்த நிலைப்படுத்தி, பிரிந்து விடுகின்றது.

இன்று காணும் நட்சத்திர மண்டலங்கள் எவையுமே இப் பூமியைப் போலவும், இப்பூமியின் நிலைக்கொப்ப வளர்ந்த நிலை கொண்ட, பெரிய மண்டலங்களின் நிலை போலவும் இல்லாமல், ஆவியான அமிலங்கள் ஒன்றுபட்டுக் கரையும் நிலைகொண்ட வடிவத்தில்தான் சுழன்று கொண்டுள்ளது, பனிக்கட்டியைப்போல்.

பனிக்கட்டி என்பது குளிர்ந்து நீராகும் தன்மையில் உறைந் துள்ளது. ஆனல் நட்சத்திர மண்டலங்களின் நிலை அதுவல்ல. அமிலமாய் அமிலத்தையே ஈர்த்து, அமிலக் கோளங்களாய் உயி ரணுக்களை வளர்த்திடாமல் சுழன்று கொண்டுள்ளவை.

இப்பூமியிலுள்ள எல்லாக் கனிவர்க்கங்களுமே கரைபவை தான். ஆவி நிலைகொண்டவைதான் என்றுணர்த்தியுள்ளேன். சூரியனிலிருந்து வரும் எல்லா நிலைகொண்ட அமிலத்தையும் ஈர்க்கும் நம் பூமியில் மண்ணும், கல்லும், ஈயம், பித்தளை, செம்பு, தங்கம், வைரம், இதற்கும் மேல் சக்திகொண்ட பல படிவங்களும் கலந்துள்ளன. நட்சத்திர மண்டலத்தில் ஒவ்வொன்றும் ஒவ் வொரு நிலைகொண்ட அமிலத்தை ஈர்ப்பதினுல் நம் பூமியிலுள்ள பல நிலைகொண்ட கனிவர்க்கத்தின் நிலைபோல் ஒவ்வொரு நிலை கொண்ட நட்சத்திர மண்டலங்கள் பல கோடி உள்ளன.

இன்றைய இக்கலியில் தங்கத்திற்குப் பொருளாதாரச் செல்வமாய் மதிப்புத் தந்திடும் இத் தங்கக் கோளத்தையே, ஒரு நிலைகொண்ட அமிலமாய் ஈர்த்து நட்சத்திர மண்டலமாய் பல கோடி சுற்றிக்கொண்டுள்ளன.

இப்பூமியின் கனிவளங்களின் சக்தி நிலைகொண்ட அமிலங் கள் எல்லாமே தனித்துப் பல நிலைகள் கொண்ட நட்சத்திர மண்டலங்களாய் சுழன்றுகொண்டுள்ளன.

இன்றைய மனிதன் விஞ்ஞானத்தினுல் பெரிய கோளங்களின் நிலையறிந்திடச் செல்லுகின்ருன், இச் சிறிய கோளமான நட்சத் திர மண்டலங்களின் சக்தி நிலை அறியாததினுல்.

வானமண்டலத்தின் தொடர் நிலையை நாளை உணர்த்திடு வேன்.

24-12-79

இப் பால்வெளி மண்டலத்தில் நிறைந்துள்ள அமில சக்தி யின், அமில சக்தி மட்டுமல்ல ஜீவ சக்தியினுல் உராயும் நிலை கொண்டுதான் ஒவ்வொரு கோளங்களுமே சுழல்கின்றது.

ஒவ்வொரு கோளமும் தான் ஈர்த்து வெளிப்படுத்தும் சுவா சத்தின் நிலை, இப் பால்வெளி மண்டலத்துடன் மோதுண்டவுடன் தான் ஒலி பிறக்கின்றது. இவ் ஒலியினுல்தான் ஒவ்வொரு மண்டலமுமே சுழலுகின்றது.

பால்வெளி மண்டலமாய் ஜீவனுடன் உள்ள வானமண்டலத் தையே நாம் பரந்த வெளியாகக் காணுகின்ருேம். இப் பால்வெளி மண்டலத்தில் நிறைந்துள்ள இவ்வமில சக்தியே அனைத்து மண்ட லங்களுக்குமே உயிர்நாடி.

இப்பூமியிலிருந்து நாம் காணும் பால்வெளி மண்டலமான இவ் வானமண்டலத்தில் படர்ந்த மேகக் கூட்டங்கள் ஓடுவதைப் போல் காண்கின்ருேம். அம்மேகக் கூட்டங்கள் மட்டும் ஓடவில்லை. நாமும்தான் ஓடுகின்ருேம். அனைத்து மண்டலங்களும்தான், ஒரு நிலையில் நிலைத்து நில்லாமல் ஓடிக்கொண்டே உள்ளன.

இப்பூமி சுழலும் வேகத்தைப் பொறுத்து இப்பூமியில் நடக்கும் சீதோஷ்ண நிலைகள் உள்ளன. இப்பூமியிலேயே பல பாகங்களில் பல நிலைகொண்ட சீதோஷ்ண நிலை கலந்துள்ளது.

இப்பூமியிலிருந்து மற்ற மண்டலங்களில் உள்ள நிலையறிய நம் சக்தியைச் செயலாக்குகின்ருேம். இப்பூமியிலேயே இப்பூமியின் பூமத்திய ரேகையான அம் மையப்பகுதியில் உள்ள நிலையென்ன?

இப்பூமியில், பூமி சுழலும் 24 மணி நேரக் கணக்கு விகிதப் படி ஒரு நாளையும், இரவுபகல் நிலை ஒவ்வொரு பாகத்திலும் ஏற்படும் நிலையெல்லாம் இப்பூமி சுழலும் வேகத்தையும் அங்கங் குள்ள நிலையையும் அறிகின்ருேம்.

ஆனுல் இப்பூமியின் மையப்பகுதியில் என்றுமே சூரியனின் நேர் ஒளிக் கதிர்கள் தாக்குவதில்லை என்பதனை அறிந்துள்ளோமா?

இப்பூமத்திய ரேகையின் மையத்திற்கு சற்றுத் தள்ளிய இடத்தில்தான் பகலும் இரவும் சில காலங்கள் மாறி மாறி வரு கின்றன. மையப் பகுதி என்றும் இருண்ட நிலைதான். ஆனுல் அம் மையத்தினுல்தான் இப்பூமியில் நிறைந்துள்ள கடலின் நீர்நிலை களெல்லாம்.

இப்பூமியின் மற்ற இடத்தில் ஒளிக்கதிர் பட்டு இப்பூமி சுழ லும் வேகத்தில் மற்ற இடத்தில் படும் இவ்வொளிக்கதிரின் அமில

சக்தியின் நிலையை இம்மையப்பகுதி ஈர்த்துப் படிவங்களாய் பாறையைப்போன்று அடர்ந்து பதிந்துள்ளன.

இச்சுழலும் நிலையிலேயே மென்மேலும் ஈர்த்து அப்படிவங் களுடன் அவ்வமில நிலை வளர்ந்துகொண்டே உள்ளன. எந்நிலையில் உப்பு அமில சக்தி படிவங்கள் வளர்ச்சி கொண்டுள்ளனவோ, அந் நிலை போன்ற விகிதத்திலேயே, இப்பூமி சுழலும் வேகத்தில் பால் வெளி மண்டலங்களில் நிறைந்துள்ள அமில சக்தி மோதுண்டு உருகும் நிலையில் ஆவியான உப்புக்கலந்த நீராய் வடிகொண்டு தான் இன்று கடலாய் வற்றாத நிலையில் பொங்கிக்கொண்டுள்ளது.

இப்பூமத்திய ரேகையின் சிறிது தள்ளியுள்ள நிலையில் சில காலம் ஒளியும் இருட்டும் உள்ள நிலைப்படுத்தித்தான் அந்நிலையின் தொடர்பு நிலைகொண்ட பூமிகளில் உள்ள கடலில் நீர்நிலை பொங்கி வருவதைக் கண்டிடுவீர்.

இவ்வுப்புக் கலந்த அமிலத்தின் படிவத்திலிருந்து உற்பத்தி யாகி வருவதுவே கடல் நீர் உப்புக் கரிக்கும் நிலை. ஆனால் இக் கடற்கரை ஓரங்களிலேயே உள்ள கிணறுகளில் உள்ள நீரெல்லாம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு ருசியுடன் அப்பூமியின் நிலைக்கொப்பச் சுவை தருகின்றது.

இன்று கடலாய்ப் பொங்கி உள்ள இடத்திலேயே இக்கடல் நீரின் மட்டத்திற்குக் கீழ் அப்பூமியின் நிலையிலிருந்து தோண்டி எடுக்கும் நீரின் சுவை இக்கடல் நீரின் சுவைக்கு மாறுகொண்டதா கத்தான் இருந்திடும்.

நம் பூமியின் இயற்கை சக்தியின் தெய்வமான சூரியனின் சக்தியில் இருந்து பல சக்தியை நாம் நேராகவும் மற்ற மண்டலத் தில் மோதி அம்மண்டலத்திலிருந்தும் ஒன்றின் துணையுடன் ஒன் றாய்ச் செயல்படவே இப் பால்வெளி மண்டலத்தின் சக்தியின் துணையினால் செயல்கொண்டுள்ளோம்.

இவ்வியற்கையின் ஒவ்வொரு நிலையையும் உணர்ந்திட்டால், அவ்வாண்டவனின் சக்தியின் நிலை ஒன்றுடன் ஒன்று செயல்படும் நிலையை அறிந்திட்டால் அவ்வாண்டவன் என்ற சக்தியே தனித் தில்லாமல் செயல்படுவதாய் உணர்கின்றோம். அனைத்து சக்தியுமே ஒன்றுடன் ஒன்று கலந்த சக்தியாகத்தான் அவ் வாண்டவனின் சக்தியுள்ளது. அவ் ஒரே சக்தியான, நிறைந்த தனித்த சக்தி அச் சக்தியின் கலந்த சக்திதான் நம் அனைத்து சக்தியுமே.

25-12-79

கிறிஸ்து பிறந்த நாளில் வானமண்டலத்திலிருந்து புதிய நட்சத்திரங்கள் தோன்றி, பிரகாசமான ஒளி தந்ததை அன்று வாழ்ந்துவந்தவர்களில் பலர் பார்த்ததாகவும் செப்புகின்றனர்.

வானமண்டலத்தில் தோன்றிய அந்நட்சத்திரத்தின் பிரகாசமான ஒளி எந்நிலையில் வந்தது? அவற்றின் நிலை இப்பூமியின் மேல் எப்படிப் படிந்தது? என்ற நிலையென்ன?

இப்பூமி சுழலும் வேகத்தில், பால்வெளி மண்டலத்தில் சுற்றிக்கொண்டுள்ள எண்ணிலடங்கா பல நட்சத்திரங்களை இப் பூமி ஓடும் ஓட்டத்தில் காண்கின்றது.

இப்பூமி சுழன்று ஓடும் வேகத்தில் அங்கங்குள்ள அமில நிலையினால் உருப்பெற்ற இந் நட்சத்திர மண்டலங்கள் இப்பூமியின் ஈர்ப்பில் சிக்கி இப்பூமியுடன் வந்து சேருகின்றது.

நட்சத்திர மண்டலங்கள் அனைத்தும் கரையும் தன்மை கொண்ட அமில சக்தியினால் மின்னுவதுதான்.

நட்சத்திர மண்டலத்திற்கும், பால்வெளி மண்டலத்திற்கும், நம் பூமியின் சக்திக்கும், நம் பூமி தொடர்புபடுத்தி நம் பூமி சுழன்று ஓடும் வேகத்தில், பால்வெளி மண்டலத்தில், நம் பூமியின் சக்தி மோதும் ஈர்ப்புத்தன்மைகொண்டு, இப்பூமிக்குகந்த அமில சக்தியுடைய நட்சத்திர மண்டலமாய் இருந்திட்டால், இப்பூமியின் பிடிப்புடன், அந் நட்சத்திர மண்டலத்தை, இப் பால்வெளி மண்டலத்திலுள்ள காற்றுமண்டலம் அதன் மேல் மோதி, இவ் ஈர்ப்பு சக்தியில், அந்நட்சத்திர மண்டலம், இச் சுழலும் வேகத்தில் பட்டு, ஒன்றுக்கொன்று, திடமாய் உறைந்த அமில சக்தியைக் கொண்ட அந் நட்சத்திர மண்டலமே, இப் பூமியின் ஈர்ப்பில் வந்து சிக்கியவுடன், கரைந்த அமிலமாய், இப்பூமியைச் சுற்றியுள்ள காற்று மண்டலத்தில் கலந்துவிடுகின்றது.

இந்நிலைபோல்தான் பல கோடி நட்சத்திர மண்டலங்களும். இப்பெரிய கோளங்கள் சுழன்று ஓடும் ஈர்ப்பில் அதனதன் அமில சக்தியின் தொடர் நிலைகொண்ட நட்சத்திர மண்டலங்களெல்லாம், அது ஈர்த்து, செயல்கொண்ட சக்தியிழந்து, அந்நட்சத்திர மண்டலத்தின் ஆத்மாவும் பிரிந்து, அதன் சக்தி அமிலம் மற்றப் பெரிய மண்டலங்களின் அமிலமுடன் அமிலமாய்க் கலந்துவிடுகின்றது.

இப்பெரிய மண்டலங்களின் ஈர்ப்பில் சிக்காமல், இம் மண்டலத்துடன் தொடர்பு கொண்டே, பல நட்சத்திர மண்டலங்கள் சுழன்றுகொண்டே ஓடி வருகின்றன.

இன்னும் சில நட்சத்திர மண்டலங்கள், இப்பெரிய மண்டலங்கள் ஓடும் நிலையில், இவ்வமிலத்திற்கும், நட்சத்திர மண்டலத்தின் அமிலத்திற்கும், சத்துரு மித்துரு நிலையாய் இருந்தால், இம்மோதுண்ட நிலையில், எரி நட்சத்திரமாய் எரிந்து, அந்நிலையிலேயே கருகிய நிலையில் செயலற்றதாகி விடுகின்றன.

இவ்வான மண்டலத்தில், இப் பால்வெளி மண்டலத்தில் நடந்திடும் சக்தி நிலை, எண்ணிலடங்கா நிலைகொண்டவைகளாக உள்ளன.

இப்பூமியில் இருந்து, வாழ்ந்து, சாதாரண நிலையில் ஆயுள் பிரிந்த ஆத்மாக்கள் அனைத்துமே, இப்பூமியிலிருந்து, இப்பூமியைச் சுற்றிப்படர்ந்துள்ள இக்காற்று மண்டலத்தில் ஒட்டிய நிலையிலேயேதான், இவ்வனைத்து ஆவி ஆத்மாக்களும் சுற்றிக்கொண்டே உள்ளன.

இப்பூமியில் சுவாசித்து வாழ்ந்ததின் நிலைக்கொப்ப உள்ள காற்று மண்டலத்துடனேதான், உடல்விட்டுப் பிரிந்த ஆவிகளின் சுவாச நிலையும் கலந்துள்ளது. மற்ற மண்டலத்திற்குச் செல்லவோ, இப்பூமியின் காற்று மண்டலத்திற்கு மேல் உள்ள இயற்கை நிலையுடனே. இப்பூமியில் உயிரணுவாய் உருப்பெற்று வாழ்ந்து ஆவி உலகிற்கு வந்த உயிரணு, உயிராத்மா எல்லாம் இவற்றின் நிலையில் படர்ந்தே தான் சுற்றிக் கொண்டிருக்க முடியும்.

வான மண்டலத்தில் நட்சத்திர மண்டலமாய் மின்னும் சக்திக்குக்கூட இப்பூமியில் உதித்த உயிரணுக்களினால் சுவாச நிலை மாறி, வளர்ச்சி நிலை பெறும் நட்சத்திரமாய் மின்ன முடியாது. ஆனால் இப்பூமியிலேயே பிறப்பில் வந்து இப்பிறப்பின் பயனைப் பெற்று சூட்சும நிலைகொண்ட ஆத்மாக்கள் பல இன்று நட்சத்திர மண்டலமாய் ஒளிர்ந்து வாழ்கின்றன.

இன்று இப்பூமியில் உள்ள நிலைபோல் மனித ஆத்மாக்களாய் வாழும் நிலைகொண்ட ஆத்மாக்கள் இப்பூமியைச் சார்ந்த இந்த 48 மண்டலங்களிலும் இல்லை என்று உணர்த்தினேன். இதுவே இன்னும் இருபது, முப்பது ஆண்டிற்குள் இப்பூமியில் உடலுடன் வாழ்ந்திடும் மனித ஆத்மாக்களே இன்று செயற்கையுடன் ஆசை கொண்டு சந்திர மண்டலத்திற்குக் குடியேறும் நிலைக்காக ஆராயும் மனிதர்களே வரப்போகும் இக்கலியின் மாற்றத்தினால், இன்று இப்பூமியிலுள்ள சக்தியின், தொடர் சக்தியின் வளர்ச்சி நிலை பெற்ற சந்திரனில் வாழத்தான் போகின்றான்.

இன்று நாம் வாழும் இப்பூமியின், சக்தி நிலையின், வளர்ச்சி நிலையினால் வரப்போகும் கல்கியில் பெரும் மாற்றம் கொண்டதாக இயற்கை சக்தியே செயல் கொள்ளப்போகின்றது.

இம்மாற்றத்தின் அசைவினால் இப்பூமியுடன் பல நட்சத்திர மண்டலங்களின் குவிப்பு சக்தி சேரப்போகின்றது.

மனித ஆத்மாக்களினால் இக்கலியின் கொடுமையினால் இவ்வியற்கையின் சக்தி கொண்ட இப்பூமியின் ஆத்மாவே இம்மனித ஆத்மாக்களின் அழிக்கும் எண்ண சக்தி கொண்ட ஆத்மாக்களைச் சிற்றம் கொண்டே மாற்றி இன்னும் சக்தி கொண்ட பூமியாகத் தான், நம்பூமி சுழலப் போகின்றது.

இப்பூமியில் உதித்த மனித ஆத்மாவினால்தான் இக்கலியின் நிலையும் மாற்றம் கொள்ளப் போகின்றது. எந்நிலையில்? நாளை விளக்கம்.

**26-12-79**

உயிரணுவாய் உதித்திட்ட இவ்வுயிர் அணுக்களே வளர்ச்சியின் வழி சக்தி நிலைகொண்ட உயிராத்மாவாய் இம் மனித உடல் பெற்று, எண்ண நிலையின் வளர்ச்சித் தொடர் கொண்டு, அவ்வெண்ணத்தின் ஞான சக்தியினால், பல நிலைகளைக் கண்டுணர்ந்து, ஆத்ம சக்தியை எண்ண சக்தியுடனே வளர்ச்சி கொண்டு வந்த நிலையில், இக்கலியின் முற்பட்ட அவதார காலங்களிலெல்லாம் வந்த ஞானத்தின் வழித்தொடர் சக்தி நிலையே கிருஷ்ணவதார கால முதற்கொண்டு, இக்கலியின் காலத்திலும் நாகரிக வளர்ச்சி என்ற வளர்ச்சி நிலைபெற்று, வழி வந்திடும் நிலையில் ஞான வளர்ச்சி நிலை குன்றிவிட்டது.

நல்லொழுக்கம், நல் ஞானம், சத்தியம், தர்மம், நியாயம் என்ற நற்சக்திகளின் வழித்தொடரில் சென்றிட, இன்று, இக்கலியில் பிறப்பெய்தி வாழும் இம் மனித ஆத்ம சக்தியிலேயே தொடர் நிலை இல்லை.

இக்கலியில் மனிதர்களாய் இன்று வாழ்பவர் எல்லோருடைய நிலையிலும், இக்கலிக்கும் முற்பட்ட காலத்திலேயே வாழ்ந்தவரின் எண்ண சக்தி நிலையில் வந்திட்ட ஆத்மாக்களாய், இக்கலியில் பிறப்பெடுத்து வாழ்வதினால், இன்று வாழும் அனைத்து ஆத்மாக்களின் எண்ண சக்தியே, அன்று வாழ்ந்தவரின் தொடர் நிலையினால் வந்த வினைதான்.

இன்று வாழ்ந்திடும் மனித ஆத்மாக்களின் எண்ணம் முன் ஜென்மத் தொடருடன் செயல்பட்டு வழி வந்த வினை, இன்றைய இக்கலியின் பேராசை நிலை.

நாமாய் இந்நிலையை வளரவிடவில்லை. வளர்ச்சியின் தொடர் நிலைதான் இந்நிலை.

ஒவ்வோர் உடலுக்குள்ளும் அவ்வுடலுக்குகந்த ஆத்மா ஒன்றுதான். ஆனல் ஒவ்வோர் உடலுக்குள்ளும் இருந்து செயல் படும் மற்ற அணுக்களின் நிலை அதிகம்.

தோன்றிக்கொண்டே உள்ள உயிரணுக்கள் இப்பூமியில் உதித்து வளர்ச்சிகொண்ட எல்லா உயிர்த் துடிப்புக் கொண்ட கோளத்திலும் அன்றன்று உயிர் பெற்றுக்கொண்டே வளர்ந்து வருகிறது.

தாவரங்களில் எப்படி அதன் சுவாசத்துடன் கூடிய புழுக்கள், பூச்சிகள், வண்டுகள் வளர்கின்றனவோ அந்நிலை போன்றே, இப்பூமியில், கழிவிடங்களில், நிலத்தில், நீரில் இப் பால்வெளி மண்டலத்தில் மற்றப் பிராணிகள், பட்சிகள், மனிதர்கள் எல்லாவற்றிலுமே இவ்வுயிர் அணுக்கள் வளர்ந்து கொண்டேதான் உள்ளன.

அந்நிலையில் நம் உடலுடன் சூரியனின் ஒளிக்கதிரிலிருந்து வந்திடும் உயிரணுக்களின் நிலை பல வளர்ந்துகொண்டே ஒவ் வொரு நாளும் உள்ளன. ஒவ்வொரு நாள் என்பது மட்டுமல்ல, நம் சுவாச நிலை செயல் கொண்டிடும் நிலையிலெல்லாம் பல உயி ரணுக்களின் நிலை நம் உடம்பிலும் ஏறுகின்றது.

இப்புதிய உயிரணுக்கள் மட்டுமல்லாமல் இக்காற்றினில் படர்ந்துள்ள, ஏற்கனவே பல நிலைகளில் வாழ்ந்து, பல உடல் நிலைகளை மாற்றிக்கொண்ட, பல எண்ணக்கலப்புக் கொண்ட உயி ரணுக்களும் நம் சுவாசத்துடன், நம் உடலுடன் ஏறுகின்றன.

நம் உயிராத்மாவும், உயிரணுவாய்த் தோன்றிப் பல நிலைகள் பெற்ற பிறகு இம் மனித ஆத்மாவாய் உடல் கொண்ட, எண்ணக் கலப்புக் கொண்ட வாழ்க்கையின் இவ் ஏழு ஜென்ம நிலைகொண்ட, சக்தி நிலை தொடர்பும் கொண்டு, இன்று வாழ்ந்திடும் இவ்வுடலுடன் கூடிய ஆத்மாவை, இவ்வெண்ணச் சிதறலில் இருந்தும் இன்றைய வாழ்க்கை நெறி முறையிலிருந்தும் தப்பி, ஞான சக்தியின் வழித்தொடரை அறிய நம் எண் ணத்தையே கடும் ஜெபம் ஆக்கினல் ஒழிய, இன்றைய இப் பிடியி லிருந்து மீள்வது மிகவும் கடினம்தான்.

இன்றுள்ள இவ்வளர்ச்சியின் தொடரிலேயே மனித ஆத் மாக்கள் சென்றிட்டால், இச் செயற்கையின் ஆசையினலும், இவ் விஞ்ஞான எண்ண வளர்ச்சியினலும், இம் மனித ஆத்மாக்களின் எண்ண நிலையே சூனிய நிலைபோல் சக்தியிழந்து, செயலற்ற நிலையில் செல்லும் நிலைக்குத்தான், இக்கலியின் பிடியில் நம் ஆத்மாக்கள் சிக்குண்டுள்ளன.

இவ்வணுக்கதிர்களை ஆராயும் நிலைக்காக, இப்பூமியிலிருந்தும், வான மண்டலத்திலிருந்தும் பல அணுக்கதிர்கள் ஒன்றுபடுத்தி இவ் விஞ்ஞானத்தில் செயல்படுத்திடும் நிலையினால், இவ்வணுவின் வெடிப்பு அடிக்கடி ஏற்படுத்துவதினாலும், இக்காற்று மண்டலமே செயலற்றதாகி, மனித ஆத்மாக்களின் சுவாச நிலையும் மாறுகொண்டு, இவ்வெண்ணச் சிதறல்கள் ஏற்பட்டு, சூனிய நிலைகொண்ட பைத்தியங்களாய்த்தான், இம்மனித ஆத்மாக்களின் நிலையும் செயல்படப் போகின்றது.

அறிவு நிலைகொண்ட ஆத்மாக்களுக்கே இந்நிலையென்றால், இம்மனிதனிலிருந்து மாறுகொண்ட மிருகங்கள், பட்சிகள் இவற்றின் நிலை எப்படி இருந்திடும்?

எண்ண வளர்ச்சியை ஞானத்தின் சக்தி நிலை தொடர்புபடுத்தி, சுவாச நிலையை ஒருநிலைப்படுத்தினாலன்றி இக்கலியின் பிடியிலிருந்து தப்புவது கடினம்தான்.

**27-12-79**

இன்றளவும் இப்பூமியின் நியதியையும் இம்மனித ஆத்மாக்களின் எண்ண நிலையையும், ஆவி உலக ஆத்மாக்களின் செயல் நிலையையும், இப்பூமியுடன் தொடர்பு கொண்ட மற்ற மண்டலங்களின் நிலையின் வழித்தொடரையும் சிறுகச் சிறுக உணர்த்தி வந்துள்ளேன்.

இனி நாம் எந்நிலைகொண்ட ஜெபத்தினால், இக்கலியின் பிடியிலிருந்து மீள முடியும் என்ற சக்தித் தொடரைத்தான் செயலாக்கிடல் வேண்டும்.

இப்பூமியில் நாம், இம்மனித ஆத்மாக்களாய் வாழ்ந்திட, நம் ஆத்மாவுடன் பெற்ற சக்தியின் ஜெயத்தினால்தான் இன்று இந்நிலையில் வாழ்ந்திடும் இப்பாக்கியமே.

இப்பூமி தோன்றிப் பல கோடி ஆண்டுகளுக்குப் பிறகுதான், இப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் மனித ஆத்மாவாய், மனித உடல் கொண்ட ஜீவன்கள் வளர்ச்சி கொண்டு வாழ்ந்திட முடிந்தது.

இவ்வளர்ச்சி கொண்ட, இம்மனித ஆத்மாக்களின் எண்ண, செயல் நிலையும், இப்பூமியில் எல்லா இடங்களிலும் ஒன்றுபோல் இல்லாமல், இந்த ஞான வளர்ச்சி ஜீவ ஆத்மாக்களில் வாழ்ந்த ஆத்மாக்களே இப்பூமியில் ஆயிரத்தில் ஒன்றிரண்டு விகித நிலைகளை விடக் குறைவுதான்.

நாகரிக வளர்ச்சிகொண்ட ஆத்மாக்கள் வாழ்ந்திடும் நிலைகள்தான் நமக்குத் தெரிகின்றது. இவ்வெண்ண நிலைக்கொப்ப ஆயுட்காலமும் இம்மனித ஆத்மாக்களின் நிலையில் ஒத்துள்ளன.

நாம் அறிந்திடாமல் நமக்கும் மேல் நீடித்த ஆயுள் காலங்கள் கொண்ட ஆத்ம உடல் கொண்ட மனிதர்கள் இப்பூமியில் பலர் உள்ளனர். ஆயிரம் காலங்களும் மாற்றுடல் ஏருமல், ஒரே உடம்பில் வாழ்ந்திடும், எண்ண வளர்ச்சி நிலையில்லாத, ஒரே நிலைகொண்ட, குறுகிய எண்ணத் தொடரில் ஆத்ம உடல் பிம்பங்கள் கொண்டவர்கள் பலர் உள்ளனர்.

இந் நாகரிக வளர்ச்சி கொண்ட மனித ஆத்மாக்களின் உடல் நிலையின் வளர்ச்சி நிலை அங்கில்லை.

இவ்வெண்ண வளர்ச்சியின் நிலையினுல்தான், இம்மனித ஆத்மாக்களின் பெருக்கமே கூடிவிட்டது. ஆனுல் நாம் அறிந்திடாமல் இப்பூமியில் வாழ்ந்திடும் நாகரிக அறிவு வளர்ச்சியற்ற ஆத்ம உடல் கொண்ட, மனிதர்களின் நிலை, நம் நிலைக்கு மாறுகொண்டதாக உள்ளது, மிருகங்களின் நிலைக்கொப்ப. ஆனுல் அவ்வுடல்களில் எவ்விஷத்தன்மையும் பாய்ந்திடாது.

காடுகளில் பாம்பு, நரி இப்படி உள்ள மிருக இனங்கள் எப்படி வாழ்கின்றனவோ அப்படியே தன் இன வர்க்கத்தை இவ் வெளியுலகப் பிடிக்குச் சிக்கா வண்ணம் அவ்வுடல் ஆத்மாக்கள் கொண்டவர்கள் வாழ்கின்றனர்.

ஆனுல், இவ்வெண்ணத் தொடரின் வழித்தொடரில் வந்த நம் மனித உடல்கள்தான், இக்கலியின் மாற்றத்தில் எண்ணச் சிதறல் பட்டும், இவ் இயற்கையின் சீற்றத்திற்கு அடிபட்டும் மாளப்போகின்றன.

இவ்வெளி உலகப் பார்வையில் சிக்காமல் இப்பூமியில் மனித ஆத்மாவாய்ப் பல ஆயிரம் ஆண்டுகளாக உள்ள மனித இன வர்க்கமெல்லாம் இக்கலியிலும் ஜீவன் பிரியாமல் வரப்போகும் கல்கியிலும் வழித்தொடர் பிடித்தேதான் வாழப்போகின்றனர்.

அவர்களின் எண்ணத்தில் இம்மாற்றமும் இவ் இயற்கையின் சீற்றத்தின் பயமும் எதுவும் தாக்கிடா.

இன்றைய செயற்கையினுல் ஏற்படுத்திய வெடிகுண்டுகளைப் பாய்ச்சினுலும் அவ்வுடல்களைப் பாதிக்காது. எண்ண நிலையே யில்லாமல், குறுகிய நோக்கில் தன்னைக் காத்து, வழிவந்த ஆத்

மாக்களுக்கு, நம்மைக் காட்டிலும் வீரிய சக்தி பெற்றுள்ளபோது, ஞான சக்தியின் செயலாக்கும் அறிவு வளர்ச்சி பெற்ற நாம், நம் ஆத்மாவை விஷக் காற்றிலிருந்தும், விஷமாய் இவ்வுலக நிலையையே மாற்றம் கொள்ளும் இவ்வெண்ண நிலையின் தாக்குதலி லிருந்தும், எவ் அணு வெடிகள் நம் மேல் பாய்ந்தாலும், நம் உடலில் உள்ள அத்திய சக்தியை ஏற்கா வண்ணமும், நம்மை நாம் இவ்வொளியின் ஒளியாய் ஒளிர்ந்திடும் சக்தியில், நம் உடல் பிம்பத்தையும், நம் ஆத்மாவையும் செயலாக்கிடல் வேண்டும்.

இப்பூமியிலே நம்மைப்போன்றே ஆத்ம உடல் கொண்டு வாழ்ந்து வாழ்க்கையின் உன்னத சக்தியுணர்ந்து, சூட்சும நிலை கொண்ட பல கோடி நற்பெரியோர்களின் ஆசையின் தொடர் நிலையை, நம் ஆத்மாவின் சக்தியில் செயலாக்கிட, அவர்களின் வழித்தொடர் நமக்கும் கிட்டும்.

இவ்வுலகில் தோன்றிய ஆசை நிலையினால், இவ்வுலகைக் காத்திடும் ஆசையில், பல ஆத்மாக்களை இப்பக்தியின் ஈர்ப்பில் பல சித்தர்களும், பல ரிஷிகளும் செயல்படுத்தி வருகின்றனர்.

நம் எண்ண நிலையை ஒரு நிலைப்படுத்தி, இவ் ஓங்கார நாதம் கொண்ட ஒலியுடனே கலந்து, ஒளிபெறும் சக்தி நிலையை நாம் அடைந்திடும் வழித்தொடர் நிலையை அறிந்தே வாழ்ந்திடுவோம். தொடர் நிலை நாளை.

**28-12-79**

சத்தியத்தின் சக்தி நிலைச் சங்கத்தினால் வெளியிடப்படும் இச்சக்தி நிலையின் வாயிலாக இவ்வுலக நியதியே இக்கலியின், இக் காலத்தில் மாற்றம் கொள்ளப் போகும் உண்மை நிலையை நம் தியான முறைப்படி உணர்த்துகின்றோம்.

ஒளியாய் ஒவ்வோர் ஆத்மாவும் எந்நிலையில் ஒளிர்ந்திடலாம் என்பதனை உணர்ந்து செயல் படும் வழி முறைகளை நாம் அறிந்த வழியில் உணர்த்துகின்றோம்.

இப்பூமியிலே உயிரணுவாய்த் தோன்றி உயிராத்மாவான, இன்றும் தன் உடலை அழியா வண்ணம் ஒளியுடனே நினைத்த நேரத்தில் கலந்து செயல் கொள்ளும் கொங்கணவரும், போகரும் இவ்வழித் தொடரை எந்நிலையில் பெற்றார்கள்?

இப்பூமியில் அபிராமிப்பட்டராய், அபிராமி அந்தாதி இயற் றிய அவ் அபிராமிப்பட்டர், அம்மாவாசை நாளில் பௌர்ணமி

நிலவைக் காண முடியும் என்று உணர்த்தி பூர்ணச்சந்திரனைக் காணச் செய்தது எந்நிலையில்?

சந்திர நிலவா அன்று காட்சி அளித்தது?

அபிராமிப்பட்டராய் வாழ்ந்த அவ்வாத்மா, தன் எண்ணத்தைத் தன் உடலில் உள்ள ஒவ்வோர் அணுவையும் அச்சக்தி மாதாவின், செயல் சக்தியின் உண்மைக்கே அடி பணியச் செய்து, அவ்வுண்மையின் சக்தியையே அன்புகொண்டு பூஜித்து, தன் எண்ணத்திலும், உணர்விலும் எவ்வணுவின் சக்திக்கும் அடிபணிய வைத்திடாமல், ஒரே சக்தி ஜெபத்தை ஈர்த்து வழி வந்த நிலையில், அம்மாவாசையில் பௌர்ணமி நிலவைக் காண முடியுமென்று அவ் அரசின் எண்ண நிலையில் தெய்வ சக்தியை ஓங்கிக் காட்டிடல் வேண்டும் என்ற ஒரு நிலைகொண்ட, தீவிர ஜெப சக்தியினால் அவ் அபிராமியின் மேல், அவர் துதித்துப் பாடிய, அவரின் ஒரு நிலைகொண்ட எண்ண சக்தியே அவர் உடலிலுள்ள அனைத்து அணுக்களும் பிரிந்து ஒளியாகி, கூடி, பௌர்ணமி நிலவாய் அனைவரும் காணும் சந்திர பிம்பமாய்க் காட்சி தந்தது.

அபிராமிப்பட்டரின் ஆத்மா பெற்ற சக்திதான், அவ்வாத்மாவே நிலவாய் ஒளிர்ந்தது. அவரின் கூடுதான் அங்கு பிம்ப நிலையில் இருந்தது.

சக்தியின் தேவியையே தன் ஆத்மாவில் ஐக்கியப்படுத்தி செயல்படுத்திக் காட்டினார்.

இன்று போகரின் நிலை ஒளியுடன் முருகா என்ற உள்ளமுருக ஒலிக்கும் நிலைக்கெல்லாம் ஒளியாய் நல்லருளைச் செலுத்தும் நிலையும் இதுவே.

கொங்கணவரின் நிலையும் இந்நிலைக்குகந்ததே. தன் ஆத்மாவின் சக்தியையே ஒளியுடன் கலந்து ஒளிரும் சக்தி இவர்களுக்கெல்லாம் உண்டு.

ரிஷிகளும், முனிவர்களும் மந்திரம் செய்யவும், தந்திரம் செய்யவும் தன் நிலையில் சக்திகொண்டு செயலின் பயனைப் பெறுவதாகவும், மக்களின் எண்ணத்தில் உள்ளது. அச் சப்தரிஷிகளின் நிலையினால்தான் இப் பூமியின் சக்திநிலையே பெருகி வருகிறது. இன்றளவும் மனித ஆத்மாக்கள் இந்நிலைகொண்டு வாழ்வதற்கே நம் சப்தரிஷிகளின் செயலினால்தான் இப்பூமியின் நிலையே இன்றுள்ளது.

அவர்களும் நம்மைப்போல் வாழ்ந்தவர்கள்தான். நாமும் அவர்கள் வாழ்ந்த காலத்தில் தொடர்பு கொண்டு வாழ்ந்தவர்கள்தான். நம் நிலையில் வழி வந்த நிலைதான் இன்று வாழ்ந்திடும் நிலை.

அவர்களின் தொடர்பை ஏற்றே வழி வந்திடுவோம்.

**29-12-79**

ஆதியில் இருந்து இன்றளவும் நமக்குக் கதைகளாகவும், பாடல்களாகவும், போதனை நிலைகளாகவும் இத் தெய்வீக நிலைகளை நமக்கு உணர்த்தியவர்களெல்லாம், சூட்சுமப்படுத்தி, மறைக்கப் பட்டு, அதிலுள்ள ஜீவ நிலையை மக்களுக்குப் புரியும் நிலையில் கதைகள் ரூபத்திற்காக அன்று வெளியிட்ட முனிவர்களின், ரிஷிக ளின் நிலையையே காலப்போக்கில், பல வடிவங்களைச் சேர்த்து, இன்றைய நிலைக்கு நம்பா நிலைப்படுத்திவிட்டார்கள்.

அவரவர்கள் வாழும் நிலைப்படுத்தி, அவரவர்களின் ஆத்மா பிரிந்து சென்ற பிறகு, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாத முண்டு. முதல் பாதம், இரண்டாம் பாதம் இப்படி வரிசைப் படுத்தி எல்லாவற்றிற்கும் மேல்பாதம் சென்ற பிறகுதான், அவ் ஆண்டவனுடன் ஐக்கியப்பட்டிடலாம் என்ற நிலையில் உணர்த்தி வருகின்றனர்.

இப்பாத நிலைபெறும் நிலையென்ன? ஒவ்வொரு பாதத்தி லிருந்தும் முதல் படி, இரண்டாம் படி, மூன்றும் படி இப்படிப் பள்ளியில் படித்திடும் நிலைக்கொப்ப, கடைசிப்படியில் பட்டம் வாங்குவதைப் போலல்ல அவ்வாண்டவனிடம் ஐக்கியப்படும் நிலை.

எங்கும் நிறைந்துள்ள, நம்முள்ளும் கலந்துள்ள, நம் ஆத் மாண்டவனின் சக்தியை நமக்களித்த இவ்வேழு பிறவியில், நாம் வாழ்ந்த நிலைகொண்டுதான், நம் ஆத்மா பிரிந்து சென்ற பிறகு, நமக்குகந்த அபிலாஷைப்படி, இவ் ஏழு பிறப்புகளை, நம் எண்ண நிலையில் நாம் மேம்படுத்திடாவிட்டால், நம் ஆத்மாவிற்கு, இம் மனித உடலை ஏற்கும் சக்தியிழந்து, இவ் ஏழு பிறப்பிலும், நம் எண்ண நிலைக்கொப்ப நாம் சேமித்துச் செயல்படுத்திட்ட பல தீய சக்திகளின் அமில சக்தியின் நிலை, இவ் ஏழாம் பிறப்பில் அதன் துரித சக்தியினுல் இவ் ஏழு பிறப்பில் சேமித்த நற்சக்திகளையும் இத்துரிதம் கொண்ட தீய சக்தியின் நிலையுடன் கலந்து, இவ் ஏழாம் பிறப்பில், நம் ஆத்மா பிரிந்து சென்ற பிறகு, நம் எண்ண சக்தியே தீய சக்திக்கு அடிபணிந்திட்ட நிலையில் நாம் ஆவி உலகில் பல காலம் சஞ்சரிப்பதினுல் அந்நிலையில், அந்நிலையின் குண நிலைக்கொப்ப மிருகங்கள் உடலில் ஏறியும், அங்கீனமுற்ற நிலையிலும் பிறப்பிற்கு வருகின்றோம்.

நாமாய்ச் சேமித்து வழி சென்றிடும் நிலைதான் இந்நிலை. முதல் பாதம் இரண்டாம் பாதம் என்பதெல்லாம் ஒவ்வோர்

உடலை ஏற்று அவ் உடல்களில் நாம் ஏற்படுத்திடும் சக்தி நிலைக் கொப்பத்தான் பிறவி நிலை பெறுகின்றோம்.

சூட்சும நிலைக்குச் சென்ற நிலையில் இந்த ஞான சக்தியின் தொடர்பு நிலைகொண்டு இவ்வுலக நிலையில் பற்றற்ற நிலைப் படுத்தி, பக்தி நிலையின் சித்து நிலைபெற்ற பிறகுதான் சூட்சும நிலைக்கே சென்றிட முடியும்.

இவ்வாத்மாவுடன் கூடிய இவ்வுடலில் வாழும் காலத்தி லேயே நம் எண்ணத்தில் தீய அணுக்களின் சக்தி நிலையை நாம் அடக்கிப் பழகிடல் வேண்டும். கோபத்தையும், குரோதத்தையும், சஞ்சலத்தையும், சலிப்பையும் நம் எண்ணத்தில் வளர விட்டு ஜெபம் கொண்டால் அப்பக்தியில் எப்பலனும் நம் ஆத்மாவிற்குக் கூடுவதில்லை.

நம் ஆத்மாவுடன் அன்புகொண்ட நல்லுணர்வையே வளர விட்டால் அன்றி, ஞான சக்தியின் தொடர் அறிவதும் கடினமே. முதலில் நம்மையே நாம் உணர்ந்து நற்சக்திகளின் வழித்தொடர் பெற்று, ஞான வழியின் தொடரினால் அத் தொடர் நிலைகொண் டோரின் தொடர் சக்தியையும் பெற்று, இவ்வழியிலேயே இவ் வழித் தொடரினை அறிந்து, சப்த ரிஷியின் நிலை பெற்று, சூரிய னுடன் ஒளியின் ஒளியாய்க் கலந்து செயல்படும் நிலைதான் அவ் ஆண்டவன் நிலை பெறுவது.

இந்நிலையை உணர்ந்திடத்தான் முதல் பாதம், இரண்டாம் பாதம் என்றெல்லாம் வழிப்படுத்தி உணர்த்தி உள்ளனர். ஆண்டவனேதான் நாம்; அவனேதான் மற்ற எல்லாமுமே. யாரும் நமக்கு அப்பதவி நிலையை அளிப்பதல்ல. நாமேதான் நம் பதவியை அடைந்திடல் வேண்டும்.

ஆவி உலகில் உள்ள ஆத்மாக்களினால், தன் அறிவு நிலையை வளர்ச்சியில் செயல்படுத்திட முடிந்திடாது. ஆசை நிலை நல் லுணர்வுக்குத் தோன்றினாலும் பிறப்பெடுத்து, இவ்வுடல் கொண்ட ஆத்ம வழியில்தான் எச்சக்தியின் தொடரையும் நாம் அறிந்திடல் முடிந்திடும்.

**30-12-79**

நம் உடலைவிட்டு நம் ஆத்மா பிரிந்து செல்வதைச் சிவபதவி அடைந்துவிட்டார், தெய்வீக பதவிக்குச் சென்றிட்டார் என் றெல்லாம் நம் ஆத்மா பிரிந்த பிறகு, நம்முடன் வாழ்ந்தவர்கள் நமக்களிக்கும் பதவிதானே தவிர, எப்பதவியும் அச்சிவனால் நமக் களிக்கப்படுவதில்லை.

வாழ்ந்த காலத்தில் நாம் இருக்கும் நிலையைக்காட்டிலும் ஆவி உலகில் அல்லல் படும் நிலை மிக மிகக் கொடிய நிலை. நல் ஆத்மாவாய், நற்செயலைச் செய்வித்து நல்லுணர்வு கொண்டு, அமைதி கொண்டு இவ் உலக வாழ்க்கையில் உள்ள பற்று, பாசம், ஆசை அனைத்து நிலைகளையுமே வாழ்ந்த நிலைகொண்டு, பூரிப்பில், சஞ்சலத்தில் விட்டுச் செல்வதைப்போல் எண்ணுமல், அமைதி யுடனே இவ்வுலகப் பற்றற்றுப் பிரிந்து செல்லும் ஆத்மாக்களினுல் தான் ஆண்டவனுயும் அக்குடும்பத்தின் தெய்வமாயும், தான் வாழ்ந்த குடும்பத்தைச் செழிக்கச் செய்திடல் முடிந்திடும்.

குடும்பத்தில் உள்ளோரும், அக்குடும்பத்தில் வாழ்ந்திடும் பெரியோர்களை அன்புடன் வணங்கியே, அவர் வாழ்ந்த காலத்தில் நாம் செய்யும் சேவைதான், அவர் ஆத்மா பிரிந்த பிறகு, நம் குடும்பத் தெய்வமாய் நம்மைக் காப்பார். அவ்வழியின் தொடர் தான் குடும்பத் தொடராய் பெரியோரை, தாய் தந்தையரை பக்திகொண்டு வணங்கிடும் பக்குவ நிலை என்பதனை உணர்ந்து, ஒவ்வொரு குடும்பத்தையும், அக்குடும்பங்களே கோயில்களாய்த் திகழும் வண்ணம் வாழ்ந்து வழி நடந்திடல் வேண்டும்..

பல கோயில்களுக்குச் சென்று அபிஷேக ஆராதனை செய் வித்து, பக்தியை வளர்த்து வேண்டும் முறையைக் காட்டிலும், நம் இல்லக் கோயிலை அன்பு கொண்டதாய், இனிமையை வளர்க்கும் இன்ப இல்லமாய், இல்லத்தில் உள்ளோர் அனைவரின் எண்ணக் கலப்பும் ஒன்றுபட்டதாய் வாழ்ந்திடும் வழி பெறுங்கள்.

வாழ்க்கையுடன் மோதிடும் பல இன்னல்களுக்கும் தெளிவு பெறும் பக்குவத்தில் நம் ஞான வளர்ச்சியின் தொடர்பினை வளர விடுங்கள்.

செல்வமும், செழிப்பும் தானுய் வளரும். பக்தி யென்னும் அன்பு கொண்ட வாழ்க்கையின் நெறியறிந்து ஞான வழியின் தொடரைப் பின்பற்றி வழி நடந்து வாழ்ந்திட்டாலும், நம் எண் ணத்தில், நம் வாழ்வின் நிறைவில் நான் என்ற எண்ண நிலையை என்றென்றும் மோத விடாமல், செழிப்பின் வழியிலேதான் நம் எண்ணத்தொடர் சென்றிடல் வேண்டும்.

நல்லோருடனே பழகியும், நற்பயன் கொண்ட காரியத்தைச் செய்தும், பக்திமானுய் அன்பு கொண்ட வாழ்க்கை வாழ்ந்தும் இவ் வாழ்ந்திடும் வழித்தொடரில் நம்மைக்காட்டிலும் நம் வழித் தொடர் பெருமல், பிறரின் வாழ்க்கை நிலை, நெறி முறை இவற் றின் தன்மை நம்முடன் ஒட்டாமல் சத்துரு மித்திரு கொண்டவ

ரின் தீய சக்தியின் பிடியில் சிக்கி, அப்பழக்கத்திற்கு அடிமை கொண்டவரின் நிலையையும் நம் நிலையையும் ஒப்பிட்டு, நம் நிலையின் பெருமையை நாம் எண்ணினாலே நான் என்ற நிலையினால் நாம் வளர்ந்த இந் நற்சக்தியிலேயே கரைபடுகின்றது.

பல தீய வழிகளில் அடிமைகொண்டு, அந்நிலையிலிருந்து மீள வழியில்லாமல், நல்லுணர்வு கொண்டோரை, தீய நிலையில் உள்ளவரின் எண்ணம் அன்பு படுத்தி, பக்திப்படுத்தி நமக்கு அப் பாக்கிய வழி சென்றிடும் வழித்தொடர் இல்லாமல், இந்நிலையில் உள்ளோம் என்ற எண்ணத்திலேயே அவர்களின் ஆத்மாவில் நற் சக்தி பெற்றோரை எண்ணத்தில் ஈர்த்த சக்தி கூடி வலுப்பெறு கின்றது, அவ்வாத்மாக்களுக்குமே.

நாம் வாழ்ந்திடும், நம் நினைவுடன் கலந்திடும் ஒவ்வொரு நொடிப்பொழுதும் அவற்றுக்குண்டான சக்தி நிலை நம்முள் சேமிக்கப்படுகின்றது.

இவற்றை உணர்ந்திடாமல் வாழ்ந்தோம் என்ற நிலை கொண்ட சாதாரண நிலையில் வாழ்ந்து, நாம் இம் மனித ஆத்மா கொண்ட உடலைப்பெற்று வாழ்ந்திடும் இப்பாக்கியத்தைச் சிதற விடாதீர்கள்.

இன்றளவும் நம்மில் தோன்றி சப்தரிஷி நிலைகொண்ட ஜோதிகளும் இன்னும் பக்தியென்ற தொடர் நிலைகொண்ட, தனக்கு மேல் உள்ள உயர்ந்த சக்தியான இயற்கையின் ஆதி சக்தியையே, ஒவ்வொரு சப்த ரிஷிகளும் ஜெபப்படுத்தி, பூஜைப் படுத்தி நான் என்ற நிலைப்படாமல், மென்மேலும் அவ் இயற்கை ஜெபத்துடன்தான் செயலாற்றுகின்றார்கள். அனைவருக்கும் முருகனை ஜெபப்படுத்தி வணங்கிடும் அப்போகநாதரே அச்சிவசக்தியின் ரூப ஜெபத்தை இன்றளவும் அம் முருகரின் விக்கிரகத்தை ஜெபப்படுத்திக்கொண்டே உள்ளார்.

முருக ஸ்தலமே, அம் முருகரின் அச்சிலையே, அவர் ஜெபிக்கும் ஜெபத்தை ஈர்த்து சக்தியை வளர்த்துக்கொண்டே அருள் புரிகின்றது.

நம் பாட நிலையில் இவ்வுலகில் வளர்ந்த கனி வளங்களை இப் பூமியிலிருந்து பிரித்த பிறகு ஜீவனற்றுப் போகின்றது என்று உணர்த்தியுள்ளோம். ஆனால் போகர் ஸ்தாபிதம் செய்த அம் முருகரின் சிலைக்கு, அப்போகர் ஜெபித்த ஜெபத்தினால், அம் முருகரின் சிலையே ஜீவன்கொண்ட நிலையில், அம் மலையில் ஐக்கியப் பட்டுவிட்டது.

ரிஷிகளும், சப்தரிஷிகளும் அவர்களின் நிலையினுல் நட்ட கல்லையும் ஜீவன் கொண்டிட முடிந்திடும்.

சப்த ரிஷியின் நிலை எவ்வண்டத்தையும், எப்பிண்டத்தையும் சுழலிலிருந்து நிறுத்திடவும் முடியும்; பிண்டத்தையே அண்ட மாக்கிச் செயல்படுத்திடவும் முடியும்.

சப்த ரிஷியின் சக்தியில், அனைத்து உலக சக்தியையுமே செய லாக்கிடும் நிலைகொண்டுதான் செயல் புரிகின்றனர்.

உயிரணுவாய், உயிராத்மாவாய் வளர்ச்சி கொண்ட வர்களே, சப்த ரிஷியாய் சகலத்தையும் அறிந்திடும் சக்தி கொண்ட நிலையிலும், இயற்கையின் சக்தியை பூஜித்தே அவ் ஆதி சக்தியின் சக்திக்கு அடிபணிந்தே செயலாக்குகின்றனர்.

நாம் வாழ்ந்திடும் இக்குறுகிய கால வாழ்க்கையை, நம் சக்தி யின் ஞானத்தொடர் வழியை, செயல்படுத்தி வழிவந்து, நம் சக்திக் கும் அனைத்து சக்தியையும் ஈர்க்கும் சக்தியுண்டு என்ற ஒரு நிலை கொண்ட, எண்ண நிலைகொண்ட வழித்தொடர் பெற்றிடுங்கள்.

**31-12-79**

பாம்பின் விஷத்தையும் போக்கிடலாம், மற்றத் தீய சக்திகளை யும் நம்முள் அண்டவிடாமல் போக்கிடலாம்! ஆனுல் நம்முள்ளே நாம் ஏற்றிக்கொண்ட இவ்வெண்ணத்தின் சுமையை ஒரு நிலைப் படுத்தி ஜெபம் பெறுவதுதான் நம் சக்திக்கும் மேம்பட்ட சக்தி.

இவ்வுலகச் சூழ்ச்சியிலிருந்தும் மற்றவர்களின் நிலையின் தாக்குதலிலிருந்தும், இன்றுள்ள இவ்விஷமான இவ்வுலக நிலையி லிருந்து மீண்டு செயல்கொள்ளுவது மிகவும் கடினம்.

ஆத்மீக நெறியின் வழிமுறைக்கு நம் வழி அமைந்த பிறகு, நாமேதான் நமக்குகந்த நெறி முறையை அமைத்துக் கொண்டு செயல்படல் வேண்டும். அச்செயல் வழியில்தான் நம் சக்தி நிலையே கூடி வழி வந்திடும்.

இந்நிலையின் தொடர் நிலை வந்த பிறகு பிறரின் எண்ண நிலையை நம்முடன் மோதவிட்டு, ஆத்மீக நெறி முறையில் செல்லுவதும் அழகல்ல. போற்றலும் தூற்றலும் ஒருநிலை போன்ற சம நெறியின் வழியாக்கிடல் வேண்டும்.

இவ்வெண்ணத்தொடரின் வழிபெற்ற பிறகு ஞானத்தின் சக்திநிலை கூடும் நிலையில் நம் உடலில் உள்ள, முன்பு வாழ்ந்த

வாழ்க்கையில் உள்ள தீய சக்திகளும் செயலற்றதாய், நற்சக்திகளின் நிலை வளர்ந்து, இந் நிலையின் வழித்தொடரில் வந்த பிறகு வாழ்க்கையுடன் உள்ள நம் நிலையில் ஏற்படும் சிக்கலை நம் எண்ணத்தில் ஏற்றி அந்நிலைகொண்ட கவலையை வளரவிடும்பொழுது நம் உடலில் உள்ள தீய சக்திகளுக்கு நாம் உரம் இட்ட நிலை போல் வளர்ந்திடும்.

நற்சக்தியின் நிலை கூடுவதற்குப் பல காலம் ஜெபம் பெற்று, ஞானத்தொடரை வழிபெற்ற பிறகு ஒருசில நொடியில் இவ் வெண்ண மோதலினால் விரையப்படுத்திடலாகாது. பக்திமானாய், சக்திமானாய் ஆண்டவனின் சக்தியாய் ஒளிர ஒரு நாளில், இரண்டு நாளில் அந்த ஞானத் தொடரும், சக்தித் தொடரும் வந்திடாது.

உயிரணுவாய், உயிராத்மாவாய் பிறப்பெடுத்து நாம் நம் உடலுடன் சேமிக்கும் அமில சக்தியனைத்துமே நற் சக்தியாய் கலந்து ஒளிபெறும் நிலையில்தான் நம் நிலையும் உயர்ந்திடும்.

இவ்வாத்மீக நெறிக்கு வழிபெற்றிட தீய சக்திக்கு நாம் அடி பணியாமல் நம்முள் தீய சக்தியை விட்டகற்றினாலன்றி நூறாண்டு காலமல்ல நூறு கோடி ஆண்டானாலும், நம் ஆத்மாவை ஆண்டவனின் சக்தியின் சக்தியாய் ஒளிரச் செய்வது கடினமே.

சொத்தும் சுகமுமல்ல சக்தியின் செல்வம். இவ் அல்ப ஆசைகளுக்கு நம் எண்ண சக்தியில் துறக்கும் நிலை பெறவேண்டும்.

துறவியாய் ஆண்டிக் கோலம் பூண்டு செல்லும் துறவறம் அல்ல. ஒன்றை எண்ணிய நிலையில் அடைந்தே தீருவோம் என்ற பேராசையின் பிடியில் சிக்கிடாமல், வாழ்க்கைக்குகந்த அன்புச் செல்வங்களைத் தன் நிறைவு பெற ஆசையுடன் செயல் கொள்ளுங்கள்.

உண்ணும் எவ்வுணவையும் அமுதாய் உண்டிடும் பக்குவ நிலையில் வாழ்ந்திடுங்கள். உண்ணும் உணவே ஒவ்வோர் உடலையும் எண்ண நிலைக்கொப்ப அமில சக்தியின் சேமிப்பையும் நம் உடல் பெறுகின்றது.

எண்ணத்தையே அமுதாக்கி உண்டிடுங்கள். எவ்வுணவை உண்டாலும் அமிர்தமாய் நம் உடலில் செயல் கொள்ளும் வழி முறையும் செயல் நிலையும் நாமாய் வழி வகுத்துத்தான் நம் ஆத்மா செயல் கொண்டிடும்.

நாம் வாழ்ந்திடும், இனி வரப்போகும் ஒவ்வொரு நொடியையுமே இவ்வழித் தொடரின் ஜெப சக்தியை வளரவிட்டே,

நம்முள் நம் ஆத்மாவாய் அவ் ஈஸ்வரனே குடிகொண்டுள்ளான் என்பதனை உணர்ந்து நாம் எடுத்திடும், நாம் விட்டிடும் சுவாசமே அவ் ஈஸ்வரனின் ஜெபத்துடனே ஓம் ஈஸ்வரா என்ற நிலையி லேயே எந்நிலையில், எச் செயலில் இருந்திட்டாலும் நம் எண்ண ஜெபம் முழுவதுமே அவ் ஈசனின் நினைவுடன் இருந்திட்டால் மற்றத் தீய சக்தியின் நிலை நம்மை எப்படித் தாக்கும்?

நம்மை அத் தீயசக்தியில் இருந்து காக்கத்தான், அவ் ஈசனே ஜெபம் கொண்டு நம்முள் உள்ளானே. நம் ஆத்மாவே ஈசன்தான். ஈசனின் சக்தியில்லாமல் எச் சக்தியுமில்லை. ஈசனே குடிகொண்டு உள்ள நம் ஆலய ஆத்மா கொண்ட நம் உடலை ஈசனின் சக்தியாய் வாழ்ந்திடும் நெறிமுறையின் வழித்தொடர் கொண்டே வாழ்ந்திடுங்கள்.

## 1-1-80

ஓம் ஈஸ்வராய நம! ஓம் ஆதி சக்தியே நம! சக்தியின் சக்தி பெற்ற சக்தியின் குழந்தைகளாய் வணங்கியே, புத்தாண்டின் தினமாய் இவ்வுலக மக்களின் எண்ணத்தில் ஊன்றியுள்ள புத் துணர்வுடனே வணங்கியே, இன்றைய பாட நிலையைத் தொடங்கு கின்றோம்.

இப்பூமியும், இப்பூமியைப் போன்ற, இப்பூமியைச் சார்ந்த 48 மண்டலங்களும், நம் சூரியனை, நம் சூரியன் சுற்றும் வேகமும், நம் சூரியனின் குழந்தைகளான, நம் மண்டலங்கள் சுற்றி ஓடும் விகித நிலைப்படுத்தி, ஒரு வருடம் என்ற நிலையில் 365 நாள் விகிதக் கணக்குப்படுத்தியும், நான்கு வருடத்திற்கு ஒரு நாள் அதிகப்படுத்தி லீஃப் வருஷம் என்றும், சூரியனைச் சுற்றி ஓடும் நிலையுணர்ந்து, இவ் வான சாஸ்திரத்தில் வருடம், நாள், வாரம் இப்படி நிலையுணர்ந்திடப் பல நிலைகளை இவ்வுலகின் நிலையில் உணர்த்தியுள்ளார்கள்.

இப்பூமிக்கும் நம் சூரியனுக்கும் உள்ள தொடர்பு நிலை எந் நிலைகொண்டுள்ளது? காலங்களில் நான்கு வகைக் காலங்களும், ஒரு நாளில் காலை, பகல், இரவு என்ற மூன்று நிலைகளும், ஒவ் வொரு நொடியும் ஒரு நொடியைப் போலில்லாமல் இவ்வுலக ஓட்டமும், சூரியனின் ஓட்டமும் சுழன்றுகொண்டே உள்ளன.

உதய காலத்தில் நாம் காணும் சூரியனின் விகித நிலை உருவமே பெரிதாகவும், பகல் ஏற ஏற நம் பூமிக்கு நேர் மையத் தில் சூரியனின் நிலையைக் காணும்பொழுது, உதயகாலத்தில் கண்டிட்ட சூரியனின் உருவ அமைப்பைவிட உச்சிக் காலத்தில்

சிறிய கோளமாகவும், பகல் மாறி மாலை சூரியனின் அஸ்தமத்தில், உதய காலத்தில் கண்ட நிலைப்படி உருவ அமைப்புப் பெரிதாகவும் காண்கின்றோம். எந்நிலைகொண்டு?

உதய காலத்தில் சூரியனின் நிலை நம் பூமியின் நிலைக்கும் இடைப்பட்ட தூரம் குறைவு. நமக்கு அருகாமையில் சூரியனின் நிலையுள்ளது. ஒவ்வொரு நொடியும் உச்சிப்பகல் வருவதற்குள் நம் பூமியின் ஓட்டமும், சூரியனின் ஓட்டமும் ஓடும் நிலையில் நாம் உள்ள இடத்தில், சூரியனின் நிலை நமக்கும் நேர் மேலே வரும் பொழுது, உதய காலத்திற்கும், பகல் உச்சி நேரத்திற்கும் நம் பூமிக்கு சூரியனின் தூர விகிதம் மிகவும் அதிகமாகி விடுகிறது.

உதய கால தூர விகிதப்படி, உச்சிக் காலத்தில் இருந்திட்டால், நம் பூமி சுழற்சி வேகமும், சூரியனின் சுழற்சி வேகமும், சூரியனிலிருந்து வந்திடும் ஒளிக்கதிர்களின் வெப்ப நிலை நம் பூமியின் நேர் மையத்தில் பட்டு பூமியே வெடிப்பு நிலையில் சிதறுண்டிருக்கும்.

உச்சி நிலையில் நம் பூமிக்கும், சூரியனின் நிலைக்கும் தூர விகிதம் அதிகப்படுவதினால் சூரியக் கோளின் உருவ அமைப்பைச் சிறிதாகக் காண்கின்றோம். பகல் மாறி மாலை வர வர நமக்கு அருகாமையில் சூரியனின் நிலை வருவதினால் மாலையிலும் இந்நிலை போன்ற சூரியனின் உருவ நிலையைப் பெரிதாகக் காண்கின்றோம்.

ஆனால் உதயகாலத்தில் நமக்கு அருகாமையிலுள்ள சூரியனின் வெப்ப நிலை நமக்குக் குறைந்தும், பகல் நேரத்தில் நம் பூமிக்கும் சூரியனின் நிலைக்கும் தூர விகிதம் நீண்டுள்ள நிலையில் வெப்பத்தை அதிகமாக எடுக்கின்றோம் எந்நிலைகொண்டு?

நம் பூமிக்கு உள்ள நான்கு திசைகளில் வடக்கு, தெற்கு, மேற்கு, கிழக்கு என்ற நிலையில், வட துருவத்திலும் தென் துருவத்திலும் நம் பூமியின் அச்சாய் நிறைந்துள்ள நம் பூமியின் பொக்கிஷக் கடல்களான, அந் நீர்நிலைகளின் மேல் இவ்வுதய கால சூரிய அலைகளின் வெப்பம் பட்டு அவ்வொளிக் கதிர்களின் எதிர் வீச்சின் சக்திதான் காலையும் மாலையும் உள்ள கால நிலைகள்.

நம் பூமியின் இவ்வடதுருவ, தென் துருவ நிலைகளில் அமைந்துள்ள இக் கடல்களின் சக்தியினால்தான் நம் பூமியின் சக்தியே இந்நிலையில் அமைந்துள்ளது.

ஒவ்வொரு மண்டலத்தின் நிலையும் ஒவ்வொரு தன்மை கொண்ட சக்தி நிலையில் உருப்பெற்ற மண்டலமாய்ச் சுழல்கின்றது.

நம் பூமியின் இயற்கை தந்த பொக்கிஷ நிலைதான், நாம் இன்று நான்கு வகைக் காலங்களை அடைந்த நிலை.

சூரியனின் விகித தூரத்திற்கும் மற்ற மண்டலங்களிலிருந்து, நம் பூமிக்கு ஏற்படும் ஈர்ப்பு சக்தியின் நிலைக்கொப்பத்தான் கோடை காலம், வசந்த காலம், இளவேனிற் காலம், குளிர் காலம் இப்படி நிலை பிரித்து, நாமமிட்டு நாம் அழைக்கும் இக் காலங்கள். நம் பூமியின் வடதுருவ, தென்துருவ நீர்நிலைகளின் மேல் சூரியனின் தூர விகிதமும், நம் பூமிக்கு அருகாமையிலுள்ள சந்திரனின் தூர விகிதமும் உள்ள நிலையில் வடதுருவ, தென்துருவ நீர்நிலைகளின் மேல் அம் மண்டலங்களிலிருந்து தாக்கிடும் அணு சக்திகளின் நிலைகொண்டுதான் இப்பூமிக்கு ஏற்படும் காற்று மண்டலங்களின் சக்தி நிலைக்கொப்ப, நம் பூமியின் கால நிலைகள் மாறுகொள்ளுகின்றன.

ஒவ்வொரு நொடியும், இப்பூமி தோன்றிய நாள் தொட்டே மாற்றம் கொண்டேதான் சுழன்றுகொண்டுள்ளது. நொடிக்கும் குறைவான நிலையிலேயே ஒவ்வொரு நிலையும் மாறி மாறியேதான் இன்றளவும், இனி நடந்திடும் பல ஆயிரம் கோடி ஆண்டுகளும், இப்பூமியின் நிலையும், மற்ற எல்லா மண்டலங்களின் நிலையும், ஒரு நொடியைப்போல் ஒரு நொடி இல்லாமல் சுழன்றே ஓடிடும். தொடர் நிலை நாளை.

2-1-80

இன்று இப்பூமி சுழலும் வேகத்தை ஒரு நாளைக் குறிக்க 24 மணி நேர விகிதப்படுத்தி இவ்வுலகம் முழுவதுமே, அக் கணக்குப்படி ஒரு நாள் நிலைப்படுத்தி உள்ளார்கள். இந்த 24 மணி நேர விகிதக் காலம் குறித்துப் பல நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்றளவும் அந்நிலையை வைத்தே, அந்நிலையின் செயலுக்கொப் பக் கால நிலை குறிக்கும் அளவைச் செயலாக்குகின்றனர்.

இந்த 24 மணி நேரம் குறித்த காலத்திற்கும், இன்று இப் பூமி சுழலும் நிலை துரிதம் கொண்டுள்ளது, வினடி விகிதத்தில். ஆனல் பல நூறு கோடி ஆண்டுகளில் சில வினடி நேரம்தான் அதிகத் துரிதத்துடன் இன்று நம் பூமி சுழல்கின்றது. ஆனல் இக்கலி முடிந்து கல்கியில் இவ்வுலகப் பிரளயம் தோன்றி, இவ்வுலக நிலை மாறிச் சுழலும் தருவாயில் நம் பூமி சுழலும் வேகம், இப் போதைய நேரத்தில் நான்கில் ஒரு பாகம் எடுத்த நிலையில் மூன்று பாகங்கள் கொண்ட துரித கதியில் இன்று 24 என்பது 18 மணி விகிதத்தில் சுழலப்போகின்றது.

நம் பூமியில், இவ்அசைவின் பிரளயத்தின்போது, நம் பூமியுடன் பல நட்சத்திர மண்டலங்களும் சேரப்போகின்றன. நம் சூரியனைச் சுற்றியுள்ள 48 மண்டலங்களின் சக்தி நிலையும், அளவு நிலையும் அதிகப்படப்போகின்றன.

நம் சூரியனின் விகித நிலையும் கூடப்போகின்றது. சூரியனும், 48 மண்டலக் கோளங்களும் ஒரே சமயத்தில் வளர்ச்சி கொள்ள, இவற்றிற்கு சக்தி நிலை கூடும் அமிலங்கள் யாவும், நம் கண்ணிற்குத் தெரியாத நிலைகொண்டு, பால்வெளிமண்டலத்தில் நிறைந்துள்ள அமில சக்தியே, இம் மாற்றம் கொள்ளும் தருவாயில், மண்டலங்களின் ஈர்ப்பில் வந்து சேர்ந்து, மண்டலங்களின் வளர்ச்சி நிலை கூடப்போகின்றது.

இன்று நம் பூமியில் வடதுருவம், தென் துருவ நிலைகொண்டு பூமியின் சுழற்சியில் பகலும், இரவும் இக்கால நிலைகள் நான்கும் ஒத்த நிலையில் உள்ளன. ஆனல் மழைக்காலம் மட்டும் அந்தந்தப் பிரதேசங்களின் பூமி ஈர்த்து, அப்பூமி கக்கும் உஷ்ண அலைகளுக்கொப்ப, மழையின் நிலை அந்தந்த நிலைகளில் மாறு கொண்டு வருகின்றது. ஆனல் நம் பூமியின் மாற்றம் கொள்ளும் கல்கியின் காலத்தில், இன்று இவர்கள் குறித்துள்ள 365 நாள் விகிதக் கணக்கு வருடச் சுற்றலில் குறைவுபடப்போகிறது.

சூரியனைச் சுற்றியுள்ள அனைத்துக் கோளங்களின் சுற்றலின் நிலையும் துரிதப்படுவதினல், சூரியனின் நிலையும் துரிதம் கொள்ளப் போகின்றது. நம் சூரியனுடன் தொடர்பு கொண்ட மண்டலங்களின் விகித நிலை கூடும்பொழுது, பால்வெளி மண்டலத்தின் ஈர்ப்பு சக்தியில் அமில சக்தியை எல்லாம் இம் மண்டலங்கள் உறிஞ்சிய பிறகு, நம்மைச் சார்ந்துள்ள இம் மண்டலங்களின் நிலையில்லா மற்ற மண்டலங்கள் நம் சூரியனைக் காட்டிலும் சக்தி கொண்ட சூரியனின் சுழற்சியின் ஈர்ப்பிலுள்ள ஒரு மண்டலம் ஆவியாய்ப் பிரியும் நிலைகொண்டு தன் ஜீவனை இழக்கப் போகின்றது.

பல நூறு கோடி ஆண்டுகளாய் வாழ்ந்த மண்டலம் அது. நம் பூமிக்கு மட்டும் மாற்ற நிலை வரப்போகின்றது என்பதல்ல. இவ்வண்டத்திலுள்ள அனைத்து மண்டலங்களின் நிலையிலுமே இந்நிலை செயல்படப் போகின்றது. எந்நிலை என்ற தொடர் நாளையே.

**3-1-80**

இப்பாட நிலைக்கொப்ப, இந்நிலையில் உணர்த்தி வரும் இம் மண்டலங்களின் சக்தி நிலையும், இன்றுள்ள இம் மண்டலங்களின்

சுழற்சியின் வேகத்தைக் காட்டிலும், இப்பூமியின் சுழற்சி சக்தி அதிகப்படுவதாகவும், இந்நிலை ஒத்தே மற்ற மண்டலங்களின் துரித நிலையும் அதனதன் விகித நிலைப்படி அதிகப்படுவதாக உணர்த்தியுள்ளேன்.

இன்று இப்பூமியின் ஈர்ப்பு சக்தி நிலையும், ஓட்ட நிலையும் இந்த 24 மணி நேரம் 18 மணிக்கணக்கில் வரும் நிலையில், இன்று இப்பூமியில் திடப்பொருளாய் உள்ளவற்றின் நிலையெல்லாம் எந் நிலையில் செயல்படும்?

இன்றுள்ள மலைகளும், நீர்நிலைகளும், இயற்கை சக்திகள் அனைத்துமே இப்பூமியின் அசைவின் தொடர்நிலைகொண்டு மாற் றம் கொள்ளப்போகின்றன. அந்நிலையில், இப்பூமியில், இவ் அசை வின்போது ஏற்படும் இயற்கையின் தாக்குதலின் நிலையில்லாமல் தப்பிவிடும் பூமியில் வாழ்ந்திடும் உயிரினங்களின் நிலையும், இப் பூமியின் சுவாச சக்தியே மாறுகொண்ட பிறகு தப்பி வாழ்ந்திடும் ஜீவராசிகளின் சுவாசத்தின் நிலையும், மாறுகொள்வதால் இவ் இயற்கையிலிருந்து தப்பிடும் எந்த ஜீவராசிகளும் பல காலங்கள் வாழ்ந்திட முடிந்திடாது.

இப்பூமியின் இயற்கை சக்தியே மாற்றம் கொள்ளப் போகின் றது. இப்பூமியில், இப்பூமி தோன்றிய நாள் தொட்டே, உதித்த உயிரணுக்கள் எவையுமே, உயிரணு அழிந்திடாது, மாற்றம்தான் பிம்ப நிலையில் மாறும் என்றுணர்த்தியுள்ளேன்.

அதே சமயத்தில் இப்பூமியில் தோன்றி, இப்பூமியின் சுவா சத்தையே சுவாசித்துப் பழக்கப்பட்ட எவ்வுயிராத்மாவும் இப் பூமியில் இருந்து மற்ற மண்டலத்திற்கு மாறுகொண்ட சுவாச நிலையில் சென்று வாழ்ந்திட முடியாது என்றும் உணர்த்தி யுள்ளேன்

இக்கலி மாறிக் கல்கியில் சுவாச நிலை மாறுகொண்ட இப் பூமியில், கலியின் காலம்வரை வந்திட்ட உயிராத்மாக்களின் பிறப் பிடம் எதுவாயிருந்திடும்?

இக்கேள்வியின் நிலை, இந்நிலையிலேயே இருந்திடட்டும். நம் பூமிக்கு உயிரணுக்கள் தோன்றி, உயிராத்மாவாய், அறிவு நிலை பெற்ற மனிதர்களாய், வாழும் சக்தி எந்நிலையில் வந்திட்டது? இன்று நம் சந்திரனின் நிலையென்ன? நம் பூமியில் மனித உயி ரணுக்கள் தோன்றிடும் வித்து எங்கிருந்து ஆரம்பித்தது? நம் சூரியனின் ஈர்ப்புடன் கூடிய 48 மண்டலங்களில் நம் பூமியைக் காட்டிலும் வியாழன் மண்டலத்தின் அளவு விகித நிலை அதிகம்.

ஆனல் இன்று வியாழன் மண்டலத்தின் சக்திநிலை கூடியிருந்தாலும், உயிராத்மா பிம்ப நிலைகொண்ட மனித இனங்களில்லை. அங்கும், இன்றும் உயிரணுக்களுண்டு. நம் பூமியைக் காட்டிலும் செழிப்பும், பல நிலைகொண்ட கனி வளங்கள் அனைத்துமுண்டு. ஆனல் நம் பூமி இன்றுள்ள மனித ஆத்மாக்களை வளர்க்கும் நிலை நம்மைவிட சக்திகொண்ட வியாழனிலுமில்லை. ஆனல் நம் பூமிக்கு உயிராத்மாவின் நிலைபெறும் சக்தி வியாழனிலிருந்துதான் வந்தது.

ஒரு கோடி, இரண்டு கோடி நிலையிலல்ல; பல கோடி ஆண்டுகளுக்கு முன் நம் நிலைக்கொப்ப அறிவு நிலைப்பட்டு வாழ்ந்த ஆத்மாக்களைக் கொண்ட மண்டலம்தான் வியாழன் மண்டலம்.

இன்று நம் அறிவின் வளர்ச்சியில் மற்ற மண்டலத்திற்குச் செல்லும் ஆசை நிலையின் செயற்கை நிலைக்கொப்ப, நம் பூமியிலிருந்து சந்திரன், செவ்வாய் இப்படியுள்ள மண்டலங்களுக்கு ஏவுகணையின் மூலமாய்ச் சென்ற ஆத்மாக்களின் சுவாச நிலை அங்கு இவர்கள் இருந்து வாழாவிட்டாலும், இவர்கள் விட்டு வந்த சுவாச நிலையின் சக்தியிலிருந்து தோன்றிடும் உயிரணுக்களின் வளர்ச்சி நிலையில் வித்திட்டு வந்துள்ளார்கள்.

அந்நிலை போன்றே, பல கோடி ஆண்டுகளுக்கு முன் வியாழனில் தோன்றிய உயிராத்மாக்கள் நம் பூமிக்கு வந்து சென்ற நிலையினல் நம் பூமியில் உயிராத்மாக்களின் தொடர் நிலை கொண்டது.

வியாழனில் ஏற்பட்ட பிரளயத்தினல் இங்கு எப்படி இக்கலியில் ஏற்படும் பிரளயத்தைச் செப்புகின்றேமோ, அந்நிலை போன்றே அன்று அங்கு ஏற்பட்ட பிரளயத்தினல் நம் பூமிக்கு உயிராத்மாக்கள் தோன்றும் நிலை வந்தது.

வரப்போகும் இப்பிரளய நிலையினல் நம் பூமியின் விகித அளவு நிலை கூடுவதைப்போல் சந்திரனின் நிலையும் கூடப்போகின்றது. இன்று சந்திரவில் நம் பூமியைப்போல் மழையும், இங்குள்ள காலை, பகல், இரவு என்று சூரியனின் ஒளி வீச்சில் கிடைத்திடும் மாற்ற நிலை அங்கில்லாமல், சந்திரனில் இன்று சூரியனின் ஒளிக்கதிர் வீச்சின் நிலை ஒரே நிலையில் ஒளிபாய்ச்சிடும் சக்தி நிலையாய்ச் சுழற்சிகொண்டு இம் மூன்று குமிழ் நிலைகொண்ட சக்தியில் சந்திரனின் நிலை உள்ளதினல் மையப் பகுதியிலுள்ள இப் பள்ளத்தின் நிலையினல் ஒரே நிலையில் சூரியனின் அணுவீச்சுகள் இருந்தாலும், மையப்பகுதியின் பள்ளத்தினல், சந்திரனின் நிலை

சிதருமல் சுழன்றுகொண்டுள்ளது. இக்கலியின் மாற்றத்தில் சந்திரனின் நிலையென்ன என்பதனை விளக்கிடுவேன்.

**4-1-80**

கலியின் மாற்றம் கொண்டு நம் பூமியின் நிலை மாற்றம் கொள்ளப் போகிறது என்றுணர்த்தினேன். அந்நிலைகொண்டு அனைத்து மண்டலங்களின் நிலையும் மாறுவதை உணர்த்தியுள்ளேன்.

இன்று நம் பூமியின் இயற்கை சக்தியைப்போல் சந்திரனின் இயற்கை வளமும் கூடப்போகின்றது. இன்று சந்திரனில் நீர்நிலை நம் பூமியில் கடல்கள் உள்ளதைப்போல் ஆழ்ந்த நீர்நிலை அங்கு இல்லாததினாலும், நம் பூமியில் வடதுருவ, தென்துருவ நீர்நிலையின் சக்தியினால், இப்பூமி சுழலும் நிலையில், காற்று மண்டலம், இந் நீர் நிலையிலிருந்து வருவதினால், இவ்விரண்டு பக்க நீர்நிலையில் ஒன்றை ஒன்று உலகம் சுழலும் நிலையில். ஈர்க்கும் சக்தியும் ஏற்படுவதினால், நம் பூமிக்கு இக் காற்று மண்டல சக்தியுடன், நான்கு நிலை கொண்ட கால நிலையினால், இன்று இங்கு ஏற்படும் மழையும், மற்றச் சீதோஷ்ண நிலைகளின் மாறுகொண்ட சக்தியும், நம் பூமியின் பொக்கிஷமாய் உள்ளதைப்போல், சந்திரனின், இக் கலியின் மாற்றத்தினால் மாறும் தருணத்தில், சந்திரனின் ஈர்ப்புடன், சந்திரனுக்கு அருகாமையில் இன்றுள்ள நட்சத்திர மண்டலங்களின், இந்நீரை ஏற்படுத்தும், அமில நிலைகொண்ட, உப்புக் கலந்த, அமில சக்திகொண்ட நட்சத்திர மண்டலங்கள் அதிகமாய் உள்ளன.

மாறும் தருவாயில் இன்று இம்மனிதன் சந்திரனுக்குச் சென்று, அவனது சுவாச அலையை அங்கு விட்ட நிலையிலும், இப் பூமியிலிருந்து ஆத்மாக்களில்லா ஏவுகணைகள் பல அந்நிலைக்குச் சென்று, இப்பூமியின் சக்தி சந்திரனில் இன்று செயல்படும் நிலையிலும், நம் பூமியின் பார்வை நிலையில், நம் பூமியின் ஈர்ப்பு சக்தியும், சந்திரனில் நிறைந்துள்ள நிலையிலும் தெரிந்தோ, தெரியாமலோ சந்திர நிலவை, அப் பௌர்ணமி நாளை நம் ஆத்மாக்களில் பலர் ஆண்டவனாய் வழிபட்டதின் நிலையில், நம் பூமியின் ஆத்மாக்களின் எண்ண சக்தியின் அலையும், சந்திரனில் இன்று குடிகொண்டுள்ள நிலையில், நம் பூமியிலிருந்து ஈர்த்து அமிலப் படுத்திய நீர்நிலை கொண்ட அமில சக்திகளெல்லாம், சந்திரனுடன் சேரும் நிலையில், இன்று சந்திரனில் நாம் காணும் அப் பள்ள நிலைகளே, இன்று நம் பூமியின் நிலைபோல் சந்திரனில் இரண்டு பக்கங்களிலும் நீர்நிலைகள் கூடப்போகின்றன.

நம் பூமியில் உள்ளதைப்போல் தாவர வளர்ச்சி நிலையும் செயல் கொண்டு நம் பூமியின் சக்தி நிலைக்கொப்ப, வளரும் நிலை சந்திரனுக்குக் கூடப்போகிறது.

அந்நிலையிலிருந்து, நம் பூமியில் உள்ள ஆத்மாக்கள், நம் பூமியின் இக்கலி மாற்றத்தில், நம் பூமியின் சுவாச நிலையின் சக்தி கொண்ட சந்திரனில் வாழப்போகின்றார்கள். எந்நிலைகொண்டு?

நம் பாட நிலையில்தான் இப்பூமியில் வாழ்ந்த ஆத்மாக்கள் மாறுகொண்ட சுவாச நிலையில் வாழ்ந்திட முடியாது என்று உணர்த்தியுள்ளோம்.

இப்பூமியின் ஆத்மாக்கள் எப்படிச் சந்திரனுக்குச் சென்று வாழ்ந்திடும், என்ற எண்ணம் இதைப் படிப்பவருக்குத் தோன்றிட லாம். தொடர் நிலை நாளை.

## 5-1-80

நம் பூமியில் இன்றுள்ள மூல சக்தியே நம் பூமிக்குள்ள கடலும், நீரும்தான். நம் பூமிக்கு இரண்டு பக்கமும் வடதுருவ, தென்துருவக் கடல்களின் நிலையினால் இப்பூமி முழுவதற்குமே ஆங் காங்குள்ள நீர்நிலைகளும், ஆறு குளங்களும் இப்பூமியில் பெய்திடும் மழையின் நிலையும் கடல்களினால்தான் இப்பூமி முழுவதற்குமே நீர்நிலை பெறும் சக்தி வந்தது. காற்றுடன் நீர் இல்லாவிட்டால் தாவரங்கள் மட்டும் அல்ல, இப்பூமியில் வளர்ந்திடும் எக் கனி வளங்களும், எவ்வுயிரணுவும் இன்றைய நிலைகொண்ட வளர்ச் சிக்கு வந்திருக்க முடியாது.

எவ்வமிலமும் இந் நீருடன் தன் சக்தியைச் சேமிக்கும் சக்தி கொண்ட பூமியிது. இன்று நம் பூமியில் கடல்கள் உள்ள இடங் களில், கடல்களில் உள்ள நீர் பகலில் குறைந்தும், இரவில் அதிகப் பட்டும் உள்ளது.

அம்மாவாசை, பௌர்ணமி போன்ற நாட்களிலும் மற்ற நாட்களைவிட இந்நீர் அதிகமாகப் பொங்கி வரக் காண்கின்றோம். பகலில் சூரியனின் நேர் ஒளி படும் நிலையில், பூமியின் கோளத்தின், அக்கடலின் நீர் உள்ள நிலையில், நேராய் சூரியனின் ஒளி பட்ட வுடன், அந் நீரிலிருந்து ஆவியான அமிலங்கள் காற்றுடன் கலந் தும், இப்பூமி சுழலும் நிலைகொண்டு இரவில் சூரியனின் ஒளிக் கதிர் அந் நீர்நிலையில் படாமல், அக்கடல் நிலையுள்ள இடமும் இச் சுழலும் தன்மையில், நம் பூமியின் அசைவைக்கொண்டு இக்கடல் நீரும் வடதுருவமோ, அல்லது தென்துருவமோ இந்நிலையில், இரவு நேரத்தில், அக் கடல் நீர் அந்நிலையில் மோதி, பூமியின்

சுழலும் வேகத்தில் இரவின் அசைவினால் வடதுருவத்தில் மோதப் பட்டு பகலில் ஆவியான இவ்வமிலமும் குளிர்ச்சி கொண்டு வட துருவ பூமியில் படிவமாய்க் குளிர்ந்த நிலையில் பனிக்கட்டியாய் உறைந்து விடுகின்றது.

இப்பூமியின் வடதுருவத்திலும் தென் துருவத்திலும் பாறை போல் உறைந்து குளிர்ச்சியான, உப்புக் கலந்த, அமில சக்தி யைக் கொண்ட நீராய் உறைந்துள்ளது.

சூரியனின் ஒளி இரவில் இல்லாததினாலும், அவ்வுஷ்ண அலைகள் இக்கடலில் தாக்காததினாலும் பகலில் ஈர்த்து ஆவியான நீர்களே இரவில் அவ்வுறைந்த நிலைகொண்ட பகுதியில் இக்காற் றலைகள் மோதி நீராய் வடியப் பெற்று இரவில் கடல்களில் நீர் நிலைகளின் பெருக்கத்தைக் காண்கின்றோம்.

வடதுருவம், தென்துருவம் இரண்டு பக்கத்திலுமே இந்நிலை கொண்ட சக்திதான் உள்ளது. அம்மாவாசையன்றும், பௌர் ணமியன்றும் ஏற்படும் இவ்வணுக்களின் மாற்றத்தினால் இக்காற்று மண்டலத்தின் சக்தியில் சந்திரனிலிருந்து கிடைக்கப் பெறும் குறைந்த அம்மாவாசையின் அணு சக்தியும், பௌர்ணமியில் கிடைத்திடும் அதிக அணு சக்தியும் இவ்விரண்டு பக்கத்திலும் உறைந்துள்ள நீரின் அமில சக்தி மாற்றம் கொள்ளும் நிலையில், இக் கடல் நீர் பொங்குகின்றது.

இன்று இப்பூமிக்கு ஜீவனாய், பொக்கிஷமாய் அமைந்துள்ள இந் நீர்நிலைகள் வடதுருவமாயும், தென் துருவமாயும் இப்பூமி சுழல்வதற்கே சக்தி கொடுத்து நிறைந்திருக்காவிட்டால் நம் பூமிக்கு இம்மழையும், மற்ற நீர்நிலைகள் எவையுமே கிடைத் திருக்கா.

ஜீவனாய் இப்பூமிக்கிருக்கும் இச் சக்தி ஒவ்வொரு மண்ட லத்திலும் மாறுகொள்ளுகின்றது. சந்திரனில், நம் பூமியில் பெய் யும் மழையும் மற்ற நீர்நிலைகளும் இங்கு தேங்கியுள்ளதைப்போல் அங்கு மாறு கொண்ட நிலையில் சந்திரனின் நிலைகொண்டு இன் றுள்ளது. இதுவே இப்பூமியின் மாற்றத்தினால், நம் பூமியின் சக்தி யைப் போல், நம் பூமிக்கு அருகாமையில், பூமியுடன் அதிகத் தொடர்பு கொண்ட சந்திர மண்டலம் இருப்பதினால், இப்பூமியின் சக்தியைப்போல் சக்தியை வளர்க்கப்போகிறது.

நம் பூமியைக் காட்டிலும் சுழலும் வேகம் குறைவு. ஆனால் மாற்றத்தில் சந்திரனின் சக்தி கூடி, துரிதவேகம் அதிகப்படப் போகின்றது. துரித சக்தியின் வளர்ச்சியினால், ஈர்ப்பு சக்தியின்

நிலையும் கூடி, இன்று செழித்து வளரும் நிலையில்லாமல் காற்றும் மழையும் குறைந்துள்ள நிலையில், மழையென்றால் நம் பூமியில் பெய்வதைப்போல் பூமி ஈர்த்து ஆங்காங்கு வெளிப்படுத்தும் பருவ மழைகளும், இக்கடலில் புயலாய் ஏற்பட்டு உருக்கொண்டு வீசிடும் காற்றிலிருந்து, இங்கு பெய்யும் மழையின் நிலையும், இரவு பகல் என்ற மாற்றம் கொண்ட நிலையும் சந்திரனில் இல்லாமல் உள்ள இன்றைய நிலையே, இக்கலியின் மாற்றத்தினால், இப்பூமி யின் சக்தியின் நிலையே, சந்திரனின் சக்தி நிலையுடன் செயல் கொள்ளப்போகின்றது. எந்நிலையில்? நாளை.

**6-1-80**

சந்திரனின் சக்தி நிலையை உணர்த்துவதற்கு முன் ஒவ்வொரு பாட நிலைக்கும் விட்டுள்ள வினாக்களுக்கு பதிலை உணர்த்துமுன் முதல் பாடத்திற்கு வருவோம். மண்டல வளர்ச்சி நிலை தோன்றிய நிலையை ஆரம்ப பாட வரிசையில் உணர்த்திட்டால்தான், இன்ற ளவு உணர்த்திய பாட நிலைக்கு ஜீவன் அளித்த நிலை தோன்றிடும்.

எறும்பைக் காட்டிலும் சிறிய நுண்ணிய உயிரணுக்கொண்ட உயிராத்மா, அவ்வுயிரணுவுடன் மற்றோர் உயிராத்மாவின் சேர்க் கையில் ஒன்றுடன் ஒன்று ஜீவ சக்தி பின்னிய நிலையில் இரண்டும் ஐக்கியப்பட்டு தன் ஆவி நிலையுடன் பால்வெளி மண்டலத்தின் பல நிலைகள் கொண்ட, ஆவியான அமில சக்திகள், இவ்விரண்டு ஆத்மாவுடன், இதன் சேர்க்கையுடன் ஆவியாய் மோதுண்டு இதன் ஈர்ப்பு நிலையுடன் இதன் வட்டத்திலேயே இவ்வாத்ம அமிலமுடன் பல சக்தி நிலைகள் கூடி, இவ் ஆவியான அமிலமே, உறைந்த நிலையில், திடப்பொருளாய்ச் செயல்படுவதற்கு முன், இவ்வாத்மாவின் ஈர்ப்பில் அமிலமுடன் கலந்து வந்த உயிர்த் துடிப்புக்கொண்ட, மற்ற உயிரணுக்களின் இவ் ஈர்ப்பு நிலையில் சிக்கி இதன் வட்டத்திற்குள் வந்த பிறகு, இதன் ஆவி அமிலமும், இச் சுழற்சியில் காற்றும், நீரும் படும் நிலையில் திடப் பொருளாய் கெட்டிப்பட்ட உயிர்த்துடிப்புக் கொண்ட திடமாய் ஆகின்றது.

இதன் வளர்ச்சியே அமிலத்தின் ஈர்ப்பாய் அதிகப் படுகின்றது. அமிலத்தை ஈர்க்கும் சக்தி இவ்விரண்டு ஆத்மாவின் உயிர்சக்தியுடன் உட்சென்ற உயிரணுக்களின் பெருக்கமும் இச் சிறிய கோளமாய் உருப்பெற்ற இதன் ஈர்ப்பின் வட்டத்தில் இதற்கு உணவாய் இவ்வுயிரணுக்களின் சக்திதான் இது வளரும் நிலைக்கு உதவுகின்றது.

உயிரணு இவ்வட்டத்திற்குள் வந்தவுடன் அதன் சக்தியை உணவாய் ஈர்த்து அதன் சக்தியை உண்டு அதில் வெளிப்பட்ட

கழிவு நிலை ஆவியாய் இச்சிறிய மண்டலமாய் வளரப்பெறும் மண்டலம் வெளிப்படுகிறது.

இதன் தொடர்ச்சியிலேயே ஆரம்பத்தில் எவ்வுயிரணுவின் சக்தியை உண்டு மலமாக்கி அதன் ஆவியை வெளிப்படுத்தி பழக்கப்பட்டு வாழ்ந்ததோ அதே நிலையில் இம்மண்டலம் கக்கும் உஷ்ண அலையைப் பொறுத்த அமிலங்களை ஈர்த்து ஈர்த்து அதன் தொடர்ச்சியிலேயே சிறுகச் சிறுக வளர்ச்சி கொண்டு இச்சுழலும் வேகத்தினுல் பால்வெளி மண்டலத்தில் இச்சேமித்த அமில கோளமுடன் இது சுழலும் வேகத்தில் இதன் ஈர்ப்பில் இதன் அமிலத் தன்மையுடைய இதன் வர்க்க அமிலமும் மோதி மோதி ஆவியாய், அமிலமாய் திடமாக வளர்ந்துகொண்டே கோளமாய் உருக் கொள்கின்றது.

இதன் நிலையில் உயிரணுக்களின் சேர்க்கையும் ஏற்பட்ட நிலையில் இவ்வுயிரணுக்களின் நிலையும் மற்ற அமில சக்தியின் நிலையும் இதனுடன் மோதுண்டு வளர்ச்சி பெறும் நிலையில் இக் கோளத்தின் துடிப்பு நிலை துரிதம் கொள்கின்றது.

இக்கோளம் உண்டு கழிக்கும் கழிவின் உஷ்ணத்தினுல் ஒன்று நூருய், நூறு ஆயிரமாய், ஆயிரம் கோடியாய் பல கோடி உயி ரணுக்கள் இக்கோளம் பந்து நிலைக்கு வருவதற்குள் வளர்ச்சியில் பெருகி விடுகின்றன. ஒன்றிற்கு உணவு ஒன்று அளிக்கும் சக்தியின் கூட்டினுல் இக்கோளத்துடன் உயிரணுக்களின் வளர்ச்சியினுல் தான், அதனதன் ஆகாரத்தை அதுஅது எடுத்து உண்டு வெளிப் படுத்தும் சுழலிலிருந்து அதன் உஷ்ண அலையில் அதன் சுவாச நிலைக்கொப்ப அக்கழிவிலிருந்தே பல உயிரணுக்கள் தோன்றி இந்நிலையின் தொடர் வளர்ச்சியினுல் இக்காற்றுடன் கலந்த நீரும், இவற்றிற்கு உரமாய் அமைய இதன் தொடர்ச்சியிலேயே இக் கோளம் இன்று நாம் காண்கின்ருேமே நட்சத்திர மண்டலமாய் அவற்றிற்கும் மேல் பெரிய கோளமாய் உருப்பெற்ற பின்பே, தாவர வளர்ச்சி நிலை இக்கோளங்களில் வளர்கின்றது.

இன்றைய விஞ்ஞானத்தில் கண்டுணர்ந்த நிலைபோல்தான் ஆரம்ப கதியில் இக்கோளத்திற்கு மேல் பாசி படிந்த நிலைபோல் பச்சையான அமிலத்தில் இக்கோளத்துடன் ஆங்காங்கு படர்ந்து அந்நிலையின் வளர்ச்சித் தொடரில் அதன் சக்தி உருப்பெறும் மண்டலத்திற்கு உணவாய்ச் சென்று அதிலிருந்து வெளிப்படும் கழிவின் நிலையிலிருந்து மாறுகொண்ட காளான் நிலைக்கு வளர்ச்சி பெறுகிறது.

அந்நிலையின் தொடரில் அதனின் நிலையும் மாறுகொண்டு காளானுய் உள்ள தாவர நிலை அழுகிய நிலையில் அக்கோளத்துடன்

படிந்து அதிலிருந்து வெளிப்படும் உஷ்ண அலையினால் மற்றத் தாவர இன வர்க்கமான புல் பூண்டு தோன்றி, இதன் வளர்ச்சி நிலையிலேயே இதன் ஆவியின் சுவாச நிலைக்கொப்ப மாறுகொண்ட ஒவ்வொரு தாவர வர்க்கங்கள் வளரும் பக்குவ நிலையை அக் கோளம் பெறுகின்றது.

இந்நிலைக்கு வருவதற்குள் இக்கோளத்தின் சுழற்சி வேகம் உயிரணுக்களின் பெருக்கத்தினால் சேமிக்கும் அமில சக்தியின் உறையும் நிலையும் கூடிக்கூடி இக்கோளத்தின் வளர்ச்சியை சக்தி கொண்ட மண்டலத் தன்மைக்கு உருப்பெற்று விடுகின்றது. இன்று சந்திரனாய் நாம் காணும் சந்திர மண்டலத்தின் அளவு விகித நிலைப்படி உருக்கொள்கின்றது.

இந்நிலையில் உருப் பெறவே பல ஆயிரம் கோடி ஆண்டுகள் ஆகின்றன. இந்நிலையின் வளர்ச்சிக்குப்பின்தான் ஜீவராசிகள் தோன்றும் நிலைபெறுகின்றது. ஜீவராசிகள் தோன்றி வாழ்ந்திட தாவர வர்க்கங்களின் சுவாச நிலைக்கு வேண்டிய நீரின் சக்திக்கு மேல் ஜீவராசிகளுக்கு அதிக சக்தி தேவை.

இத்தாவர வளர்ச்சியின் நிலையிலுள்ள மண்டலமே பல உரு நிலைகள் மாறி மாறிப் பல ஆயிரம் காலங்கள் சென்ற பிறகுதான் அதன் இன வர்க்கத் தொடர்ச்சியில் ஒவ்வொரு தாவரம் தோன்றி அது வளர்ந்து வாழ்ந்து அழுகிய நிலையில் பூமியில் படிந்து அதன் வெக்கையில் தோன்றிய மற்ற உயிரணுவின் சக்தியினால் மாறு கொண்ட தாவர வர்க்கம் உருப்பெறுகின்றது.

ஓர் இன வர்க்க வளர்ச்சியிலிருந்து அது வளர்ந்து அதன் சக்தி மக்கி அதையே உணவாய் இப்பூமி ஈர்த்து அது கக்கும் கழிவிலிருந்து அதன் சுவாச நிலையில் பல காலம் அதே இன வர்க்கத் தொடர்தான் வளர்ச்சி கொண்ட நிலையில் வாழ்ந்த பிறகு இத் தொடருடன் மற்ற உயிரணுக்களின் சக்தி அம் மண்டலத்தின் காற்றுடன் மோதுண்ட பிறகு மாறுகொண்ட வளர்ச்சி நிலை பெற்ற தாவரம் மற்ற இடத்தில் தோன்றுகின்றது. இதே தொடரில் தோன்றும் நிலையில்தான், தாவர வர்க்கத்திலிருந்து உயிரினமாய் இக்கோளமுடன் கோளம் சேமிக்கும் அமிலத்தினால் கல்லும், மண்ணும் வளர்ச்சியுற்ற நிலையிலிருந்து இத் தாவரத்தின் சுவாச நிலையும் கல்லாய் உருப்பெற்ற திடப்பொருளாய் உறைந்த அமிலம் கொண்ட அதன் உஷ்ண அலையும் தாவரத்தின் உஷ்ண அலையும் மோதுண்ட சக்தி நிலையில் உருப்பெறும் உயிரணுவான ஜீவத்துடிப்புக் கொண்ட ஜீவராசியாய் ஓடுகள் போன்ற நிலை கொண்ட நத்தை, ஆமை, இந்நிலைகொண்ட ஜீவராசிகள்தான் இப்பூமியில் முதலில் தோன்றிய ஜீவராசிகள்.

கல்லிலிருந்தும், மண்ணிலிருந்தும் அதன் உஷ்ண அலையின் வெக்கையில் இஜ் ஜீவராசிகள் தோன்றிச் சில தாவர நிலைகளை உணவாய் உண்டு, இவை கழித்த மலத்திலிருந்து பல உயிர ணுக்கள் ஜீவன் கொண்ட நிலையில் தவளையாய், மற்றும் சில நிலைகொண்ட ஜீவராசிகள் தோன்றின.

ஒன்று, உண்டு அது வெளிப்படுத்தும் கழிவிலிருந்து பல உயிரணுக்கள் அதன் சுவாச நிலைக்கொப்பப் பல ஆயிரம் ஆண்டுகள் ஒத்த நிலையின் வளர்ச்சியிலேயே வளர்ந்து கொண்டே வருகின்றது. இதன் தொடர்தான் எல்லாமே.

தொடரின் வளர்ச்சி நிலையைத் தொடர்கின்றேன்.

**7-1-80**

இந்நிலை கொண்ட வளர்ச்சிநிலைக்கும் அம் மண்டலத்தின் ஜீவன் தோன்றி வாழ்ந்திடும் கால நிலைக்கும் இச் சக்திகள் உருப் பெறவே பல கோடி ஆண்டுகள் ஆகிவிடுகின்றன.

இஜ் ஜீவராசிகள் ஊரும் பக்குவம் எம் மண்டலத்தில் தோன்றியதோ அம் மண்டலத்தின் வளர்ச்சியுடனே இதே நிலையில் தான் பல ஆயிரம் கோடி ஆண்டுகளானாலும் சுழன்றுகொண்டே இருக்கும்.

இம்மண்டலத்துடன் இதன் ஈர்ப்பு சக்தியின் அமில சக்தி கூடும் நிலையில்தான், இம் மண்டலத்தில் வளர்ந்திடும் மற்ற சக்தி களும் கூடுகின்றன.

இந்நிலையில் சுழலும் மண்டலத்திற்கு மாறிக் கிடைக்கும் சக்தி எப்பொழுதெல்லாம் ஏற்படுகிறது?

இன்று நம் சூரியனைச் சுற்றிச் சுழன்றிடும் 48 மண்டலமுமே, சூரியனைச் சுற்றிவரச் சில காலங்கள் கொள்கின்றன. இந்நிலையில் சூரியகிரகணம் சந்திரகிரகணம் என்றெல்லாம் சூரியனைச் சுற்றி வரும் இக்கோளங்கள் சூரியனுக்கும், நம் பூமிக்கும் மத்தியில் ஓடும்பொழுது சூரியனின் ஒளிக்கதிர் வீச்சுகள் நம் பூமிக்கு நேராய் தாக்கிடாமல் சூரியனைத் தாண்டி எக் கோளம் செல்கின்றதோ அந்தக் கால நிலைக்கொப்ப நம் பூமிக்கு எப்பொழுதும் கிடைத்திடும் ஒளி அலையின் மாற்றத்தினால் சூரியனைத் தாண்டிச் செல்லும் அக்கோளத்தின் மறைப்பினால், நம் பூமிக்கும் சூரியனுக்கும் இடைப்பட்டுள்ள பால்வெளி மண்டலத்தில் கலந்துள்ள இவ் வொளி அலைகளே இரவில் உள்ள நிலைபோல் குளிர்ச்சி கொண்டு மேகங்களாய் கனம் பெற்று எம்மண்டலம் தாண்டிச் செல்கின் றதோ, அதிலிருந்து வீசிடும் அணுக்களின் சக்தி நிலைகொண்டும்

பூமியின் சக்தி நிலை இரண்டு நிமிடம், ஒரு நிமிடம் அக்காலக் கெடு நிலையிலேயே பூமியின் சக்தி நிலையிலும் மாற்றம் கொள் கின்றது.

நம் பூமிக்கு மட்டும் கிரகணம் பிடித்துத் தாக்கும் நிலை வருவதென்பதல்ல, எல்லா மண்டலங்களுக்குமே இந்நிலையின் தாக் குதலில் வளர்ச்சியுமுண்டு, வீழ்ச்சியுமுண்டு.

ஒவ்வொரு மண்டலத்திலும் அது அது சேமித்த தனித்தனி சக்தி நிலையுண்டு.

**8-1-80**

சத்தியத்தின் சக்தி நிலை முதல் புத்தகம் பூஜையில் வைத்து அமர்ந்து தியானத்தில் இருந்தபோது எங்களுக்குச் சில நல்லுரை களும் வழி முறைகளும் அருளினர்.

**9-1-80**

ஒரு மண்டலத்தைத் தாண்டி ஒரு மண்டலம் செல்லும் நிலை யிலும், அது அது சேமித்து வளர்த்த அமில சக்தியின் ஈர்ப்பு, மற்ற மண்டலத்தின் செயலுடன் தாக்கும் நிலையிலும், ஒவ்வொரு மண்டலத்திற்குமே பல காலங்கள் ஒரு நிலையில் சேமித்த சக்தி யின் தன்மை, இம்மண்டலங்களின் சுழற்சியில் ஒன்றைத் தாண்டி ஒன்று செல்லும் நிலையில், அது நிமிடக் கணக்காய் இருந்திட்டா லும், அதன் ஈர்ப்பில் இதன் ஈர்ப்பின் நிலையும் மோதுண்ட நிலை யில் இவ்விரண்டிற்கும் இடைப்பட்டுள்ள பால் வெளி மண்டலத்தி லும், அதன் அமிலத் தன்மை மாறு கொள்கின்றது.

அதிலிருந்து ஒவ்வொரு மண்டலத்திற்குமே அதனுடைய இயற்கைக் குணத்தில் சில மாற்றங்கள் வருகின்றன. சூரியனைத் தாண்டி ஓடும் மற்ற மண்டலம் சூரியனுக்கும் பூமிக்கும் இடைப் பட்ட நிலையில் தாண்டி ஓடும் சக்தியினுல், எம் மண்டலம் சூரிய னைத் தாண்டி ஓடுகின்றதோ, அம் மண்டலத்தின் குண நிலை கொண்ட, இயற்கை நிலையின் தாக்குதல், நம் பூமிக்கு ஏற்பட்டு, அதிலிருந்து இயற்கையிலேயே நற் சக்திகளும் வளர்கின்றன. பல தீய அணுக்களும் வளர்கின்றன.

இன்று பிப்ரவரி 16 ஆம் தேதியில் ஏற்படும் இச் சூரிய கிரகணத்தில் நம் சூரியனைத் தாண்டி கேதுவின் ஓட்டம் செல்வதி னுல், கேது மண்டலத்தில் உள்ள விஷ அணுக்கதிரின் தாக்குதல், நம் பூமிக்குத் தாக்கப் போகின்றது. கேதுவின் தன்மையில் விஷத் தன்மை அதிகம்.

நம் பூமியில் எப்படி சில தாவரங்கள் விஷத்தன்மை கொண்டதாகவும், சில நல்ல தாவரங்களாகவும் வளர்கின்றனவோ, அவை போல் இம் மண்டலங்களின் வளர்ச்சியிலும் ஒவ்வொரு தன்மையில் வளர்கின்றது என்றேனல்லவா? இன்று இக்கேது மண்டலம் இல்லாவிட்டாலும் இப் பால்வெளி மண்டலத்திலுள்ள விஷத்தை உறிஞ்சி, இப் பால்வெளி மண்டலத்தையே மற்ற மண்டலங்களுக்கு நன்மை தரும் சக்தியை இக்கேதுவின் நிலை இல்லாமல் இருந்திருந்தால், பால் வெளி மண்டலத்தில் நிறைந்துள்ள அமில சக்தியின் தன்மையில் இவ்விஷ அமிலமும் நிறைந்தே சுற்றிக்கொண்டிருக்கும்.

நட்சத்திர மண்டலங்களிலும் இவ்விஷமான அமில சக்தி கொண்ட பல நட்சத்திர மண்டலங்கள் உண்டு.

எண்ணத்தில்கூடக் கேதுவின் சக்தியை எண்ணிலடங்கா வண்ணம் நச்சுத் தன்மை கொண்ட அமில சக்தி நிறைந்த மண்டலமாய் கேது மண்டலம் வளர்ந்துள்ளது.

சூரியனின் ஈர்ப்பிற்கு இந்த 48 மண்டலங்களின் சுழற்சியுடன் கூடிய மண்டலம்தான் கேது மண்டலமும். கேதுவின் கிரகணம் பிடிப்பதினால் நம் பூமியின் மேல் அதன் ஈர்ப்பு சக்தி தாக்கி, நம் பூமியின் இயற்கையுடன் இவ்விஷ அணுக்களின் தாக்குதல் பட்டு அத் தாக்குதலினால் நம் பூமியின் நிலையே சிறிது இறக்கம் (கீழ்) இறங்கப் போகின்றது.

அந்நிலையிலிருந்து சூரியனுக்கும் நம் பூமிக்கும் இடைப்பட்ட தூர விகிதமும் அதிகப்படப் போகின்றது. இதிலிருந்து இன்று இப்பூமிக்குக் கிடைக்கும் சூரியனின் உஷ்ண அலையின் சக்தி குறைவு கொண்டு குளிர்ந்த நிலை அதிகப்படப் போகின்றது.

இந்நிலையின் தொடர் நிலையாலும், நம் பூமியின் மாற்ற நிலை ஏற்படப்போகும் நிலைக்கு, இக்கேதுவின் நிலை சாதகப் படுத்திச் செல்கின்றது. நல் வழியின் சாதகமல்ல கேதுவின் கிரகணத்தினால்.

நம் முன்னோர்கள் எக் கிரகணம் பிடித்ததோ, இந்நிலையில் வாழ என்று தெரிந்தோ, தெரியாமலோ செப்பினர். இன்று நம் பூமி பல நூறு ஆண்டுகளுக்குப் பிறகு இக்கேதுவின் கிரகணத்தினால் சில தன்மைகளில் மாற்றம் கொள்ளப் போகின்றது.

சுழன்றுகொண்டே உள்ள இம் மண்டலங்களின் ஓட்டத்தில் ஒன்றைத் தாண்டி ஒன்று செல்லும் நிலையிலும், ஒன்றுக் கொன்று, ஒன்றின் சக்தியை ஒன்று, அதன் ஓடும் நிலையில்

ஈர்த்துக் கொண்டே செல்லும் நிலையிலும், இப்பாடத் தொடர்ச்சியின் ஒவ்வொரு மண்டலத்தின் வளர்ச்சியின் நிலையில் பல ஆண்டுகள் ஒன்றுபோல் உள்ள இயற்கையின் நிலையில் மாற்றம் கொண்டு, இயற்கையில் உள்ள அம்மண்டலத்தின் சக்தியே மற்ற மண்டலத்திலிருந்து, அதன் ஈர்ப்புப் பட்டவுடன் மாறும் நிலை கொள்கின்றது.

நம் பூமி வளர்ந்த தொடர் நிலையின் பாடத்தில், நம் பூமியில் தோன்றிய உயிர் அணுவின் தாவர வர்க்க நிலையையும், அதிலிருந்து ஜீவன் கொண்ட உயிரணுக்கள் தோன்றிய தொடர் நிலையையும் உணர்த்தி வந்தேன்.

அந்நிலையில் ஒடுகள் கனத்து நத்தை போன்றும், ஆமை போன்றும் தோன்றிய ஜீவ அணுக்களின் வளர்ச்சி நிலை பல ஆயிரம் கோடி ஆண்டுகள் ஆன பிறகு, இப்பூமியின் முதல் பிரளய நிலையில் இருந்து இஜ் ஜீவ உயிரணுக்கள் விட்ட நிலையிலிருந்து தொடர் நிலையாய் அவற்றின் அமில சக்தியிலிருந்து தோன்றிய உயிரணுக்களின் தன்மையையும் முதல் பிரளய நிலைக்குப் பிறகு தான் நம் பூமிக்கு இன்று பொக்கிஷமாய் உள்ள வடதுருவ, தென்துருவ நீர்நிலைகள் பெறும் சக்தி கொண்ட நிலையையும் இதன் தொடர் நிலையிலேயே விளக்கிடுவேன்.

இப்பூமி ஒரு மண்டலம். இப்பூமியில் தோன்றி வளர்ந்திடும் உயிரணுக்கள் ஒவ்வொன்றுமே ஒவ்வொரு மண்டலம். நம் உடலுக்கு நம் பழக்க வழக்கப்படி ஒரே மாதிரியான உணவு நிலைகளை உண்டு வாழ்ந்திடும் பக்குவத்தில் நாம் உண்ணும் உணவில் மாற்றம் கொண்டால் நம் உடல் என்னும் இம் மண்டலம் ஏற்காமல் எப்படி வாந்தியாகவோ அல்லது வாயுவாகவோ மற்ற நிலையில் பல இன்னல்களை இம் இண்டலத்தின் மையமான நம் வயிற்றில் வலியும் மற்றத் தொந்திரவுகளும் ஏற்படுகின்றன.

அதிலிருந்து நம் உடல் மண்டலம் சரிப்பட்டுப் பழைய நிலையில் வருவதற்குச் சில நாட்கள் ஆகின்றன; அல்லது அதன் தொடர் நிலையில் ஒவ்வொரு தொந்திரவுகளும் ஏற்பட்டு நம் ஆரோக்கிய நிலையே மாறுகொள்கின்றது.

இந்நிலை போன்றுதான் மண்டலங்களின் ஒவ்வொரு நிலைக்கும் அதன் மாற்றநிலை வருகின்றது.

பிரளயம் ஏற்படுவதுவும் இச் சுழற்சியின் நம் மண்டலத்துடன் எம் மண்டலத்தின் தாக்குதல் ஏற்படுகின்றதோ அதன் நிலை ஏற்காமல் அதிலிருந்து பல மாற்றங்கள் ஏற்படும்.

நம் உடல் மண்டல நிலையில் ஆரோக்கிய நிலை கல்லைத் தின்றாலும் ஜீரணிக்கும் நிலை போலவும், எதைச் சாப்பிட்டாலும் ஜீரணித்து விடும் நிலையும் கொண்ட ஆரோக்கியமான உடல் நிலை கொண்ட மண்டல மனிதனாய் உள்ள நிலையில் உடலிலுள்ள இவ் எதிர்ப்பு சக்தியினால் மற்றத் தீய அணுக்கள் வந்து நம் ஆரோக்கியத்தைத் தாக்கிடா.

அந்நிலைபோல் நம் பூமி மண்டலத்தின் ஆரோக்கிய நிலை இருந்திட்டால் இப்பிரளய நிலையிலும் சக்தி கூடும். சூரியனைத் தாண்டிக் கேது செல்லும் நிலையிலும் நம் பூமியின் நிலை ஆரோக்கியமாய் இருந்திட்டால் அவற்றின் தாக்குதலை நம் பூமி ஏற்காது. நம் பூமியில்தான் இன்று நம் செயற்கைக்காக பூமியின் பொக்கிஷத்தையே பிரித்தெடுத்து ஆரோக்கியம் குன்றிய பூமி யாக நாம் செய்து வைத்துள்ளோமே நம் பூமியை.

இந்நிலையில் ஏற்படும் இயற்கைக்கு நாம்தான் பொறுப்பு ஆகின்றோம். நம் பூமியில் முதல் பிரளயத்தில் ஏற்பட்ட நீர்நிலை களின் வளர்ச்சி, நம் பூமி சேமித்து வளர்த்த அமில சக்தியின் ஈர்ப்பிலிருந்து நாம் பெற்ற பொக்கிஷம்.

முதல் பிரளய காலத்திற்கு முன், இன்று எப்படி சூரியனைக் கேது கிரகணம் பிடிக்கின்றதோ, அதைப்போன்றே சூரியனுக்கும் நம் பூமிக்கும் இடைப்பட்ட நிலையில் வியாழனின் கிரகணம் பிடித்தது.

**10-1-80**

நம் பூமிக்கு மேல் வியாழ மண்டலம் பெரியது. சூரியனின் நிலை மிகவும் பெரியது. இந்நிலையில் சூரியனை வியாழனின் கிரகணம் பிடித்தவுடன் சூரியனைத் தாண்டி வியாழன் செல்லும் நிலையில் நம் பூமிக்கும் வியாழனுக்கும் இடைப்பட்ட நிலையில் பால்வெளி மண்டலத்தில் வியாழனின் சக்தி நம் பூமியின் மேல் நேர் பார்வையில் பட்டவுடன் பால்வெளி மண்டலத்திலுள்ள அமில சக்திகள் உறைந்து வேகமாய் வியாழனின் இயற்கைக் குணமான அதிக நீரைக் கொண்ட சக்தியுடைய அமில உப்பு இப் பால்வெளி மண்டலத்தில் கலந்து வேகமாய்ப் படர்ந்து உறையும் தன்மை கொண்டு இவ்வியாழன் சூரிய கிரகணத்தைத் தாண்டிய நிலையில் உப்புக் கலந்த, உறைந்த அமில சக்தியானது சூரியனின் ஒளி பட்டவுடன் கரைந்து நம் பூமிக்கு எப்பொழுதும் இருந்த இயற்கை நிலையுடன் அதிக சக்தி கொண்ட இவ் உப்புக் கலந்த அமில நிலை மோதுண்டவுடன் நம் பூமியின் நிலை ஏற்காமல் பிரளய நிலை ஏற்பட்டு அதன் சுழற்சி வட்டத்தில் சிக்கிக்

கொண்ட நீர்நிலைகள்தான் நம் பூமிக்கு இரண்டு பக்கமும் வட துருவ தென்துருவ நீர்நிலைகள் அடர்ந்த கடல்களே.

அதன் தொடர்ச்சியிலிருந்து சுழன்ற நிலைகொண்டு நம் பூமி முதலில் சேமித்துப் பழக்கப்படுத்திய இயற்கைத் தன்மை மாறி இத்தாவர வர்க்கங்களும் முதல் பிரளயத்திற்கும் பிறகு நீருடனே நீர் நிலைகளுள்ள இடத்தில், நீருக்கடியில், ஆரம்ப காலத்தில் வளர ஆரம்பித்தன.

அதன் தொடர்ச்சியிலிருந்து ஏற்பட்ட, இன வர்க்கங்கள் தான் கொசுக்களைப் போன்று நுண்ணிய உடல்களைக் கொண்ட உயிரணுக்கள் இந்நீர்நிலைகளில் தோன்றி, நீர்நிலைகளின் மேல் படர்ந்து, அதன் தொடர்ச்சியில், அதன் சுவாசத்தில் அதன் கழிவின் உஷ்ண நிலையிலிருந்து சிறு சிறு முட்டைகள் தோன்றி, அதிலிருந்து எறும்பின் தலையை ஒத்த தலையுடைய சிறு வால் நீண்ட உயிரணுக்கள் வளர்ச்சி கொண்டன.

அந்நிலையின் தொடரிலிருந்து, நீரிலிருந்து வளர்ந்த இவ்வுயிரணுவே சிறு சிறு மாற்றம் கொண்ட நிலையில் ஜீவ உடல் கொண்ட உயிர்ப்பிராணி வர்க்கத்திற்கு வந்ததின் தொடர் நிலையிலிருந்துதான் பல நிலைகள் மாறி, பல ஆயிரம் கோடி ஆண்டுகள் அந்நிலையின் வளர்ச்சிக்குப் பிறகு மற்றும் ஒரு பிரளய மாற்றத்திற்குப் பிறகுதான் இவ்வளர்ச்சி நிலையில் உயிரணுவாய் ஜீவ உடல்களைக் கொண்ட ஜீவன்களின் நிலை அதன் வளர்ச்சியில், அது சேமித்த சக்தியின் நிலைகொண்டு அடுத்த பிரளயத்தில் அவ்வுயிரணுக்களே தோன்றிய நிலையில்தான், இம்மனித உடல் கொண்ட அறிவு வளர்ச்சியுற்ற ஆத்மாக்களின் வளர்ச்சி நிலை வந்தது.

இவ்விரண்டாவது பிரளயத்தினுல் நம் உலகிற்கு எந்நிலை கொண்ட மாற்றம் வந்தது? இவ் இரண்டாவது பிரளயத்திற்கும் வியாழனிலிருந்துதான் நம் பூமிக்கு இம் மனிதர்கள் வாழும் நிலையின் தொடர் வந்தது.

நம் பூமியில் இன்று எப்படி நமது நிலை உள்ளதோ அதைப் போன்றே பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வியாழனிலும் நம்மை ஒத்த மனித இன வர்க்கமும், அடர்ந்த நீர்நிலைகளும் இருந்தன.

அறிவின் வளர்ச்சி கொண்ட மனித ஆத்மாக்களின் ஆசை யின் நிலையினுல்தான், அன்று வியாழனில் ஏற்பட்ட பிரளயத் தினுல், இன்று வியாழனில் மனித ஆத்மாக்கள் இல்லாத நிலை.

ஆனுல் நம் பூமிக்கு வியாழனில் இருந்துதான், அதன் தொடர் சக்தியின் உருவிலிருந்துதான் நம் உயிராத்மாக்கள் தோன்றி இன்று இங்கு நாம் வாழும் நிலை உள்ளது.

இராமாவதார காலத்திலிருந்து இக் கலி வரை ஏழு ஜென் மங்களில் இன்று மனிதராய் வாழ்பவரில் பலர் உள்ளனர். இக் கால நிலையிலேயே மனித உடல்களில் இருந்து மாறுகொண்ட மிருக வர்க்கத்திற்குப் பல ஆயிரம் ஆண்டுகளாகவே பல உயிர் ஆத்மாக்கள் சென்றுவிட்டன.

மிருக உடலிலிருந்தும் மாறிக் கொசுவாகவும், ஈ, எறும்பு, புழு, பூச்சியாகவும் பல ஆத்மாக்களின் நிலை சென்றுவிட்டன. இம் மண்டலத்தில் வந்து, வாழக் குடியேறிய உயிராத்மாக்களுக்கு வந்த சக்தி ஏழு உடல்களை ஏற்கும் சக்திதான் உண்டு.

அதிலிருந்து மாறுபட்டுத் தோன்றிப் பல நிலைகள் கொண்ட உடல்களை ஏற்று எண்ணிலடங்கா உயிரணுக்கள் வாழ்கின்றன. ஓர் உயிரணு தோன்றி அதன் வளர்ச்சியில் உயிராத்மாவாய் பல ஜென்மங்கள் மாறுகொண்டு, பல நிலைகளைப் பெற்று வாழும் தருவாயில் ஒவ்வோர் உயிராத்மாவும் பல உயிரணுக்களை உண்டு பண்ணியே தான் வாழ்கின்றது.

எவ்வுயிரணுவிற்கும் உணவில்லாமல் வாழ்ந்திட முடியாது. அது எடுக்கும் ஆகாரத்தில், அதன் சக்தியை வளர்த்த பிறகு அது வெளிப்படுத்தும் மலத்திலிருந்து பல உயிரணுக்கள் தோன்று கின்றன.

உண்டு, கழித்து, வாழ்ந்திடும் உயிராத்மாக்களினால் எண்ணி லடங்கா உயிரணுக்கள் தோன்றி அவை அவை தோன்றிய நிலைக் கொப்பப் பல நிலைகளில் வளர்ச்சி கொள்கின்றன.

**11-1-80**

இவ்வுலகமே இக்காற்றுடன் பால்வெளி மண்டலத்திலுள்ள அமில சக்தியையும் இப்பூமியின் மேல் மட்டத்தில், இப்பூமி சுழலும் வேகத்தில், அதன் ஈர்ப்பில் சூரியனிலிருந்து வெளிப்படும் அமில சக்தியையும் மற்ற மண்டலங்களின் சக்தியையும் தன் சுவாச முடன் உணவாய் ஈர்த்து அதன் சக்தியைத் தன் மண்டலத்திற்கு வேண்டிய அமிலத்தைச்சேமித்துத்தான் பூமியின் கழிவான உஷ்ண அலைகள் வெளிப்பட்டுப் பல நிலைகள் ஏற்படுகின்றன. இம்மனித உடலுக்கு நாம் உண்ணும் உணவு எப்படி அமிலமாய், ஆவிநிலை கொண்டு நம் உடம்பிலுள்ள இரத்த நாளங்களில் அச்சக்தி மோதி இவ் ஆவியான அமில உணவே உதிரமாய் உருப்பெற்று நம் உடலிலுள்ள அனைத்துப் பாகங்களின் செயலுக்கும் அவ் உதிரமே பல அணுக்களாய் அவற்றிலிருந்து எடுக்கும் சக்தியைக் கொண்டுதான் நம் உடலிலுள்ள ஒவ்வோர் உறுப்பும் அததற்கு

வேண்டிய அமில உணவை உண்டு எலும்பாகவும், மயிர்க்கால் களாகவும், நகங்களாகவும் வளர்ந்துகொண்டே'தான் உள்ளன.

எலும்பின் வளர்ச்சி வளர்ந்து கொண்டே இருந்தால், நம் உருவ அமைப்பும் வளர்ந்து கொண்டே இருக்க வேண்டும் அல்லவா? ஆனால் குறிப்பிட்ட கால வயதுக்குப் பிறகு இவ்வளர்ச்சி யின் நிலை மாறு கொள்ளுகின்றது. குழந்தையின் எலும்பின் உறுதித் தன்மைக்கும் வளர வளர முதியோர்களான பிறகு உள்ள எலும்பின் உறுதிக்கும் மாற்றம் உள்ளது. எப்படி யானை யின் தந்தம் வயதான பிறகு அதனுடைய உறுதி கூடுகிறதோ அந்நிலை போன்றுதான் எலும்பின் வளர்ச்சி நிலையும்.

குறிப்பிட்ட வயது வரம்பிற்குப் பிறகு உடல் வளர்ச்சி மாற்றம் கொள்ளும் நாளிலிருந்து வெளி வளர்ச்சிக்கு மேல் நம் (மனிதனின்) உள் உறுப்புகளில் ஏற்படும் வளர்ச்சியில் மாற்றங்கள் உண்டு.

நாம் உண்ணும் உணவிலிருந்து சுரக்கும் அமில சக்தியின் ஆவி நிலைதான் நம் உணவிற்கு சக்தி தரும் நிலை.

நம் பழக்க வழக்கப்படி நம் உடலை எந்நிலையின் உணவை உண்டு அவ்வமில சக்தியின் வளர்ச்சியின் நிலைகொண்ட நிலையைத் தான் நம் உடல் ஏற்கிறது.

எப்படிப் பட்டுப்புழு முசுக்கொட்டைத் தழையை மட்டும் உண்டு அதிலிருந்து எடுத்த ஆவியின் அமிலத்தினால் பட்டை எடுக்கின்றோம்? அப்பட்டுப் புழுவிற்கே முசுக்கொட்டைத் தழை யைத் தவிர வேறு உணவை உண்டால் அதன் நிலையில் இப்பட்டை நாம் எடுத்திட முடிந்திடாது.

அதைப்போல்தான் ஒவ்வொன்றின் நிலைக்கும் செயல் நிலை நடக்கின்றது. மனிதனின் நிலையும் அதுவே. மற்ற எல்லா மண்ட லங்களின் நிலையும் அதுவே. உணவில்லாமல் எச்சக்தியும் செயல் படுவதில்லை.

ஒன்று உண்டு அது வெளிப்படுத்தும் கழிவிலிருந்து மற்றொன் றின் வளர்ச்சி ஏற்படுகின்றது.

இவ்வுடல் கோளத்திலேயே பல உயிரணுக்கள் வாழ்கின்றன. அவை அவை உண்டு வெளிப்படுத்தும் அமிலத்திலிருந்துதான் மற்ற நிலைகள் ஏற்படுகின்றன. நாம் உண்ணும் உணவு ஆவியாய், அமிலமாய் உதிர சக்தி பெறுகின்றது. அவ்வாவி ஆன பிறகு நாம் உண்ட உணவின் தன்மை அதன் சக்கை மலமாய் வெளிப் படுகிறது.

இவ்வாவி, அமில, உதிர சக்திதான் அதில் வளரும் உயிர் அணுக்களின் நிலையைக் கொண்டு நம் உடம்பிலுள்ள மயிர்க் கால்கள் வளர்ச்சி பெறுகின்றன. ஒவ்வொரு முடியும் வளர் வதற்கே அவ்வுயிரணுக்களின் நிலையிருந்தால்தான் வளர்ந்திடும்.

இந்நிலையை வைத்துத்தான் முன் பாடத்தில் நம் ஆத்மா வுடன், நம் உயிர் மட்டுமல்ல பல கோடி உயிரணுக்கள் உயிர் பெற்று வாழ்கின்றன என்றுணர்த்தினேன். தொடர் நிலை நாளை.

**12-1-80**

ஒன்றின் துணையுடன் ஒன்றியே மற்றொன்றின் செயல் உள்ளது. தொடர் நிலை இல்லாத செயல் எதுவுமேயில்லை. பால் வெளி மண்டலத்திற்கும், மற்ற சக்தியை ஈர்த்துச் செயலாக்கும் சக்தியுண்டு.

வானமும் பூமியும் எதுவுமே ஒன்றின் தொடர் இல்லாமல் ஒன்றில்லை. வியாழனின் நிலையை அன்று கேள்விக் குறியாக்கி, வியாழனில் இருந்து நம் பூமிக்கு எப்படி உயிரணுக்கள் வந்து தோன்றின என்பதனை உணர்த்தத் தொடர் கொண்டு நிறுத்தி யுள்ளேன்.

நம்மை ஒத்த மனித ஆத்மாக்கள் வாழ்ந்த பூமிதான் வியாழன் மண்டலம். ஆனால் இன்று மனித உடல்கொண்ட அறிவு நிலையும், செயல் திறமையும் எண்ணத்தின் வளர்ச்சி சக்தி கொண்ட மனித ஆத்மாக்கள் அங்கில்லை. ஆனால் அங்கிருந்து வந்தவர்கள்தான் நாமெல்லாரும்.

இம்மனித உடல் எய்தி வாழ்ந்திடும் ஆத்மாக்களில், முதலில் தோன்றிய உயிரணுக்களின் தொடர் சக்தி வியாழனிலிருந்து வந்ததுதான். நம்மை ஒத்த மனித ஆத்மாக்கள் அங்கு வாழ்ந்த காலத்திலேயே, தன் அறிவினால், எண்ணத்தில் ஜெயம் கொண்டு, சூட்சுமம் கொண்டோரின் சக்தியினால், வியாழனின் சக்தித் திறனை நம் பூமி ஈர்த்து வாழப் பழகிக் கொண்டவுடன், சூட்சுமத்தில் உள்ளோரால் (வியாழனிலிருந்து சூட்சுமம் கொண்டவர்கள்) நம் பூமியின் இயற்கையின் வியாழனின் சக்தித் தன்மை கூடி, நீர் நிலைகள் பெருக்கம் கொண்டு, மனித ஆத்மாக்கள் வாழ்ந்திடும் பக்குவ நிலை வந்தடைந்த பிறகு, இச் சூட்சுமத்தில் அங்கிருந்து வாழ்ந்து வந்தவர்களால், அவர்களின் தொடர்சக்தியை, இப் பூமியில் வளரவிட்டு, அதன் தொடர் நிலையிலிருந்து வந்ததுதான் இக் கலிகாலம் வரை.

இச் சூட்சுமம் கொண்டு செயல்படுபவர்களிலும் தன் இனப் பெருக்கத்தைச் செயலாக்கும் ஆசை நிலையுண்டு. எப்படி இன்று

நம் பூமியில் வந்து வாழ்ந்து, சூட்சுமம் கொண்ட முருக ஜெபத்துடன் ஒன்றிய போகரினால், அவர் வாழ்ந்த காலத்திலேயே, அவரது செயலைக்கொண்டு, பல மருத்துவ நிலைகளையும், பக்தி நூலையும், ஏடுகளையும் இப்பூமியில் பதியச் செய்தார். தன் நிலை உணரவும், தன் சக்தியின் சக்தியைப் பலருக்கும் பரப்பும் ஆசையுடன் செய்திட்ட நிலை போகரின் நிலை.

முருகரின் பக்திகொண்டு, முருகருடன் ஒன்றிய எண்ணம் கொண்டோருக்கெல்லாம் போகரின் சக்தியில் ஈர்த்து, செயல் படுத்தி, அவ்வட்டத்தின் வளர்ச்சியையே ஓங்கச் செய்கின்றார்.

மனித ஆத்மாக்களுக்கு மட்டுமல்ல ஆசை நிலை. ரிஷிகளுக்கும் அவ்வாசையுண்டு. ஆசையில்லா விட்டால் எதுவுமே இல்லை. பேராசைப் பிடியில் சிக்குண்டு, அடிமைப்படாமல் அன்பான ஆசையில்தான் அனைத்துமே செயல் கொள்கின்றது. வியாழனில் வாழ்ந்தவரின் ஆசையினால் நம் பூமி சக்தி பெற்றது.

நம் பூமியில் வாழ்ந்து, செயல்கொண்டு, சூட்சுமம் கொண்டோரினால் சந்திரனில் சக்தி நிலை கூடப் போகின்றது. சந்திரனுக்கு நம்மை ஒத்த உயிராத்மாக்கள் சென்று வாழ்வதற்கே, இச் சூட்சுமம் கொள்வோரின் சக்தியினால்தான் செயல்படுத்திட முடிந்திடும்.

இப்பொழுது செப்பிடும் சந்திரனில் மனித ஆத்மாக்கள் வாழப் போகும் நாட்களின் நிலை, ஒரு வருடமல்ல, இரண்டு வருடமல்ல, ஆயிரம் ஆண்டுக்காலம் ஆனாலும் ஆகலாம்.

பல கோடி ஆண்டுகளாய், பல நற்சக்திகளை ஈர்த்து, இயற்கையிலே பல பொக்கிஷங்களைப் பெற்றிட்ட நம் பூமியே, இக் கலியினால், கலியில் வாழ்ந்திடும் மனித ஆத்மாக்களினால் மாற்றம் கொள்ளப் போகின்றது.

நம் பூமியின் மாற்றத்தினால், இக்கலியினால் வந்த மனித ஆத்மாவினால் நிகழப்போகும் இயற்கையின் கொடுமையான மாற்றத்தினால், நம் பூமி மட்டுமல்ல, இதன் தொடர்பினால் ஒவ்வொரு மண்டலத்திற்கும் இம்மாற்ற நிலை ஏற்பட்டு, பால்வெளி மண்டலமும், நம் சூரியனும், பல கோடி நட்சத்திர மண்டலங்களும், எழுத்திலும், எண்ணத்திலும் எண்ணத்தகா மாற்ற நிலை இக் குறுகிய காலத்தில் நிகழத்தான் போகின்றது.

**13-1-80**

இன்றைய பூஜை நேரத்தில் குருநாதரின் அறிவுரைகள் எங்களின் ஆத்மீக நெறியின் ஜெபத்திற்காக அருளப் பெற்றதினால் பாட நிலை தவிர்க்கப்பட்டது.

14-1-80

சக்தியின் சக்தி பெற்று, இப்பூமியில் மனித ஆத்மாவாய் அறிவு நிலை பெற்று, ஆக்கத்தின் செழிப்பினல் அகிலத்தையும் ஆளும் செழிப்பை இப்பூமியில் பிறப்பெடுத்து, வாழ்ந்து வழி பெற்ற சக்தி மட்டுமல்ல, இன்றுள்ள எண்ண வளர்ச்சியின் மனித ஆத்மாவாய் வாழும் பக்குவம் பெற்று, உயிரணுவிற்குத் தொடர் நிலை கொண்ட அமில சக்தி கூடப் பல கோடி ஆண்டுகள் ஆயிற்று.

பெரும் பாக்கிய சக்தி, மனிதனாய் வாழும் சக்தியே. இயற்கையின் செழிப்பில் அன்பு கொண்ட இதயமாய் வாழ்ந்திட்ட நிலையையே, அறிவில் மிஞ்சிய நிலை என்ற கணிப்பில், ஒவ்வோர் இடத்தில் வாழ்பவர்களும் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அவர்களில் ஒருவரைத் தலைவனாக்கி, அரசாளும் நிலைப்படுத்தி, அவ்வட்டத்தின் வழியிலேயே சேர்ந்த இனத்தவரை எல்லாம் தனி ஓர் இனமாய்ப் பிரித்து ஜாதி வெறியூட்டி, ஒருவரின் உயர்வில் ஒருவர் பொறுமை கொண்டு, இதன் தொடர்ச்சி நிலையிலேயே இன்றளவும் மனிதனின் எண்ண வளர்ச்சியுடனே, இக்கலப்பான சக்தி நிலையை ஊட்டி, இன்றைய மனிதன் ஒவ்வொருவனும் தனக்குள் உள்ள ஆண்டவனை மறந்து, தானும் இந்நாட்டின் மன்னன் என்றும், ஒவ்வொருவரின் மனப்பாங்கே இம்மதிப்பின் பேராசை வெறியில் வழிவந்துவிட்டது. இன்று நம்முடன் வாழ்ந்திடும் மனிதர்களால் ஏற்படவில்லை, இன்றைய இந்நிலை.

அன்றாண்ட, 2000 ஆண்டுகளுக்கு முதலே ஆட்சி என்னும் வித்திட்டு, அழிவிற்கு, மனித எண்ணங்களுக்குப் பாதை வகுத்துத் தந்தவர்கள் அன்றாண்ட அரசர்கள்தான். இன்றைய செயற்கையில், இம்மனித எண்ணங்களின் நிலையே இன்று பிறப்பில் வந்திட்ட நிலையல்ல. நற் சக்தியின் பயனும், சொல்லில் செயலும் மாறிவிட்டது.

இச் செயற்கையில் நம் பூமியின் பொக்கிஷத்தை உறிஞ்சி எடுத்ததல்லாமல், இப்பூமியிலிருந்து ஏவிவிட்ட விஷத்தன்மை கொண்ட ஊசிகளும், இன்றல்ல நேற்றல்ல, இவ் ஏவுகணை அனுப்பும் நிலையே, இப்பூமியில் பல நூறு ஆண்டுகளாகச் செயல்படுத்தி, நம் பூமியின் வட்டத்திற்கு மேல் பால்வெளி மண்டலத்திற்கும், மற்ற கிரகங்களுக்கும் அனுப்புவித்த ஏவுகணைகளெல்லாம், இப் பூமியில் ஏற்படும் இயற்கையின் மாற்றத்தினல், ஒவ்வொரு மண்டலத்திற்கும் இதன் தொடர்பினல் மாற்றம் ஏற்படப் போகின்றது என்பதனை உணர்த்தினேன்.

அதனுடனே மாற்றம் கொள்ளும் நிலையில், பால்வெளி மண்டலத்தில் ஏவச் செய்த விஷஉலசிகளும், ஏவுகணைகளின் நிலையில் நிறைந்துள்ள அணுவிசை சக்திகளும், இம் மாற்றத்தினால் அங்கங்கு செயலிழந்து, அதனின் சுற்றலுக்குகந்த அருகாமை கொண்ட மண்டலங்களில் மோதி அவற்றின் நிலையிலிருந்தும் பல தீய சக்திகள் ஏற்படத்தான் போகின்றன.

இம்மனித ஆத்மாக்களின் சக்தியினால், இயற்கையின் சக்தியே மாற்றம் கொள்ளும், சீற்றம் கொள்ளும் நிலையெல்லாம் இம்மனித ஆத்மாவினால்தான் நடக்கப் போகின்றன.

இம்மனித ஆத்மாவினால் மண்டலமாய் உருக்கொண்டு சுழன்றிடவும் முடியும், சுழற்சியின் சக்தியில் பல கோடி மண்டலங்களை வளர்த்திடவும் முடியும். ஆக்கத்தின் அறிவு சத்தியாய் ஒளிரும் ஆத்மாவையே அழிவின் சக்திக்கு அடிகோலும் பேராசைப் பேயின் நிலையில் சிக்குண்டு, தன் சக்தியைத் தானே இழந்து, கலியின் மாற்றத்தில் படப்போகும் இன்னலை உணர்ந்து சத்தியத்தின் சக்தி நிலையின் வாயிலாய் உணர்த்திடும் இச்சக்தி நிலையை உணர்ந்து, நம் ஆத்மாவின் சக்தியைச் செயலாக்கிடுங்கள்.

நம் ஆத்மாவின் சக்தியைச் செயலாக்கினால் எந்நிலை பெறுவோம்? சந்திரனின் நிலையை அன்று கேள்விக்குறியாக்கி நிறுத்தியுள்ளோம்.

இக்கலியின் மாற்றத்தினால் சந்திரனுக்கு நம் பூமியின் தொடர்பும், ஈர்ப்பு சக்தியும் பழக்கப்பட்டு வந்திட்ட நிலையினால், இவ்வரப்போகும் சூரிய கிரகண நாளிலிருந்தும் (பிப்-16), சந்திரனுக்குச் சில சக்திகள் கூடப்போகின்றன. எந்நிலையென்ற வினா எழும்பலாம்.

சூரியனைத் தாண்டிக் கேது செல்லும் நிலையில், நம் பூமிக்குக் கேதுவின் விஷ அணுக்கள் கூடும் தருவாயிலும், நம் பூமி இன்று சுழன்று ஓடும் வட்டத்திலிருந்து கீழ் இறங்கிச் செல்லும் நிலையில், நம் பூமியின் ஈர்ப்பு சக்தி, நம் பூமியின் பொக்கிஷ அமில சக்தியின் இயற்கைத் தன்மை, சந்திரனின் வட்டத்திற்கு அதிகமாகச் செல்லும் நிலையில், இவ்வரப் போகும் சிறிய மாற்றத்தின் நாளிலிருந்தே, சந்திரனில் இன்றுள்ள நிலையைக் காட்டிலும் நீர் நிலைகள் அதிகரிக்கும் தன்மை கூடுகிறது.

நம் பூமியின் பொக்கிஷ சக்தியே இந் நீர்நிலைகள்தான். சந்திரனும், நம் பூமியின் ஈர்ப்பால், இச்சக்தி நிலை கூடி, அதன் ஈர்ப்பில் அதன் சுவாசத்திற்கும், இதன் ஈர்ப்பின் சக்தியினால் அது

ஈர்த்து வெளிப்படுத்தும் நிலையிலிருந்து, ஒவ்வொரு நொடிக்கும் சந்திரனுக்கு வளர்ச்சி சக்தி கூடப்போகின்றது.

இந்நிலையின் தொடர் வளர்ச்சி நிலை சந்திரனுக்கு உண்டு. மனித ஆத்மாவினால் மாறப்போகும் தன்மை நிலையிலிருந்து மீளுவதற்கும் இயற்கையில் சக்தியுண்டு. எந்நிலை என்று உணர்த்திடுவேன் நாளையே.

நம் சங்கத்தின் தலைவரால் எழுப்பப்பட்ட கேள்வி இது.

இன்றைய விஞ்ஞானத்தில்தான் அவர்களின் கண்டுபிடிப் பிலிருந்து சந்திர மண்டலத்தில் உயிரணு இல்லை, நீர்நிலையும் இல்லை. நீர் இருந்தாலல்லவா உயிரினம் வாழ என்ற வினா எழுப்பப்பட்டது. அதன் விடை.

சத்தியத்தின் சக்தி நிலைத்தொடர் கொண்டு, இந்நூல் வெளிவரும் சக்திக்கே செயல் கொண்டு செயலாக்கி, இதில் பதி வாகியுள்ள ஒவ்வொரு எழுத்திலுமே தன் செயலைப் பதிவாக்கிய நம் சங்கத்தின் தலைவர் எழுப்பும் வினாவிலே உள்ள வாதத் தன்மையைப் பார்த்திரா? காற்றுடன் நீர் இல்லாவிட்டால் அம் மண்டலத்தின் சுழற்சியில் ஒளியேது? பௌர்ணமியில் மௌன விரதம் பூண்டு, சந்திரனின் சக்தி நிலையை உம்முடன் கலக்கச் செய்ய அல்லவா உம்மை மௌன விரதம் இருக்கச் சொன்ன நிலை.

உயிரணு இல்லாவிட்டால் மண்டலத்திற்கு வளர்ச்சியேது? அம் மண்டலமே உருப்பெற உயிரணுக்களை உண்டல்லவா அதன் கழிவை உஷ்ண அலையாய் வெளிப்படுத்தி, அதன் வழியில் தொடர் கொண்டு, வளர்ச்சி கொண்டு வளர்கின்றது. பால்வெளி மண் டலத்தில் காற்றுமுண்டு, நீருமுண்டு, உயிரணுக்களுமுண்டு.

வானமாய்ப் பரந்துள்ள பால்வெளி மண்டலத்திற்கே ஜீவ னுண்டு என்ற நிலையில், சந்திரனுக்கு ஏனப்பா நீரும் உயிரணுவு மில்லையென்று விஞ்ஞானத்தில் செப்புகின்றனர்?

காற்றுடன் கலந்துள்ள ஜீவனை நீர் இல்லாவிட்டால் அம் மண்டலத்திற்கு சுழற்சி ஏது? அதிலிருந்து பௌர்ணமி நிலவாய்க் காண்கின்றோமே அவ்வொளியும் ஏது?

நம் பூமியைப் போல் அடர்ந்த கடல் நிலைகள் நிறைந்த நீர்நிலை இல்லை. நீர்நிலையிலிருந்து வெளிப்படும் அமில சக்தியி னால் இப்பூமி முழுவதுமே செயல் கொண்டு ஆங்காங்கு பெய் திடும் பருவ மழையினால் உண்டான நீர்நிலைகள், ஆறு, ஏரி, குளம், குட்டைகள் இப்படி உள்ள நீர்நிலைகளும் அங்கில்லை.

இன்று விஞ்ஞானத்தில், சந்திரனில் கண்டுபிடித்த நிலை போல் நம் சூரியனிலும் எந்நிலையில் நீர்நிலை உள்ளது? என்று உணர்த்தினரா?

இவ் வரப்போகும் மாற்றத்திலிருந்து, அடர்ந்த நீர்நிலைச் சக்தி சந்திரனுக்குக் கூடப் போகின்றது. நம் பூமியைப்போல் பருவ மழைகளைக் காணாத மண்டலம் அது. சந்திரனில் இன்றளவும் மழை பெய்ததில்லை. சந்திரனில் நீர் இல்லாவிட்டால் சந்திரனிலிருந்து தோண்டி எடுத்து வந்தார்களே அக்கல் எப்படி வளர்ந்தது?

பனியான நிலை என்றுமே சந்திரனுக்குண்டு. குளிர்ந்த மண்டலம் அது. அதன் சுற்றலில் பனித்துளி போன்ற நீர்நிலைகள் படிந்து அதன் கசிவில் உணர்ந்து பிறகும் அப்பனி நிலை தொடர்பு கொண்டு நசநசப்புத் தன்மையில் சுழன்றுகொண்டுள்ள குளிர்ந்த மண்டலம்தான் சந்திரனின் இன்றைய நிலை.

நம் பூமியில் கிணறுகள் தோண்டி நீரை எடுப்பதைப் போல் சந்திரனுக்கு சக்தி நிலையில்லை. நீர்நிலை அடர்ந்து உள்ள மண்டலத்தில்தான் அம் மண்டலத்துடன் கூடிய எந்த இடத்திலும் நீரைக் கண்டிட முடியும்.

நம் பூமியிலிருந்து சந்திரனின் ஈர்ப்பு சக்திதான் விண்கலத்தை ஏவி இம்மனித சுவாசத்தை அங்கு விட்டு வந்துள்ளானே அச்சுவாச நிலையின் வெக்கையில் தோன்றிடும் உயிரணுவிற்கு இப்பூமியில் இருந்து சென்ற சக்தி நிலைதானே வேண்டும்.

இதன் தொடர்பின் ஈர்ப்பு நிலைதான் இன்றைய பாட நிலையுமே.

**15-1-80**

இன்றைய பாட நிலை நேரத்தில் எம் சங்கத்தின் மூலமாய் வெளிப்படுத்திடும் நூலின் நிலைக்காக எம் சங்கத்தாருக்கு போதனை நிலையும், சில செயல்கள் செய்யும் நிலையும் உணர்த்தியதற்காகப் பாட நிலை தவிர்க்கப்பட்டது. தொடர் நிலை நாளை.

**16-1-80**

ஓடிக்கொண்டே உள்ள இம் மண்டலங்களின், ஒன்றின் ஈர்ப்பும் அதன் அமில சக்தியும் மற்றொன்றின் நிலைக்கு மோதுவதால், ஒன்றிலிருந்து ஒன்றுக்கு அவ் ஈர்ப்பின் சக்தி நிலை கூடுகின்றது.

அனைத்து மண்டலங்களுமே சுழன்றே ஓடிக்கொண்டுள்ளன. ஒன்றுக்கு உகந்த சக்தி மற்றொன்றுக்கில்லை. சூரியனை மையப் படுத்தி சுழன்றோடும் இந்த 48 மண்டலங்களுக்கும் தனித்தனித் தன்மையுண்டு. நம் பூமியில் இன்றுள்ள சப்த அலைகளும், சுவை யும் மற்ற இயற்கையில் தோன்றிடும் தாவரம், கனிவளம் இப்படிப் பல நிலைகள் வேறு மண்டலங்களில் மாற்றம் கொண் டுள்ளன.

நம் பூமியின் சக்தி நிலை போன்ற அதிக சக்தி கொண்ட மண்டலம் சூரியனை மையப்படுத்திச் சுழன்றிடும் இந்த 48 மண்ட லங்களுக்குமே இல்லை. நம் பூமிக்கு வியாழனிலிருந்து இன்று எப்படி நீர்நிலைகள் வந்திடும் சக்தி கிடைத்தது? வியாழனிலிருந்து அதன் சுழலும் வேகமும், சூரியனின் சுழலும் வேகத்திற்கும் இரண்டின் ஈர்ப்பில் ஏற்படும் நிலை அதன் நேர்நிலை கொண்ட நம் பூமிக்குக் கிடைக்கின்றது.

வியாழனின் நிலை இல்லாவிட்டால் நம் பூமிக்கு நீரில்லை. இதே நிலைபோல் செவ்வாயின் சக்தி நம் பூமிக்கு எந்நிலையில் பாய்கின்றது?

நம் பூமியிலிருந்து செவ்வாய் மண்டலமும், வியாழன் மண்ட லமும் காணுவதற்கு நட்சத்திர மண்டலம் போல் இன்றும் தெரிந்து கொண்டுள்ளன.

பல கோடி நட்சத்திரங்களில் ஒன்றாய்க் காண்கிறோம். செவ்வாயில் நிறைந்துள்ள சக்தி நம் பூமிக்கு சப்த அலைகளைப் பாய்ச்சும் சக்தி.

உம் சப்தமே வெளிவராத நிலைக்கான, காற்றில்லா அடைப் பில் இருந்தால் கேட்டிடுமா? அதைப்போல் பூமிக்கும் மையமான சூரியனுக்கும் இடைப்பட்ட நிலையிலுள்ள செவ்வாயின் நிலையினால், செவ்வாயின் சக்தியையும் நேர்படுத்தி நம் பூமி பெறுகிறது. அதே சமயம் சூரியனின் சக்தியினால் செவ்வாயின் சக்தியும் மோதுண்டு அதன் ஒளி அலையையும் நாம் பெறுகின்றோம்.

செவ்வாயின் சுழலும் தன்மை கொண்டு அதன் அமிலத் தன்மையும் சூரியன் ஈர்த்து வெளிப்படுத்தும் அமிலத் தன்மையும் கலவை பெறும் இடத்திலிருந்துதான் சப்த ஒலி பிறக்கின்றது.

இதே நிலைகொண்டு நம் பூமிக்குத் தொடர்பு கொண்ட சந்திரனின் ஈர்ப்பு நிலை, அமில நிலை வேறு. சந்திரனின் நிலை யில்லாவிட்டால் நாம் காணும் இவ்வண்ணங்களே இல்லை. பல சக்தியை நம் பூமி ஈர்த்து, நம் பூமியின் சக்தியை சந்திரன்

பெறுவதினால், சந்திரனுக்கும் நம் பூமிக்கும் அதிகத் தொடர்பு உள்ளதினால், நம் பூமியின் நிலையைக் காட்டிலும் சந்திர மண்டலம் உருவில் சிறிதாகவும் அதே நிலையில் பல சக்திகளைத் தன்னுள் அடக்கிய, வளரும் தருவாயில் உள்ள மண்டலம்.

இம் மாற்ற நிலையினால் சந்திரனுக்கு சப்த அலையும், இன்று ஒரே நிலையில் இரவு பகல் என்ற மாறுபட்ட குண நிலை பெறாமல் சுழன்றிடும் சந்திர மண்டலத்தில் இந்நீர்நிலை, சப்த ஒளியின் நிலையும் ஏற்பட்ட பிறகுதான், பல வளர்ச்சி நிலை ஏற்பட்டு, பல நட்சத்திர மண்டலங்களின் ஈர்ப்பு சக்தியையும் சந்திரன் பெற்ற பிறகுதான், அதன் வளர்ச்சியில் ஊரும் உயிரினங்கள் உள்ள சந்திரனின் தன்மையே, ஜீவ உடல் கொண்ட உயிராத் மாக்கள் தோன்றிடும் காலம் வரும்.

வரப்போகும் இக் கிரகண கால நிலைக்குப் பிறகு நம் சூரிய கிரகமுடன் பல நிலைகள் மாற்றம் கொண்டு நடக்கப் போகின்றது. சூரிய கிரகணம், சூரிய கிரகணம் என்று பல முறை கிரகணம் பிடிக்கின்றது சூரியனை.

ஒவ்வொரு நிலையிலும், இதனால் சூரியனுக்கும், சூரியனை நேர்கொண்டு எம்மண்டலத்தை எக்கிரகணம் தாண்டிச் செல் கின்றதோ அம்மண்டலத்திற்கும் பல மாற்றங்கள் ஏற்படுகின்றன. தொடர் நிலை நாளை.

**17-1-80**

வட்டமிட்டுக்கொண்டே உள்ள இம்மண்டலங்களும், நட்சத்திர மண்டலங்களும், இப் பால்வெளி மண்டலத்தில் வளர்ச்சி கொண்டுள்ள சில நிலைகளும் ஒன்றைத் தாண்டி ஒன்று ஓடும் நிலைக்கும் ஜீவன் வேண்டும்.

அதேபோல் உஷ்ண அலைகளைக் கொண்ட நிலையில்தான், அதததற்கு உயிர்த் துடிப்பே வருகிறது. அதி உஷ்ணத்தை எதுவும் ஏற்பதில்லை. அதி குளிர்ச்சி, பனிக்கட்டி போன்ற நிலையிலும், தாவர வளர்ச்சி வளர்வதில்லை.

இன்று நம் பூமியின் நிலை, எந்நிலையில் அது சுழலும் தன்மை கொண்டு, காற்று மண்டல வட்டத்திற்கு மேல் உஷ்ண அலைகளை, நம் பூமி வெளிப்படுத்துகிறதோ, அந்நிலையில்தான் ஒவ்வொரு கோளங்களுக்கும், அதன் சுழற்சியில் காற்று மண்டலமும், அம் மண்டலம் கக்கும் உஷ்ண அலையும் செயல் கொள்கிறது.

இம்மனித உடலுக்கும் ஒவ்வொரு ஜீவனுக்கும் அதனைச் சுற்றி சப்த அலையுண்டு. சப்த அலைக்குச் சிறிது தள்ளி

உஷ்ண அலையுமுண்டு. எல்லா ஜீவன்களுக்குமே இந்நிலையுண்டு. மனிதனின் உடல் வெப்ப நிலையும், அம்மனிதனைச் சுற்றியுள்ள சப்த அலையின் வெப்பக் காற்றும் ஒன்றாய்த்தான் இருந்திடும்.

தாவரங்களுக்கும் இந்நிலையுண்டு. இதைப்போல் இவ்வுலகம், மற்ற எல்லா மண்டலங்களுக்குமே இந்நிலை கொண்ட உஷ்ண அலைகள் உண்டு.

சந்திரனின் நிலை குளிர்ந்த நிலை என்றுணர்த்தினேன். ஒவ்வொன்றிற்கும் அதனதன் சுழலும் வேகம் கொண்டு இவ்வுஷ்ண அலைகள் மாறுபடுகின்றன. இவ்வுஷ்ண அலை கக்கும் நிலையே, எம் மண்டலத்திற்கும், ஓர் இடத்தில் இருக்கும் நிலை மற்றோர் இடத்தில் இருந்திடாது. எல்லா ஜீவராசிகள், தாவரங்களின் நிலைக்கும் இந்நிலையுண்டு. அது போல் சூரிய மண்டலத்திற்கு இன்று சென்றிட முடியாது, உஷ்ணக் கோளம் என்று விஞ்ஞானத்தில் உணர்த்துகின்றனர். தொடர் நாளை.

**18-1-80**

சூரியனின் கோளம் பெரியது. அதில் நிறைந்துள்ள அமில சக்தியின் தன்மையும், எம் மோதும் அமிலத்தையும் தன்னுள் ஈர்க்கும் நிலையுடையது. உருவ நிலையிலும் வளர்ந்து கொண்டே சுழன்று ஓடும் பெரிய மண்டலமாம் நம் சூரிய மண்டலம்.

முந்தைய ஆராய்ச்சியில், சூரியன் மையம் கொண்டு ஒரே இடத்தில் சுழன்றுகொண்டுள்ளதாகவும், அதனைச் சுற்றியுள்ள சூரிய குழந்தைகள்தான் அதனைச் சுற்றி ஓடுவதாகவும் உணர்த்தினர். சூரியனின், யாமறிந்த உண்மை நிலை, அது தன்னைத்தானே சுற்றி ஓடிக்கொண்டு, அதன் ஈர்ப்பில் உள்ள இந்த 47 மண்டலங்களையும் தன்னுடனே, தன் ஈர்ப்பில் அது அது சுழன்று கொண்டும் ஓடிக்கொண்டே உள்ளன.

இவ்வண்டமும், மற்ற எல்லா அண்டங்களுமே ஓடிக்கொண்டேதான் உள்ளன. எதுவும் நிற்பதில்லை, ஒரு நிலையில். ஜீவன் பெற்று திடப்பொருள் கொண்ட பிறகுதான் ஓடும் நிலை ஒவ்வொன்றிற்கும் வருகின்றது.

இம்மனித மண்டலமே ஓடிக்கொண்டேதான் உள்ளது. பிம்ப உடல்தான் ஒரு நிலையில் எண்ணம் கொண்டு, செயல் கொள்கிறது. மனித மண்டலத்திற்குள்ள எல்லா அவயவங்களுமே தன்னிச்சை நிலையில் செயல்பட்டுக்கொண்டேதான் உள்ளன.

இதேபோல் ஜீவனுள்ள எல்லா ஜீவராசிகளும், மண், கல், நீர் அனைத்திற்குமே இச் ஜீவத் துடிப்பின் ஓட்டம் இருந்துகொண்டே

உள்ளன. பல ஆராய்ச்சிகளைச் செய்விக்கின்றனர். மனிதனுக்கும், மற்ற ஜீவராசிகளுக்கும் உயிர்த் துடிப்பு நிலையை உணருகின்றனர். ஆனால் கல்லிற்கும் மண்ணிற்கும் உயிர்த்துடிப்பும் ஜீவனும் உண்டு. ஜீவனில்லாவிட்டால் கல்லிற்கும் மண்ணிற்கும் வளர்ச்சியில்லை.

அதற்குகந்த உஷ்ண அலையுமுண்டு. மண்ணாய் உள்ள நிலையிலிருந்து மணலாகி, உருண்டு கல்லாகி, பெரும் பாறையாய் உருப் பெறுகிறது. அந்தந்தப் பூமியின் நிலைக்கொப்ப மண்ணின் நிறங்கள் மாற்றம் கொள்கிறதல்லவா? நீர்நிலைகள் பாய்ந்து வரும் வேகத்தில், எவ்விடத்தில் அந்நதி உற்பத்தியாய் பாய்ந்து வந்தாலும், அந்தந்த நிலைக்கொப்ப பூமியின் மேல் படும்பொழுது, அப்பூமியின் சுவை-குணத்தை ஈர்த்தே ஓடுகிறது. இந் நீருக்கு ஜீவன் பூமியின் நிலையிலிருந்து பெற்று ஓடுகிறது. நம் பூமியிலேயே பல பாகத்தில் பல நிலைகளுண்டு. ஒன்றின் கலப்புடன்தான் தொடர் நிலைகொண்ட அமில சக்தியை வளர்த்த நிலைகொண்டு வாழ்கின்றது நம் பூமியே.

நம் பூமியிலிருந்து வெளிப்படும் மணம் ரம்மியமான, ஆனந்தமான மணமாய்ப் பரிமளித்த காலம் ஒன்றிருந்தது.

இன்று நம் பூமியின் மணமே மாறுகொண்டுவிட்டது. இந் நிலையில் விஷத்தன்மை பரவிடும் நிலையும் வந்துள்ளது. பல காலம் வாழ்ந்த பெரியோர்கள் இம் மணத்தின் மாறுபட்ட நிலையை அறிவர்.

நம் பூமியில் உறையும் தன்மை, உப்புக் கலந்ததாய் உள்ளதினால், கரையும் நிலையும் துரிதமாய்ச் செயல் கொள்கின்றது. நம் பூமியைக் காட்டிலும் சூரியனின் சக்தி மிகவும் அதிகம் கொண்டது. சூரியனின் நிலைத்தன்மையை முன் பாடத்திலேயே உணர்த்தியுள்ளேன்.

இன்று சூரியனுக்குச் செல்லவும் முடியும். சூட்சுமத்தில் மட்டுமல்ல விஞ்ஞானத்தாராலும் சூரியனுக்குச் சென்றிடலாம். நம் பூமிக்கும், நம் பூமியைக் காட்டிலும் சிறிய மண்டலமான சந்திரனுக்கும் உஷ்ண அலையை ஆராய்ந்து, நம் பூமியிலிருந்து காற்று மண்டலத்தைத் தாண்டி, உஷ்ண அலைப்பகுதியைத் தாண்டி அதைப் போலவே சந்திரனுக்குச் செல்லும் ஏவுகணையை அனுப்பி உள்ளார்கள்.

நம் பூமியில் இருந்து இக்காற்று மண்டலத்தைத் தாண்டி, உஷ்ண அலை மண்டலத்தைத் தாண்டி, பிறகு இவர்களுக்கு வேறு

செலவினங்கள் இல்லாமல், எவ்அலையை வைத்து சந்திரனின் உஷ்ண அலைவரை தானுகவே இவ் ஏவுகணை ஓடுகின்றது? இவ் உஷ்ண அலை மண்டலம் (சந்திரனுக்குச் சொந்தமானது) வந்த பிறகுதான், இவர்கள் ஏவுகணையை இயக்கச் செய்யும் சாதனத் தின் ஜீவன் செயல் திறன் கொள்கின்றது.

பொதுவானது பால்வெளி மண்டலத்தின் உஷ்ண அலை. இந்நிலை இருக்க நம் பூமியிலிருந்து சந்திரனுக்கு ஏவுகணையை அனுப்பியவர்கள், நம் சூரிய மண்டலத்திற்கு, நமக்கு அருகாமை யிலுள்ள மண்டலத்திற்கு அருகில் சென்று, இவர்கள் விஞ் ஞானத்தை ஏன் செயலாக்கவில்லை? நம் பூமியைக் காட்டிலும் இரண்டு மடங்கு சுழற்சி சக்தி கொண்டது. இங்கு ஒரு நாள் 24 மணி நேரம்; அங்கு 12 மணி நேர விகித நிலையில் தன்னைத் தானே சுழன்று ஓடுகிறது.

விகித நிலை என்பது கூட அதன் சுழலும் சக்தி கொண்டு யாமறிந்த நிலைதானே ஒழிய, அதற்கு இரவு பகல் என்ற மாறுபட்ட நிலையில்லை. அதைச் சுற்றி ஓடும் 47 மண்டலங்களின் ஈர்ப்பின் சக்தியையும் தன்னுள் ஈர்த்து வெளிப்படுத்திச் சுழன்றிடும் நிலையில் அதன் உஷ்ண அலையின் (47 மண்டலங்களின்) நிலை பெற்றுச் சுழலுகின்றது.

இந்த 47 மண்டலமுமே சூரியனைச் சுற்றி வட்டமாய்த் துரித கதியில் ஓடவில்லை. இவற்றிலுமே ஒன்றின் ஈர்ப்பில் ஒன்று பங்கு பெற்று அச் சக்தியின் அமிலத்தொடர் அதற்குச் சென்றடை கிறது. உதாரணமாய்:—

இங்கு இந்நிலையில் காட்டியுள்ள நிலைப்படுத்தி, இம்மண்ட லங்களின் தன்மை உள்ளது. இதற்கும் தாண்டிய நிலையில் இவ் ஆறு மண்டலம் அல்லாமல் 48 மண்டலத்திலேயே பாக்கியுள்ள மண்டலங்கள் இதற்கும் சிறியவை. உஷ்ண அலைகளைக் குறைவாய்ப் பெற்றுள்ள மண்டலங்கள். இவர்கள் நாமகரணத்தில் உள்ள சனி மண்டலத்திற்குக் குளிரும் நிலை அதிகம். உறையும் தன்மை கொண்ட அமிலத்தை வளர்த்துள்ள மண்டலம் சனி மண்டலம்.

சனியின் நிலையில் இவ்வமில சக்தி நிறைந்துள்ளதினுல் அது சுழலும் நிலைகொண்டு அதன் பக்கத்திற்கு இப் பெரிய மண்ட லம் செல்லும் காலங்களில், அதன் அமில நிலையின் சக்தி இவற் றிற்கு அதிகமாய்க் கிடைக்கின்றது. நம் பூமியில் இக்கால நிலை மாற்றம்கொண்டு கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில் குளிர் அதிகமாய்க் கிடைக்கப் பெறுவதுவும், நம் பூமி சனியின் கோளத் திற்கு அதன் ஈர்ப்பின் நிலையில் வரும் கால நிலையில்தான், இக் குளிர் அமில சக்தியும் நம் பூமிக்கும் கூடுகின்றது.

இதைப்போல்தான் பங்குனி, சித்திரை மாதங்களில் கடும் வெயிலைக் காணுகின்றோம். சூரியனின் உஷ்ண அலையுடன் நமக்கு அருகாமையில், நம் பூமியின் ஈர்ப்பிற்கு ராகுவின் நிலைக்குச் செல்கின்றது.

ஒரு வருடத்திற்குள் சூரியனை மையப்படுத்தி ஓடிடும் நிலையில் நம் மண்டலத்துடன் ஈர்ப்பிற்கு வரும் இந்த 48 மண்டலங்களின் தொடர்பைக் கொண்டு நம் பூமிக்குக் கால நிலை உருவாகிறது.

அதைப் போன்றே ஒவ்வொரு மண்டலத்திற்குமே இக் கால நிலையும் செயல்படுகிறது. தொடர்நிலை நாளை.

**19-1-80**

சௌண்டம்மன் பண்டிகை காணச் சேலம் சென்றதால் பாடம் தவிர்க்கப்பட்டது.

**20-1-80**

ஒன்றின் ஈர்ப்பில் ஒன்று சிக்குண்டு ஓடும் நிலையில், ஒவ்வொன்றிற்கும் அதற்குகந்த ஈர்ப்புத் தன்மையுடன் ஓடுகின்றது. சூரியனை மையம் கொண்டு ஏழு பெரிய கோளங்கள் உள்ளன. இவ் ஏழின் ஈர்ப்பில், இவ் ஏழிற்கும் தாண்டிய நிலையில், இவ் ஏழிற்கும் சிறிய கோளங்கள், 48 மண்டலத்தில், சூரியனும், நம் பூமியைச் சேர்த்து ஏழு கோளமும், இவ் எட்டும் போக, பாக்கி நாற்பது கோளங்களும், இவ் ஏழின் ஈர்ப்புடனே சுழலுகின்றன.

ஒவ்வொன்றின் அமில சக்தியும் மாறுகொண்டுள்ளது. சூரியனை மையப்படுத்தி, அதன் ஈர்ப்பின் வட்டத்துக்குள் வந்துள்ள மண்டலங்கள்தான், இந் நாற்பத்தி ஏழும். அவற்றிற்கு, இச் சிறிய கோளங்களுக்கு, நம் இன்றைய விஞ்ஞானிகள் நாமகரணம் சூட்டவில்லை. தெய்வீக அருள் நெறியில், சித்தர்களினுல் உணரப்பெற்று, அவர்கள் இட்ட நாமகரணங்கள் இவற்றுக்கு உண்டு.

ராகுவும், கேதுவும், சுக்கிரனும், சனியும், குருவும் இவர்கள் பிடியில் சிக்குண்ட மண்டலங்கள். மற்ற மண்டலங்களை நட்சத்திர மண்டலமாக்கி அதன் நாமகரணத்தைச் சூட்டினுர்கள். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், நம் சித்தர்களால் இயற்றப்பட்ட, எண்ணத்தில் பதிவு செய்த, இக்கோளங்களின் நிலையே பல நிலையில் உருமாறி, வெளி உலகிற்குச் செப்பிடும் நிலையே அற்றுவிட்டது. அக்காலத்தில் எழுத்து வடிவங்களோ, கற்பாறையில், ஓலைகளில் உணர்த்தச் செய்யும் வழி முறையோ இல்லை.

சித்தர்களால் மனித ஆத்மாவுக்கு வளர்ச்சியூட்டி, அவ் வளர்ச்சியின் தொடரில், இவ்வுலக மனித ஆத்மாக்கள் வளர்ந்த நிலையில், சிறுகச் சிறுகத்தான் இவ்வாத்மாக்களின் அறிவு வளர்ச் சியைப் பெருகச் செய்து, அதன் வழித்தொடரில் எண்ணத் தைப் பதித்திடும் நிலை வந்தது.

அதற்குப் பிற்பட்ட பல ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு தான் இப்பதிவு செய்யும் எழுத்து நிலையே உதயம் பெற்று, செயலாக்கிட முடிந்தது.

இந்நிலை வளர்வதற்குள், மனித ஆத்மாவின் அறிவு நிலை வளர்வதற்குள், மண்டலங்களின் வளர்ச்சி நிலை பெருகிவிட்டது. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் அன்றுணர்த்திய சித்தர்களின் சக்தி நிலைக்கும், இன்றைய இயற்கையின் சக்தி நிலைக்குமே பெரும் மாற்றம் உள்ளது.

ஒவ்வொரு கோளமுமே அதன் ஈர்ப்பில் பல சக்திகளைச் சேர்த்துக் கொள்கின்றது. சில நாட்களில் சந்திர மண்டலத்திற்கு அருகாமையில் நட்சத்திர மண்டலங்களைக் காண்பீர்கள். ஒரு நாள் காணும் நிலை மற்றொரு நாளும் காண முடிந்திடாது. அதன் ஈர்ப்பில் சிக்குண்டு அதன் செயலுடன், ஆவியான அமிலமாய்ச் செயல் கொண்டாலும், செயல் கொண்டிடும் இதன் ஓட்டத்தினால், இதன் வேக நிலை கொண்டு, சந்திரனின் ஈர்ப்பில் சிக்காமலும் தப்பிவிடும்.

நம் பூமியே ஒவ்வொரு நாளும் பல நட்சத்திர மண்டலத்தைத் தன்னுள் ஈர்த்தே சுழன்று ஓடுகிறது. சில நாட்களில் வானத்தில் எரிநட்சத்திரமாய் எரிந்து விழுவதைப்போல் காண்பீர்கள்.

சுழற்சியில் சிக்கி ஆவியான அமிலமாய் நம் பூமியின் ஈர்ப்பில் பல நட்சத்திர மண்டலங்கள் கலப்பதைப் போல் ஒவ்வொரு மண்டலத்திலும் அதற்குகந்த அமில சக்தியுடைய மண்டலங்கள் கலக்கின்றன.

வளர்ச்சியும் பல கொள்கின்றன. சில நாட்களில் வான மண்டலத்தில் நம் பார்வைக்கு மிக அதிகமான நட்சத்திர மண்டலங்கள் தெரிவதைக் காண்பீர்கள். சில நாட்களில் ஒன்றிரண்டு காண்பது கூட அரிதாக இருந்திடும்.

இம் மண்டலங்களின் ஈர்ப்பிலும், நம் பூமி ஓடும் நிலையில், நாம் சந்திக்கும் நிலை கொண்டு நிகழ்பவைதான் இவையெல்லாம். எம் மண்டலமும் ஓர் இடத்தில் இருந்து சுழல்வதில்லை. ஓடிக்

கொண்டே உள்ள நிலையில், நம் பூமி காணும் நிலைகொண்டு தெரிபவைதான் இந் நட்சத்திர மண்டலங்களெல்லாம்.

நம் பூமி ஓடும் நிலையில், நம் பூமியின் ஈர்ப்புடனும், பூமியில் சிக்காமலும், நம் பூமியுடனே ஓடி வரும் நட்சத்திர மண்டலங்களும் பல உள்ளன. அங்கங்கு நம் பூமியின் ஓட்டத் துரித நிலையுடன் ஓட முடியாத, குறுகிய ஓட்ட நிலை கொண்ட நட்சத்திர மண்டலங்களும் பல உள்ளன.

எண்ணிலடங்கா இயற்கையின் பொக்கிஷ ஆதி மூலத்தை அறிந்திட, அவ்வாதி சக்தியின் சக்திக்குத் தானப்பா செயல் சக்தியுண்டு.

சக்தியின் செயல் வேண்டியே நாம் அறிந்தே எழுத்தின் வடிவிற்கு வருவோம்.

**21-1-80**

எழுத்தின் வடிவமைக்கும் அறிவு சக்தி வளர்ந்தே நம் ஆத்மாவின் சக்தியையே, எச் சக்திக்கும் நம் சக்தியைச் செயலாக்கிட முடியும் என்ற வளர்ப்பு எண்ணம் கொண்டு, நம் எண்ணத்தையே சகல சித்து நிலைகளை அறிந்திடும் பக்குவப் படுத்தியே, நம் செயல் இருந்திட வேண்டும்.

நம் எண்ண சக்தியைச் செயலாக்கிட எந்நிலைக்கும் நம்மை அடிமைப்படுத்திடாமல் இவ்வுலகில், இம்மனித ஆத்மாக்களினால் காலம் காலமாய் அடிமை கொண்ட ஜாதி வேறுபாட்டில் சிக்குண்டு இருந்திடாமலும், ஆண்டவனை ரூபப்படுத்தி, தான் வாழ, பிறரை ஏமாற்றும் நிலையில் சிக்கிடாமலும், எண்ணத்தையே சூதாக்கி, பிறரை வஞ்சிக்கும் எண்ணக் கடலில் அமிழ்ந்திடாமலும், நம் ஆத்ம பொக்கிஷத்தைப் பிற சூனிய நிலையில் மாட்டிக் கொள்ளாமலும், செயல் கொண்டு எண்ணத்தையே ஜெபமாக்கித் தப்பும் வழியை, நாம் அறிந்து வாழ்ந்திடல் வேண்டும்.

இவ்வுலகினில் பில்லி சூனியம், ஏவல், மையிடுதல், கருவித்தை இப்படிப் பல நிலைகள் உள்ளன. இவற்றிலிருந்து நம் நிலை மீளும் நிலையை அறிந்திடல் வேண்டும். பல காலமாய் சூனியம் செய்தவர்களின் நிலையையும், மற்றத் தீய சக்தியின் செயலைத் தன் பிழைப்பிற்காக ஏவியதின் நிலையையும் வரும் பாடங்களில் உணர்த்திடுவேன்.

**22-1-80**

மலைப்பிரதேசங்களில் வாழ்ந்திடும் மந்திரவாதிகள், பல மண்டை ஓடுகளை வைத்துப் பூஜிப்பர். அதுவும் அல்லாமல் அம்

மண்டை ஓட்டின் சொந்தம் கொண்ட உடலின் நிலையிலிருந்து, மை எடுத்து, அதனையும் இம்மண்டை ஓட்டையும் வைத்து, பூஜித்து இம்மையை யார் யாருக்கெல்லாம் தாயத்துகளாய்த் தரு கின்றார்களோ, அவர்களின் நிலையும், மந்திரவாதியின் நிலைக்கும் தொடர்பு பட்டு, சில நிலைகளை அறிந்திடத்தான் இவர்கள் பூஜை யில் அம் மண்டை ஓட்டை வைப்பது.

இவர்கள் மை தயாரிப்பது எந்நிலையில்? மயானத்தில், அர்த்த ஜாமத்தில், சில உடல்களை, கூடிய வரை கருச் சிசுக்களைத் தான் (இறந்த சிசுக்களை) இவர்கள் தேர்ந்தெடுப்பார்கள். வளர்ந்து ஆசைப்பட்டு, குடும்பப் பற்றுடன் நீத்தாரின் உடல்கள் இவர்கள் செயலுக்கு, செயல்பட்டு வராது.

அவர்களின் ஆத்ம எண்ணமே, தன் குடும்ப நிலையில் சுற்றிக் கொண்டிருக்கும். அதனால்தான், இக்கரு வித்தை மந்திரவாதிகள் எல்லாரும், தாயின் கர்ப்பத்தில் தோன்றும் முதல் சிசுவை, அது இறந்துவிட்டால் (தலைச்சன்), அதனுடைய உடலைப் புதைத்துச் சென்ற பிறகு, அதைத் தோண்டியெடுத்து, இவர்களின் செயலுக் காக அவ்வுடலை ஈடுபடுத்துகின்றனர்.

நம் மூதாதையர் காலத்தில், முதல் தலைச்சன் சிசு காலமா னால் அதன் உடலை சிறிது பின்னப்படுத்தித்தான் அடக்கம் செய்வார்கள். பின்னப்படுத்திய அச் சிறு சதையை இவர்கள் தாயத்தாக்கி பூஜிப்பார்கள்.

அந்நிலையில், அச் சிசுவின் ஆவி இங்கு செயல்கொள்ளும் ஏவலின் நிலைக்கு ஒத்து வராது. இப் பின்னப்படா இறந்த சிசுவை எடுத்துச் சென்று, பெரிய மண் பானையில் அச் சிசுவின் உடலை இட்டு, அப்பானைக்கும் கீழ் இரண்டொரு பானைகளை வைத்து, பெரும் நெருப்பிட்டு எரியவிட்டு, கீழ் எரியும் நிலையி லிருந்து மேல் பானைக்கு அவ்வுஷ்ணம் பட்டு, அச் சிசுவின் உடலில் இருந்து கசியும், அதன் அமில நீர் சக்தி எல்லாம் எரிய எரிய வடிந்து, இக் கீழ்ப் பானையில் மெழுகு போன்ற மை பதத்தில் ஒட்டிக் கொள்ளும்.

சிசுவை இட்டுள்ள பானைகளில் துவாரம் வைத்திருப்பார்கள். இச் சிசுவின் மைக்கு வேண்டிய அமில நீர் சக்தியெல்லாம் ஈர்த்த பிறகு, அச் சிசுவின் சக்கை உடலை அதே நெருப்பிலிட்டு, அதன் அவயவங்களையும் சேகரித்து, அதன் அவயவத்தை வெந்த நிலையில் வைத்து, மண்டை ஓடுகளுடன் அங்கங்களையும் சேர்த்துப் பூஜிப்பார்கள்.

இவ்வழில நீரில், அவ்வுடலின் வெந்த சாம்பலையும் சேர்த்து மைப்போல் மசிய வைத்து, பூஜித்து, இப் பில்லி, சூனியம், ஏவல், மையிடுதல் போன்ற நிலைக்கெல்லாம், இச் சிசுவின் நிலையை ஏவு வார்கள்.

இக்கருப்பு நிறம் கொண்ட இம் மையையே தன் நெற்றியில் இட்டுக் கொண்டும், தாயத்துக்கள் செய்து, இம்மையை அதனில் வைத்து, தன் உடலிலும் அணிந்து கொள்வார்கள்.

இவர்களின் பொருளாசைக்குகந்த நிலைப்படுத்திட இக் குட்டிச்சாத்தானை ஏவுவார்கள். ஒவ்வொரு மந்திரவாதியும் ஒரு சிசுவிலிருந்து மட்டும் தன் ஏவலைச் செயல்படுத்துவதில்லை. பல சிசுக்களையும் இந்நிலையில் செயல்படுத்துகின்றார்கள்.

இவர்கள் ஏவிய நிலைக்கெல்லாம் அக் குட்டிச்சாத்தான்கள், ஆவி உருவில் சென்று, பல உண்மைகளை அறிந்து வரும்.

மாரியம்மாள், காளியம்மாள் என்று மனிதர்கள் மத்தியில் இச்சக்தியின் நாமத்தைச் செப்பியே, பேய் ஓட்டுவதைப் போலவும், மாரியாத்தா ஆடு கேட்கிறாள், கோழி, முட்டை கேட்கின்றாள் என்றெல்லாம் சொல்லி இக் குட்டிச்சாத்தான்களின் ஆசைக்கு உகந்த உணவுகளைப் படைத்து, இவர்களின் செயலை முடித்துக் கொள்கின்றனர்.

இன்னும் குருவி ஜோதிடம், எலி, அணில் இப்படிப் பல நிலைகளைச் செப்புவது எந்நிலை கொண்டு? என்பதனை நாளையே விளக்கிடுவேன்.

**23-1-80**

இவை எல்லாமே இக்கரு வித்தையின் செயல்தான். அப் பிராணிகளின் உடலில் இக் கருவின் மையை ஏற்றிவிடுவார்கள். அந்நிலையில், இவர்கள் சொல்லும் பெயர் நாமத்தைக் கேட்டு, இப்பிராணிகளை வைத்து ஜோதிடம் செப்பிடும் நிலையில் உள்ள வர்களுக்கு, அவரின் பழக்கப்பட்ட பரிபாஷைகள் இப் பிராணி களுக்குத் தெரிந்திடும்.

இப் பிராணியின் உடலிலுள்ள இக் குட்டிச்சாத்தான்தான், நாமகரணத்திற்குகந்த, செயல் கொண்ட எந்நிலை பெற்ற குண நிலைக்குகந்த ஏடுகளை ஓதிட வேண்டுமோ, அதனையே சரியாக எடுத்துத் தரும், இவர்கள் மன நிலைக்குகந்த சொல்வாக்கே அதி லும் காணப்படும்.

அவ்வெண்ணமுடனே இவர்கள் செயல்பட்டால், அதன் தொடர்ச்சி நிலையில்தான், அவர்களின் வாழ்க்கை நிலையும்

இருந்திடும். இவ் உலகினில் பல பாகங்களில் இச்சூனிய வேலை நடக்கின்றது. பிறரைத் தன் வசியப்படுத்தவே இக்கரு வித்தை வேலையெல்லாம் செய்யப்படுகின்றன. ஆவியின் தொடர்புபடுத்தி தன் உடலிலேயே பல ஆவிகளை, துர் ஆவிகளை ஏற்றிக்கொண்டு, அதனை ஏவி சூனியம் செய்வார்கள். சூனியத்திற்கு அடிமைப் பட்டவன், அச் சூனியத்தினுலேதான், அவனுடைய ஆத்மாவும் பிரியும்.

பிற இடத்தில் ஜெபம் செய்து பல பொருட்களை வைத்து விட்டு,இக்குட்டிசாத்தானின் தொடர்புடைய நாமத்தை இவர்கள் இருக்கும் இடத்திலிருந்து ஜெபித்தால், அவ்வாவியான குட்டிச் சாத்தானே, அப்பொருளை இவர்கள் வா என்றவுடன், இவர்களின் கையில் அப்பொருள் கிடைக்கும் நிலையில், அக்குட்டிச்சாத்தான் செய்து தரும்.

இவர்கள் வைத்த பொருள்தான் அங்கிருந்து வருமே ஒழிய, ஆகாயத்தில் இருந்து ஆண்டவனுல் செய்விக்கப்பெற்ற உருவச் சிலையோ, விபூதியோ, புஷ்பமோ எவையுமே இவர்களிடத்திற்கு மாறுபட்டு வராது.

இந்நிலையிலுள்ள எச்சாமியார்கள் ஆகட்டும், மந்திரவாதி களாகட்டும், அவர்களால் மக்களை ஏமாற்றிடும் இச் செயலுக்கு வருந்தி நல்வழி பெற்று, தன் புகழ் உயர, தன் நாமத்தினுல் பொருளீட்டி இச் செயலையெல்லாம் செய்வித்து மக்களை மட்டும் அவர்கள் ஏமாற்றவில்லை, தன் ஆத்மாவையே, தானே ஏமாற்றி வாழ்கின்முர்கள்.

சொந்தமில்லா இவ்வுடலின் வாழ்க்கை, எத்தனை நாட் களுக்குச் சொந்தம்? இருக்கும் ஒரே சொந்தம், நம் ஆத்ம சக்தியை இயற்கை என்னும் சொந்தமுடன் சொந்தமாக்கி, நம் ஆத்மாண்ட வனை நல்வழியில் செயலாக்குவதை விட்டு, சாமியார்கள் என்ற நாமத்தில் ஏன் ஆண்டவனின் நாமத்தையே அடிமைப்படுத்திடல் வேண்டும்?

இன்று மக்களுக்கு ஏற்பட்டுள்ள மூட நம்பிக்கையின் வித்தே இச்சூனியக்காரர்களினுல் வந்த நிலைதான். நம் பூமியில், நாம் வாழும் இக்கண்டத்தில், நம்மையறியாமலே, நம்மில் பலர் இதற்கு அடிமை கொண்டு வாழ்கின்றனர்.

நமக்கும் மேல் சினுவிலும், ஜப்பானிலும், இன்னும் சில ஆப்பிரிக்கக் கண்டங்களிலும், அரேபிய நாடுகளிலும் இந்நிலை அதிகம். ஒவ்வோர் இடத்திலும் வாழும் மனிதர்களின் எண்ண

நிலைக்கொப்ப அங்கு வாழும் கருவித்தை வேலைகளும் நடக்கின்றன.

நம் பூமியில், இவ் இந்திய தேசத்தில்தான், பல ரிஷிகள் சப்தரிஷி பெறும் நிலையெய்திட வாழ்ந்த பூமி இது. அவர்களின் எண்ண ஓட்டமும் (சப்த அலைகள்) அவர்கள் விட்ட சுவாசத்தின் சப்த அலையையும் தாங்கி வாழும் நிலைதான் இப் பூமியின் நிலை. இக் கரு வித்தையின் குட்டிச்சாத்தான் ஏவலில் உள்ளவர்கள் இதையுணர்ந்து நல் ஆத்மாவாய் இப்பொருள் என்னும் பேய்க்கு அடிமைப்படாமல் வாழ்ந்திட வேண்டும்.

**24-1-80 முதல் 26-1-80**

எங்களின் ஜெப நிலையில் ஸ்ரீ வேணுகோபால சுவாமிகளின் அருளினால் அவரின் குருவின் வாக்கை ஈர்த்து நாங்கள் வெளியிட்ட சத்தியத்தின் சக்தி நிலை நூல் வெளியிடும் விழாவிற்காக எம் சங்கத்தார் அனைவரும் சென்று விட்டதினால் இம் மூன்று நாட்களும் அவரின் அருளுரைகள் இந்நூலுக்கு வரவில்லை.

**27-1-80**

ஏவல், குட்டிச்சாத்தான், மையிட்டு மந்திரம் செய்து பிறரை வசப்படுத்தி, நம் ஆத்மாவை நாம் இந்நிலையிலிருந்து செயல்படாவண்ணம் நம்மைக் காத்திடும் நிலையை அறிந்து வாழ்ந்திடல் வேண்டும். அழியா சக்தியுள்ள நம் சக்தியை—நம்முள் ஊன்றியுள்ள நம் சக்தியை—பல எண்ணங்களின் நிலையிலிருந்து காத்திடல் வேண்டும்.

சோதனை கொண்ட காலங்களில் சோர்வு நிலைகொண்டு முடங்கிடலாகாது. இவ் ஏவல்களின் தன்மையெல்லாம் சோர்ந்தவர்களை அதி விரைவில் அண்டிக்கொள்ளும். இத்துர் ஆவிகள் நடமாட்டத்தைப் பல மிருக ஜெந்துக்கள் எப்படி உணர்கின்றன?

ஏவலும் சூனியமும் மிருக ஜெந்திற்குச் செயல் கொள்ளாது. அதன் உடலிலேயே உணரும் தன்மை கலந்துள்ளது. இச் சுவாச சக்தி நாய்க்கு அதிகம். புலிக்குப் பார்வையிலேயே கண்டிடும் சக்தியுண்டு.

இவ் ஏவலின் நடமாட்டமுள்ள இடங்களையெல்லாம், இவற்றை யறியும் தன்மை கொண்ட மிருகங்கள் உணர்ந்துவிடும்.

முந்தைய காலங்களில் வீடுகளில் நாய், பூனை இவற்றைத் திருடர்களிடமிருந்து காப்பதற்காக மட்டும் வளர்க்கவில்லை. துர் ஆவிகளிடமிருந்து, அவற்றின் ஏவல் இல்லங்களில் உட்சென்று செயல்படாமல் காக்கவும் இம் மிருகங்களை வளர்த்தனர்.

ஏவல்காரனையும், குட்டிச்சாத்தான் செயல் உடையவனை யும் கண்டால் இந்நாய், நரி, பூனைகள் குரைத்து, சப்தமிட்டு உணர்த்திவிடும்.

அக்கால இல்லங்களில், இல்லத்தின் முன் வாயிலுக்கு மேல் நிலைக்கண்ணாடியை பதித்திருப்பார்கள். நாம் சாதாரண நிலையில் இருக்கும் நிலையில், நம் கண்ணிற்கு துர் ஆவிகளின் நடமாட்டம் தெரிந்திடாது. நிலைக்கண்ணாடியில் தெரியும் நிலையென்ன?

நிலைக்கண்ணாடியில் பூசியுள்ள அவ்வமில சக்தி இத் துர் ஆவிகளின் சக்திக்கு எதிர் கொண்டது. நாயின் உடலிலுள்ள அமில சக்திக்கும் நிலைக்கண்ணாடியில் உள்ள அமிலத்திற்கும் தொடர்புண்டு.

இத் துர் ஆவியின் நிலையைப் பலர் காண்கின்றனர். பேயின் நடமாட்டத்தைக் கண்டேன் என்பவர் பலர். பேயல்ல அது, குட்டிச்சாத்தானின் உருவ நிலை அது. சிலருக்கு மட்டும் புலப்படும் நிலையென்ன?

ஒவ்வோர் உடலுக்கும் அவரவர்களின் அமிலத்தன்மை ஒன்று உண்டு என்று உணர்த்தினேன் அல்லவா? இவற்றைக் காணும் அமிலத்தன்மை கூடியவர்கள் உடல் இந்நிலையை அறியலாம். சிலரின் நிலையில் அவர்களின் உடலிலுள்ள அமிலத் தன்மையே அபூர்வத் தன்மையில் இயற்கையிலேயே கூடிப் பிறந்திருப்பர். எண்ணத்தில் ஞானசக்தி நிறைவு கொண்ட அபூர்வப் பிறவி யெடுத்தவர் பலர் உள்ளனரே. அவர்களுக்கு இயற்கையின் அமிலமே தன்னுள் கூடி பிறவியெடுத்து, பிறந்து வளர்பவர்கள்.

பல பிறவியில் சேமித்த அமிலத்தின் கூட்டு நிலையினால், பல ஞானிகள், மற்ற ஏவலின் சக்தியில்லாமல் வாழ்கின்றனர்.

நம்முள் உள்ள நிலையையே நாம் நல் நிலையில் வளரும் பக்கு வத்தை நாம் பெறல் வேண்டும். நமக்காக ஏவாமல் பிறருக்காகச் செய்த மந்திர நிலையும், தாக்கும் நிலையும் நமக்கு உண்டு.

நம் நிலையில் ஒரு நிலைப்பட்டுவிட்டால் எத் தீய தன்மை களும் நம்மை வந்து தாக்கா.

**28-1-80**

எண்ணற்ற காலம் முதற்கொண்டே இவ்வாவிகளை வசியப் படுத்தி செயல்படுத்திடும் பல நிலைகள், பல ஆயிரம் காலங்களா கவே இருந்து வருகின்றன. நற்காரியங்களுக்காகவும் தன் பேரா சையின் நிலைக்காகவும் இந்நிலையைச் செயல்படுத்தி வந்தார்கள்.

மந்திரம் மாயம் செய்வதெல்லாம் ஒரு கலையாகவும், வம்ச வழியாகவும் நிலைப்படுத்தி, செயல்கொண்டு வருகின்றனர். நம் நாட்டில்தான் பேய் ஓட்டுதல், மந்திரித்தல் என்பன போன்ற பல நிலைகள் நடக்கின்றன.

எண்ணத்தில் சோர்வு கொண்டவரின் உடலில், அவர்கள் எந்த எண்ணத்தைக் கொண்டு உள்ளனரோ, அவ்வெண்ண நிலைக்கொப்ப, ஆவிகள் அவர்கள் உடலில் ஏறிவிடுகின்றன.

உதாரணமாக, பல ஆசை நிலையுடன் வாழும் ஒருவன், தன் இல்லத்தில் குழந்தைகளின் பற்றைக்கொண்டு, பல நினைவுகளுடன் இல்லத்திலிருந்து வெளி இடங்களுக்குச் செல்லும் நிலையிலும், இல்லத்தில் இருந்த நிலையின் எண்ண ஆசையுடன், தன் குழந்தைகளுக்கு வேண்டிய பொருள் வாங்கும் ஆசையில், அதே எண்ண நிலையில் செல்லும்பொழுது, அவ்வாசை நிலைகொண்ட நிலையில், மற்றப் போக்குவரத்தின் இடையூறுகள் கவனிக்கப்படாமல் விபத்து ஏற்பட்டு, அந்நிலையில் அகால மரணம் எய்தி, குருதி வெள்ளத்தில், அடிபட்டு ஆத்மா பிரிந்த பிறகு, அவ்வாத்மா அவ்வாசை நிலையுடன் அங்கேயேதான் சுற்றிக்கொண்டிருக்கும்.

அதே நிலைகொண்ட எண்ண நிலையுடையவன், அந்நிலைக்குச் செல்லும்பொழுது, இவ்விரண்டு எண்ணங்களும் ஒரு நிலைப்பட்டவுடன், இவன் உடலில் அவ்வாவி ஏறிக் கொள்கின்றது. இவனுடைய செயலுடன் அவ்வாவியின் செயலும் ஒன்றுபட்ட பிறகு, இவன் உடல் நிலையில், அவ்வுடலில், அவ்வாவி மனிதனாய் வாழ்ந்த காலத்தில் இருந்த நிலையெல்லாம், இவன் உடலிலும் ஏறிக் கொள்கின்றது.

தன் நிலையே, தான் மறந்து உடலில் உள்ள ஆவிக்குத் தன்னையறியாமல் அடிமைப்பட்டு வாழும் நிலை ஏற்பட்ட நிலையில், சோர்வு கொண்ட நிலையுணர்ந்து உள்ளவர்கள் மந்திரவாதிகளிடம் செல்லும் நிலை மிகுந்து விட்டது. இந்நிலை கொண்டவன் மந்திரவாதியிடம் சென்றால், அவனுக்கு இவன் உடலில் ஏறியுள்ள மற்றோர் ஆவி ஆத்மாவின் நிலை புரிந்து, பேய் ஓட்டுவதாகச் சொல்லி மீண்டும் இதற்கு மேல் சக்தி கொண்ட மற்றும் ஒரு குட்டிச்சாத்தானை இவன் உடலில் ஏற்றி, அதன் சக்தியைச் செயல்படாமல் செய்து, பேய் ஓட்டுவதாய் அவ்வாத்மாவைப் பல இம்சைகள் செய்து அவன் பொருளீட்டிக் கொள்கின்றான்.

இவன் உடலில் ஏறிய குட்டிச்சாத்தானின் ஏவலிலிருந்து, இவன் உடல் அழியும் வரை தப்புவது இயலாக்காரியம். இப்

பேயோட்டும் நிலையினுல் ஒவ்வொருவரையும் என்றென்றைக்கும் அதற்கே அடிமைப்படுத்துகின்றனர்.

இந்நிலையிலிருந்து தப்புவதற்கு நம் உடலில் எவ்வாத்மா, எவ்வாவி நிலைகள் ஏறி இருந்தாலும், எண்ணத்தை ஒரு நிலைப் படுத்தி சஞ்சலம், சோர்வு, சோர்விலிருந்து ஏற்படும் கோபம், கோபத்தினுல் உண்டாகும் ஆத்திரமான வெறியுணர்வு, இதி லிருந்து விடும் சுவாசத்தினுல் ஏற்படும் உடலின் அமில சக்தி மாறுபட்டு, அதிலிருந்து பல உபாதைகள் நாமே நம் உடலுக்கு ஏற்றிக்கொள்கிருேம்.

கோபம் ஏற்பட்டவுடன் நம் உடலிலுள்ள அனைத்து அணுக் களும் துரிதம் கொள்கிறது. அந்நிலையில், நாம் எடுக்கும் சுவாசமே கடினமாய் நம் உடலில் ஏறுகிறது. இக்கனமான சுவாசத்தை ஈர்க்க ஈர்க்க, நம் உடலிலுள்ள அனைத்துப் பாகங்களும் ஒருநிலைப் படாமல் துடிக்கும் நிலை கொள்கிறது.

அந்நிலையிலிருந்து, நம் உடலிலுள்ள இரத்த நாளங்கள் துரிதமாகச் செயல்பட்டு, மனிதனின் உடல் நிலைக்கே மூலகாரண வித்தாய், பல வியாதிகள் ஏற்படும் நிலைக்கு ஆளாக வேண்டி யுள்ளது.

மனச் சஞ்சலத்திலிருந்து நாம் ஏற்றிக்கொள்ளும் நிலைதான், நமக்கு ஏற்படும் தொடர் நிலையெல்லாம். சஞ்சல நிலை ஏற்பட்ட வுடன் மன நிலையை அமைதிப்படுத்தி, அதனுல் ஒரு நிலை கொண்ட சுவாசத்தை ஈர்த்தால், இச்சஞ்சலத்திற்குத் தெளிவு பெறலாம்.

தெளிவை நாமேதான் ஏற்படுத்திக் கொள்ளல் வேண்டும். நம்மையே நாம் செய்யாத தவறுக்காக ஏசும்பொழுதும், அவர் ஏசலைக் கொண்டு, இப்படிச் செய்கின்ருரே, நாமென்ன தவறு செய்தோம்? நம்மிடம் தவறில்லாத பொழுது, நம்மை ஏசு பவனை, இப்படியெல்லாம் செய்பவனை அவனே அனுபவிக்கட்டும் அவன் தவறை, என்றெல்லாம் எண்ணி, தவறு செய்பவன் இருக்க நம்மையே நாம் தவருக்கிக் கொள்கின்ருேம்.

நம் எண்ணத்தில் அவ் ஏசும் சொல்லை ஏன் அண்டவிட வேண்டும்? அவர்கள் நல்லுணர்வு பெறட்டும், நல்வழி படட்டும் என்ற எண்ணத்தில் நம்முடன் அச்செயலை மோதவிடாமல் எண்ணும்பொழுது, நம் உணர்வே நலம்பெற்று, நம் எண்ணத்தில் தீட்சண்ய சொல் தாக்காமல், நம்மைப் புனிதப்படுத்திக் கொண் டால், நம்மையே நாம் பல இன்னல்களிலிருந்து காத்துக் கொள் கின்ருேம்.

வினை செய்தவனிருக்க வினைப்பயனை நாம் ஏன் ஏற்க வேண்டும்? பிறரை ஏமாற்றியோ, வஞ்சனை செய்தோ, துவேஷித்தோ வருபவனெல்லாம் தன்னைத்தானே ஏமாற்றி வாழ்கின்றான்.

பிறரை ஏமாற்றுவதாக எண்ணி, தன்னையேதான் ஏமாற்றி வாழ்கிறான். மன நிலையை ஒரு நிலைப்படுத்திச் சமமான வரையறை கொண்ட வாழ்க்கைதனை வாழும் பக்குவத்திற்குப் பல நெறி முறைகள் உண்டப்பா. தொடர் நிலை நாளை.

**29-1-80**

இன்று எம் சங்கத் தலைவருக்கு உணர்த்தியதின் நிலையினால் பாட நிலை தவிர்க்கப்பட்டது.

**30-1-80**

இன்று சற்குருதேவர் அருளிய பாட நிலையை வெளியுலகிற்கு அறிவிக்கப் பயந்து பாடத்தை நாங்கள் வெளியிடவில்லை,

**31-1-80**

எம் சொல்வாக்கினால் வெளிப்படுத்தும் சத்தியத்தின் சக்தி நிலை எண்ணத்தால் ஒரு நிலைகொண்டு எடுத்த சுவாசத்தில் ஞான நிலை வெளிப்படுத்திச் செப்புகின்றோம் என்றால் இதிலுள்ள உண்மைகளை இதைப் படிக்கும் நிலைபெற்றவர் ஆராயலாம். இதை வினாவாக்கி எழுப்பிடும் வினாக்களுக்கு எம்மால் விடையளிக்கப் படும்.

வினா எழுப்பியவர்: சி. சங்காலி, இணைவணிக வரி அலுவலர், உடுமலை.

சர்வ ஜீவ ஜெந்துக்களும் ஆண்டவனால் படைக்கப்பட்டவை. மனிதனும் அவ்வண்ணமே படைக்கப்பட்ட பொருள்களில் ஒருவன். மனிதனுக்கு மட்டும் ஆறறிவு கொடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திலும் ஆண்டவன் இருக்கிறார் என்பது சான்றோர்கள் வாக்கு. அந்நிலையை நாம் அனுசரித்து வருகிறோம். அப்படி இருக்க, தீய எண்ணங்கள் மனதில் ஏன் தோன்ற வேண்டும்? எப்பொழுதும் நல்லெண்ணமே ஏன் இருக்கக் கூடாது? எண்ணத்தை வைத்துத்தான் செயல்படுகிறோம். ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திலும் நல்ல எண்ணங்களே ஏற்படுமானால் நற்செயல்களே செய்வார்களல்லவா? தீய செயல்களுக்கு இடமில்லாமல் போய்விடுமல்லவா? ஏன் அப்படி நடப்பதில்லை?

விளக்கம்:— இறைவன் படைத்த படைப்பே நாம். நாம் மட்டுமல்ல, சகலமுமே ஐக்கியப்படும். இந்நிலையில் இயற்கையி

லேயே பல மாற்றங்கள் உண்டு. நீர் மனிதராய்ப் பிறந்துள்ளீர். நாயுமுள்ளது. பாம்புமுள்ளது, மாங்கனியும் வளர்கின்றது. நச்சுச் செடியும் வளர்கின்றது. மனித ஆத்மாக்களின் நிலையை மட்டும் கேள்வியாக்கினீர்? இவ்வுலகில் உதித்த உயிர் அணுக்கள் யாவுமே ஏன் ஒன்றைப்போல் ஒன்றில்லை. எண்ண நிலையும் மாறு கொள்கிறது. உருவ நிலை மற்ற எல்லா நிலைகளுமேதான் மாறு கொண்டுள்ளது. ஒன்றைப்போல் ஒன்றில்லை; ஆண்டவன் படைப்பில் ஏன் இவ் ஏற்றத்தாழ்வு? என்ற எண்ணம்தானே உம் எண்ணம்?

சூரியனிலிருந்து வெளிப்படும் அணுக்கதிர்கள் நம் பூமியின் மேல் படும் நிலையில் ஒவ்வொரு நொடிக்குமே மாறுகொண்ட அணுக்கதிர்கள்தான் நம் பூமியில் வீசுகிறது. நம் பூமிக்கும் மேல், நம் பூமியைச் சுற்றிக் கொண்டுள்ள காற்று மண்டலத்திற்கும் மேலுள்ள பால்வெளி மண்டலத்திற்கும் ஜீவனுண்டு, இயற்கைத் தன்மையுண்டு. பால்வெளி மண்டலத்தில் பல நிலை கொண்ட அமிலங்கள் உண்டு. எல்லாவற்றுக்கும் பொது மண்டலம் பால்வெளி மண்டலம். சுழலும் நிலையில் அப் பால்வெளி மண்டலத்திலுள்ள அமிலங்கள் பல நிலை கொண்டதாகப் படர்ந்து, சுழன்று அதன் ஜீவ சக்தியில் விளையாடுகின்றது. நம் பூமி சுழலும் வேகத்தில், சூரியனின் ஒளிக்கதிர்கள் அப் பால்வெளி மண்டலத்திலுள்ள அமிலத்தில் பட்டு, பூமியின் காற்றுமண்டலத்திற்கு வருகிறது. இக்காற்று மண்டலம் சுழலும் நிலையில் பூமியின் ஈர்ப்பு சக்திக்குகந்த அமிலத்தன்மை அவ்வொளிக்கதிர்கள் வீசிப் படர்ந்தவுடன் அந்தந்த நிலையில் அந்நிலைக்குகந்த அமிலங்கள் படர்ந்து அதைப் பூமி ஈர்த்து பூமி விடும் சுவாசத்தைக் கொண்டு, அந்நிலையின் உயிர் அணு பிறக்கின்றது. அதன் தன்மையில் ஏற்படும் அமில சக்தி நிலை கொண்டுதான், பூமியின், இயற்கையில் வளர்ந்திடும் தாவரங்கள், மற்றக் கனிவளங்கள் எல்லாமுமே.

எவ்வமிலத்தை பூமி ஈர்த்ததோ, அந்நிலைக் கொப்ப சக்தி நிலை வெளிப்படுகிறது. பூமியிலேயே உயிரணுவாய் உதித்து, உயிராத்மா நிலை பெறுவதற்குள் மனித ஆத்மாக்களுக்குப் பல எண்ண நிலைகள் கூடிவிடுகின்றன. எவ்வெண்ணத்தை அச்சுவாச நிலையுடன் ஈர்த்து, வாழ்ந்து பழக்கப்பட்டதோ அந்நிலை கொண்ட அமிலத்தையே ஒவ்வோர் உடலுமே சேமித்துக் கொள்கின்றது.

பல ஜென்மங்கள் எடுத்தாலும் உயிரணுவாய் உதித்து, உயிராத்மாவாய் உருப்பெறும் நிலையில் அமில சக்தியைக் கொண்ட தொடர்பின் எண்ணமும் அதன் தொடர்ச்சியின் குண நிலையும்தான் அவ்வாத்மாவுக்கு உண்டே ஒழிய, அப் பரம்பொருளான ஆண்டவன் அனுப்புவதல்ல நல்லவனையும் கெட்டவனையும்.

இயற்கையின், ஆதி சக்தியின் நிலை பொதுவான சக்திதான். அவளிலிருந்து உதித்த உயிரணுக்கள் எடுக்கும் வளர்ச்சி நிலையெல்லாம் அதனதன் சக்திதான்.

பரம்பொருள் ஒன்றே. அப் பரம்பொருளின் பொருட்கள் தான் நாமெல்லாம். அப் பரம்பொருளின் நிலையுடனே ஐக்கியப் பட்டு ஜெபப்படுத்தும் நிலையினால் நம்மையே அப்பரம்பொருளாக் கிடலாம். அவரவர்கள் எண்ணும் எண்ணத்தைக் கொண்டுதான் வாழ்க்கை.

இக்காற்றுடன் பல நிலைகளும் கலந்துள்ளன. நல்லெண்ணத் தின் சுவாசமும் இக்காற்றினால்தான், துவேஷ எண்ணத்தின் மூச்சுக் காற்றும் இக்காற்றினில்தான். நம் வாழ்க்கையுடன் மோதுண்டு வாழும் நிலையில் பல செயல்கள் நடக்கின்றன. அந்நிலை யில் எடுக்கும் சுவாசத்தைக் கொண்டு பல நிலைகள் நடக்கின்றன.

நம் ஆத்மாவுடன் நாம் மட்டும் வாழவில்லை. பல கோடி உயிரணுக்கள் வாழ்கின்றன. ஆனால் நமக்குத்தான் நம் ஆத்மா சொந்தம்; நம் உடலில்தான் மற்ற உயிரணுக்களும் இருந்தாலும் அதற்கு நம் உடலும், நம் ஆத்மாவும் சொந்தமல்ல. அதைப் போல் நாம் எடுக்கும் எண்ணமுடன் இக்காற்றிலுள்ள பல அலை களும் நம் எண்ணமுடன் மோதுகின்றன. இதனால் நம்மை யறியாமலேயே நம்முள் பல எண்ணங்கள் மோதுண்ட நிலையில் பல செயல்கள் நடக்கின்றன. மனித ஆத்மாவாய் வாழ்வதுவே பெரும் பொக்கிஷம். நம்மையே நாம் மற்றத் தீய அணுக்களுக்கு அடிமைப்பட்டு வாழ்வதினால்தான் நல்லவன் கெட்டவன் என்ற நிலை வருவது.

ஐந்தறிவு, ஆறறிவு என்பதெல்லாம் நம்மால் ஏற்படுத்திய நிலைதான். மனிதனிலிருந்து நம் அறிவின் நிலையைச் சிதறவிடுவதி னால் மிருக ஜெந்திற்குச் செல்கின்றோம். நம்மைக் காட்டிலும் நுண்ணிய அறிவு மிருகங்களுக்குண்டு. ஆறறிவு, ஐந்தறிவு என்பதல்ல வாழ்க்கையே.

### 1-2-80

ஆதிசக்தியின் ஜீவசக்திதான் அனைத்துமே. அஜ் ஜீவ சக்தியை அவ் ஆதிசக்தி வளரவிடுகின்றாள். அவ்வளரும் பக்குவத்தில் அவை அவை எடுக்கும் சுவாச நிலை கொண்டுதான் பலவும் உருப் பெறுகின்றன. ஆதிசக்தியின் அருட் சக்தியின் அச்சக்தியுடனே ஐக்கியப்படும் நிலை பெற வேண்டும்.

இன்று நம் உலகினில் மனித ஆத்மாக்களின் எண்ண நிலை ஒருவருக்கு ஒருவர் மாறுகொண்டுள்ளது. நல்லவர், தீயவர் என்ப

தெல்லாம் ஆண்டவன் படைப்பல்ல. அவரவர் எடுத்த சுவாச நிலைகொண்டு அமையப் பெற்றது.

நல்லவரின் எண்ணத்தை அச்சக்தியின் நிலையுடன், அச்சக்தியை ஈர்த்து, அந்நிலையில், மென்மேலும் நற்பயனைச் செயல் படுத்தி, அதன் வழித் தொடரிலேயே அவ்வாத்மாவிற்கு நற்சக்தி கூடி அப்பரம்பொருளான ஆதி சக்தியுடன் ஐக்கியப்பட்டு, ஆண்டவனின் அருள் பெற்றவனாய், ஆண்டவனாய், இன்று சப்த ரிஷி நிலைபெற்ற பக்குவம் பெற்ற மகான்கள்.

இவ்வுலகில் உள்ள ஆத்மாக்களையும் நல் உணர்வு பெற்று நல் ஆத்மாக்களாய்த் தன் வட்டத்திற்குள் அச் சக்தியை ஈர்ப்ப தற்காக மனித ஆத்மாக்களின், அவ் ஈர்ப்பு நிலை கொண்ட எண்ணங்களுடன் கலந்து, மற்ற மனித ஆத்மாக்களை நற்பயன் பெறச் செய்யும் பக்குவ சக்தியை ஊட்டி நல்லுணர்வுகளைப் பக்தி என்னும் நிலையில் வளர விடுகின்றனர்.

அந்நிலை பெற்று வழி வந்த பல மனித ஆத்மாக்கள் எந் நிலை கொண்டு பிறகு செயல்படுகின்றன? முந்தைய பாடங்களில் ஏசுநாதரும், முகமது நபியும், ஐயப்பனும் இந்நிலையில் பக்தி கொண்டு வெளிவந்தவர்களின் நிலையெல்லாம் உணர்த்தி வந்தேன்.

இவர்களின் உடலை ஒரு சப்த ரிஷி கொண்ட முனிவரின் ஆத்மாவின் செயலினால் வழி நடத்தப்பட்டவர்கள் என்று. பிற உடலில் அவ்வாதிசக்தியின் அருள் பெற்ற சப்த ரிஷியின் நிலையினால் இவ்வுலகிற்குத் தேர்ந்து எடுக்கப்பட்ட அவ்வுடல் கொண்ட ஆத்மாவை அச் சப்த ரிஷி வழிநடத்தி அருள் புரிந்த பிறகு, அவ்வுடலின் ஆத்மாவின் நிலையென்ன?

ஒவ்வோர் உடலுக்கும் உகந்த உயிரணுவும், உயிராத்மாவும் உள்ள நிலையில் ஒரு சில உடல்களை அவ்வுடலில் இருந்து அவ் உயிராத்மா பிரிந்த பிறகு அக்கட்டையான, ஜீவனற்ற உடலுக்கு அந்த ரிஷிகளின் ஆத்மா செயல்கொண்டு சில நிலைகள் நடக்க வைக்கின்றனர்.

உயிராத்மாவுடன் உள்ள உடல்களில் அந்த ரிஷிகளின் நிலை செயல்படும் நிலையில் அவ்வுடலில் உள்ள ஆத்மாவின் நிலை எந்நிலை கொள்கின்றது?

இராமகிருஷ்ண பரமஹம்ஸர் உயிருடன் உள்ள நிலையிலேயே அவரைத் தன் செயலுக்குகந்த ஆத்மாவாய்த் தேர்ந்தெடுத்து,

அவர் வழியில் இவ்வுலகிற்குப் பல வழிகளைப் புகட்டிய அந்த ரிஷியின் அருள் இவருக்கு எப்படிச் செயல்பட்டது?

அதற்குப் பிறகு இவரின் உயிராத்மாவின் நிலையென்ன?

இவரின் உடலிலிருந்து அவ்வுடல்நிலை கெட்ட பிறகு, அவ் உடலில் இருந்துகொண்டு அவர் உயிராத்மா செயல்படாது என்ற நிலையில் அவர் உயிருடன், உடல் பெற்று வாழ்ந்த காலத்தில் அவர் நிலையிலிருந்து செயல்படுத்திய அந்த ரிஷியின் சக்தி அவர் உடலில் உள்ள அனைத்து அமிலத்தையும் புனிதமாக்கும் பக்குவத்தை அவர் சுவாசமுடனும், எண்ணமுடனும் கலக்கச் செய்து, அவ்வாத்மாவுக்கும் அந்த ரிஷியின் ஆத்மாவுடன் கலக்கும் பக்குவத்தை இவ்வுயிராத்மாவே ஏற்படுத்திக் கொண்டு அந்த ரிஷியின் சக்தி வட்டத்துக்குள் இவரின் சக்தியும் ஒன்றி விடுகின்றது.

இவர் வேறல்ல, அந்த ரிஷி வேறல்ல என்ற நிலையில் ஐக்கியப்பட்டுச் செயல் நிலை கொள்கின்றது. இப்படித்தான் இச் சப்த ரிஷி நிலை பெற்றவர்கள் ஒவ்வொருவரும் தன் வட்டத்திற்குள் சேமிக்கும் சக்தியாய்ப் பலரை ஈர்த்துச் செயல்படுத்துகின்றனர்.

போகருக்குக் குருவாய் அருள் பெற்ற காளியங்கராய சித்தரின் நிலையும் இன்று அவரின் வட்டத்திற்குள் அவரின் ஒளியுடனே ஒளியாய் கலக்கப் போகருக்கு தீட்சை தந்து அவர் நிலையில் முருகா என்ற மந்திரத்துடன் அவருடன் ஐக்கியப்படும் ஆத்மாக்களை ஒளிவட்டமாய், தனதாகப் பல சக்தியை ஈர்த்து இன்று ஒரு மண்டலமாகும் நிலையுடன் ஒளிக்கதிர்களைச் சேமித்துச் செயல் கொண்டு வருகின்றார்.

மனித ஆத்மாக்களில் மட்டும் எண்ணநிலை மாறுகொண்டு செயல்படவில்லை. சப்தரிஷியின் நிலையிலும் மாறுகொண்ட நிலையுண்டு. ஆனால் அவர்களின் நிலையில் நற்பயனைப் போதிக்கும் நற்சக்தி நிலைதான் கூடிச் செயல் கொள்கின்றது.

மனித ஆத்மாக்களுக்குத்தான், இப் பேராசையின் நிலையிலிருந்து விடுபடத் தெரியவில்லை. நல்லுணர்வை ஊட்டினாலும் ஏற்பதற்கு எண்ணத்தில் ஆசையில்லை. அன்பென்னும் நிலையைச் சிதறவிட்டு வாழ்கின்றனர்.

**2-2-80**

இன்று நம்மில் பல மகான்கள் தோன்றி வாழ்ந்தார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலையில் அவரவர்களின் அறிவு சக்தியை உலகிற்காக உணர்த்தினார்கள். பல துறைகளில் மாமேதைகள் வழிபெற்று வந்தார்கள். இன்றும் வருகிறார்கள்.

திருவையாறு தியாகராஜர் ஆராதனை விழா என்ற விழாவினை அவரின் ஞாபகமாக இன்றும் நடத்துகின்றனர். அவரின் நிலையென்ன?

இசைக்காகவே பிறந்தார். இசையுடனே கலந்தார். அவர் உடலில் செயல் கொண்டவர், அவரின் இசை பக்தியில் அவரையே இசையாக்கி, இன்புறும் பக்குவப்படுத்தி, அவ் இசையுடனே அவரின் ஆத்மாவைச் செயல்படவைத்தார், அவர் உடலில் செயல்படுத்திய ஒரு சப்தரிஷி. இன்று அத் தியாகராஜரின் உயிர் ஆத்மாவே இசையுடன் கலந்து, அவ் இசை ஞானம் பொழிந்திடும் இசையுள்ளங்களில், தன் இசை ஒளியைக் காண்கின்றார்.

பல மகான்கள் இசையையே பக்தியாக்கி, அப்பக்தியையே ஆண்டவனுக்கு அர்ப்பணித்து, அவ் இசையுடனே ஒன்றிவிடுகிறார்கள். இசை ஞானம் பெற்று, உள்ளத்தையே அமுதிசைப்படுத்தி ஆண்டவனை வணங்குவதாக எண்ணி வணங்குகிறார்கள். இசைஞானம் பெற்று, இசையுடன் ஒன்றிய ஆத்மாக்களின் நிலையிலெல்லாம் அவர்கள் இசைக்கும் இசையே, அவர்களின் உயிராத்மாவையே, இசையமுதின் அமில சக்தியை அவ்வாத்மாவுடன் ஒன்றச் செய்து, அவ்வுயிராத்மாவிற்குப் பேரானந்த நிலையை ஏற்படுத்திக் கொள்கிறார்கள்.

இசைக்கும் இசையெல்லாம் ஈசனின் இசையாக்கி, தன் உயிராத்மாவையே ஈசனாக்கி, இன்பமுடன் அவ்வாத்மாவிற்கு நற்சக்தி கிடைக்கப் பெறுகின்றது.

வாழ்க்கைக்கு இவ் இசையமுதம் பெரும் சொத்தப்பா. இசைக்கும் இசையிலேயே ஒவ்வோர் உடலிலும் உள்ள உயிர் அணுக்கள் அனைத்துமே அவ் இசைக்கு அடிமைப்படுகிறது. நம் உலகமே ஓம் என்ற இசையில்தான் உருளுகின்றது. இசைக்கு மயங்காத எவ்வுயிரணுவுமில்லை. வாழ்க்கையையே அமுதிசையாக்கி அப்பக்திச் சுரங்களைப் பாடி, நற்பயனைப் பெறத்தான், காலம் காலமாய் இவ்வுலகமே இசையின் வழியில் வருகின்றது. பக்தி மனம் பெற அவ் இசையமுதம் நம் உயிராத்மாவுக்கு மிகவும் அவசியமாகின்றது.

இந் நிலையுணர்ந்த பல மகான்கள் இசையுடனே கலந்து இன்றளவும் தன் செயல் கொள்கின்றார்கள். ஒவ்வோர் ஆத்மாவும் தன் எண்ணத்தில் ஏற்படுத்தி வழி நடத்தும் செயல் நிலைக்கு உகந்த ஞான சக்தியை, அந்நிலையை வளரவிட்டால் அவ்வளர்ச்சிக்குகந்த சக்தி நிலை கொண்டவரின் உதவியுடன், நம் சக்தியை நாம் வளர்த்துக் கொள்ளலாம்.

ஒவ்வோர் ஆத்மாவுக்கும் அதற்குகந்த அமில சக்தியின் கூட்டுநிலை உயிர் பிறப்பிலேயே வழிபெற்று வருகின்றது. ஒவ்வொரு துறையில் ஒவ்வொருவரின் சாதனை செயல்கொள்கின்றது. இதற்கெல்லாம் உயிரணுவிலேயே சேமித்த அமில சக்தியின் தொடர் நிலைப்படிதான், வளர்நிலை கொள்ள முடியும்.

ஒவ்வொருவரும் அவரவர்களின் நிலையில்தான் செயல் கொண்டு வருகின்றனர். ஆனால் இவ்வமில சக்தியையே உயிர் பிறப்பில் வளர்ச்சி கொண்டு இன்றளவும் ஒவ்வோர் ஆத்மாவும் வழி வந்த நிலையிலேயே நம் ஜெப சக்தியினால் ஜெயம் கொண்டிட முடியும்.

ஜெப சக்தியினால் நம் உயிராத்மா எந்நிலை பெறுகின்றது? ஜெப சக்தியிலிருந்து நம் உடம்பிலுள்ள அமில சக்தியை எப்படித் தூய்மை கொண்டிடலாம் என்ற நிலைதனை வரும் பாடநிலைகளில் உணர்த்திடுவேன்.

**3-2-80**

*30 ஆம் தேதி நாங்கள் பயந்து வெளியிடாமைக்கு அவரால் புற உலகிற்கு வெளியிடச் செப்பிய பாடத்தின் நிலை.*

நிகழவிருக்கும் 1980ஆம் வருடம் பிப்ரவரி மாதம் 16ஆம் நாள் ஏற்படப் போகும் மண்டல மாற்றத்தினால் நம் பூமி அடையப் போகும் நிலையென்ன?

பல ஆண்டுகளுக்குப் பிறகு சூரியனைச் சந்திரன் நம் பூமிக்கும், சூரியனுக்கும் இடைப்பட்ட வழியில் தாண்டிச் செல்லும் நிலை ஏற்படுகின்றது.

மூன்று நிமிட அவகாசத்தில் இந்நிலை ஏற்படும் தருவாயில் அம்மாவாசையான அந்நாளில் நம் பூமிக்குப் பரிபூர்ணமாய் சூரியனின் ஈர்ப்பு நிலை கிடைக்காத நாளில் நம் பூமிக்கும் சூரியனுக்கும் இடையில் சந்திரன் ஓடுவதினால் வழக்கமாய் நம் பூமியின் ஈர்ப்பிற்கு ஏற்படும் அமில சக்தி நிலை அக் குறுகிய கால நிலையில் தடைபடுவதுடன், இவ்வளவு காலமாய்க் கேது மண்டலம் என்ற மண்டலத்தைக் கற்பனையாய் உள்ள மண்டலம் என்று எண்ணி வந்த அக் கேது மண்டலத்தின் விஷத்தன்மையான அமில சக்தி இம் மண்டலங்களின் மாற்ற நிலையில் கேதுவின் ஓட்ட நிலையும் இக்கால நிலையிலேயே ஒன்றி நம் பூமிக்கு இத்தருவாயில் அதன் அமில சக்தியும் பாயும் நிலை ஏற்படுகிறது. சூரியனைத் தாண்டி சந்திரன் ஓடும் தருவாயில் பூமிக்கு வழக்கமாய்க் கிடைக்கப்பெறும் அமில நிலை மூன்று நிமிட நேரம் தடைபட்டவுடன் இக்கேது மண்டலத்தின் அமில சக்தியை நம் பூமி ஈர்க்கும் நிலை ஏற்படுகின்றது.

வான ஆராய்ச்சி நிலையில் காண்பவர்கள் இம் மண்டலங்களுடன் பிறிதொரு மண்டலமும் உள்ளதைக் காணலாம். கேது மண்டலத்தில் விஷ அமிலங்கள் அதிகம். இதனுல் நம் பூமியின் நிலையே பல கோடி ஆண்டுகளாய்ச் சுழன்று ஓடும் மைய வட்டத்தின் விகித நிலை சிறிது மாற்றங் கொள்ளப் போகின்றது. இதிலிருந்து சூரியனுக்கும் பூமிக்கும் இடைப்பட்ட தூர விகிதம் அதிகரிக்கப் போகின்றது.

இம் மாற்றத்தினுல் பூமிக்குச் சிறிது சிறிதாக உஷ்ண சக்தியில் குளிர்ந்த நிலை அதிகப்படப் போகின்றது. இக் குறுகிய மூன்று நிமிட நேரத்தினுல் சந்திர மண்டலத்திற்கு அதிக சக்தி கிடைக்கப் பெறுகின்றது.

சந்திரனுக்கு நம் பூமியின் காந்த அமிலத்தை ஈர்க்கும் நிலை கூடப் போகின்றது. அதே சமயம் சூரியனுக்கும் சில மாற்ற நிலைகள் ஏற்படப் போகின்றன. இம் மண்டல ஓட்டத்தின் நிலையினுல் நம் பூமிக்கு மட்டுமல்ல இதிலிருந்து ஒவ்வொரு மண்டலங்களுக்குமே நன்மை, தீமை நிலை ஏற்படப் போகின்றது.

நம் பூமியில் இவ் விஷத்தன்மையான காந்த அமில சக்தி கூடுவதினுல் காற்று மண்டலமே விஷத்தன்மை கூடப் போகின்றது. இவ்விஷத்தின் தாக்குதலினுல் எண்ணநிலை மாறுகொள்ளும் தன்மை (எண்ணச் சிதறல்) உண்டாகப் போகின்றது. இதிலிருந்து தப்புவதற்கு அவரவர்கள் வணங்கிடும் அவ்வாண்டவனின் அன்பு ஜெபத்தை ஒரு நிலையுடன் அம் மூன்று நிமிட நேரமும் ஜெபம் செய்து வணங்கிடுங்கள். அக்கால நிலையில் ஆண்டவனின் மந்திரம் ஒன்றுதான் நம்மைக் காக்கும் சக்தி.

**4-2-80**

2–2–80ஆம் தேதியின் தொடர்

சூரியனிலிருந்து கிடைக்கப் பெறும் காந்த அமில சக்தியினுல் மட்டும் நம் உலகிற்கு ஒளி பாய்வதில்லை. நம் உலகமும் அதன் ஈர்ப்பின் நிலைதனைப் பெறல் வேண்டும். அக்காந்த அலைகளை நம் பூமி ஈர்த்து அதன் வட்டத்திற்குள் சுழலவிட்டு, அச்சுழற்சியில் இருந்து சூரியனின் ஒளி அமிலத்தை மென்மேலும் ஈர்த்துச் செயல் கொள்ளாவிட்டால் நம் உலகிற்கு சக்தி ஏது? செயல் ஏது? இவ்வுலகமே ஏது?

சூரியனின் படைப்பில் சக்தியை அளித்தாலும், நம் பூமி ஈர்த்து செயல்கொள்ளாவிடில் நம் பூமிக்கு ஜீவனில்லை. அதைப் போல் ஒவ்வோர் உயிராத்மாவும் ஆண்டவன் படைப்பில்

அதனதன் சுழற்சியில் ஏற்படுத்திக் கொண்ட அமில சக்தியின் வட்டத்தின் வளர்ச்சியில் வாழ்க்கை நிலை அமைகின்றது.

பல பிறப்புகளை ஏற்கும் நம் உயிராத்மா ஒவ்வொரு பிறப்பிலும் சேமிக்கும் அமில சக்தியில் நற்சக்தியும், தீய சக்தியும் கலந்தே வழிவருகின்றோம். ஒவ்வொரு பிறப்பிலும் இந்நிலையின் ஒரு பிறப்பில் சேமித்த நற்பயனும் தீய பயனும் மற்றொரு பிறப்பில் ஏற்றத்தாழ்வு கொள்கின்றது. இதன் நிலையில் தொடர்பு கொண்டு நாம் செய்திடும் நிலையல்ல இது. நாம் வளர்ந்த எண்ண நிலை நம்முள் கலந்துள்ள தொடர் நிலையென்ற வழியிலேயே வழிபெற்றால் நாமெல்லாம் இன்று மனித ஆத்மாக்களாய் வாழ்ந்திடும் இப்பொக்கிஷமான வாழ்க்கைதனை ஈன நிலைக்கு நாமே அடகு வைக்கிறோம்.

அடகு என்றவுடன் திரும்பவும் பெறும் நிலைக்கல்லவா செப்புகின்றார், என்று உணருவீர்? ஆம், இன்று இக்கலியில் நம் உயிராத்மா கொண்ட இப்பொக்கிஷ வாழ்க்கையை அடகு வைத்து விட்டால், நாம் அதனைப் பெறும் காலம் பல நூறு கோடி ஆண்டுகள் ஆகலாம்.

பல காலமாய்ச் சேமித்து உயிர் ஆத்மாவாய் மனித உடல் கொண்ட எண்ண வளர்ச்சியில், அறிவுப் பொக்கிஷ வாழ்க்கை தனைப் பெற்ற நம் ஆத்மாவின் நிலைதனை உணர்ந்து, வாழ்க்கை தனில் ஏற்படும் சஞ்சலங்களுக்கு அடிபடாமல் நம்முடன் (நம் எண்ணமுடன்) மோதிடும் பல நிலைகளுக்கு நம் எண்ணத்தைச் சம நிலைப்படுத்தும் பக்குவநிலை பெறல் வேண்டும்.

இம்மனித ஆத்மாக்களினால் மட்டும்தான் ஜீவ சக்தியை ஒளிபெறும் சக்தியாக்கிடல் முடிந்திடும். மனித ஆத்மாவிலிருந்து ஒளிபெற்று அஜ் ஜோதியுடன் ஐக்கியமாகி, அஜ் ஜோதியின் வட்டத்தை வளரவிட்டே மண்டலமாய் ஜீவன் கொண்டு வளர்ச்சி பெற்று, வளர்ச்சியின் உயிரணு தோன்றி அதன் வளர்ச்சியிலேயே அமில நிலை பல பெற்று மண்டலமாய் உருளும் சக்தியும், உயிராத்மாவாய் வாழும் நிலையும் அதன் தொடர் நிலை அனைத்துமே இம் மனித ஆத்மாக்களுக்குத்தானுண்டு.

மண்டலமாய் சுழல்வதுவும் இவ்வாத்மாக்களே; கொசுவாய்க் கழிவின் சுவாசத்தை ஈர்த்து வாழ்வதும் இம்மனித உயிராத்மாவே. இவ்வெண்ண சக்தியில் நிலைகொண்டு அமைவதுவே அனைத்துமே. நாம் பிறப்பெடுத்து வாழ்வதெல்லாம் நம்மை அவன் அனுப்பிவைத்து நம் சக்தியை எப்படி வளர்த்துக்கொள்கின்றோம் என்று பார்க்கத்தான் என்ற எண்ணமும் வேண்டும்.

அன்றைய நாளில் மனித ஆத்மாக்களைப் பக்தியின் நிலையில் தான் உயர்வுபடுத்திட முடியும் என்ற தத்துவத்தை உணர்த்தி ஆலயத்தை அமைத்தார்களே அன்றி, ஆலயத்திற்குச் சென்றால் தான் அவனருள் கிட்டும் என்ற நிலையிலல்ல.

எண்ணத்தை ஒரு நிலைப்படுத்தி அவரவர்களுக்குகந்த அமில சக்தியையே ஒளி சக்தியாக்கி வழிபெறல்வேண்டும். ஆசையும் அன்பும் அளவுடனே இருந்திடட்டும். அதி ஆசைக்கும், அதி அன்பிற் கும் வழிபட்டால்தான் பேராசைக்குப் பிடிபடும் நிலையில் சலிப் பும், சஞ்சலமும், வெறுப்பும் கொண்டே இதன் வழித்தொடரி னால் ஏற்படும் கோபங்களும் அதிலிருந்து ஏற்படும் வைராக்கியத் தின் உறுதியும், எச் சிரமப்பட்டாலும் அடைந்தே திருவேன் என்ற வெறியின் உந்தலினால் நம்மையே நாம் சிதறவிட்டு வாழ்கின்றோம்.

அன்பும் ஆசையும் இல்லாவிட்டால் உலகமே இல்லை. நற் சக்தியின் பொக்கிஷ சக்தியே இவைதான். இவற்றிற்கே அடிமைப் பட்டுப் பேராசை நிலையில் செல்லும் எவையுமே அவ்வன்பிற்கும், ஆசைக்கும் எதிர்சக்திதான். வழித்தொடர் நாளை.

**5-2-80**

சத்தியத்தின் சக்தி நிலை வாயிலாக இவ்வுலக மக்களுக்கு உணர்த்திடும் இச் சத்தியத்தின் நிலையினால், ஒவ்வோர் உயிர் ஆத் மாவும் இவ் விஷமாய்க் கலந்துள்ள காற்றின் சக்தியிலிருந்து உன்னத நிலை பெறல் வேண்டும். நம் உயிராத்மாவிற்கு வேண்டிய அழியாச் சொத்தைச் சேமித்திடல் வேண்டும்.

நம் உயிராத்மாவை உன்னதப் பொக்கிஷமாக்கி, அவ்வொளி யுடனே ஒளியாய்க் கலந்திடல் வேண்டும். ஒவ்வோர் உயிர் ஆத்மா வும், இன்று வாழும் நிலையில், விஷத்தன்மை வாய்ந்த காற்று அலையில் சிக்குண்டு, இப்பொழுது கிடைக்கப்பெற்றுள்ள இம்மனித உடல் வாழ்க்கையை, ஏக்கத்தினாலும் பேராசை வெறியினாலும், சலிப்பினாலும் ஆத்மா பிரிந்து சென்று, அவ்வெண்ண அலையுடனே, ஈன ஜெந்துவாய் அதன் ஈர்ப்பலையில் சிக்கி, அதன் வட்டத்திற் குள் நம் உயிராத்மா சென்று வாழும் பிடியிலிருந்து மீண்டு, செயல்கொள்ளல் வேண்டுமென்றால், நம் வாழ்க்கையைப் புனித மாக்கி ஜெபம் கொண்டிடல் வேண்டும்.

ஈஸ்வர நாமத்தை ஜெபித்திட்டால் மட்டும் நம் ஜெபம் சக்தி பெறுவதில்லை. நம் வாழ்க்கையில் ஏற்படும் இன்னலில் இருந்தும் நாம் மீள வேண்டும்.

பக்தி என்ற நிலையில் நம் எண்ணத்தில் அப்பரந்தாமனையே எண்ணிப் பல நாள் பூஜித்து, வணங்கி நாம் முக்தி எய்திட அப் பரந்தாமனிடம் நம்மைச் சேர்ப்பிக்கும் பக்தி ஜெபத்தில் ஈடு பட்டு, வழி வந்திடும் நிலையில், நம் வாழ்க்கையில் ஏற்படும், நம்மைச் சார்ந்தவரின் நிலையினாலும், மற்றவர்களின் நிலையினாலும் நம் பூஜையில் குறுக்கிடும் நிலையோ அல்லது அவர்களினால் நம் ஜெபம் தடைபடுகின்றதே என்ற ஏக்கத்தினாலும் நம் எண்ணத் தைச் செலுத்தினாலும் நம் ஜெபம் நமக்குக் கைகூடாது.

ஒவ்வோர் ஆத்மாவிற்கும் ஒவ்வொரு சக்தி நிலையுண்டு. அச்சக்தி நிலையை வெளிப்படுத்திடப் பக்குவ நிலை வேண்டும். (உதாரணமாய் நம் இல்லத்தில் நாம் சமைக்கும் பதார்த்தத்தில் எப் பதார்த்தத்தை மையப்படுத்திச் சமைக்கின்றோமோ அதன் நிலையில் உப்போ, புளிப்போ, காரமோ எச்சுவை அதிகப்படு கிறதோ அந் நாமம்தானே அப்பதார்த்தம் பெறுகிறது. நீர் செய்த பதார்த்த நாமம் மாறி ஒரே உப்பு என்று நாமம் பெறுகிறது).

இப்பக்குவ நிலை மாறுகொண்டால், நம் உயிராத்மாவிற்கு நாம் சேமிக்கும் சொத்து, நம் எண்ண நிலை மாறுகொண்ட ஏக்கத் தில், நம் உயிராத்மா பிரிந்து விஷமாய்க் கலந்துள்ள இக்காற்றி வில் நம் ஆத்மா தத்தளிக்க, நாமே நம் ஆத்ம சக்தியைச் சிதற விடுகின்றோம்.

நாம் செய்யாத ஒரு செயலுக்கு மற்றவரினால் கடும் சொல்லோ, எதிர்ப்பு நிலையோ ஏற்படும் தருவாயில், நாம் சத்திய வானாய் உள்ளோம், நம்மை ஏன் வீண் இகழ்ச்சி செய்கின்றனர்? ஆண்டவா அவனைப் பார்த்துக்கொள். அவனைச் சும்மாவிடலா காது. நம் சத்தியத்தை அவன் மீறி நம்மை துவேஷிக்கிறான் என்ற எண்ண நிலையில் நம் எண்ணத்தைச் செலுத்தி, அவ் ஆண்டவனை வணங்கி, அவன் செய்த பாவத்திற்கு நாம் எண் ணும் நிலையிலேயே நம்மையே நாம் தண்டனைப்படுத்திக் கொள் கின்றோம்.

இவ்வுணர்வின் நிலையினால், நம் உடல் நிலையும் பாதித்து, அதன் வழித்தொடரில், பல இன்னல்களை நாம் அடைகின்றோம். நாம் அறிந்தே நமக்கு ஒருவர் தீங்கு இழைக்கின்றார். நம்மை ஏமாற்றி, வஞ்சனைப்படுத்தி வாழ்கின்றாரே, அந்நிலையைப் பார்த்து நாம் எப்படிச் சும்மா இருத்தல் முடியும், என்று எண்ணத்தில் சலிப்புத் தோன்றலாம்.

நம்மை ஏமாற்றுவதாக நினைத்துக்கொண்டு ஏமாற்றுப வர்கள் எல்லாம் நம்மை ஏமாற்றவில்லை. அவர்களையே அவர்கள்

ஏமாற்றிக் கொள்கிருர்கள். ஒருவரின் மேல் குரோதத்தை வளர்ப் பவனும் பொருமை கொண்டு ஏக்கப் பெருமூச்சு விடுபவனும், நம்மைப் பார்த்துப் பொருமை கொள்ளவில்லே, ஏக்கப் பெருமூச்சு விடவில்லே. அவனேயேதான் அவன் பொருமைப் படுத்துகின்ருன், ஏக்கப்படுத்திக் கொள்கின்ருன் என்ற உணர்வு பெற்று அந்நிலே யில், நாம் நம் எண்ணத்தை ஒரு நிலேப்படுத்தி, ''ஓம் ஈஸ்வரா! என்க்கு நல்ல மனத்தைத் தா, அவனுக்கும் நல்லுணர்வு கொண்ட நற்சக்தியை வளரவிட்டு நல்லவனுய் ஆக்கிடுங்கள்'' என்ற ஜெபத் தைத்தான் நாம் பெறல் வேண்டும்.

அவர்கள் செய்யும் வினேயல்ல அது. அவர்களே ஆட்டி வைக்கும் துர்சக்திதான் அதுவேயன்றி, ஆண்டவனின் அருளில் உதித்த அனேத்து உயிராத்மாவுமே ஒன்றுதானப்பா.

இக்காற்றினில்தான் அனேத்துமே கலந்துள்ளன. தீயவனுய் எவனும் பிறந்திடவில்லே. அவரவர்களின் வாழும் சூழ்நிலேயினுல் ஏற்படும் இத் தீய சக்தியின் பிடியிலிருந்து மீள முடியவில்லே. இன்று வந்த நிலேயல்ல இது. பல காலமாய், இம் மனித ஆத் மாக்களின் எண்ண வளர்ச்சியில், குரோத வெறியுணர்வினுல், அரசர்கள் ஆண்ட காலத்தில், பேராசையில் அவர்கள் நாடு பிடிக்கப் போர் என்ற நிலேயில் பல ஆத்மாக்களே, இக் குரோத எண்ணத்தில், போர்க்களத்தில் உயிர் நீத்த ஆத்மாக்களின் நிலேயின் வழித்தொடரினுல் வந்த வினேதானேயன்றி, இன்று வாழும் நம் மனித ஆத்மாக்களினுல் வந்த நிலேயல்ல இந் நிலே.

இதிலிருந்து மீளுவதற்குத்தான் நம் ஆத்மாவை எப்படிச் செயல்படுத்திடல் வேண்டும்? நம் எண்ணத்தைக் கொண்டு நம் உயிராத்மா அடையப் போகும் நிலேதனே உணர்ந்து, சத்தியத் தின் சக்திவானுய் சக்தி பெற்றிடல் வேண்டும்.

தீயவர்கள் என்று ஒதுங்கி வாழ்ந்திடல் ஆகாது. நாம் எடுக்கும் நல்லுணர்வின் ஜெபத்தினுல் நம் எண்ணத்தின் சுவா சத்தைப் பல மைல்களுக்கு அப்பால் இருந்திட்டாலும், அன்பான சுவாசத்தை அவர் எண்ணமுடன் நம் எண்ணம் கலக்கச் செய்து, அவரையே நம் எண்ணத்தினுல் புனிதமடையச் செய்திடலாம். நம் எண்ணச் சக்திக்கு உகந்த நிலேதனே நாம் உணர்ந்திடல் வேண்டும்.

பல மகான்களும், சப்தரிஷிகளும், இவ்வெண்ண சக்தியில் உயர்வு பெற்று, மகான்கள் ஆனுர்களேயன்றி, கடும் ஜெபத்தி னுலோ விரதத்தினுலோ யாக குண்டங்கள் வளர்த்து பூஜித்ததி னுலோ அம் மகான் நிலே பெறவில்லே.

எண்ணத்தில் உயர்ந்த ஞான சக்தி பெற்றவன்தான் ஞானியாகவும், சித்தனுகவும், ரிஷியாகவும் ஆனுனேயன்றி, பக்தியைக் கொண்டு, ஆண்டவனை வணங்கி, பூஜித்து, நற்சக்தியைப் பெறவில்லை. அவரவர்களுக்குள் உள்ள ஆத்மாண்டவனை இவ்வெண்ணத்தினுல் பூஜித்து, புனிதப்படுத்தி பக்குவ நிலை பெற வேண்டுமேயன்றி, பஜனை பாடி, கோவிந்தனை அழைத்து எவ்வாண்டவனின் ஜெபத்தையும் பெற முடிந்திடாது.

ஒவ்வோர் ஊர்களுக்கும் சென்று மக்களுக்கெல்லாம் நல்லுணர்வு பெற, அக் கோவிந்த ஜெபம் பாடினுல் மட்டும் நல்லுணர்வு பெற முடிந்திடாது. எண்ணத்தைத் தூய்மை கொண்டு வணங்கிடுபவன், தானே ஆண்டவன் ஆகலாமேயன்றி அவ் ஆண்டவனின் சக்தியைப் பெற எப் பூஜையும் பஜனையும் வழி நடந்திடாது.

**6-2-80**

இறை ஆத்மாவின் அன்பு கொண்ட பக்தி ஜெபம் பெற்றவர்கள் அவ்விறைவனுகவே செயல்படுகின்றனர். ஒவ்வோர் உயிரணுவையும் தனதாக எண்ணி, அவ்வுயிராத்மாக்கள் படும் வியாதியின் சங்கடத்தை, இவ்இறை பக்தி கொண்ட, இறை ஆத்மாக்களினுல் ஏற்கப் பொறுக்காமல், அவ்வாத்மா வேறல்ல, தனதாத்மா வேறல்ல என்ற நிலைப்படுத்தி, ஒவ்வொரு சிறு உயிரணுவும், அதன் துடிப்பில் வேதனை உறுவதை, தன் உயிராத்மாவுடன் கலக்கவிட்டு, தானே அவ் வேதனைக்கு உடையவனுகி அதை அகற்றிடல் வேண்டும். மற்ற உயிரணுக்கள் எல்லாமே இன்புறல் வேண்டும், அது செய்த பாவத்திற்கு அது அனுபவிக்கின்றது, நாம் ஏன் வேதனையுறல் வேண்டும், என்ற சுய நல மிக்க ஆத்மாக்களினுல், நற்செயலையே செய்து, நல்லொழுக்கமே கொண்டு, வாழ்ந்து வழி வந்தாலும் மற்ற ஜீவ அணுக்களையும் தனதாக ஏற்காமல் செயல்படுபவன் சுயநல மிக்கவனுகின்றுன்.

எல்லா உயிரணுக்களுமே ஒன்றுதான் என்ற எண்ணம் கொண்ட உயிர் ஆத்மாக்கள்தான் ஞான ஒளியாகின்றுர்களே அன்றி, சுயநல மிக்க ஆத்மாக்களினுல் பக்தி நிலை பெறுவது கடினம். சிறு எறும்பு நம்மை வந்து கடிக்கின்றது. அக்கடி நிலை பொறுக்காமல் அதை நசுக்கி எறிகின்றோம். அவ் எறும்பின் ஜீவன் பிரிந்து விடுகின்றது. அதன் உருவம் நசுக்கப்படுகின்றது என்று எண்ணுகின்றோம். அதன் ஜீவன் எங்கு செல்கின்றது?

அதை நசுக்குபவரின் எண்ணத்திலேயே அவ் எறும்பு சேமித்த எண்ணத்தையும் அமிலத்தையும் அதை நசுக்குபவனே

ஏற்றிக் கொள்கின்றான். பல உயிர்களை உணவாக்கி உண்ணு கின்றோம். அதனால் அவைகளுக்கு, இம் மனிதர்களின் கையினால் பாவ விமோசனம் பட்டு, இம் மனிதர்களின் உடலிலேயே அவற் றின் சக்தியையெல்லாம் ஏற்றிக் கொள்கின்றோம் என்பதனை அறியாமல் நம் நாவின் சுவைக்காக நம்மை அறியாமல் நாம் பலி படுகின்றோம்.

எல்லா உயிர் அணுக்களுக்குமே எண்ணமுண்டு. இவ்வெண் ணத்தில் சேமித்த அமிலத்தின் நன்மை, தீமை கொண்ட குண நிலையுமுண்டு. ஓர் உயிர் ஜெந்துவை அழித்து உண்ணும் நாம், அஜ்ஜெந்துவின் நிலையையும் நம்முள் ஏற்றிக் கொள்கின்றோம் என்பதனை உணரல் வேண்டும்.

முந்தைய பாடங்களில் உணர்த்தியுள்ளேன் மனிதர்களில் இருந்துதான் மிருக ஜெந்துவும், பறவைகளும், ஊர்வனவும் வரு கின்றன என்று. மிருகங்கள் மற்றப் பறவைகள் மனித இனம் வருவ தில்லையா, என்று எண்ணிடலாம். இம் மனிதர்களால் மற்ற ஜெந் துக்களைப் புசிக்கும் நிலையில் அதன் சப்த அலையும், உயிரணுவும் அதன் உடலைப் புசித்தவனின் உடலுக்குள் ஏறிக் கொள்கிறது.

அறிவு வளர்ச்சி நிலை கொண்ட மனித ஆத்மாவில் ஏறிக் கொள்ளும் மிருக ஜெந்திற்கு, அம் மனிதக்கூட்டில் இருந்து, அம் மனித ஆத்மா பிரிந்த பிறகு, மனிதனின் உடலில் ஏறிய இஜ்ஜீவனுக்கும், மனித உருவாய்ப் பிறந்திடும் பக்குவ நிலைபெற்று பிறப்பிற்கு வருகின்றது.

அஜ் ஜெந்திற்கு இம் மனிதனால் விமோசனம் கிடைக்கின்றது. இம் மனிதனுக்குத்தான் மற்ற ஜீவனை உண்ட நிலையினால் அதன் குண நிலையின் வழித்தொடர் பெறுகிறான்.

இந்நிலையை உணர்ந்து, நாம் எல்லா ஜீவ ஆத்மாக்களிட மும், உயிரணுக்களிடமும் அவை வேறல்ல, நாம் வேறல்ல என்ற நிலையில் நம்மையே அவையாக்கி, அவையே நாமாகி அன்பென் னும் நிலைதனை கனிவாகப் படர விடல் வேண்டும்.

இன்று அவை கொசுவாகவும், குருவியாகவும், ஆடாகவும் இருந்திடலாம். அவையும் நம்மைப் போல் ஜீவன் கொண்டவை தான். எல்லா உயிரணுக்களையும் நமதாக எண்ணி கனிவு நிலையில் வழி நடந்திடுங்கள்.

இவ்வுலகிற்கும் எண்ணமுண்டு, ஜீவ, காந்த அமில சக்தி யுண்டு. இவ்வுலகினில் வாழும் அனைத்திற்குமே, மனிதன் முதல்

எறும்பு வரை உள்ள அனைத்து ஜீவராசிகளுக்குமே, எண்ணமும் உண்டு, அதற்குகந்த காந்த அமில சக்தியுமுண்டு.

யாருக்கு யாரும் மூத்தவருமல்ல, இளையவருமல்ல. எல்லாம் அப் பரம்பொருளின் ஐக்கியம் கொண்ட ஆத்மாக்கள் தான்.

**7-2-80**

எல்லாம் அப் பரம்பொருளின் ஐக்கியம்தான் என்ற எண்ண நிலை செயல்பட்டு, அவ் வழித்தொடரில் வாழ்ந்திடும் பக்குவத்தை மனித ஆத்மாக்கள் பெற்று அதன் வழித்தொடரினைச் செயல்படுத்திட நல்லுபதேசங்களை ஏற்றிடல் வேண்டும்.

அந்நல்லுபதேசத்தையே, நற்செயலாக்கிடல் வேண்டும், வயது வரம்பு இதற்கு வேண்டியதில்லை. பக்தியினால் மட்டும் தான் உபதேசிக்க முடிந்திடும் என்ற கால நிலை மாறிவிட்டது.

தீயோரைக் காண்பதுவும் தீதே,
தீயோர் சொல் கேட்பதுவும் தீதே
தீயோருடன் இணங்கி இருப்பதுவும் தீதே

என்றெல்லாம் முந்தைய காலத்தில் செய்யுள் படுத்தி உபதேசித்தனர். விஷமாய் தீய சக்தி படர்ந்துள்ள நிலையில், நற்சக்தியை, சத்தியத்தை நிலைநாட்டுபவர் கோடியில் ஒருவர் கூட இவ்வுலகினில் மிஞ்சவில்லை.

இவ்வுலகமே இப் பொருளாசை என்ற பேய்க்கு அடிமைப் பட்டு விட்டது. ஆலயங்களுக்குச் சென்றாலும் இப்பொருள் உள்ளவனுக்குத்தான் முதல் இடம். பொருளில்லார்க்கு இவ்வுலக மில்லை என்று எப்பொருளை வைத்து இவ்வாக்கியத்தை அமைத்தார்களோ அதுவே நிலைத்துப் பொருளுக்கே (பணம்) அடிமைப் பட்டு விட்டது இவ்வுலகம். பொருள் வைத்துத்தான் எச்சக்தியும் செயல் கொள்கின்றது, இன்று இப்பூமியில்.

பல மடாலயங்கள் அமைத்து அங்கு செயல் புரியும் மடாதிபதிகளே இப்பொருள் உதவி புரிபவரின் நிலைக்கொப்பத்தான் அவர்களை நடத்திடும் நடைமுறை உள்ளது. அவர்களின் சத்தியத்தை நிலைநிறுத்தப் பொருள் வேண்டுமாம். பஜனைகள் பாடிட ஆண்டவனின் அடிமை நாமம் பூண்டு ஒவ்வொரு திரு ஸ்தலங்களுக்கும் சென்று, அவ்வாண்டவனை எண்ணி துதி பாடப் பொருள் உதவி அளித்துத்தான் அவ்வாண்டவனுக்கும் துதி பாடுகின்றான் அப் பாடகன்.

அவனுக்கு இட்டிருப்பது ஆண்டவனின் நாமம். ஆண்டவனின் அடிமையாம் அவன். ஆனால் அவன் ஆண்டவனிடம் அவனைத் துதித்துப் பாடக் கூலி பெற்றுக் கொள்கின்றான். ஆண்டவனை மனமுருக, அன்புருக, பக்திப் பாடலை இவன் பாடுகின்றானாம்.

பக்தியையே விலை பேசிப் பாடுகின்றனர். அவனைத் துதிபாட இப் பக்கமேள மனித ஆத்மாக்கள் வேறு. ஆண்டவனின் துதி பாடப் பொருள் வாங்குபவனின் பக்தியினால் அவ்வாண்டவனின் அருள் எப்படிக் கிட்டும்?

தான் பிழைக்க வேண்டாமா? தன் சுற்றத்தாரை எப்படிக் காப்பாற்றுவது? என்ற வாதங்கள் புரிவார்கள். சோம்பேறி வாழ்க்கையாய், பிறரின் உழைப்பிலிருந்து கிடைக்கப் பெறும் ஊதியத்தை ஏற்று இப்பஜனை பாடித் திரிபவனின் ஆத்மாவெல்லாம் எந்நிலை பெறும்? எங்குள்ளான் அவ்வாண்டவன்? பொருள் வாங்கி இசைத்திடும் இசைப்பவனின் இசையும் அப்பொருளுக்குத்தான் அடிமைப்பட்டதேயன்றி, ஆண்டவனுக்கு அடிமைப்படவில்லை.

தன்னுள்ளே உள்ள ஆண்டவனை அன்பாக்கி, தன்னை ஒத்த அனைத்து உயிர் ஆண்டவ ஆத்மாக்களிடம் அன்பு பூண்டு, தன்னையே அவ்விசையின் இசையாய் பக்தி கமழச் செய்து தன்னைச் சார்ந்தோரையும் அப்பக்தி இசையில் வழி நடத்திடல் வேண்டும்.

ஒவ்வொரு நிலைக்கும் உம்மால் மாறுகொண்ட வாதம் உள்ளதே. சாதாரண நடைமுறை கொண்ட மனித ஆத்மாவினால் இச்சக்தி நிலையெல்லாம் பெற முடியுமா, என்று எண்ணுவீர். ஒவ்வோர் ஆத்மாவும் அச் சத்தியம் என்ற நேர் கோட்டைச் செயல்படுத்தினால் எத் தீய சக்தியும் நம்மை அண்டாது. தீயது என்ற சொல்லுக்கே இடமில்லாமல் தீயவர் நல்லவர் என்ற பாகுபாடு எண்ணம் கொள்ளாமல், நம் சத்தியக் கோடு நேராய் இருந்து விட்டால் எச் சஞ்சலத்திற்கும் இடமில்லை. தீயோரையும் காணலாம், தீயோர் சொல்லும் கேட்கலாம், தீயோருடனும் வாழலாம். தீயது என்று ஒதுங்கி ஏனப்பா செல்ல வேண்டும்? நம் சத்தியத்தின் நேர் வழியினால் நாமும் இவ்வுலகினில் உதித்த உயிரணுதான். தீயோன் என்று ஒதுக்கப்பட்டவனும் நம்மை ஒத்த உயிரணுதான். நம்மால் அத்தீயவனையும் நல்லுணர்வு படுத்திடலாம் என்ற ஜெப நிலை கொள்ள வேண்டும். ஒதுங்கி வாழ்வதல்ல வாழ்க்கை.

பல காலங்களுக்கு முன்னே போகரினால் ஸ்தாபிதம் செய்து வைத்த திரு முருகரின் சிலையே நவபாஷாணத்தைக் கொண்டு செய்விக்கப்பெற்றது. விஷத்தையே ஆண்டவனின் உருவமாக்கி,

அபிஷேக ஆராதனை செய்து இம் மனிதர்களை உண்ணச் செய்தான் அப் போகநாதன்.

இது எதை உணர்த்துகின்றது? விஷம் என்று ஒதுங்கிச் செல்வதினால் நம்மையும் விஷமாக்கிக் கொள்கின்றோம், பயந்த நிலையில்.

ஒவ்வோர் ஆத்மாவிற்கும் அச் சத்திய ஜெபம் ஓங்கல் வேண்டும். சத்திய ஜெபம் பெற்றுவிட்டால் எத் தீய சக்தியையும் நற்சக்தியாக்கிடலாம். நம் உடலில் உள்ள பல கோடி அணுக்களையும் நம் நிலைக்குக் கட்டுப்படுத்திடலாம்.

இந்நிலை பெற்றவனின் ஜெபத்தினால் அனைத்து சித்து நிலைகளையும் கண்டிடலாம், சித்தனுடனே கலந்திடலாம், சிவ பதம் எய்திடலாம். மனித எண்ணங்களின் தடுமாற்றத்தினால் இவ்வுலகமே இம் மனிதனால்தான் விஷம் கொண்டுள்ளது. சஞ்சலம் கொள்ளா அமைதி வாழ்க்கை வாழ்பவனுக்கு, அவனின் ஆரோக்கிய நிலையும் பாதிப்பதில்லை. அதன் வழித்தொடரில் எச் சிக்கலும் ஏற்படுவதில்லை. மனச் சஞ்சலத்துடனும், கோபத்துடனும் உள்ளவன் புசிக்கும் உணவு அவனுக்குச் செரிப்பதில்லை.

அவ்வுணவே விஷமாக, ஆவியான அமில நிலைகொண்டு இவ்வுடலுக்கு வாய்வு என்ற நிலை ஏற்படுத்தி அங்கங்கு உடல் உறுப்புகளில் தங்கி விடுகின்றது. சீராய் இவை வெளியேறிவிட்டால் அங்கங்கு தங்கி உள்ள இக்காற்றின் அமிலமே அங்கு உறைந்து மேலும் உண்ணும் உணவைச் செரிக்க விடாமல் இத்தங்கிய வாய்வு அமிலங்கள் உறைந்து, கோழையாய் கட்டி நிலைபெற்று, சளி பிடித்து, தும்மல் எய்தி, இருமலாகி இக்கோழை வெளி வரும்வரை இவ்வுடல் மண்டலமே அவஸ்தையுற்று அதன் தொடர்ச்சியில் பல நிலைகள் ஏற்படுகிறது.

அங்கங்கு தங்கிடும் இவ்வமிலத்தினால் சில உறுப்புகளும் கெடும் நிலை எய்துகிறது. இதன் தொடர்ச்சியில் பல வியாதிகள் மனிதனுக்கு வருகின்றன. நாமே சம்பாதித்துக் கொள்வதுதான் இவ்வியாதியே அன்றி உண்ணும் உணவிலிருந்து மட்டுமல்ல, மற்ற நிலையில் இருந்து மட்டுமல்ல நம்மைத் தொற்றிக் கொள்வது என்பதல்ல இவ் வியாதியணு.

வியாதியில் அடிபட்டவனின் சுவாசக் காற்றினிலே இந்நிலைகொண்ட அணுவைத்தான் வெளியிடுகின்றான். இவனைச் சார்ந்தவரின் நிலையையும் இவனின் வட்டத்தில் ஈர்த்துக் கொள்கின்றான். இவ்வெண்ணத்தின் நிலையை மாற்றுவதால் ஏற்படும் நிலையிலிருந்து நம் ஆத்மா தப்பும் நிலை பெறல் வேண்டும்.

8-2-80

இந்நூலின் வாயிலாய் இப்பாட நிலை புகட்டிய நாள் தொட்டே, யான் உணர்த்திய உயிர் ஜீவன் சுவாசத்தின் வழி பெற்ற எண்ண ஜெபத்தைத்தான் மையப்படுத்தி உணர்த்தி வருகின்றேன்.

இவ்வெண்ணம் செயல்பட அன்பு, சத்தியம் இவற்றின் நியதி பெறல் வேண்டும். சத்திய நிலை பெறப் பல ஆண்டுகளாய் வாழ்ந்து வந்த வழியிலிருந்து, இச் சத்தியத்தை நிலைநிறுத்தச் சில கடின நிலைகளை ஏற்க வரும் இத் தருணத்தில், அன்பென்னும் ஆயுதத்தினால் தான் செயல்படும்.

இவ் அன்பினாலேதான் எச்செயலையும் நிலைநாட்ட முடியும். அன்பிற்கு அடிமைப்பட்டதுதான் அனைத்துமே. நம்மை அன்பாக்கி அவ் அன்பையே எல்லா நிலையிலும் செயல்படுத்திடல் வேண்டும். நம் அன்பிற்குப் பிரதிபலனை எதிர்பார்த்துச் செயல் கொள்ளும் நிலைதனை அகற்றல் வேண்டும்.

நாம் அன்பு செலுத்துகின்றோமே அவ்வன்பின் பிரதிபலிப் பிற்காக ஏங்கிடும் எண்ணத்திற்கு நாம் செலுத்திய அன்பும் விரயம் கொள்கின்றது. பிறரின் அன்பிற்காக ஏங்காதீர். நம் மையே அன்பாக்கி அவ்வன்பின் சக்தியை அனைத்திலும் செயல் படுத்திடுங்கள். இவ்வன்பு வழியைப் பெற்றுவிட்டால் சத்திய நிலை ஏற்பட்டுவிடும்.

பிற அன்பிற்கு அடிமை கொண்டும் விடாதீர். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற சத்திய நியதியைத்தான் இவ்வுலகமே செப்புகின்றது. ஆனால் அதனைக் கடைப்பிடிக்கும் ஆத்மாக்கள் இப்பரந்த உலகில் கோடியில் சிலர்தான்.

மதங்கள் என்ற ரூபப்படுத்தி ஒரே குலத்தைத்தான் அனைவரும் போதிக்கின்றனர். ஆனால் இவர்களே எம்மதம் சிறந்தது? என்ற வினாவினையும் எழுப்புகின்றனர். எம் மதமாயினும், எச் செயலா யினும் அவர்கள் வகுத்த சத்திய நியதியைச் செயல் கொள்ளும் சிறந்த நிலையுடையதுதான் சிறந்த மதம்.

இந்து மதமும், இஸ்லாமிய மதமும், கிறிஸ்துவ மதமும்தான் இவ்வுலகினில் தனித்தனி நிலையாய்ச் செயல் கொள்கின்றன. இதன் தழுவலில் பல மதங்கள், ஜாதிகள் என்ற ரூபங்கள் வழி பெற்றுவிட்டன.

ஒவ்வொரு மதத்திற்கும் ஒவ்வொரு நெறிமுறைகளுண்டு. அதற்குகந்த தத்துவத்தையும் உணர்த்துகின்றனர், அவரவர்கள் மதம் சிறந்ததென்று.

எம் மதத்தவரும் தம் மதத்தின் நிலையைத்தான் பெரிதாகப் போற்றி வருகின்றனர். ஒவ்வொரு மதத்திற்கும் அம் மதம் பிறந்த கால கட்டத்தை உணர்த்துகின்றனர்.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற நிலையினைப் பிரித்துத் தனக்குச் சாதகமான வழி முறைகளை வகுத்துக் கொண் டவன், அவனுக்குகந்த தன்மையில் தன் மதத்தை வளர விடு கின்றான். நம் இந்து மதத்தில் ஒரே நிலையையே பலவாக்கி வணங்கு கின்றனர்.

இஸ்லாமிய மதத்தில் அவ் அல்லா என்ற ஒன்றே ஆண்டவன் என்ற சத்திய நிலைப்படி, அவ்வழி நிலை செயல் கொள்கின்றது. அவர்கள் வழியில் வந்த குர்ஆனின் வேத வாக்குப்படி இன்றளவும் மாறுகொண்ட ஆண்டவனின் ரூபத்தைக் காணாமல், அல்லா என்ற ஒரே கடவுளைக் காண்கின்றனர்.

கிருஸ்து மதத்தில் பரமபிதா என்ற ஜெபத்தை ஜெபித்து, அவ்வழித் தொடர் பெற்றாலும் அதனையே சிலர் இரண்டு நிலைப் படுத்திவிட்டனர். அதிலும் தடங்கல் ஏற்பட்டுவிட்டது. ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்ற நிலை.

நம் இந்துமத வழிபாட்டில்தான், இராமரின் நிலையை ஆண்டவனுக்கி இராமருக்கு ஒரு மனைவி, ஏக பத்தினி விரதம் கொண்டவர் இராமர் என்று ஒரு காலத்திலும், கிருஷ்ணருக்குப் பல மனைவிகள் என்று ஒரு காலத்திலும், முருகருக்கு இரண்டு மனைவிகள் என்று ஒரு காலத்திலும், நம் இந்துமதச் சட்டத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலையினையும் உணர்த்தி, பல வழிகளைச் செயல் கொள்கின்றோம்.

தன் செயலுக்குகந்த சாதகப்படி, நம் சட்டத்திலேயே பல ஓட்டைகள் வைத்து, மனைவி தாம்பத்ய நிலைக்கு உகந்தவளல்ல என்ற நிலையிருந்தால், மறுமணம் புரியலாம் என்றெல்லாம் சாதகப்படுத்தி, நமக்குகந்த சத்திய நிலையைக் காலப்போக்கிற்குத் தகுந்த நிலையில் நாம் வாழ்கின்றோம்.

இந்து மதத்தின் பிறப்பு நிலை அறிந்தாரில்லை. ஒன்றே குலம் என்ற நிலையில் ஏற்பட்ட மாற்றத்திலிருந்து பிரிந்து சென்று மத மானதுதான் கிருஸ்து மதமும், இஸ்லாமிய மதமும்.

நம் இந்து மதத்தின் நெறி முறையென்ற வழி நிலை சத்திய நிலையில் உணர்த்துவாரும் இன்றில்லை. நம் இந்து மதத்தின் நிலையிலிருந்துதான் பல சித்தர்கள் வெளிப்பட்டார்கள். ஆனால்

சித்தர்கள் உணர்த்தியதை உணர்ந்து செயல் கொள்ள நம் இந்து மதத்தாரின் எண்ணங்கள் கூடி செயல்படுத்தவில்லை.

மதங்களில் சிறந்தது எது, என்பது எம்மதமாயினும் அச் சத்திய நியதியைக் கடைப்பிடித்துச் செயல்படுமாயின் அதுவே சிறந்தது. மதம் என்ற பிரிந்த எண்ணத்திற்கே எண்ணத்தை அடிமை கொள்ளாமல், எல்லாம் ஒன்றே, ஒருவனே தேவன், அத் தேவனின் சக்தி புத்திரர்களாய் சகலத்துடனும் கலந்தே வாழ்ந்திடல் வேண்டும்.

**9-2-80**

எல்லாவற்றுடனும், எல்லாமாய்க் கலந்துள்ள அவ் எம்பெருமானின் நிலையில் ஏன் எல்லாச் செயலும் அவனால் நடக்கப் பெற்று செயல் கொள்ளக் கூடாதா? இவ் ஏற்றத் தாழ்வும், எண்ண மாற்றமும் எதற்கப்பா?. எல்லாமும் அவனே என்றிருக்க எண்ணிய நிலை ஏன் நடப்பதில்லை? எண்ணமும் அவனே, செயலும் அவனே· எண்ணமும் செயலும் அவனாய் இருக்க, அவனே ஏன் செயல் கொள்ளலாகாது? என்ற எண்ணமும் நமக்குள்ளே.

அனைத்துமே பரம்பொருள்தான். அப் பரம்பொருளின் பொருளாய் உள்ள அனைத்திற்கும் ஏற்றத்தாழ்வு நிலை ஏன்? அன்பாயும், ஆசையுடனும், அறநெறியுடனும் வாழ்கின்றனர் ஒருசிலர். வாழ்க்கையையே இன்னலில் மூழ்கவிட்டு, நரகமாகவும் வாழ்கின்றனர் ஒருசிலர். எல்லாரும் எல்லாமுமாய்க் கலந்துள்ள அப் பரம்பொருளுக்கு ஏன் இம்மாற்ற நிலை?

பரம்பொருளினால் படைக்கப்பெற்ற எல்லாப் பரம்பொருளுமே அவன் படைப்பில் சக்தி பெறச் செய்கிறான். அப்பரம் பொருளின் சக்தியில் சக்தி பெற்று வழித்தொடர் பெறும் பரம் பொருள்கள், அப்பரம் பொருளிடமே ஐக்கியப்பட்டு, அதன் தொடர்ச்சியில் பல பரம்பொருள்கள் சுழன்று கொண்டே செயல் கொள்கின்றன.

உயிரணுவாய் உதித்து, பல மாற்றங்களில் அவ்வுயிரணு செயல்பட்டு, அதன் தொடர்ச்சியிலிருந்து, உயிர் ஜீவிதம் பெற்று இஜ் ஜீவிதத்தின் தொடரினால் ஜீவ ஆத்மாவாய் ஜீவ சக்தியுற்று இவ் ஆத்மா நிலைபெற்று, ஒவ்வோர் ஆத்மாவிற்கும் அவ்வாத்ம நிலையில் ஏழு சந்தர்ப்பங்களில்தான் அவ்வாத்மாவினால் நற் சக்தியான சூட்சுமம் கொள்ளும் வழித்தொடரை அடைய முடியும்.

உயிர் ஆத்மா பெற்ற நிலையிலிருந்து சேமிக்கும் அமிலத்தின் தொடர் இவ் ஏழு சந்தர்ப்பத்தைப் பெறும் வழித்தொடர் கொள்ளும் அமில சக்தியை, இவ் ஏழு தொடரில் ஞானத் தொடர் வழியை அறிந்து, அத்தொடரையே தொடராக்கி சக்தி கொண்டிட்டால், அந்நிலையில் சித்துநிலை பெற்று இவ்வாத்மாவைச் செயலாக்கும் சக்தியாய், மண்டல உருப்பெறும் நிலை கொண்டு, ஒவ்வோர் உயிராத்மாவின் வட்டத்திலும், ஒவ்வொரு மண்டலமாகிடும் பக்குவம் பெற்று, மண்டலத்துடனே வளர்ச்சியுற்று, அம் மண்டலமே உலகாய்ச் சுழன்று, பல உயிரணுக்களை ஈர்த்து வளர விட்டுச் செயல் கொண்டிட முடியும்.

இவ்வுலகில் மட்டுமல்ல பலகோடி மண்டலங்களும் இப் பால்வெளி மண்டலத்தில் படர்ந்துள்ள எண்ணிலடங்கா ஜீவ சக்திகளும் அப்பரம் பொருளினால் படரவிட்டவைதான். கொசுவாயும், சாக்கடைத் திரவமாயும் உள்ளவையும் அப்பரம்பொருளின் ஐக்கியம்தான். ஜோதியுடன் ஜோதியாய் எரிந்திடும் கற்பூரமும் அப்பரம் பொருளின் ஐக்கியம்தான்.

அப் பரம்பொருளான அவ் ஆதி சக்தி அனுப்பிடும் உயிரணுக்களில், அவையவை எடுக்கும் சுவாச சக்தியைக் கொண்டுதான், அவரவர்களுக்கு அமையும் வாழ்க்கை நிலையும், செயல் முறையும் வந்திடும்.

விருந்தில் போஜனம் படைக்கிறார்கள். பல பதார்த்தங்கள் இருந்தாலும் நம் எண்ண நிலைக்கொப்ப நம் சுவாசம் எதை ஈர்த்து நம் நாக்கு ருசிப்படுத்துகிறதோ, அவ்வுணவைத்தான் நம் எண்ணம் விரும்புகிறது. அதைப்போல் நாம் எடுக்கும் அமில சக்திக்குகந்த சுவாசத்தைக் கொண்டுதான் ஒவ்வோர் உயிராத்மாவிற்கும் அப்பரம் பொருளின் ஆசியும் கிட்டுகின்றது.

மண்டலமாயும் சுழல்வது உயிராத்மாதான்; புழுவாய் நெளிவதுவும் இவ்வுயிராத்மாதான். பரமாத்வாவின் வழி பெற்று வந்த இவ்வுயிரணு எடுக்கும் சுவாசம் கொண்டு நடப்பதுதான் அனைத்துமே.

மண்டலமாய்ச் சுழன்றாலும் மண்டலத்திற்கும் எண்ணமுண்டு சப்தரிஷிக்கும் எண்ணமுண்டு.

பரமாத்மாவின் நிலையுடன் ஐக்கியப்படும் நிலையென்ன? சப்தரிஷியாய் சகலத்திலும் ஒளிர்ந்து, ஒளியாய்ச் செயல்கொண்டு, சூரியனாய் ஒளிபெற்றாலும், அச் சூரியனுக்கும் 'தான்' என்ற நிலை வந்துவிட்டால் கோடி கோடி கோடி ஆண்டாய் பெற்ற சக்தியும் இழக்க நேரிடும்.

மனித ஆத்மாவாய் இருந்துதான் ஒளியுடன் கலந்திட முடியும். அவ்வொளியின் ஈர்ப்பினுல் மண்டலமாய்ச் சுழன்று செயல் கொண்டிட முடியும். செயலிலேயே வழித்தொடர் பெற்றுச் சூரியனும், சூரியனுக்கு மேல் சக்தி பெற்ற பல சூரியனும் சுழன்றிட முடியும்.

அனைத்தையுமே செயல்படுத்திடும் அப் பரம்பொருளிடம் ஐக்கியப்படும் சக்தியைப் பெற்றிடும் சக்தியை அப் பரம்பொருளான அவ் ஆதிசக்திக்குத்தான் தெரிந்திடும் அனைத்துமே. அவரவர்களுக்கு அளிக்கும் சந்தர்ப்பத்தைக் கொண்டு பல கோடி ஆண்டுகள் வளர்ச்சியுறல் வேண்டும். இம்மனித ஆத்ம உடலிலேயே வளர்ச்சி பெற்ருல்தான், நம் ஆத்மா ஒளியுடன் கலக்க முடியும். இச் சந்தர்ப்பத்தை நழுவவிட்டால் மிருக ஜெந்துவாகி, மிருகத்திலிருந்து கொசுவாய், புழுவாய், பிறிதொரு உலக மாற்றத்திலிருந்து, இவ்வுயிரணுக்கள் உயிராத்மா நிலை பெற எண்ணிலடங்கா ஆண்டுகளாகி அச் சந்தர்ப்பத்தில், நம் ஆத்மா எய்தும் நிலையைக் கொண்டுதான், நம் நிலை உயர்ந்திட முடியும். இதனை உணர்ந்தே பரம்பொருள் என்பது யாது? அப்பரம்பொருளுக்கென்ன ஏற்றத்தாழ்வு? ஆண்டவன் அளித்த கஷ்டம் என்று வாழ்க்கையை எண்ணுமல், இன்று வாழும் நம் ஆத்மாவை நல் ஞானம் பெறும் நிலையை எய்திட, நம் ஆத்ம நிலை எப்படிச் செயல் கொண்டிடல் வேண்டும்? எப்படி எப்படி நம் வாழ்க்கை முறை அமைய வேண்டும்? என்பதனை உணர்ந்து நம் சுவாசம் சத்தியத்துடன் கலக்கும் நிலையினை முதல் பாடமாய் பெறும் வழியினை உணர்த்திடுவேன்.

ஒவ்வோர் ஆத்மாவுக்குள்ளும் அவ்வாத்மாவின் உடலில் பல உயிரணுக்கள் உள்ளன. எவ்வாத்மாவும் தனித்து வாழவில்லை என்பதனை முதல் பாடமாய் உணரல் வேண்டும். ஒவ்வோர் ஆத்மாவுக்குள்ளும் உள்ள உயிரணுக்கள் அவ்வாத்மாவின் எண்ணத்தைப் பல திசைகளில் மாற்றிச் சென்று வாழச் செயல்படுத்துகின்றது.

அவ்வுயிரணுக்களின் ஆசைக்கும் அதனுடைய தூண்டுதலின் சோர்வுக்கும் நம்மை அறியாமலே, நமக்குத் தெரியாமலே அடிமைப்பட்டு சிக்குண்டுள்ளோம். நம் ஆத்மா, ஞானம் பெற்று ஒளி பெறும் நிலையினுல் நம் உடலில் குடி புகுந்துள்ள பிற உயிர் அணுக்களுக்கும் நம்மால் விமோசனம் கிட்டும். நம் உடலிலுள்ள அமிலத்தை ஞானத்தின் அமிலமாக்கி பரமாத்மாவின் சொத்துத் தான் நாம், என்பதனை உணர்ந்து தீய எண்ணப் பேய்க்கு அடிமை கொண்டிடாமல் நம் ஆத்மா செயல்படுவதினுல் நம்முள் உள்ள பலகோடி உயிரணுக்களும் இவ்வெண்ணத் தொடரின் சக்தியினுல் ஒளிர்ந்திடும்.

ஒவ்வோர் உடலிலிருந்தும் ஒவ்வோர் ஆத்மா பிரியும்பொழுதும் அவ்வுடலுடன் கூடிய உயிரணுக்களுக்கு அவ்வுடலில் எடுத்த சுவாசத்தின் வழித்தொடர் கொண்டே இக்காற்றினில் படர்ந்து சுற்றுகின்றது.

இப்பொழுது நாம் வாழும் இவ்வாழ்க்கை உடலில் உள்ள உயிரணுக்கள் இவ்வுடல் காலத்தில் மட்டும் நம் உடலில் ஏறவில்லை. ஒவ்வோர் உயிரணுக்களுக்கும் எண்ணமுண்டு, சுவாசமுண்டு, அமில சக்தியுமுண்டு. மனித ஆத்மாவின் உடலில் உள்ள இவ்வுயிரணுக்களினால் இம் மனிதனின் எண்ணத்தை அதற்குகந்த ஆசையின் நிலைக்கொப்பத் திசை திருப்பிட முடிந்திடும்.

நம் ஆத்மா செயல்கொள்ள முதலில் நம் உடலில் உள்ள உயிரணுக்களைத்தான் நம் வசப்படுத்திடல் வேண்டும். தொடர் நாளை.

**10-2-80**

எம் சங்கத்தின் அன்பர் டாக்டர் கிருஷ்ணன் அவர்களுக்கு சத்தியத்தின் சக்தி நிலையை ஈர்த்து சஞ்சிகைக்கு சில நிலைகளை உணர்த்திட இன்றைய பாடம் தரப்பட்டது.

**11-2-80**

நம் உடலிலுள்ள அனைத்து உயிரணுக்களையும் நம் வசப்படுத்தி, நல் அணுக்களாய்ச் செயல் கொள்ளப் பக்குவம் பெறல் வேண்டும். சுகம், துக்கம், சஞ்சலம், சாந்தம் சகலமும் கலந்த நிலைதான் ஒவ்வொரு மனித ஆத்மாவின் வாழ்க்கையிலும் நடைபெறுகின்றது. நாம் உண்ணும் உணவிலிருந்து மட்டும் நம் உடலுக்குகந்த அமிலத்தன்மை பெற்றுள்ளோம் என்பதல்ல.

ஒவ்வொரு மனிதனுக்கும் அம்மனித ஆத்மா பெற்ற நிலையிலிருந்தே, அவ்வாத்மாவுக்குகந்த எண்ண சக்தியின் சுவாசத்திலிருந்துதான், அம்மனிதனின் உடல் உறுப்புக்களும், அவ்வுடலின் பிம்பமும், அவ்வுடலின் வண்ணமும் அமைகின்றன.

எண்ணத்தைக் கொண்டு எடுக்கும் சுவாச நிலைக்கொப்பத் தான், உடலின் பிம்ப நிலையும், அதற்குகந்த அமில சக்தியின் செயல் கொண்டு சேமித்த எண்ணத் தொடரின் நிலைகளும் அவ் உடல் பெறுகின்றது. மேல் நோக்கிய சுவாசம் கொண்ட தாவர இனங்கள் அவற்றுக்குகந்த ஆகாரத்தைச் சுவாசமாய் மேல் நோக்கியே சூரிய வெப்பத்திலிருந்து இக்காற்றினில் கலந்துள்ள தனக்கு உகந்த ஆகாரத்தை ஈர்க்கும் தருவாயிலேயே ஒரு நிலை கொண்ட

தனக்கு வேண்டிய ஆகாரத்தை மேல் நோக்கிச் சுவாசித்து ஆவியாக்கி ஈர்த்து அவ்ஆணிவேரின் நிலைக்குப் படரவிட்டு, பூமியில் வேரினுள் சேமித்துக் கொள்கின்றது.

மேல் நோக்கிய சுவாசம் பெற்ற தாவரங்களின் நிலைக்கொப்ப, சக்தி நிலை ஜீவ ஆத்மாக்களுக்கு இல்லை. நாம் உண்ணும் உணவிலிருந்து அவ்வுணவே அமிலமாகி, அவ்வமிலமே நம்மை வளர்க்கின்றது. நம் எண்ணமும் இவ் அமிலத்துடன் கலந்து செயல் கொள்கின்றது. நம் மனித ஆத்மாவை, நம் செயலுக்குகந்த நிலை கொள்ளும் பக்குவம் மேற்கொள்ள, நமக்கு என்று நம் சக்தியை எவ்வெண்ணத்தின் சக்தியுடைய ஞானம் பெறும் நிலை எய்துகின்றோமோ, அத் தொடர் பெற்றிட நம் எண்ணத்தைச் சமமாக்கினாலன்றி எந் நற்சக்தியின் வழித் தொடரை அடைவதும் சிரமம் கொள்கின்றது.

நம் ஆத்மாவை நாம் நற் ஜெப சக்தியின் வழி பெற்றிட நம் ஆத்மாவும் அப்பரமாத்மாவும் ஒன்றே என்ற நிலை எய்திட, நாம் பக்குவ நிலை கொள்ளும் தருவாயில் நம் நிலையைக் கண்டு ஏளனம் செய்பவரின் எண்ணத்தையும், புகழ்பவரின் எண்ணத்தையும் நம் எண்ணத்துடன் மோதவிடலாகாது.

ஞானத்தின் வழித்தொடர் பெற்ற பின் சலிப்பு நிலையையும், சங்கட நிலையையும், பேராசை நிலையையும் நம்மை நாமே ஆட்படுத்திக் கொண்டிடலாகாது. பலருடன் கலந்து வாழ்ந்திட முடியவில்லையே என்ற ஏக்கப் பெருமூச்சும், நாம் சென்றிடும் சத்தியத்தின் வழிக்கு உகந்ததல்ல. ஞானம் பெற்று, நற் சக்தியை ஈர்த்தே சித்துநிலை பெறுவதற்கு இவ்வெண்ணச் சிதறலை மாற்றியே, சமமெய்திடும் முறை பெற்றே, நம் ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்னும் உணர்வு பெற வேண்டும்.

இவ் வாழ்ந்திடும் குறுகிய காலத்திற்காக நம் ஆத்மாவுக்கு உகந்த சக்தியைப் பெறாமல், சிதறவிட்டு வாழ்ந்திடாமல், நம் ஆத்மாவிற்குத் தான் நல் ஞானத் தொடர் பெற்று, சத்தியத்துடன் கலக்கப் போகின்றோமே என்ற 'நான்' என்ற நினைப்பும் சத்திய நிலைக்கு உகந்ததல்ல.

அனைத்து ஆத்மாவுடன் கலந்தே மற்ற ஆத்மாவிடமிருந்து ஒதுங்கிய நிலை பெறாமல், நம் ஆத்மாவிற்கு நற்சக்தியைச் சேமித்திடல் வேண்டுமப்பா. உண்ணும் உணவும் அவனே. உணரும் உணர்வும் அவனே. எண்ணக் கலவையும் அவனே. எடுக்கும் ஞானமும் அவனே. ஞானத்தின் சத்தியமும் அவனே, என்பதனை உணர்ந்து இவ்வுடலும், நம் உணர்வும், இவ்வுலகமும் மற்ற

எதுவுமே நமக்குச் சொந்தமல்ல. அனைத்திலும் அனைத்தாக உள்ள அவ்வனைத்தாண்டவனுடன் ஒன்றிடும் பக்குவத்தைத்தான் நாம் பெற்று நம் உடலிலுள்ள அனைத்து உயிர் அணுக்களையும் நல் லெண்ணம் பெறும் சக்தியாக்கிட நம் சக்தியை வளரவிடல் வேண்டும்.

பாட நிலையில் உமக்கு உணர்த்தி வரும் இவ் ஈஸ்வர பட்டரின் நிலையென்ன, என்பதனை உணர்த்திட இதனைப் படித்திடும் அனைத்து ஆத்மாக்களுக்கும் எண்ணம் தோன்றிடும். எம் நிலையை தியானத்தில் ஈர்த்த அன்பரின் நிலையுடன் உணர்த்திடுவேன்.

**12-2-80**

சத்தியத்தின் சக்தி நிலைச் சங்கத் தலைவருக்கு உணர்த்திய தின் நிலையினால் பாட நிலை தவிர்க்கப்பட்டது.

**13-2-80**

### சத்தியத்தின் சக்தி நிலைச் சங்கம்
### கொள்கைகள்

ஓம் ஈஸ்வராய நம!
ஓம் புத்தாய நம!
ஓம் இயேசுவே நம!
ஓம் முகமது நபியே நம!

(1) எல்லாமில் எல்லாமாய் உள்ள
ஆண்டவனை யார் என்று அறிதல்.

(2) இயற்கையையே கடவுளாக்கி
அன்பையே தெய்வமாக்கி
நல்லெண்ணம் நல் சுவாசம்
எடுக்கும் முறையை வழிப்படுத்துதல்.

(3) எண்ணமேதான் கடவுள், கடவுளேதான் எண்ணம்.
எண்ணத்தைப் பரிசுத்தப்படுத்தினால் கடவுளைக்
காணலாம் என்ற வழித்தொடரை உணர்த்துதல்.

(4) நல்லெண்ணம் பெற்று, நல் சுவாசம் எடுத்து
எண்ணத்தையே மணமாக்கி ஆத்மாண்டவனுக்கு
நாம் சேமிக்கும் சொத்தை உணர்த்துதல்.

(5) செல்வச் செழிப்போடு வாழ்ந்திட வேண்டும்;
செல்வத்திற்கே நாம் அடிமையாகி விடக்கூடாது
என்பதனை உணர்த்துதல்.

(6) சொல், செயல், எண்ணம், எல்லாமே
நம்முள் உள்ள இறைவனை வணங்கவே.

(7) ஓம் என்ற நாதத்தின் உண்மை நிலை
என்ன என்பதனை உணர்த்துதல்.

(8) மதம் என்ற பிடியிலிருந்து
எல்லா மதமும் ஒன்றே என்ற
சத்திய நிலையை உணர்த்துதல்.

(9) உண்ணும் உணவை நமதாக்கி
உணரும் உணர்வை அவனுக்கி
வாழ்க்கையுடன் கூடிய இல்லறத்தில் இருந்தே
ஞானத்தின் வழித்தொடர்
அறியும் முறையை உணர்த்துதல்.

(10) இவ்வுலகத்தின் ஆத்மாக்களை சத்திய நிலைக்கு
ஈர்த்துக் கலியின் மாற்ற நிலையிலிருந்து
கல்கிக்கு அழைத்துச் செல்லல்.

**14-2-80**

ஈஸ்வரபட்டர் என்ற நாமமுடைய உங்களினுல், குருவின் குருவாய் சூட்சும நிலை கொண்டு காணும் எம் நிலையை அறிய, எம் நிலையென்பது, ஈஸ்வரபட்டர் என்ற நாமகரணம் கொண்ட அவ்வுடல் ஆத்மாவில் யாம் செயல் கொண்டதையும், எம் சக்தி நிலையை எந்நிலையில் உணர்த்தி வந்தோம் என்பதனை அறியவும், அனைத்து ஆத்மாக்களுக்குமே ஆசையுண்டு.

இன்று கர்நாடக மாநிலம் ஆகியுள்ள அம் மாநிலத்தில், மங்களூருக்கு அருகில், கன்னட பிராமண குடும்பத்தில், பல நாள் புத்திர பாக்கியம் இல்லாமல் தவித்து வந்த குடும்பத்தில் முதல் மகனாய் ஜெனனம் பெற்றேன்.

ஈஸ்வர மங்கலம் என்ற ஊரிலிருந்து, சில கல் தொலைவில் உள்ள கிராமத்தில், பாக்குத் தோட்டங்கள் விவசாயத்தில் முக்கியத்துவம் உள்ள கிராமத்தில், அவ்வூரின் நாமம் அவ் ஊரில் உள்ள கோவிலின் நாமம், அங்குள்ள குடும்பங்களின் நாமம், எல்லாமே ஈஸ்வர நாமத்தை முதன்மை பெற்று உள்ள சிற்றூர் அது.

பல காலம் புத்திர பாக்கியம் இல்லாமல் பிறந்த ஈஸ்வரப் பட்டன் யான். யான் பிறந்து சில மாதங்களிலேயே தந்தை இறந்துவிட்டார். தாயினுல் வளர்க்கப்பெற்று, தாயின் ஜீவிதம்

கொண்டு சிறு கல்வி அறிவும் பெற்று, வளரும் பக்குவத்தில் தாயும் இறந்தார். சகோதர, சகோதரிகளின் பாக்கியமும் பெருமல் தனித்து விடப்பட்டேன். கோவிலில், ஈஸ்வரர் கோவிலில் அவ்வாண்டவனே அனைத்தும் என்ற நிலையில் எண்ணம் குன்றி ஜீவிதத்திற்கு வழியறியாமல் அவ்வாண்டவனை பூஜிப்பதிலேயே எம் ஜீவன் பிரிந்தது.

எம் ஜீவன் பிரிந்த நிலையில் என் உடலை, ஒரு மகான் ஏற்றுக் கொண்டே என்னையும், என்னையும் என்பது, பிரிந்த என் உயிராத்மாவை அம்மகான் அவ்வுடலைச் செயல்படுத்த ஏற்றுக் கொண்ட நிலையில், அவ்வுடலில், நான் விட்டுப் பிரிந்த உடலில், அம் மகானினுல் அவ்வுடலுக்கு ஈர்க்கப்பெற்று, அம்மகானே எம் உயிரையும், எம் உடலையும் வழி நடத்தி எம்மை, எம்மை என்பது ஈஸ்வரப்பட்டர் என்ற உடலைச் செயலாக்கினுர்.

பதினுருவது வயதில் பழனிக்கு வந்தோம். வந்தோம் என்பதின் பொருள் புரிந்ததா? எம் உடலை ஏற்ற அம்மகானின் செயல் நிலை வெளிப்படும் நிலையிலிருந்து நான் வேறல்ல அம் மகான் வேறல்ல என்ற நிலையில், அம்மகானேதான் எல்லாமில் எல்லாமாய் செயல்கொண்டார்.

மகான் என்பது ஒளியுடனே ஒளியாய் அனைத்திலும் கலந்துள்ள அவ்வாதவனுன சூரிய மகான்தான். இவ்வுடலை ஏற்றுச் செயல்கொண்டார். இனி யான் என்று ஈஸ்வரப்பட்டரின் எம் நாமத்தை எனதாக்கிச் செப்பிட யாதுள்ளது? அவ்வாதவனுக்கே அர்ப்பணித்த உடல். அவ்வாதவனிடம் ஐக்கியப்பட்டுவிட்டது எம் உயிராத்மாவும்.

மகான்களின் நிலையெல்லாம் பிற உடலை ஏற்றுத்தான் சில நிலைகளை அவர்களின் ஒளி வட்டத்திற்குள் மற்ற உயிரணுக்களையும் சேர்த்திடச் செயல் கொள்ளும். இப்பூமியில், இப்பூமி உயிராத்மாக்களை வளரவிட்ட காலம் தொட்டே மகான்களாய் சக்தி பெற்ற பல ஆத்மாக்கள் உள்ளன.

அவ்வாத்மாக்களின் நிலைபெற்ற மகான்களெல்லாம், அவர்கள் பெற்ற சக்தியை, இவ்வுலகினில் ஒவ்வொரு ரூபத்தில் இன்றளவும் வெளிப்படுத்திக் கொண்டேதான் உள்ளனர். மற்ற ஜீவ ஆத்மாக்களின் மூலமாய்த்தான் அவர்களின் செயல் நிலையெல்லாம் கலந்திருக்கும்.

போகர் எப்படி முருகா என்ற பிரணவ நாமத்தையும் இன்னும் இவ்வுலகினில், அங்கங்கு இப்பக்திநிலைக்கு, தனக்குகந்த

நாம சக்தியைச் சுழலவிட்டே எண்ணங்களுக்கு பக்தி நிலையூட்டி, அப்பக்தி நிலையில் ஈர்ப்பு நிலை கொண்ட நல்ல ஆத்மாக்களையெல் லாம், அவ்வாத்மாக்கள் ஜீவன் கொண்டு வாழ்ந்த வாழ்க்கை நிலையிலேயே, இவரின் ஒளி வட்டத்தைப் பாய்ச்சி இவரின் ஈர்ப்புக் குள் பல ஆத்மாக்களை ஒளியாக்கி கலக்கச் செய்து கொள்கின்றார்.

'ஓம் முருகா' என்ற அந் நாமத்திலேயே அவரின் ஒளியைப் பாய்ச்சி, ஒளியை ஈர்த்து, ஒன்றைப் பலவாக்கி, பலவற்றை நிறை வாக்கிக் காண்கின்றார்.

ஒவ்வொரு மகானும் இந்நிலையில்தான் அவர்களின் நல் உணர்வை நலமாகப் பரப்பிட ஒவ்வொரு நாமத்தை ஆண்டவனாய் வெளிப்படுத்தி இம் மனித ஆத்மாக்களை நல்லுணர்வாக்கினார்களே யன்றி, இன்று நாஸ்திக வாதத்தில் கேட்கப்படும் இந்து மதத் திற்கு ஏன் இவ்வளவு ஆண்டவன்கள்? என்ற வினா எழுப்பப்படும் நிலைக்காக அல்ல. இந்து மதத்தின் உண்மை நிலை இதுதான்.

ஒவ்வோர் உயிராத்மாவும் நல் நிலை பெற்று, அந் நல்ல தையே அனைவருக்கும் உணர்த்திடத் தன்னையே ஒளியாக்கி, அவ்வொளியையே அனைத்திலும் காணப் பல ரூபங்களைக் கல்லி லும், மண்ணிலும் வடித்து இம் மனித ஆத்மாக்களின் எண் ணத்தை அவ்வொளி வட்டமுடன் நல்லுணர்வு பெற வேண்டும் என்ற நிலைப்படுத்தி வந்த நிலைதான் இந்து மதத்திலுள்ள இப் பல ஆண்டவன்களின் நிலை.

**16-2-80**

ஒவ்வொரு மதத்தவரும் ஆண்டவனை அவரவர்கள் உணர்ந்த நிலையில் உலகிற்கு உணர்த்தி வந்தார்கள். அனைத்து ஆத்மாக் களுக்குமே நல்லுணர்வு பெற வேண்டுமென்று அவர்களை அறியா மலே அவர்களுக்குள்ளும் ஓர் எண்ண நிலை ஓடிக்கொண்டுதான் உள்ளது. ஆனால் அவரவர்கள் வளர்ந்த நிலையினால் செயல்படுத்த முடியவில்லை நல்லுணர்வுகளை.

பல காலமாய் நல்லுணர்வு கொண்ட சப்த ரிஷிகளும், பல மகான்களும் இவ்வாத்மாக்களை நல்லுணர்வு படுத்திடப் பல உடல்களை ஏற்றும், பல எண்ணங்களில் பக்தியைச் செலுத்தியும், இன்றளவும் செயல் கொண்டுள்ளார்கள். ஆனால் இம் மகான்கள் எல்லாம் ஏன் பிறப்பில் வந்து செயலாக்குவதில்லை? சப்த ரிஷி யாய், சகலத்துடன் கலந்திட்ட, ஒளி பிம்ப சக்தி பூண்ட ஆண்ட வன்களெல்லாம் பிறப்பில் வருவதில்லை.

பிறப்பில் வரும்பொழுதே இவ் ஆண் பெண் என்ற இச்சையில், ஆசையில் உட்பட்டால் அவர்கள் பெற்ற சக்தி தடைப்படுகிறது. ஒவ்வோர் ஆத்மாவும் பிறப்பிற்கு வரும்பொழுது முன் பிறப்பு நிலை மறைக்கப்படுவது இவ் இச்சை நிலையினால் தான். பிறப்பிற்கு வந்துவிட்டால் முன் ஜென்மத்தில், முந்தைய நாட்களில் எத்தனை சக்தி பெற்றிருந்தாலும் இப் பிறப்பு என்று ஆசைப்பட்டவுடனே பெற்ற பலன் சிதறுண்டு, இவ்வுலக ஆசையில் சிக்குண்டு விடுகிறது.

அதனால்தான் எம் மகான்களும் பிறப்பில் வந்து பிறப்பதில்லை. ஈஸ்வரப்பட்டரின் வாழ்க்கை நிலையை உணர்த்தி வந்தேன். 16வது வயதில் ஈஸ்வரப்பட்டர் என்ற நாமம் கொண்ட உடலில் ஒரு மகான் செயல் கொண்டார். அந்நிலையில் அவர் பழனி ஸ்தலத்தில் சில நிலைகளை வெளிப்படுத்தினார், பைத்தியக் கோலம் பூண்டு. பல அன்பர்களின் இல்லத்தில் வைத்திய முறையை உணர்த்தியும் சில வாழ்க்கைக்குகந்த செயல்களைச் செய்வித்தும் அவ்வாத்மாக்களை ஞானம் பெற்றிட ஈர்க்கப் பார்த்தார்.

அந்நிலையில் அவர்களுக்கும் பல ஆசை நிலைகளையூட்டி, இவ் உலக மக்களின் பேராசையான தங்கம் என்ற உலோகத்தைச் செய்விக்கும் முறையெல்லாம், இரசமணியின் மூலமாய் உணர்த்தி, அவர்களின் ஆத்மா இவ்வாசையின் பிடியில் சிக்குண்டு அல்லல் படுவதையும் உணர்த்திட்டேன். எம்மை ஒரு கருவியாக்கி எம் சக்தியிலுள்ள பொருள் சக்தியைத்தான் அவ்வாத்மாக்கள் விரும்பினவே அன்றி, அழியாப் பொருளான ஆத்மச் செல்வத்தை யாரும் அங்கு விரும்பவில்லை.

பல இல்லங்களில் ஈஸ்வரப்பட்டரின் உடல் கொண்டு பல வியாதிகளைக் குணப்படுத்தி ஞானத்தைப் போதிக்க முயன்றோம். எம்மிடமுள்ள வித்தை என்ன? அதனால் பெறப்போகும் பயனென்ன? பயன் என்பதையே அழியப் போகும் பொருளுக்காக எண்ணிவிட்டார்களப்பா. அந்நிலையில்தான் வேணுகோபால நாயகனையும் பிடித்தேன்.

முன் ஜென்மத்தில், அவனது முன் ஜென்மத்தில் பல சக்தியைப் பெற்றிருந்தான். எம்மிடமும் தொடர்பு கொண்டிருந்தான். அஜ்ஜென்ம ஆசையிலிருந்து விடுபடாமல் வேணுகோபால பிம்ப உடலைக் கொண்ட ஜென்மத்திற்கும் வந்தான். அவனின் ஆத்மாவை, அதே பழனி ஸ்தலத்திலேயே பல இன்னல்களுக்கு உட்படுத்தினேன்.

மற்ற ஆத்மாக்களாய் இருந்தால் இன்றைய இக்கலியில் மீளுவது கடினம். பல இன்னல்களைத் தந்துதான் அவனை ஞானத்

தின் வழித்தொடர் அறிய வைத்தேன். பல காலமாய் இவ் இன்னலில் இருந்த பிறகுதான், அவனை அதிலிருந்து ஜெயிக்க வைத்தேன். பல ஆசை நிலைகளையும் ஊட்டிவிட்டேன்.

இவ்வாத்மாவையே முடித்துக் கொள்ளலாம் என்னும் சங்கட நிலையையும் ஊட்டிவிட்டேன். பல ஊர்களுக்கு அலையவிட்டு, ஒவ்வோர் ஆத்மாக்களின் எண்ணநிலை, ஆசை நிலை அனைத்தையும் அறியச் செய்து, அவ் வேணுகோபால சாமியை ஒரு கருவியாக்கி, பல சக்திகளை வெளிப்படுத்தி, பல ஆத்மாக்களுக்கு ஞான வழித்தொடர் பெறும் நிலையை எல்லாம் செயலாக்கினேன்.

அந்நிலையில்தான் எமக்கு சிஷ்யனுக்கி, அவனையே எம் எண்ணத்தின் செயலாக்கிடலாம் என்பதனை உணர்ந்து, ஈஸ்வரப் பட்டரின் உடலைப் பழனியிலேயே விட்டுப் பிரிந்தேன். அவ்வுடல் இன்றும் சமாதியில் உள்ளது. ஈஸ்வரப்பட்டரின் உடலில் இருந்து பிரிந்து, வேணுகோபாலின் மூலமாய் இவ்வுலகத்தின் ஒரு பாகத்தில் சில நிலைகளை உணர்த்தி வருகின்றேன்.

எம்மைப் போலுள்ளவர்களின் நிலையெல்லாம், இவ் ஆத்மாக்கள் எங்கெங்குள்ளனவோ அங்கெல்லாம் ஒவ்வொரு ரூபத்தில், மனித ஆத்மாக்களை ஞான வழியில் ஈர்க்க, பல செய்திகளைச் செய்விக்கின்றோம்.

வேணுகோபாலனைக் கருவியாக்கித்தான், எம் சங்கத் தலைவரை, அவரின் எண்ணத்தை உணர்ந்தே, ஞானத்தின் வழித் தொடரைச் செயலாக்கும் ஆத்மாவாய் உணர்ந்தே, எம் சத்தியத்தின் சக்தி நிலையை, அவரால் இவ்வுலகிற்குச் செயல்படுத்துகின்றேன்.

பல ஆத்மாக்கள் இவ்வுலகில் உள்ள பொழுது அவரை ஏன் செயல்படுத்தினீர், என்ற வினவும் எழலாம். அவரது எண்ணமே எம் எண்ணத்தின் தொடர்பு கொண்டதாயும், அவர் செயலாற்றும் வழியும் சத்திய நெறியும்தான் அவ்வாத்மாவை யான் ஏற்று, அவ்வாத்மாவின் சக்தியினுல் இவ்வுலகத்தை சக்தி நெறியில் ஈர்க்கச் செயல்கொள்கின்றேன்.

அனைத்து ஆத்மாக்களுமே எமக்கு ஒன்றுதான். எம் செயலை வெளிப்படுத்திட, உடல் ஆத்மா ஒன்று தேவை. எம் செயலை ஈர்க்கும் ஞானத்தின் சக்தியைத்தான் எம் செயலுக்குகந்த சக்தியாய் ஏற்க முடிந்தது. அவ்வாத்மா வேறல்ல யான் வேறல்ல என்ற நிலையில் ஐக்கியப்பட்டே எம் செயல் நிலை இனி இவ்வுலகினில் நடந்திடும்.

17-2-80

அனைவருடன் கூடி ராஜம்மாள் கராத்தே நிகழ்ச்சி காணச் சென்றதால் இன்றைய பாட நிலை தவிர்க்கப்பட்டது.

18-2-80

இன்று தியானத்தில் அமர்ந்தும் ஈர்த்து வெளிப்படுத்தும் எண்ண நிலை இல்லாமல் குடும்ப நிலை இருந்ததால் பாடம் தவிர்க்கப்பட்டது.

19-2-80

உலக சக்தி என்பதே தனித்து எதனைச் செப்புவது? இன்றைய உலகமே பிம்பத்தைத்தான் உலகமாகக் காண்கின்றது. எப் பிம்பமும் நிலைத்த பிம்பமல்ல; இன்றைய பிம்பம் மாறிவிட்டால் காற்றுத்தான். அன்றைய காற்று இன்றைய பிம்பம். காற்றில்தான் அனைத்தும் உள்ளன. நீரும் காற்றுத்தான், நெருப்பும் காற்றுத்தான்.

நீரும் ஆவியாகிக் காற்றுடன் கலக்கின்றது. நெருப்புக் கோளங்களும் எரிந்து ஆவியாகிக் காற்றுடன்தான் கலக்கின்றன. அனைத்து பிம்பமும் காற்றுத்தான். காற்றேதான் கடவுள். அக் காற்றிலிருந்து ஜீவன் கொண்ட அனைத்துமே கடவுள்தான்.

பால்வெளி மண்டலத்தைக் காற்றாய்க் காண்கின்றோம். அப் பால்வெளி மண்டலத்தில் இருந்துதான் ஆதவனாய் உள்ள சூரியனும் பிறந்தான். பூமித்தாயும் வளர்ந்தாள். மற்ற அனைத்துக் கோளங்களுமே பிறந்து, வளர்ந்து வாழ்கின்றன.

இப் பால்வெளி மண்டலத்திலுள்ள காற்றில் கலந்துள்ள அமிலமே நீராயும், நெருப்பாயும் ஒன்றை ஒன்று பற்றியே சுழன்று கொண்டு உள்ளது. இவ்வமிலமே திடமாகி அத்திடத்தில் இக் காற்றுப்பட்டு அதை ஈர்த்து, அது வெளிப்படுத்தி அந்நிலையிலேயே வளர்ந்து ஒன்றுடன் ஒன்று மோதுண்டு மோதுண்டு ஒன்றின் அமிலம் மற்றொன்றில் கலந்து, அது ஈர்த்து, சமைத்து, வெளிக்கக்கும் அமிலம் மற்றொரு கலவையுடன் சேர்ந்து, அவை எடுத்து, அவை வெளிப்படுத்தி, இப்படியே மோதுண்டு மோதுண்டு, ஒன்று உண்டு, அதன் கழிவு வெளிப்பட்டு, அக்கழிவு அதன் இனமுடன் சேர்ந்து, அவை உண்டு, அவை சமைத்து வெளிப்படுத்தும் அமிலம் படர்ந்தே, ஒன்றுடன் ஒன்று மோதுண்டு மோதுண்டு ஜீவன் கொண்டு, ஒன்றிலிருந்து ஒன்று வெளிப்பட்டு, மண்டலமாய் உருப்பெற்று, அம் மண்டலம் எடுக்கும் உணவு (சுவாசத்தை) கொண்டு அதன் சக்தி நிலை வளர்ந்து அது வெளிப்படுத்தும்

அமிலத்திலிருந்து பல நிலை பெற்று, பால்வெளி மண்டலத்தை இக் காற்று மண்டலத்தை மையமாய்க் கொண்டு சுழலுவதுதான் அனைத்து மண்டலங்களும், நாமும், எல்லாமுமே. ஆவிதானப்பா அனைத்துமே.

ஆவியான இக்காற்றில் நிறைந்துள்ள அமில சக்தியைக் கொண்டு நம் ஆத்மாவிற்கு உகந்த அமில சக்தியை நாம் பிரித்தெடுத்து உயர்ந்த ஞான நிலைபெறும் பக்குவ அமிலத்தை உணரும் சக்தி பெறல்வேண்டும்.

இயற்கையில் வளர்ந்திடும் தாவரங்களெல்லாம் தனக்குகந்த அமிலத்தையே ஈர்த்து வளரும் பக்குவ நிலை உள்ள பொழுது, நாமும், அனைத்துமே ஆவிதான். நாமும் ஆவிதான், நம் உடலில் உள்ள அனைத்துமே ஆவிதான் என்பதனை உணர்ந்து நமக்குகந்த ஆவி அமிலத்தை எண்ணத்திலேயே ஒரு நிலை கொண்டிடும் பக்குவ நிலைப்படுத்தி ஞானத்தின் வழித்தொடர் பெற்று ஆவியாய்ப் பிரியப் போகும் பிம்பத்தைப் பேராசைப் பொருளாய் எண்ணிடாமல் அனைத்தும் ஆவிதான் என்பதனை உணர்ந்து ஒவ்வோர் உடல் கொண்டு, வாழ்ந்து பல எண்ணத்தை ஈர்த்து, பல கோடி ஆண்டுகளுக்கு ஜீவன் கொண்ட பல பிம்ப உடல்களை ஏற்று ஏற்று, நம் ஆத்மாவைப் பெரும் இன்னல் படுத்திடாமல், உயர் ஞானம் பெறும் நல்லுபதேசம் பெற்று, இக்காற்றில்தான் கலந்துள்ளார்கள் சித்தாதி சித்தர்களும், சத்திய ஞானம் பெற்ற சப்த ரிஷிகளும் என்ற எண்ணம் கொண்டு, இவ்வுண்மையை உணர்ந்து, ஆண்டவனுக்கு மத வேறுபாடில்லை. எவ்வாண்டவனை வணங்கினாலும் ஒன்றே என்ற உயர்ந்த எண்ணம் கொண்டு, உம்மின் அன்பை ஆண்டவனாய் ஒருநிலைப்படுத்தி உம் எண்ணத்தில் ஆண்டவனாய் வரித்து உள்ளவரையே ஆண்டவனாக்கி, உம் எண்ணத்தில் செயல்படுத்தி, நீர் எடுக்கும் சுவாசமெல்லாம், உம் உயிர் ஆத்மாவின் அமில வட்டத்தில், ஞானத்தின் சக்தித் தொடரை ஈர்க்கும் பக்குவ நிலை பெறல் வேண்டும்.

ஞானத்தின் வழித்தொடர் பெற்றுவிட்டால், நம் எண்ணமும் செயலும் ஞானமாகி, அதன் தொடர்பிலேயே பல நிலைகளை நாமும் உணர்ந்திடலாம். இத் தொடரின் வழியினால், நம் ஆத்மா, நம் நிலையில் அக்காற்றுடன் காற்றாய் செயல் கொள்ளும் பக்குவத்தை, நம் எண்ணத்தினால்தான் செயல்படுத்திட முடியும்.

உயிரணுவாய்த் தோன்றிய நிலையிலேயே ஈர்க்கும் நிலைப் படுத்தி, அவ்வுயிரணு தோன்றிச் சேமித்துச் சேமித்துப் பழக்கப் படுத்திப் பல நிலைகளை ஈர்த்த பின்னும் மனித ஆத்மாவாய்ப்

பல நாள் சேமிப்பின் அமிலத்தை வளர்த்துக் கொண்டுள்ள மனித ஆத்மாக்களை, தன் ஆத்மாவைக் காற்றுடன் கலக்கவிடும் பக்குவத்தை உணர்ந்து செயல்படுத்தினால் ஞானம் என்ன? சித்தென்ன? சப்த ரிஷிதான் என்ன? சகலத்திலும் சகலமாய் உள்ள அவ் ஆதி சக்தியுடனே ஒன்றிவிடலாம்.

பேரானந்த நிலை, தெய்வீக நிலை என்பதெல்லாம் இன்று வாழ்க்கையில் நாம் காணும் இம் மாயக் கனவு வாழ்க்கையில் இல்லை என்பதனை நாம் உணரல் வேண்டும்.

**20-2-80**

ஒரு நொடியில் ஜீவிதம் பெற்றுச் சில நிமிடங்கள் வாழ்ந்து மறையும் விட்டில் பூச்சிகளும் உயிராத்மாதான். பல கோடி ஆண்டுகளாய் வாழும் மண்டலமும் (சூரியனும்) ஜீவன் பெற்ற ஜீவ ஆத்மாதான். அதனதன் வளர்ச்சியில் அது அது எடுக்கும் சுவாச நிலைகொண்டுதான் நீடித்து வாழும் பக்குவம் கொள்கின்றது.

பல நாட்களாய் நம் உலகம் கலியின் பிடியில் சிக்குண்டிருக்க, சத்தியத்தின் சக்தியை உணர்த்தி இன்றைய நிலையில் மீளச் சொல்வதின் பொருளென்ன? என்ற வினாவும் எழும்பலாம்.

இவ்வுலகிற்காக இப்பூமி நிலைத்துச் செயல்கொண்டிட நல் ஆத்மாக்களின் சக்தி நிலை இருந்தால்தான் இப்பூமி வாழ முடியும். இப் பூமியிலேயே உயிரணுவாய் உதித்து, உயிராத்மாவாய் நற் சக்தியை ஈர்த்து, ஞானம் பெற்று இன்று சூட்சுமத்தில் உள்ள அனைத்துச் சித்தர்களுமே இரண்டாயிரம் ஆண்டுக்கு முன் அவர்களின் சக்திநிலையை உயிராத்மாக்களின் நிலையில் உணர்த்தி நம் பூமியைக் கல்கியில் செழிக்கச் செய்யத்தான், இன்றைய சித்தர்களின் நிலையும், சப்த ரிஷியின் நிலையும் உள்ளன.

இக்கலி முடிவதற்குள், இங்குள்ள உயிராத்மாக்களை பக்தி என்னும் ஞானப்படுத்தத்தான், இன்று உலகெங்கும் எழுப்பப்படும் கோயில்களெல்லாம். எண்ண நிலையை ஒரு நிலைப்படுத்தி ஓம் என்ற நாதத்தை உயிரணுவில் கலக்கவிடும் சத்திய நிலையைப் பக்தி நெறியில், உயிராத்மாக்களுக்கு உணர்த்திடல் வேண்டும்.

தன் ஆத்மாவுக்கு நற்பயன் தேட எவ்வாத்மாவும் செயல் கொண்டிடவில்லை. கொண்டிடவில்லை என்பதன் பொருள் புரியாமல் உள்ளதின் நிலை. பக்தியையே ஜாதகத்தின் வழியில் காணுகின்றனர். எதிர்காலம் என்பதனையே இவ்வுலகில் வாழும் இக் குறுகிய கால நிலைக்காகத் தாமடைந்த இவ்வுடல் கொண்ட ஜீவ

ஆத்மாவைச் சிதறவிட்டு, பொருளுக்கும், பதவிக்கும போற்ற லுக்கும் நமக்குக் கிடைத்த இவ்வாய்ப்பினை நழுவ விட்டே வாழ் கின்றனர்.

நமக்குக் கிடைத்துள்ள இக்கால சந்தர்ப்பம் நம் ஆத்மாவை நற்சக்தியுடன் கலக்க விடும் பக்குவ நிலைக்காகத்தான். இன்று நம் உலகினில் பல அரசியலின் தலைவர்கள் தோன்றித் தோன்றிப் பெரும் புகழும் அழிவும் கொண்டெல்லாம் வளர்ந்து வாழ்ந்தனர்.

உலகையே அடிமைப்படுத்தும் அதிகாரப் பதவியில் இருந்து வாழ்ந்தாலும் அவ்வாத்மாவிற்குப் பேராசை நிலையின் அதி பற்றி ருந்ததினால் உடலை விட்டு அவ்வாத்மா பிரிந்தும் மீண்டும் மீண்டும் பல பிறவிக்குத் தன் ஆசையைப் பூர்த்தி செய்யப் பிறந்து கொண்டே உள்ளது.

திருவள்ளுவர் அரசனாகவும் வாழவில்லை, தன் ஆத்மா வையே கவியாக்கி, ஞான சக்திச் சொற்களை உலகிற்கு உணர்த்த ஆசைப்பட்டுச் செயல் கொண்டார். அவர் ஆத்மா இன்றளவும் அவரின் மனையாளின் ஆத்மாவுடன் ஒன்றியே, சூட்சுமம் கொண்டு இன்றும் உலகமே போற்றும் அத் திருக்குறளில் உள்ளார். அவ ரின் குறட்பாக்களைப் படிக்கும் ஆத்மாக்களின் எண்ணமுடனே அவரின் எண்ண நிலையும் செயல் கொள்கின்றது.

காற்றேதான் கடவுள். காற்றையே தெய்வமாக்கி நாம் எடுக்கும் சுவாசத்தில் கலக்கவிடுங்கள் என்றெல்லாம் இப்பாடநிலை உணர்த்திய நாள் தொட்டே செப்பி வருகின்றோம். ஆனால் மனித ஆத்மாக்களுக்கு மந்திரத்தில் மாங்காய் காய்ப்பதையும், சர்க்கஸில் ஆடும் கோமாளியின் லீலையில் மகிழவும்தான் பேராவல் உள்ளது.

மந்திரத்தில் மாங்காய் காய்ப்பதை மந்திரக்காரன் செய் கிறானே, அதில் உள்ள உண்மை என்ன? என்று அறியும் நிலை கொண்ட எண்ணமுடையோர் மிகச் சிலர்தான்.

இவ்வுலகமே வேடிக்கையான உலகம்தான். உலகம் என்பது இவ்வுலகின் ஜீவ ஆத்மாக்கள்தான். இக்காற்றைச் சுவாசமாய் ஈர்க்கும் ஒவ்வோர் ஆத்மாவுக்குமே இக்காற்று எங்கெங்கு உள் ளதோ அங்கெல்லாம் சுவாசத்தினாலேயே அங்குள்ள நிலையினை உணர்த்திட முடியும்.

சுழலும் ஒவ்வொரு மண்டலத்திற்கும் அம் மண்டலத்தின் உருவ அளவைக் கொண்டு அம்மண்டலம் ஈர்த்து வெளிப்படுத் தும் காற்று மண்டலம் (அடர்ந்த காற்று மண்டலம்) அம் மண்ட லத்தின் அளவைப் பொறுத்து உள்ளது.

நட்சத்திர மண்டலங்களுக்கும் அதன் சுழற்சியைக் கொண்டு, அதனைச் சுற்றியுள்ள, அதன் சுவாச நிலை கொண்ட காற்று மண்டலம் உண்டு. ஒவ்வொரு ஜீவ ஆத்மாவுக்கும் அததற்குகந்த அமிலக் காற்று மண்டலமுண்டு.

நம் பூமியிலிருந்து பத்து மைல் சுற்றளவில் கொஞ்சம் கூடவும் குறையவும் நம் பூமிக்குகந்த காற்று மண்டலமுண்டு. அனைத்திற்கும் பொதுவான சூனிய மண்டலம் என்று உணர்த்துகிறார்களே அங்கும் உண்டு காற்று. அதன் தன்மை வேறு.

மண்டலங்கள் வெளிப்படுத்தும் காற்று மண்டலத்தின் தன்மை வேறு. இப்பூமியில் பல இயற்கைத் தாதுப்பொருட்கள் தானாகவே வளர்கின்றன. இத் தாதுப்பொருள் வளர அதற்கு மூலப் பொருளாய் இவ் இரசமணி ஒன்று வளர்ந்தால்தான் பல தாதுப்பொருள்கள் வளர முடியும். இவ் இரசமணியின் சக்தி நிலை மனித ஜீவ ஆத்மாக்களுக்கும், சிங்கத்திற்கும், நாய், நரி, பூனை இவற்றிற்கும், வாழை மரத்திற்கும் இந்நிலை அதிகம்.

இம் மனித ஆத்மாவினால் இயற்கையில் வளரும் தாதுப் பொருளையே செயற்கையில் இவ் இரசமணியின் சேர்க்கையினால் சில குறிப்பிட்ட தாவரங்களின் இலையின் சாறு எடுத்து இவ் இரசமணியின் கலவையுடன் இவ் எண்ணத்தை, அவ்வமில சக்தியுடன் ஜெபப்படுத்தினால் எவ்வுலோகத்தையும் பூமியில் இருந்து எடுக்காமலும், பணம் தந்து வாங்காமலும் செய்விக்க முடியும்.

தாவரங்களின் நாமம் மறைக்கப்பட்டதின் நிலை மனித ஆத்மாக்கள் இப்பேராசையில் சிக்கிடாமல் தன் ஆத்மாவையே தன் ஆத்மாவுடன் உடலுடன் கலந்துள்ள இரசமணியின் ஈர்ப்பினால் நம் எண்ணம் தங்கமாகவும், நம் செயல் வைரமாகவும் ஆக்கிடலாம்.

நம்முள்ளேயே அனைத்துப் புதையலும் உள்ளன. அழியாச் செல்வப் புதையல் இச்சக்தியை உணர்ந்து, நம் சக்தியை வளர விடும் சத்தியமாக வாழ்ந்திடுங்களப்பா.

**21-2-80**

சங்கத் தலைவருக்கு, கல்கி இதழில் வெளியான சத்திய சாய்பாபாவின் ஞானமுதம் என்ற கட்டுரைக்கு எம்மால் (சங்கத் தலைவருக்கு) சில வினாக்கள் எழுப்பப்பட்டமைக்காகப் பாடத்திற்கு வரவில்லை.

22-2-80

குடும்பத்தில் உள்ளோருக்காகச் சில வழி முறைகளைத் தியானத்தின் தொடர்படுத்தி வழிபடுத்தியதின் நிலையினால் பாட நிலை தவிர்க்கப்பட்டது.

23-2-80

தியான முறையும், ஞான முறையும் பெற்றிட நம்மை நாம் பல பக்குவ நிலைப்படுத்தி செயல் கொண்டு தியானமும், ஞானமும் நாம் பெறுவது நமது ஆத்மாவிற்குத்தான். நம் எண்ணம், செயல் எல்லாமே நமக்குச் சாதகமாக மற்றைய நிலையிலிருந்து தப்பி ஒதுங்கிப் பெறுவதல்ல தியானமும் ஞானமும்.

நம் எண்ணம், செயல், உடல் அனைத்துமே சத்தியம்கொண்டு தூய்மையுடன் நாமுள்ளோம். மற்றவர்களுக்கு அந்நிலை தெரியவில்லை என்று எண்ணினாலும் நமக்கு அந் 'நான்' என்ற நிலை வந்து விடுகிறது. நம்முள் பல நற்சக்திகளையே ஈர்த்துச் செயலாக்கி வருகின்றோம், என்ற நிலையில் நாம் இருந்தாலும் நம்மைச் சுற்றியுள்ள ஆத்மாக்களின் நிலையுடன் நம்மை நாம் ஒன்றித்தான் செயல் கொண்டிடல் முடியும்.

நம் உடலைத் தினமும் நீர் விட்டுக் குளித்து, தூய்மைப் படுத்துகின்றோம். நம் உடல் தூய்மையாய் உள்ளதென்று நாம் வெளியில் செல்லாமல் இருக்க முடியுமா? வெளி உலகில் கலந்துள்ள காற்றும் மண்ணும் நம் மேல் படத்தான் செய்யும். மீண்டும் மீண்டும் இவ்வுடலைத் தூய்மைப் படுத்திக் கொள்கின்றோம். புற உலகின் அழுக்குப் படிகிறதென்று நாம் வெளியில் செல்லாமல் இருக்க முடியுமா?

அதைப்போல் நம் எண்ணம் ஒரு நேர்கோடான சத்தியச் செயலைச் சார்ந்துள்ள நிலையில் நம்மைச் சுற்றியுள்ள மற்ற ஆத்மாக்களின் நிலையும் நம்மை ஒத்திருந்தால்தான், நாம் அதனுடன் கலந்து வாழ்ந்திட முடியும்.

தீய பழக்க வழக்கம் கொண்டவனை விட்டு நாம் விலகித் தான் வாழவேண்டும் என்று நம் எண்ணத்தில் எண்ணினோமானால் நம் எண்ணத்தில் உள்ள அச் சத்திய நேர்கோட்டின் பிடிக்கு நாம் அடிமைப்பட்டு 'நான்' என்ற வைராக்கிய ஆத்மாவாகத் தான் நாம் இருந்திட முடியும்.

நாம் பெற்ற சக்தியை நமக்கே சொந்தமாக்கி நம் ஆத்மாவிற்கு எத்தனை செல்வங்கள் சேமித்தாலும் அதுவும் 'நான்' என்ற

சக்தியாகத்தான் இருந்திடுமப்பா. நான், எனது என்ற அணு வளவு எண்ணத்தில் பிற பேராசை, பற்று இருந்தாலும், ஆண்ட வனை பூஜிக்கும் பற்றுனாலும் சரி, தான் கற்ற வித்தையின் பலனை எண்ணினாலும் சரி, அந்நிலை அந் நானாகிவிடுகின்றது.

பல ஆத்மாக்கள் இயற்கையிலேயே பல உன்னத சக்தியைப் பெற்று வாழ்கின்றனர் (உ-ம்: மருத்துவம், விஞ்ஞானம், இயல், இசை, நாடகம், ஓவியம், விவசாயம் எல்லாவற்றிற்கும் மேன்மை யான சமையல் திறன்) இப்படி ஒவ்வோர் ஆத்மாவும் இயற்கை யிலேயே உன்னத சக்தி பெற்றிருந்தாலும் அச் சக்தியைத் தன் நலம் நாடாமல் பொருள் ஆசையின் நிலையில் அத் திறனை வளர விட்டால் நான் என்ற நிலையில்தான் அவர்கள் பெற்ற பயன் சிக்குண்டு விடுகின்றது.

பொருள் இல்லாவிட்டால் எப்படி ஜீவிதம் கொள்ள முடியும்? என்ற வினா எழும்பலாம். எம் சத்தியத்தின் சக்தி நிலை நூல் கூடப் பொதுவாய்த்தான் அருளப் பெற்றது. சங்கத்தைப் பொது வாக்கி, அந்நூலைப் பொருளாக்கித்தான் விநியோகிக்கின்றோம். அந்நூலுக்கும் விலையுண்டு.

பொதுவான நிலைப்படுத்தி அவரவர்கள் பெற்ற பயனைச் செயலாக்கித் தேவை என்ற அடிப்படையில், ஜீவிதத்திற்குகந்த பொருள் நிலைபெற்றுத்தான், அஜ் ஜீவன் நடக்கும். அதற்காக ஆண்டவன் அருளில் பெற்ற அதி பொக்கிஷ செயல் திறமையை நாம் பேராசைக்கு அடிமைப்பட்டு உழலும் காலமாய் இன்றைய கால நிலை உள்ளது.

தேவை என்ற அடிப்படையில் பொருள் சேமிக்கலாம். அதி தேவையாக்கி நம்மையே நாம் அதற்கு அடிமைப்பட்டு, சேமிக் கும் பொருளினால்தான் இன்றைய இவ்வுலகமே இப்பேராசைப் பிடிக்கு அடிமை கொண்டு வாழ்கிறது.

ஆத்மீக நெறிக்கு வருபவர்களும் இச் சந்நியாசி கோலத்தை மனிதர்களுக்கு உணர்த்திக் குடும்பப் பற்றையும், மற்ற எல்லா ஆசை நிலையையும் துறந்துதான் ஆத்மீக நெறிக்கு வர வேண்டும் என்பதனை ஒரு சாரார் உணர்த்திவிட்டனர், இன்னும் ஒரு சாரார் அப்பக்தியைப் பொருளாக்கி வளரவிட்டு விட்டனர்.

இன்னும் ஒரு சாரார் தனக்கு அனைத்து நிலைகளும் தெரிந்துள் ளதாகவும், அவ்வாண்டவனே இவர்களின் மூலமாய்த்தான் பிறருக்கு அச்சக்தியை அளிப்பதாகவும் எண்ணத்தில் கொண்டு மடாலயம் கட்டி, மத குருக்களாய் அனைவரையும் வணங்கச் செய்கின்றனர்.

எல்லா மதத்திலும் இந்நிலைதான். உலகுடன் பல காலமாய் எண்ணத்துடனே வளர்ச்சியின் பல நிலைகள் வந்துவிட்டன. இதி லிருந்தெல்லாம் நமதாத்மாவை எல்லாமில் எல்லாமாய் அவனருள் எப்படிக் கலந்துள்ளதோ அதைப்போன்றே, எல்லாவற்றுடனும் எல்லாமாய்த்தான் நாம், நம் ஆத்மாவைத் தூய்மைப் படுத்திடல் வேண்டும்.

அழுக்குப்படிகிறதே என்று அஞ்சி ஒதுங்கிடலாகாது. அழுக்கை அகற்றிக் கொண்டேதான் இருக்க வேண்டும். மண்ணி லிருந்து கரும்பை எடுத்து அதனைச் சாறுக்கும் நிலையில் அதன் நிறமும், அதன் மணமும் கண்ணுற்றால் இதையா நாம் உண்ணு கின்றோம் என்று எண்ணுகின்றோம்.

அச்சாறே அதனுடன் சில கலவையை ஏற்றிய பிறகு தூய கற்கண்டாய் உள்ள நிலையில் அதன் வெண்மையும் சுவையும் கண்டு நாம் அருவருப்பதில்லை.

அதைப்போல் உலகத்துடன் ஒன்றியுள்ள நாம் பிற ஆத்மாக் களின் தீய எண்ணத்தைக் கண்டு ஒதுங்கிடலாகாது. கரும்புச் சாறு பார்க்க அருவருப்பாய் உள்ளதென்று ஒதுக்கிவிட்டால் கற்கண்டு கிடைக்குமா?

மற்ற ஆத்மாக்களையும் நம் நிலையினால் தூய்மைப்படுத்த வேண்டுமேயன்றி, எதையுமே வெறுத்து ஒதுக்குதலாகாது. ஆதவ னுடன் ஆதவனாய் ஜோதி நிலைபெற்று கலந்திட அவ்வாதவன் எப்படி நன்மை தீமைகொண்டு அவ்வொளியைப் பாய்ச்சவில் லையோ அதைப்போல் உலகுடன் கலந்துள்ள பல நிலைகொண்ட எல்லாமில் எல்லாமாய்த்தான் நம் ஒளியையும் நாம் பெறல் வேண்டும்.

வாழ்க்கையுடன் இருந்திட்ட பெரியோர்கள்தான் இன்று அவ்வொளியுடன் ஒளியாய்க் கலந்து ஆண்டவனாய் உள்ளார்கள் என்பதனை யார் வினா எழுப்பினாலும் அவர்களுக்கு விடையளிக்கப் படும்.

குடும்பப் பற்றிலிருந்தும், உலகப் பற்றிலிருந்தும் விலகி எவ் இமயமலைச் சாரலுக்குச் சென்று ஜெபமிருக்கும் ஆத்மாவானாலும் சரி, அவ்வாத்மாவும் உடலைவிட்டுப் பிரிந்த பிறகு மறுபடியும் இவ்வுலகில் பிறந்து வாழத்தான் வேண்டும்.

சித்தனாகவும், முனிவனாகவும், சப்த ரிஷியாகவும் எந்நிலையும் பெற முடிந்திடாது என்பதனை இந்நூலின் வாயிலாய் வெளிப் படுத்துகின்றேன். ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு நாளும் நம்

எண்ணமுடன்கூடிய சுவாசத்தை எடுக்கும் முறையில் இருந்துதான் நம் ஆத்மாவிற்கு நாம் சேமிக்கும் அமில சக்தி கூடுகின்றது.

ஒவ்வொரு நாளும் பல தரப்பட்ட எண்ணத்தின் மோதலில் இருந்தும் நாம் தப்பி நல்லுணர்வையே நம் ஆத்மா சேமிக்கும் அமிலமாய் நம்மை நாம் பக்குவப்படுத்திப் பல ஆத்மாக்களை அப்பக்குவ ஜெபத்திற்கு ஈர்த்துச் செயல்படுத்திட வேண்டும்.

இதை உணர்ந்து 'நான்' என்ற தனித்த நிலையை விட்டு எல்லாமுடனும் எல்லாமாய் நம் ஆத்மாவும் ஒளிரும் வழி முறை பெற்று எல்லாமே ஒளிரச் செய்யல் வேண்டும்.

**24-2-80**

எண்ணத்தை ஒரு நிலைப்படுத்தி எடுக்கும் சுவாசத்தினால் இவ்வுடல் என்ற பிம்பத்தை எச் செயலுக்கும் உகந்ததென உட்படுத்தலாம். எண்ணத்தை ஒரு நிலைகொண்டு நாம் எடுக்கும் சுவாசத்தினால் இவ்வுடல் என்ற பிம்பமும் இக்காற்றுடன் காற்றாய்ப் படர்ந்திடும் சக்தியைப் பெறலாம்.

உடலில் உள்ள அனைத்து உயிர் அணுக்களும் ஒரு நிலைப்பட வேண்டும். அந்நிலையில், இவ்வுடலை எந்நிலையில் வருத்தினாலும் அவ்வுடலுக்கு உணர்வு இராது. எல்லா உயிர் அணுக்களும் ஒரு நிலைப்பட்டு தியானத்தில் உள்ள நிலையில் இவ்வுடல் என்ற பிம்பம் ஜீவனற்ற பிம்ப நிலை கொள்கின்றது.

அந்நிலையில் அவ்வுடலுக்கு உணரும் சக்தி தடைப்பட்டுவிடுகின்றது. ஒரு நிலைகொண்ட ஜெப நிலையுடன் உள்ள உடலை, அவ் உடலிலுள்ள உறுப்புக்களில் ஏற்படும் தொந்தரவுகளுக்கு எவ் அறுவை சிகிச்சைகளையும், போதை நிலைப்படுத்திச் செயலாக்காமல் செய்திடலாம்.

அவ்வுடலில் இருந்தே நீரிலும் நடக்கலாம், அமரலாம், உறங்கலாம், நாம் கனவில் காணும் நிலை போன்று பறக்கவும் செய்யலாம். அவ்வுடலில் பின்னப்படாவண்ணம் எச் செயலையும் அவ்வுடல் தாங்கிடும்.

இவ்வுடல் என்ற பிம்பம் அவ்வுயிராத்மாவிற்குச் சொந்தம். அவ்வுயிராத்மாவின் ஆணைப்படித்தான் உடலில் உள்ள அனைத்து அணுக்களும் செயல் கொள்கின்றன. அவ்வுயிராத்மாவின் ஜீவனே இவ்வெண்ணத்தில்தான் செயல் கொள்கின்றது. இவ்வெண்ணமே நாம் எடுக்கும் சுவாசத்தினால்தான், நம் உயிராத்மாவை நிலைக்கச் செய்கின்றது என்பதனை உணர்ந்து, நம் எண்ணத்தினால் ஒரு நிலை

கொண்டு ஜெபம் பெறும் நிலையில் நாம் எடுக்கும் சுவாசம் இருந்திடல் வேண்டும்.

எம் மோதலின் நிலையையும் நம் எண்ணத்தில் பற்ருமல், எண்ணத்தைப் பற்றற்றதாக்கி ஒரு நிலைகொண்ட ஜெபம் எடுத்திடல் வேண்டும். நம்மை எதிர் நோக்கி வரும் எவ்வெண்ணத்தின் பற்று தலையும், நம் எண்ணமுடன் ஒருநிலை கொண்டிடல் வேண்டும்.

தியானத்தில் ஒரு நிலை கொண்டவரின் இல்லத்தையும் அவர்களின் உடலையும், அவர்கள் சார்ந்து செய்யும் எத்தொழிலையும், எத்தடங்கலும் இன்றி நல் நிலையாய் செயல் கொண்டிடும். எண்ணத்தைச் சிதற விட்டு வாழ்ந்திடுங்கால் நமக்கு நடக்கும் எந்நிலையும் சிதறுண்ட நிலையில்தான் நம்மைத் தாக்கும்.

அன்பு தியானத்தை ஒரு நிலையுடன் வழிபெற்று இன்றைய கால நிலையில் தெரிந்தோ, தெரியாமலோ இவ்வுலகம் முழுவதுமே ஆத்மிக நெறி உணர்த்தவும், ஆண்டவனே இவர்களின் செயலுக்கு உகந்த பொருளாக்கி இன்றைய அரசியலும் சரி, ஆலயங்களும் சரி பல ஆவிகளின் வசியத் தொடர்பு கொண்டு, இவ்வுலகமே ஆடிக் கொண்டுள்ளது.

இவ்வுலகினில், மேலை நாட்டில் ஆயிரம் உடல் ஆத்மாக்களை ஒரு மனித ஆத்மா வசியப்படுத்திச் செயல்படுத்தி வந்த நிலையில், இதன் நிலை வெளியுலகிற்கு அறியப்பட்டவுடன், அனைத்து ஆத்மாக்களையும் உடலுடன் வசியப்படுத்திட எண்ணியவன், அவ்வாத்மாவுடன் தன் ஆத்மாவை செயல்படுத்திட, அனைத்து உடல்களையும் தன் உடலுடன் அழித்து, இன்று அவ் ஓர் ஆத்மாவே, அதன் வசியத்தில், அது அழித்த அனைத்து ஆத்மாக்களையும் வசியப்படுத்தி இவ்வுலகத்திலே அதன் நிலையைச் செயல்படுத்திக் கொண்டுள்ளது அவ்வாத்மா.

தலைவனை வசியப்படுத்திய அவ்வாத்மா, உடலுடன் இருந்திருந்தால், அவன் அழித்த மற்ற உடல் ஆத்மாக்கள், இவன் வசியத்திற்கு வந்திருக்காது. இன்னும் நமது நாட்டிலேயே உண்மை நிலை வழி நாமம் கொண்ட சில நிலைகள் நடக்கின்றன. ஆவிகளை வசியப்படுத்தி, அதிகார வர்க்கமுள்ளவர்களையும், பொருட் செல்வம் கொண்டவர்களையும், தன் வசியத்திற்கு ஈர்த்து, உண்மை வழி என்ற போர்வையில் வாழுகின்றனர்.

இந்நிலையெல்லாம் இக்கலியில் வந்தது மட்டுமல்ல. அரசர்கள் ஆண்ட கால நிலைதொட்டே, இவ் ஆவி ஆத்மாவின் வசிய நிலை கொண்டுதான் பல ஊடுருவல் வேலையெல்லாம் செய்வித்து,

ஒரு நாட்டுடன் பிற நாடு சண்டை இட்டு, போர்க்களம் கொண்டு அவ்வாவிகளுக்கு மற்ற ஆத்மாவின் குருதிகளை உணவாக்கி, பல தேசங்களைப் பிடித்தார்கள்.

அவ்வாவிகளின் எண்ணமும், வெறி உணர்வு கொண்ட ஆக்ரோஷநிலைப்பட்டு, வழி வழியாய் எத்திய செயலுக்கும் எண்ணத்தில் பயமில்லாமல், இன்றைய பல ஆத்மாக்கள் செயல் கொள்கின்றன.

எவ்வுயிரனுவும்தான் அழிவதில்லையே. இன்றைய உலகமும், இவ்வுலகினில் உள்ள அரசியல் நிலைகளும், ஆவியின் பிடியில் சிக்குண்ட நிலையில், நமது ஆத்மாவை நாம் ஒரு நிலைகொண்ட ஜெப சக்தியில் சலிப்பு, கோபம், குரோதம் இப்படி எண்ணத்தை வளர்க்காமல், நமது ஆத்மாவை ஒரு நிலைகொண்ட ஜெபத்தினல், ஒன்றினல் மட்டும்தான் நல் வழி கொண்டிட முடியுமப்பா.

**25-2-80**

இன்று ஜெபநிலைப்படுத்தியதினல் பொதுப்பாடம் தரவில்லை.

**26-2-80**

காட்சி: பாட்டிலில் புனல் வைத்து திரவத்தை ஊற்றும் நிலை காட்டல்.

முந்தைய காலங்களில் எண்ணத்தை ஒரு நிலைப்படுத்தி, ஜெப அருளினல் மட்டும்தான் ஞான நிலை பெற முடிந்தது. எழுதி வைத்துப் படிக்கும் நிலை அன்றில்லை.

குப்பியில் புனல் வைத்துத் திரவத்தை ஊற்றுவதைக் கண்டாய். அக்குப்பிக்கு புனல் உள்ளதினல் அதில் ஊற்றும் திரவம் சிந்தாமல் ஊற்ற முடிந்தது. புனல் இல்லாவிட்டால் எண்ணத்தைச் சிறிது மாற்றினலும் அத்திரவம் சிந்திவிடுகின்றது.

இன்றைய ஏட்டு நிலைகொண்டு, ஆரம்ப நிலையிலேயே அறியும் பக்குவத்தை நாம் உணரப் பல நிலைகள் எழுத்து வடிவினில் தரப்படுகின்றன, புனலைப்போல். நம் ஆத்மாவுக்குகந்த ஈர்ப்பு நிலையை நாம் உணராமல் வாழுகின்ருேம். இம்மனித ஆத்மாவுக்கு மட்டும்தான், காந்த அமில சக்தியுடைய ஈர்ப்பு சக்தி அதிகம்.

இவ்வுலகின் ஈர்ப்பு நிலைக்குகந்த அமில சக்தியில் தாவர வர்க்கங்களும், மற்ற உலோகங்களும் அதகற்குகந்த அமிலத்தைத் தான் ஈர்க்கும். மற்ற ஜீவ ஜெந்துக்கள் அதன் எண்ண வளர்ச்சியில், எச் சக்தியில் ஜீவன் பெற்றதோ, அதன் வளர்ச்சித்

தொடரில்தான் அனைத்து நிலைகளையும் உணரும் சக்தி சில ஜீவராசி களுக்கு இருந்திட்டாலும் செயல்படத்தக்க இயற்கை நிலை இல்லாத தினால் மனித ஆத்மாவை ஒத்த செயல் நிலை அவற்றிற்கும் இல்லை.

இம் மனித ஆத்மா ஒன்றுக்கு மட்டும்தான், இக்காற்றினில் கலந்துள்ள பல கோடி அமில நிலையினில் தனக்கு வேண்டியதைப் பிரித்தெடுக்கும் ஆற்றல் உண்டு. இம் மனித ஆத்மா ஒரு நிலை கொண்ட ஜெப அருள்பெற்று விட்டால் எவ்வெண்ண சக்தியை ஒருநிலையில் எண்ணி எடுக்கும் சுவாசத்தில் இருந்து, அவ்வெண்ண சக்தியின் தொடர் நிலை கொண்ட அமிலத்தின் ஈர்ப்பினால் எதை யெண்ணி நம் ஜெபக் குறி உள்ளதோ அந்நிலையை நாம் எடுக்கும் சுவாசத்தில் அலையுடன் நம் உயிராத்மா அவ் ஈர்ப்பு காந்த அமி லத்தை நமக்கு ஈர்த்தெடுத்து அளிக்கின்றது.

நம் விழியை மூடிக்கொண்டே நாம் எடுக்கும் சுவாசத்திலி ருந்து நமக்கு எவ்வெண்ணத்தைப் பாய்ச்சி நம் தியானம் உள் ளதோ அதன் தொடர்நிலை அனைத்தும் விழியுடன் காண்பதைப் போலவே நாம் காணலாம்.

இக்காற்றிலுள்ள ஜீவ அணுக்களை நமக்குகந்த அமிலத்தை நம் சுவாசம் எடுக்கும் நிலை பெறல் வேண்டும். காற்று மண்டலமே இன்றைய நிலையில் விஷத்தன்மை கூடி வருகிறது, என்றாலும் நம் சுவாசத்திற்கு வேண்டிய நல் அணுக்களை நாம் சுவாசிக்கும் ஈர்ப்பு நிலை பெற வேண்டும்.

இத்தொடர் நிலை ஜெபத்தினால் நம் ஜெப சக்தியில் எவ் அமிலத்யையும் நாம் நமதாக எடுத்திடாமல் எம் மண்டலத்திருந் தாலும் நம் உயிராத்மாவிற்கு வேண்டிய அமில சக்தியை நாம் பிரித்தெடுத்து வாழும் பக்குவத்தை அறியலாம்.

இன்றைய விஞ்ஞானத்தில் செயற்கைக் கோளைக் கொண்டு நம் மண்டலத்திலிருந்து பிற மண்டலம் செல்ல நம் பூமியின் அமிலக்காற்றை அதில் செல்லும் ஜீவ ஆத்மாவிற்கு எடுத்துச் சென்றும், பல பாதுகாப்பு நிலைகளை ஏற்படுத்தியும், பிற கருவி யின் உதவி கொண்டு அங்குள்ள நிலைகளை புகைப்படமாக்கி இப் பூமிக்கு அறியும் நிலையை ஏற்படுத்தி வர ஏவுகின்றனர்.

ஜெப நிலை கொண்டு தன் உயிராத்மாவிற்கு வேண்டிய அமில சக்தியை இக்காற்று மண்டலத்தில் எக் கோளத்தில் இருந்தாலும் ஈர்க்கும் பக்குவம் பெற்றுவிட்டால், இவர்கள் அனுப்பும் செயற் கைக் கோளில் எப்பாதுகாப்பு சாதனமும் இன்றி, ஆகாரம் எடுத்துச் செல்லாமல், இவ்வுடலுடனே, குறிப்பிட்ட காலங் களுக்குச் சென்று வர முடிந்திடும்.

எண்ணத்தில் ஜெபநிலை பெறல் வேண்டும். அச் சாதனை நிலைபெற்ற ஆத்மாவினால் இச் செயல் நிலை கொள்ள முடியும். பயமும், திகிலும் கொள்ளும் சிறு எண்ணப் பிசிறு உள்ள நிலையிலும் இச்செயல் நிலை சாத்தியமல்ல.

இவ்வுடலுடன் வாழ்ந்திடும் நிலையிலேயே சப்த ரிஷியின் நிலை பெறும் ஆத்மாவினால்தான் அந்நிலை பெறல் முடியும். சூட்சுமத்தில் உள்ளோரின் நிலை வேறு. இவ்வுடலுடன் கொண்ட சூட்சும நிலை கொள்ளும் ஆத்மாவினால் இச்செயல் நிலை செயல் படுத்திட முடிந்திடும்.

இம் மனித ஆத்மா ஒவ்வொன்றிற்கும் இச்சக்தி நிலையுண்டு என்பதனை உணர்த்தத்தான் இந்நிலை விளக்கப்பட்டதேயன்றி, நம் வாழ்க்கையின், நம் ஆத்மாவின் குறிக்கோளுக்காகச் செப்பவில்லை.

இவ்வாத்மாவிற்கு உகந்த சக்தியை உணர்த்திடத்தான் இந் நிலை உணர்த்தப்பட்டது. இக்கால நிலையுடன் கலந்து, வரும் பூகம் பத்தையும் இடி, மின்னலையும், எரிமலை கக்கும் நிலையையும் பனிமலை உறையும் காலத்தையும், கடல் கொந்தளிக்கும் நிலையை யும் இவ்வுடல் மண்டலத்தில் ஈர்க்கும் நிலைப்படுத்தி உணர்ந்திட லாம். பல நூறாயிரம் ஆண்டுகளுக்கு முதலிலேயே உடலுடன் இருந்த பல ஆத்மாக்கள் பல நூறாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு நடக்கும் நிலைகளையெல்லாம் அறியும் பக்குவம் பெற்று இப்பூமியி லேயேதான் வாழ்ந்தார்கள்.

இன்று நாம் நமக்குகந்த உண்மை நிலையை உணராமல் செயற்கையில் மகிழ்ந்து வாழ்கின்றோம். நம் ஆத்மாவையே செயற்கையுடன் ஒன்றி நமக்குகந்த செல்வ நிலையைப் பெறாமல் வாழ்ந்தென்ன பயன்?

**27-2-80**

உடல் நலக்குறைவினால் தியானத்துடன் முடித்துக் கொண் டோம்.

**28-2-80**

நம் எண்ண நிலையைத் திசை திருப்பிடவும், இவ்வுலகில் பல நிலைகள், பல வழியில் நம்மை வந்து மோதத்தான் செய்யும். நாம்தான் இந்நிலையிலிருந்து நம் எண்ணத்தை அவ் ஓம் என்ற ஜெபத்துடனே சுழல விட்டு நம் ஆத்மாவையே அவ் ஓம் என்ற ஜெபத்துடன் சுழல விடவேண்டும்.

காலையில் துயிலெழுந்து இரவு உறங்கும் காலம்வரை நம் எண்ணத்துடன் பல செயல்கள் மோதுண்டு, நம்மைப் பல

நிலைகளுக்கு ஆளாக்குவது என்பது மட்டுமல்ல. பகலில் ஏற்படும் செயல்களின் நினைவுடனே நாம் உறக்கம் கொள்வோமானால், அந்நினைவின் தொடரில், அதே நினைவுடன் கூடிய இக்காற்று மண்டலத்தில் கலந்துள்ள பல ஆத்மாக்களின் நினைவலைகளும், நாம் நம் செயலின் நினைவலைகளும் உள்ள நிலையில் அதுவும், இதுவும் மோதுண்டு அதன் எண்ணச் சுழற்சியில் நம் எண்ணம் சிக்குண்டு உறக்கத்தில் உள்ள நிலையில், நம் செயல் எண்ணத் தின் தொடர் எண்ணத்தில் நம்மைச் செல்லவிடாமல் நம் எண்ணத் துடன் மோதுண்ட பிற ஆத்மாவின் எண்ணச் செயல் நிலையின் எண்ண ஒட்டத்திற்கே, நம்மை அவ்வாவி ஆத்மா தூண்டி, அதன் எண்ணக் கலவையின் ஒட்டமுடனே நாம் செல்லும் நிலையில் தான், நமக்கு ஏற்படும் கனவுகளில் நம் வாழ்க்கைக்கும் எண்ணத் திற்கும் ஒட்டாத செயல் நிலைகளெல்லாம் நாம் நம் கனவில் காணுகின்றோம்.

உடலை விட்ட ஆத்மாக்களுக்குத்தான் உணவுமில்லை, உறக்க முமில்லை. மனித ஆத்மாக்கள் உறங்கிடும் வேளையில் அதனுடைய எண்ண நிலைக்கேற்ப ஆத்மாக்களை இவ்வாவி உலக ஆத்மாக்கள் தன் எண்ணத்தைச் செயல்படுத்த நம் வட்டத்திற்குள் வந்து, நம் எண்ணத்தைத் தூண்டுகிறது.

இரவில் நாம் காணும் துர்க்கனவானாலும், ஆனந்த நிலை கொண்ட கனவாய் இருந்தாலும் நாம் உறங்கி எழுந்த பிறகு நம் நினைவில் வருவதை வைத்து அதே எண்ண ஒட்டத்தில் இப்படிக் கனவு கண்டு விட்டோமே, கனவு பலித்திடும் என்று செப்பு கின்றனரே, என்ற எண்ணத்தில் மோதவிட்டு, அதே நினைவுத் தொடரில் நாம் எடுக்கும் சுவாசத்தினால் நம் சப்த அலையுடன் இந்நிலையும் கலந்து, அதன் தொடர்ச்சியில் நம் செயல் நிலை இழுக்கப்படுகின்றது.

நல்ல ஆனந்த நிலை கொண்ட கனவும் இந்நிலையே. கனவில் ஏற்படும் நிலையினாலும் நம் வாழ்க்கையில் சில நிலைகள் தொடர் கொள்கின்றன. பகலில் மட்டும் நம் செயலின் எண்ணம் கொண்டு நம் நிலை ஏற்படுவதில்லை. பகலிற்கு மேல் இரவிலும் நம் எண்ணம் செயல்படுகிறது என்பதனை உணர்ந்தீரா?

நாம் உறங்குவதற்கு முன் ஒரு நிமிடம் நம்மையே அஜ் ஜெபமுடன் கலக்கும் நிலைப்படுத்தி. நம் தாய் தந்தையரை வணங்கி நம் இஷ்ட தெய்வமான, எத்தெய்வமாய் இருந்தாலும் சரி, அவ் ஓம் என்ற நாதத்துடன் ஓம் ஈஸ்வரா, ஓம் ஏசுவே, ஓம் முகமது நபியே, என்று ஒரே எண்ணத்தில் அவரவர்கள் பக்தி கொண்டு பூஜிக்கும் அவ்வாண்டவனின் ஜெபத்தையே

உறங்கும் முன் ஜெபித்துக் கொண்டே உறங்கினுல் உறக்கத்தில் உள்ள நிலையில் நம் உயிரைச் சுற்றியுள்ள நம் ஆத்மாவுடன் நாம் எடுக்கும் சுவாசத்தினுல் இவ் ஓம் என்ற ஆண்டவனின் ஜெபமே சுழன்று கொண்டே இருக்கும். அந்நிலையில் நம் எண்ணமும், நாம் விழித்துள்ள நிலையில் செய்த செயல் எண்ணமும் அதன் தொடரில் நாம் காணும் கற்பனை எண்ணங்களும், இஜ் ஜெப நிலையில் உள்ள ஆத்மாவுடன் வந்து மோதுவதுமில்லை, பல கனவுகள் சிதறுண்டு நாம் காணவும் முடிந்திடாது.

நம் உயிராத்மாவும், நாம் உறங்கும் நிலையிலும் அமைதி கொண்டு நம்மைக் காக்கும் இவ்வெண்ணத்தினுல்தான் ஒவ்வோர் உயிராத்மாவின் செயல் நிலை செயல்படுகின்றது.

எண்ணத்தை ஒருநிலைப்படுத்தும் பக்குவ நிலைக்கு நம் ஆத்மாவை நாம் செயல்படுத்திட வேண்டும். ஆத்மா என்பது எங்குள்ளது? நாம் இறந்துவிட்டால் ஆத்மா பிரிந்து விட்டது என்கின்ரேம். ஒரு ஜீவ உடல் இறக்கும் பொழுது அவ்வுடலில் இருந்து, அவ்வுடலின் உயிரணுதான் முதலில் பிரிகின்றது. அவ்வுயிரணுவிற்கும் அவ்வுடலிலுள்ள ஜீவனற்ற ஆத்மாவிற்கும் தொடர்பு கொண்டுதான் அவ்வுடலிலிருந்து ஓர் அங்குல வட்டத்திற்குள்தான் அவ்வுயிரணு அவ்வுடலின் மேல் பகுதியிலேயே அவ்வாத்மாவுடன் இருக்கும். ஆத்மா என்பது என்ன? அவ்வுயிரணு சேமித்த அமில சக்திதான் ஆத்மா. அவ்வுடலை எந்நிலைப்படுத்துகின்ரேமோ அதன் பிறகுதான் அவ்வுடலைச் சுற்றிக்கொண்டே உள்ள அவ்வுடலின் ஆத்மா இவ்வுயிரணுவுடன் கலந்து ஆவி உலகிற்கு வருகின்றது.

எவ்வுடலும் அதன் ஜீவன் பிரிந்த உடனே அதனுடைய செயல் நிலை ஏற்படுத்துவதில்லை. அவ்வுடலை எரிக்கும் நிலையில் அதனுடைய உயிருடன் அவ்வாத்மா சுற்றிக்கொண்டு ஆவி உலகில் கலக்கின்றது.

மற்ற நிலையில் அடக்கம் செய்யும் உடலாத்மா அதன் உயிரணுவுடன் சேர்ந்து உடலில்லாமல் செயல் கொள்ளப் பல நாட்களாகின்றன.

ஆத்மா என்பது உடலின் அனைத்து உறுப்புகளிலுமே ஆவித் தன்மையில் உடலில் மட்டுமல்லாமல், உடலைச் சுற்றியுள்ள நிலையிலும் படர்ந்துள்ளது. உயிரணுவிற்கும் ஆவி ஆத்மாவிற்கும் ஜீவனுடன் கூடிய ஆத்மாவிற்கும் பொருள் புரிந்ததா?

ஆவி உலக ஆத்மாவிற்கும் ஜீவ உடல் ஆத்மாவிற்கும் மாறுபட்ட நிலை இதுதான். ஜீவ உடலை விட்ட ஆத்மாவிற்கு எண்ணத்தின் நிலையைச் செயலாக்கிட பிற எண்ணமுடன் (உடலுடன்

கொண்ட) மோதித்தான் அதன் செயல் நிலை இருந்திடும். நம் எண்ணத்தை ஒரு நிலை கொண்டு ஒவ்வோர் ஆத்மாவும் ஆசை யுடன் வாழும் பக்குவத்தை ஏற்படுத்திக் கொள்ளல் வேண்டும்.

அனைத்திற்குமே ஆசை வேண்டும்; அன்பு கொள்ளவும் ஆசை வேண்டும். கோபத்தை விடவும் ஆசை வேண்டும். எந்நிலை செயல் கொள்ளவும் அவ் ஆசை வேண்டும். நமக்குகந்த ஆசையை நாம் ஆசைப்பட்டால்தான் எச் செயலும் நடக்கும். பேராசைக்குத் தான் நாம் இடந்தரலாகாது.

அமுதான உணவானாலும் நாம் நம் உடலுக்கு வேண்டிய அளவுதான் உண்ணுகின்றோம். எப்படி உண்டாலும் அதிகமாய் நம் உடம்பு ஏற்றுக் கொள்கின்றதா? உடலே தனக்குகந்த அளவு உணவைத்தான் செரிக்கும்பொழுது நம் எண்ணத்தையும் அளவு டன் கூடிய ஆசையை எண்ணியே செரிக்கும் பக்குவத்தை நாம் பழக்கப்படுத்திக் கொள்ளல் வேண்டும்.

**1-3-80**

இன்றுள்ள நம் பூமியின் தன்மையிலும், நம் பூமியைச் சுற்றி யுள்ள காற்றுமண்டலத்தின் தன்மையிலும், சூரியனிலிருந்து வெளிப்படும் ஒளி அலைகளிலும், ஒரு நொடியைப்போல் ஒரு நொடி இல்லாமல் மாறிக்கொண்டே உள்ள நிலையில், நம் பூமியின் தன்மையில், சமீபத்தில் நடந்த இச் சூரிய கிரகண நிலையிலிருந்து, நம் பூமிக்குக் கிடைக்கப் பெறும் சூரியனின் ஒளி அலையில் சிறுகச் சிறுக மாற்றத்தன்மையின் நிலையினால் நம் பூமி ஈர்த்தெடுத்த அமிலத்தன்மையில் மாற்றம் கொண்டு பூமிக்கு மட்டுமல்ல ஒவ் வொரு ஜீவ ஆத்மாவிற்கும் இம் மாறுகொண்ட நிலையினால் சில மாற்ற நிலைகள் சிறுகச் சிறுக ஏற்படும். நம் உடலிலுள்ள காந்த அமில சக்தி நாமெடுக்கும் சுவாசத்தின் ஈர்ப்பில் நம் செவி வழியில் மோதுண்டு அமிலமாய் அக்காந்த ஈர்ப்பு நிலை உடல் முழு வதற்கும் பரவிய நிலையில் சிறுகச் சிறுக உடல் தன்மையும் அனைத்து ஜீவ ஆத்மாக்களுக்கும் மாற்றம் கொள்ளும் நாள் இக் குறுகிய கால வட்டத்திற்குள்ளே மிகச் சமீப எதிர்காலத்தில், இந்நிலையின் தொடரெல்லாம் நடந்திடும்.

எண்ணத்தைப் பரிசுத்தப்படுத்தி ஒரு நிலைகொண்ட ஜெப நிலையில் நம் எண்ணம் முழுவதும் படரும் நிலை நாம் ஏற்படுத்திக் கொண்டால் அவ் வொளியுடன் ஐக்கியப்பட்டுள்ள சப்த ரிஷி களின் ஒளியின் ஈர்ப்பு சக்தியில் நம் ஒருநிலைகொண்ட எண்ண நிலையும் மோதுண்டு அவர்கள் ஈர்ப்பில் அவர்களின் வட்டத்திற் குள் நம் எண்ணச் சக்தி ஐக்கியப்பட்டு நாம் இருக்குங்கால், அவர் களே நம்மைப் பார்த்துக் கொள்வார்கள்.

காற்றிலுள்ள விஷத்தன்மையும் நம்மைச் சார்ந்தவர்களின் மாறு கொண்ட எண்ணநிலையும் நம் ஆத்மாவை வந்து மோதி விலகித்தான் செல்லுமே ஒழிய நாம் ஐக்கியப்படுத்திக் கொண்டுள்ள அம்மகான்களின் வட்ட சக்தியில் (ஒளி சக்தி) நம்மை அவர்களே ஐக்கியப்படுத்திக் கொண்டு வழி நடத்திடுவர்.

இப்பாட நிலையை உணர்ந்து கொண்டு எண்ணத்தை ஜெபப் படுத்திய ஆத்மாக்களுக்கு இதன் தொடர் நிலையின் வழி நிலை புரிந்திடும். ஒவ்வொரு மகானும் தான் பெற்ற அந் நல் அமுதை, ஆசைப்பட்டு தன் வட்டத்திற்குள் பல ஆத்மாக்களை நல்லுணர் வாக்கிட இன்றளவும் அவர்களின் செயல் நிலை செயல்பட்டுக் கொண்டேதான் உள்ளது.

அவ்வட்டத்தின் ஈர்ப்பில் நம் நிலை செல்லும் வழிமுறையை நாமேதான் பெறல் வேண்டும் என்பதனை உணர்ந்தீரா?

இன்று வாழும் இவ்வாழ்க்கைதான் நம் காலம் என்பதை மறந்துவிடுங்கள். நம் ஆத்மாவிற்கு நாம் சேமிக்கும் நல் சொத்தை அடையும் பக்குவத்திற்காக நாம் பெற்ற சந்தர்ப்பக் காலம்தான் இது.

இக்குறுகிய காலத்தை தர்க்கவாதத்திலும், பிடிவாத நெறியிலும் ஆண்டவன் உண்டு, இல்லை என்ற ஆராய்ச்சி நிலையெல்லாம் அறிந்திடாமல் நம் முன்னோர்கள் உணர்த்திய நெறியில் உள்ள உன்னத சக்தியை ஈர்த்து நம் சக்தியை நாம் உணரல் வேண்டும்.

ஒவ்வொரு மனித ஆத்மாவுக்குள்ளும் அவரவர் சேமித்து வைத்தது இவ்வுடலில் உயிரணுவாய் உதித்த காலத்திலேயே சேமித்தது. அதன் தொடரில் வழிவந்த சக்தி நிலையெல்லாம் ஒவ்வோர் ஆத்மாவிற்கும் உண்டு. ஒன்றைப்போல் ஒன்றில்லை; ஆனால் அனைவருக்கும் சக்தியுண்டு. அதை வெளிப்படுத்திட நம்மிடம் உள்ள பல தீய சக்திகளை நமக்கே அடிமைப்படும் நிலைப்படுத்தி நம் உடலிலுள்ள அனைத்து உயிரணுக்களும் நம் நிலையில் செயல்படும் நிலையில் நாம் எடுக்கும் எண்ண சுவாசம் இருந்திடல் வேண்டும்.

நம்மை நாம் பக்குவப்படுத்திக் கொண்டால் பிறரின் நிலையைக் கண்டு நம் எண்ணத்தில் கலக்கம் தோன்றுது. பிற எதிர்ப்பிற்கும், புகழுக்கும் சமமான நிலைகொள்ளும் பக்குவம் கொண்டு அவ்வாண்டவனின் மந்திரமுடன் ஐக்கியப்பட்டு அவ்வட்டத்தில் நாம் உள்ளபொழுது, நம்மைச் சுற்றியுள்ள நிலையையும் நம்மைக் காக்கும் அவ்வாண்டவன் அனைத்தையும் பார்த்துக்

கொள்வான். அதற்காக நம் எண்ணத்தை நாம் மாற்றலாகாது. அனைத்தையும் சமமாக்கி, அனைத்தையும் என்பது நம் எண்ணத்தில் மோதும் அனைத்தையும், நாம் சமமாக்கி, அவனிடம் விட்டு விடுவோம். அவ்வாண்டவனே பார்த்துக் கொள்வான் என்ற ஒரு நிலைகொண்ட சம நிலை நாம் பெறல் வேண்டும்.

**3-3-80**

நம் நிலை சமநிலைப்பட்டவுடன் நாம் எடுக்கும் சுவாசத்தினால், நம் எண்ணத்தை ஒரு நிலையில் குவித்து, எவ்வாண்டவனை வணங்குகின்றோமோ, அந்நிலை கொண்ட அருள் ரிஷியின் ஒளிக் கதிர்கள், நம் உயிராத்மாவுடன் நாமெடுக்கும் சுவாசமுடன் மோதுண்டு, நாம் எடுக்கும் இச் சக்தியின் அருளைக் கூட்டச் செய்கின்றது.

முந்தைய கால புராணங்களிலும், நடைமுறை வாழ்க்கையிலும், ஆண்டவனே வந்து சில நிலைகளைக் கவியாக உணர்த்தியதாக உணர்ந்திருப்பீர். பல ஆயிரம் காலங்களாக, இம்மனித எண்ண அறிவு வளர்ச்சி கொண்ட நாள் தொட்டே, பல ரிஷிகளின் சக்தி நிலை நம் பூமியில் செயல்பட்டு வருகிறது.

அந்தந்தக் கால நிலைகளுக்கொப்ப, இச்செயல் நிலை கலந்து வந்தது. இன்றைய மனித ஆத்மாக்களின் எண்ணத்தில், இச் செயற்கை நிலையிலும், ஏட்டு அறிவின் உறவிலும் செயல்படும் நிலையில் பக்திகொண்டு தன் எண்ணத்தைக் குவித்து, சப்த ரிஷிகளின் நிலையுடன் தொடர்பு கொள்ளும் பக்குவ நிலை இக்கலிக்கு வரவில்லை.

இன்றைய நிலையில் கலியின் நிலையில் உணரும் பக்குவமுமில்லை. சப்த ரிஷிகளின் நிலையுமே இன்று இக்கலிக்குகந்ததாகத் தான் எவ்வெண்ணத்தில் மனித ஆத்மாக்கள் செல்லுகின்றனரோ, அதே வழித்தொடர்கொண்ட சக்தியைத்தான் அவர்களும் நமக்கு உணர்த்துகின்றனர். கவியிலும், காவியத்திலும் இன்றைய சக்தி நிலையை உணர்த்தி அதை ஏற்கும் பக்குவ ஆத்மாக்கள் சிலதான் உள்ளன, என்பதனைப் புரிந்தே கால நிலைக்கேற்ப அருள் ஒளிதான் அவ்வாண்டவனின் ஜெபம் கொண்டவர்களின் நிலையிலும் செயல்படுகின்றது.

இன்றைய நிலையில் நம் எண்ணத்தை ஒருநிலைப்படுத்தி இவ்வுலக வாழ்க்கையுடன் நம் வாழ்க்கையை ஜெயித்துக் காட்டிட வேண்டிய பக்குவ நிலை பெறவும் நமக்கேற்படும் அனைத்து நிலைகளிலிருந்து நம் நிலையை உயர்ந்ததாக்கும் செயல் நிலைதான் நமக்கு இன்று தேவைப்படுகின்றது.

அந்நிலே பெறவும், இயற்கையின் உண்மை நிலையை அறியவும் நம் எண்ணத்தை அவனிடம் செலுத்தும் பக்குவத்தைத்தான் இன்றைய நம் நிலே இருந்திடல் வேண்டும்.

எண்ணத்தை ஒரு நிலேப்படுத்தி குவிக்கக் குவிக்க நம் சக்தி அவ்வாண்டவனிடம் ஐக்கியப்பட்டு உரமாய் அவன் சக்தியை நம்முள் ஊன்றச் செய்து, அவனும் நாமும் ஒன்ருன நிலேயில் நம் உயிராத்மாவும் நம் உடலும் இருந்திடும்.

இந்நிலேயில் நமக்கு ஏற்படும் நம்மைச் சுற்றியுள்ள எந்நிலேயும் நம் அருகில் நெருங்காது. இவ்வுலக மாற்ற நிலே கூடிய விரைவில் ஏற்படப் போவதினுல் நம்மை அதிபக்குவப்படுத்தி நாம் செயல்கொண்டிடல் வேண்டும்.

மனித ஆத்மாக்களுக்குத்தான் இந்நிலேயில் புகட்டுகின்றீர்; மற்ற ஜீவன்களுக்கு அதன் ஆத்மாவைக் காத்திடும் பக்குவம் எப்படி ஏற்படும், என்ற விஞவும் எழலாம். இன்றைய நிலேயில் எண்ணத்தைச் சிதற விட்டு வாழ்பவன் இம்மனிதன்தான். மிருகங்களில் சிலவற்றின் நிலேயும் பறவைகளில் சிலவற்றின் நிலேயும், சில உயர்ந்த நிலேயில் வாழுகின்றன.

இம் மாற்றத்திஞல் பறவைகளில் சிலவற்றின் நிலே சிதறுண்ட நிலேயில் செயல்படப் போகின்றது. பூமிக்கு மாற்றம் வரும் நிலேயில் பறக்கும் பட்சிகளுக்குத் தப்ப முடியாதா, என்று எண்ணலாம்.

காற்றுமண்டலமே மாற்றம் கொண்டுள்ள இந்நிலேயில் இப்பொழுதே பறவைகளின் எண்ணச் சிதறலின் வளர்நிலே தொடர்பட்டுவிட்டது. இவ்வுலக மாற்றத்திற்குள்ளேயே பறவைகளின் நிலே மிகவும் குறைந்துவிடும். நம் பூமியிலேயே பல நூறு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் பறவைகளின் நிலே இருந்ததைக் காட்டிலும் படிப்படியாய் இன்று குறைந்துவிட்டது.

மற்ற ஜீவராசிகளின் நிலேயும் ஒருசில இன வர்க்கங்கள் மிகவும் குறைந்துவிட்டதற்குக் காரணமே தாவரங்களே அழித்ததிஞல் இக் காற்று மண்டலமே விஷத்தன்மை அதிகப்பட்டதிலிருந்து, இம்மாற்ற நிலே ஏற்பட்டுவிட்டது. முந்தைய காலங்களில் வயல்களில் விளேயும் கதிர்களே பட்சிகளிலிருந்து காக்கத் தக்க நடவடிக்கை இருந்திட்டது. இன்றைய நிலேயில் தாவரங்களே புழு, பூச்சி இவற்றிலிருந்து காக்கும் நிலேதான் அதிகப்பட்டு விட்டது.

காலங்கள் மாற மாற இன வளர்ச்சியின் நிலையும் மாறிக் கொண்டே வருகின்றது. இப்பூமியில், கல்கியில் தொடர்ந்து இக்கலி வரை ஏற்பட்டுள்ள வளர்ச்சியின் முடிவு நிலைதான் இன்று நாமுள்ள நிலை.

முடிவு நிலையில் உள்ள நாம் முதல் நிலைக்குச் செல்லும் பக்குவப் பாடநிலைதான் இங்கு உணர்த்தும் நிலை.

**4-3-80**

ஒன்றுடன் ஒன்று மோதுண்டு மோதுண்டு, ஒன்றை ஒன்று பின்னியே அண்ட கோளங்களும், அனைத்து நிலைகளும் உள்ளன. முந்தைய பாடத்தில் ஓம் என்ற நாதத்தின் நிலையைச் சிறிதளவு விளக்கியுள்ளேன்.

ஓம் என்ற நாதத்தின் உண்மை நிலையென்ன? அவ் ஓம் என்ற ஒலி எப்படி ஒலிக்கின்றது? விஞ்ஞானத்தினுல் கண்டுபிடித்த மின் விசிறிக்கு அதன் சுழலும் நிலை எப்படி வருகின்றது? மின்விசிறி சுழல மின்சாரத்தை அதில் பாய்ச்சியவுடன் அதன் காந்த சக்தியை ஈர்த்து அம் மின்விசிறி சுழலுகின்றது. சுழலும் நிலையில் காற்றை நாம் எவ் எண்ணில் வைத்து சுழலவிடுகின்ருேமோ (அதாவது எம் மீடியத்தில் அக் காந்த மின் அலையைப் பாய்ச்சுகின்ருேமோ) அதன் தன்மை கொண்டு அது சுழலுவதற்கு ஏற்ப அது பரப்பிடும் காற்று அந்நிலையில் உள்ளதை உணர்கின்ருேம்.

நம் பூமி சுழல, சூரியனிலிருந்து பாயும் காந்த அலையை நம் பூமி இழுத்து, பூமி வெளிப்படுத்தும் காந்த சக்தியைக் கொண்டு இக்காற்று ஏற்படுகின்றது. காற்றுடன் ஒளியும் நீரும் கலந்துள்ளன. நீரின் நிலையுடன்தான் நம் பூமி அவ்வொளியை ஈர்த்து வெளிக்கக்கி, அதிகாற்ருய் இப்பூமியைச் சுழலவிடும் அவ் ஓசைதான் ஓம் என்ற நிலையில் நமக்குத் தெரிகின்றது.

இவ் ஒலியை ஒவ்வொருவரும் உணரலாம். ஏனென்ருல் நம் பூமி எதெதையெல்லாம் ஈர்த்து, உண்டு கழிக்கின்றதோ அச்சக்தியெல்லாம் நமக்குமுண்டு. நீரிலிருந்து மின்சாரத்தைக் காந்த அலையுடன் எடுக்கின்ருர்கள். நம் உடலில் உள்ள காந்த மின் அலையை நாம் அறிவதில்லை.

நம் காந்த மின் அலையை நாம் உணரும் பக்குவம் பெற்ருேமானுல் அதன் தொடரில் நம்மையே அவ்வொளியாகச் செயல் படுத்திட முடிந்திடும்.

இப்பூமி வெளிப்படுத்தும் இக்காற்று மண்டலம்தான் நம் உடலிலும் மோதுண்டு செல்லுகின்றது. சிறு எறும்பையும்,

பூவையும் இக்காற்றே மோதிச் செல்கின்றது. இக்காற்று மோதும் இடமெல்லாம் ஒலி பெறுகின்றது.

அவ் ஒலியுடனே நீரும் சேருவதினால் ஒளியாகின்றது. காற்று இல்லாவிட்டால் மணம் வீசிடாது. அம் மணம் பெறவும் அவ்வொளியும் ஒலியும் சேர்ந்துதான் அம் மணமே வீசுகின்றது.

இக்காற்றில் உள்ள ஜீவனுக்கு இக்காற்றினிலேயே படர்ந்துள்ள நீர்தான் ஜீவ சக்தி. இக்காற்று நம் பூமியில் வீசிடும் நிலைக்கும் பால்வெளி மண்டலம், மற்ற மண்டலங்களின் நிலைக்கும் பல கோடி மாறுபாடுகள் உண்டு. ஜீவனுடன் கூடிய, அதிசக்தி வாய்ந்த காற்றுமண்டலம், நம் பூமியின் காற்றுமண்டலம்.

மற்ற மண்டலங்களின் தன்மையில் இந்நிலை மாறுகொள்கின்றது. நம் பூமியைக் காட்டிலும் சூரிய மண்டலத்தில் அக்காற்றுடன் கலந்துள்ள நீர் அலைகள் நம் பூமியைக் காட்டிலும் அதிகம்.

ஒவ்வொரு மண்டலமும் அதன் சுழற்சியில், அதன் சுவாசம் கொண்டு, அவை உண்டு வெளிப்படுத்தும் பக்குவ நிலைக்கொப்பத்தான் அதற்குகந்த காற்று மண்டலம் உண்டு.

சூரியன் வளர்ந்துகொண்டே, சக்தியைப் பெற்றுக் கொண்டே, சுழன்று ஓடிக்கொண்டே அனைத்து மண்டலங்களைக் காத்துக்கொண்டே இருந்திட்டாலும், நம் பூமியின் ஜீவ சக்தி சூரியனுக்கில்லை.

அறிவு வளர்ச்சி பெற்ற ஆத்மாக்களைக் கொண்ட பூமி மட்டுமல்ல நம் பூமி, நம் பூமியின் ஆத்மாவிற்கே அறிவின் சக்தி ஜீவ பூமியப்பா நம் பூமி. இப்பூமியின் ஆத்மாக்களின் நிலையை மாற்றி நம் பூமிக்குகந்த நிலையை நம் பூமியின் ஆத்மாவே செயல் கொள்ளத்தான் போகிறது இன்னும் சில காலங்களில்.

நாம்தான் நம் விஞ்ஞானத்திற்காக பூமியின் மட்டத்தை நகரங்களாக்கி, தார் ரோடுகளாகவும், இல்லங்களை அழகுபடுத்தப் பல நிலைகளைச் செய்தும், பூமியின் ஆத்மா சுவாசிக்கத் தடைப் படுத்தி தாவரங்களின் இன வளர்ச்சியை—காடுகளையெல்லாம் அழித்துப் பூமியின் பொக்கிஷங்களையெல்லாம் நம் உல்லாசச் செயற்கைக்காகப் பாழ்படுத்தி விட்டோமே.

நம் பூமியின் ஆத்மா ஜீவன் கொண்டது, தன்னைத்தானே காத்துக் கொள்ளும். இம்மனித ஆத்மா எப்படி ஒவ்வொரு பிறவியாய் ஓர் உடல் கெட்டு, மறு பிறவிக்கு வந்து, மறு உடல் எடுத்து

வாழ்கின்றனவோ அதைப்போல், நம் பூமியின் ஆத்மாவிற்கும், பூமியின் கோளமென்ற இவ் உருவ உடல் வியாதிப்பட்டுவிட்டது.

எத்தருணத்திலும் அதன் நிலை மாறும் காலகட்டத்தில் தான் நம் பூமியின் ஜீவ ஆத்மாவின் நிலை இன்றுள்ளது. இதனை உணர்ந்து நாமும் நம் ஆத்மாவை இக்குறுகிய காலகட்டத்திற் குள் சக்தி நிலை பெறும் பக்குவ நிலை எய்திடல் வேண்டும்.

நம் பூமி ஆத்மாவிற்கே ஜீவனுண்டு, நம் சக்தியையும் அச் சக்தியே காக்கும் பக்குவத்தை, வழிமுறையை நாம் உணரல் வேண்டும்.

**6-3-80**

ஒவ்வோர் ஆத்மாவிற்கும் அதனதன் ஜீவ அமில குணங்கள் உண்டு. அக்குணத் தொடர்ச்சியில் எவ் அமிலத்தின் விகித நிலை கூடியுள்ளதோ அதன் சக்தித் தொடரில் அவ்வாத்மாவின் செயல் சென்றிட்டால் அவ்வாத்மாவின் ஒளி பிரகாசிக்கும்.

ஒவ்வோர் ஆத்மாவுக்குள்ளும் பன்னிரண்டு வகையான அமில குணங்களுண்டு. இவ்வமில குணத்தை எதன் தொடரில் உயி ரணு உதித்து உயிராத்மாவான மனித உடல் பெறுகின்றோமோ அதிலிருந்தே இப் பன்னிரண்டு வகையான குணங்களில் ஒன்றை ஒவ்வோர் ஆத்மாவும் அதன் ஈர்ப்பிலேயே வளர்ச்சியை ஈடு படுத்தி இழுக்கின்றது.

ஒவ்வோர் ஆத்மாவுக்குள்ளும் இப் பன்னிரண்டு வகையான குண அமிலங்கள் இருந்தாலும் ஏதாவது ஒன்றின் வளர்ச்சியின் வட்டத் தொடரில்தான் ஒவ்வோர் ஆத்மாவும் வளர்ந்து கொண்டே செல்கின்றதே ஒழிய தனக்குள்ளுள்ள மற்றக் குண அமிலத்தை எண்ணுவதோ, செயல்படுத்துவதோ யில்லை.

மனித ஆத்மாவாய் வரும் காலத்திலேயே இப் பன்னிரண்டு வகை குண அமில சக்தி பெற்ற பிறகுதான் மனிதனாகவே மனிதக் கருவிற்கு வர முடிகின்றது.

இயற்கையின் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு வகை நிலை ஒதுக்கப்பட்டுள்ளது. இப்பொழுதைய செயற்கையிலேயே எப்படி ஒரு தாவரத்திற்கு அளிக்கும் எரு மற்றொரு தாவரம் ஏற்பதில் லையோ, அதைப்போல் ஒவ்வோர் இன வளர்ச்சிக்கும் உயிரணு விலிருந்து அவை ஈர்க்கும் குண வளர்ச்சியின் தொடர்படுத்தித் தான் ஒவ்வோர் இன வளர்ச்சியும் வளர்கின்றது.

இப் பன்னிரண்டு வகை குண அமில வளர்ச்சி பெற்ற பிறகு தான் மனித உருப் பெறுகின்றது. இம் மனித உருவில் அக் குண வளர்ச்சியின் சக்தியை அதன் வழித்தொடரிலேயே செயல்படுத்தினல் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு அதன் தொடர் நிலையினல் ஏழு ஜென்மங்கள் எடுக்கக்கூடிய அளவிற்கு மனித உருப்பெற்ற காலத்திலேயே சக்தி கூடிவிடுகிறது. அதன் தொடரில் ஏழு ஜென்மம் எடுக்கக் கூடிய சக்தி ஆற்றலுண்டு.

இச் சக்தியை உபயோகப்படுத்தி செயல்படும் நல்லாத்மாக்கள் இவ் ஏழு ஜென்மத்திற்குள் இப் பன்னிரண்டு வகையின் குண அமிலத்தை உரமாக்கி சூட்சுமம் கொண்டு என்றென்றும் அழியாத வழித்தொடர் பெற்று விடுகின்றனர்.

இதில் சில ஆத்மாக்கள் இவ் ஏழு ஜென்மத்தின் வழித் தொடர் வந்து கரை சேராத நிலையில் உலக மாற்றத்தில் சிக்குண்டு மற்றொரு பிரளயத்தில் பல ஆயிரம் ஆண்டுகளின் சுழற்சி வட்டத்திற்குச் செல்கின்றது.

மனித ஆத்மா உடலுடனே மனித வளர்ச்சிக்கு அடுத்த வளர்ச்சியில் அதிவிரைவில் மனித உடல் பெறும் பக்குவத்திற்கு இழுத்துச் செல்லப்படுகின்றது. சில ஆத்மாக்களின் நிலையில் இவ் ஏழு ஜென்மத்திற்குச் செல்லுவதற்குள்ளேயே தான் பெற்ற இப்பொக்கிஷ குண சக்தியை உணராமல் பேராசைக்கும் வெறி உணர்விற்கும், காம இச்சைக்கும் உட்பட்டு அவ்வாத்மா வெறி உணர்வு கொண்ட மிருக வட்டத்திற்குள் சென்று அதன் வழித் தொடர்ச்சியில் மிகவும் அல்லல்பட்டு, அடுத்த சுழற்சி வட்டத்திலும் மனித இனம் பெற வேண்டிய இப்பன்னிரண்டு வகையான குண அமிலம் பெறப் பல நாட்கள் சென்று விடுகின்றன.

இம் மனித ஆத்மாக்களுக்கு, மனிதனய் வாழக்கூடிய குண அமிலத்தைப் பெற்ற சக்தியை உணராமல் தன்னைத்தானே சிதற விட்டு வாழும் நிலையை உணர்ந்திரா?

இப் பல கோடி மண்டலங்கள் இருந்தாலும் எல்லா மண்டலத்திலும் மனித உருப்பெற்ற ஜீவன்கள் இல்லையல்லவா? மனித உருப்பெறவே பாக்கியம் பெற்றிருக்க வேண்டும்.

பல கோடி வகையான ஜீவராசிகள் இருந்தாலும், மனிதனைப்போல் அறிவு வளர்ச்சியுற்ற செயல் திறன் மற்றவற்றிற்கு இல்லை. நாம் எதனை உணர்ந்தோம்? இன்றிருக்கும் நிலை நாளையில்லை. நேற்று நடந்த நிலை இன்று கனவுதான். இன்றைய நடைமுறை நாளை கனவு என்பதையே மறந்து, நம்முள் ஏற்படும் இச்சைக்

கெல்லாம் நம்மை நாமே அடிமைப்படுத்தி, கால வெள்ளத்தை விரயம் பண்ணி வீண் சஞ்சலமான வட்டத்திற்குள் நம்மைச் சிக்க வைத்து வாழும் நிலைதான் இன்று நாம் வாழ்ந்திடும் நிலை.

சில தாவரங்கள் எப்படி அதன் ஈர்ப்பின் தன்மையினால் வைரம் பாய்ந்த மரமாய் தன்னையே வளர்த்துக் கொண்டுள்ளனவோ, அதைப் போல் நம் ஆத்மாவை வைரம் பாய்ந்த ஞான வட்டத்தின் சுழற்சியாக்கி, அச் சுழற்சியின் ஈர்ப்பு வட்டத்தின் வழித்தொடரில் செல்ல வேண்டும்.

அவ்வளர்ச்சியின் வட்டத்திற்குச் சென்றுவிட்டால் அதன் தொடரில் பல சக்தி நிலையை நாம் உணரலாம். அவ் உணர்வின் சக்தியை உண்மையாக்கி தன்னடக்கம் பெறும் பக்குவம் கொண்டு செயல்பட்டால் அதன் தொடர்பில் அடையும் பேரானந்தம் உள்ளதே, அவ்வானந்தத்தில்தான் அகிலமே கலந்துள்ளது.

இந்நிலையில் தான் பெற்ற நிலையை சிதறவிட்ட ஆத்மாக்களும் பல உண்டு, நான் என்ற நிலை ஏற்பட்டதினால் தான் பெற்ற சக்தியை எக்காரணம் கொண்டும் நானாக்கிக் காட்டினால் அச்சக்தி நிலைத்திடுமா? ஞானம் பெறவே பல ஆண்டுகள் ஆகிவிடுகின்றன. பல காலம் சேமித்த இஞ்ஞான சக்தியையே நான் என்ற நிலையில் சிதறவிட்ட ஆத்மாக்கள் பலர் உள்ளனர் இன்று நம்முடனே.

சிதறவிட்ட பிறகு அவ்வாத்மாக்கள் அதன் தொடர்ச்சியில் செல்ல முடியாமல் அதன் கீழ் நிலைக்குத் தான் திரும்பவும் சென்று விடுகின்றன.

**17-3-80**

பன்னிரண்டு வகையான குண அமிலங்களைச் சேமித்துப் பக்குவநிலை பெற்ற பிறகுதான் மனித ஆத்மாக்களின் வளர்ச்சி நிலை இப்பூமியில் ஆதி காலத்தில் மனித உயிர் ஆத்மா தோன்றிய நாட்களில் வழிபெற்றது.

அதன் தொடர் நிலையில் இன்றுவரை அக்குண அமிலமே வலுக்கொண்ட சக்திகளாய் ஒவ்வொரு வகையான குண அமிலமும் வலுப்பெற்று வழி வந்துள்ளது. இவை எந்நிலையில்?

நம் நிலையில் அறிவியல் வளர்ச்சி நிலை முந்தைய காலத்தைவிட இக்காலத்திற்குக் கூடி உள்ளது. எந்நிலைகொண்டு இது கூடிற்று?

பன்னிரண்டு வகையான அமிலகுணம் என்கின்றோம். இவற்றில் சரிபாதி நல் அறிவை ஈர்க்கும் சக்திகளும், தீய சக்தியை

உடைய குண நலன்களையும் கொண்டவைதான். அறிவுத் திறமையில் இரண்டு வகையிலுமே இப்பன்னிரண்டு வகையான அமில குணங்கள் இன்றைய கலியில் வலுப்பெற்றுத்தான் உள்ளன.

ஒரு மனிதனுக்கு வேண்டப்படும் குணநிசயங்களைத்தான், இப்பன்னிரண்டு வகையான அமில சக்தி என்று உணர்த்தியுள்ளோம். இந்நிலையில்தான் எல்லா ஆத்மாக்களுமே உள்ளனவா, என்ற வினவும் எழும்பலாம்.

ஆதியில் மனித உயிரணுவாய்த் தோன்றப்பெறும் தருவாயில் மனிதக் கருவிற்கு வரும் அனைத்து ஆத்மாக்களுமே ஒன்றைப் போன்ற குண நிலையைக் கொண்ட அமில சக்தியை ஈர்க்கும் பக்குவத்தில்தான், இம்மனித ஆத்மா பிறவிக்கு வருகின்றது.

அதிலிருந்து தனக்களிக்கப்பட்ட சக்தியை எக்குண நிலை கொண்ட அமிலத்தை அவ்வாத்மா வளர்ச்சி நிலை (வலு) ஏற்படுத்திக் கொண்டதோ, அதன் தொடரில்தான் அவ்வாத்மாவின் புத்தி எனப்படும் அறிவு நிலை ஒவ்வொரு பிறவியிலும் வெளிப்படுகின்றது.

ஆண்டவனால் ஒருவருக்கு அதிக அறிவுத்திறனும், குறைந்த அறிவும் படைக்கப்படவில்லை. அவ்வாத்மாவே அதனுடைய எண்ணத்தை எவ்வமிலத்திற்கு முக்கியத்துவம் அளித்து வளர்க்கப் பழக்கிக்கொண்டதோ, அதன் தொடர் சுற்றலில்தான் அன்பு, பண்பு, பாசம், ஆசை, ஆனந்தம், பக்தி இப்படி ஒவ்வொரு குண நிலையும் சலிப்பு, கோபம், குரோதம், காமம், வெறி, வஞ்சனை இப்படிப்பட்ட நிலைகளையும் எதன் தொடர் நிலையில் எண்ணச் சுற்றல் அதிகமாக ஈர்த்து வாழ்ந்து பழக்கப்பட்டோமோ, அதன் குணப் பலனை வைத்து அன்பானவன், பண்பானவன், நாணயஸ்தன், பக்திமான், தர்மவான் என்றும், சங்கடம் கொண்டவன், கோபக்காரன், குரோதக்காரன், நயவஞ்சகன், வெறி உணர்வு கொண்டவன், காமுகன் என்றும் நாமகரணம் பிறரினால் பெறப்படவில்லை. அவ்வுடலின் வீரிய அமில குணத்தைக் கொண்டுதான் ஒவ்வோர் ஆத்மாவிற்கும் நாமகரணம் சூட்டப்படுகின்றது.

இம்மனித ஜென்மத்தில் பிறவி எடுக்கும் நாள் வரை, ஒவ்வோர் ஆத்மாவிற்கும் இப்பன்னிரண்டு வகையான அமில குண வகைகள் உண்டு. மனிதனாய் உள்ள நிலையிலேயே நாம் இதுநாள் வரை இக்குண அமிலத்தை, எந்த ஒன்று அதிகப்பட்டுச் செயல்பட்டு வாழ்ந்திருந்தாலும், நாம் வாழ்ந்திடும் காலத்திலேயே, இப்பன்னிரண்டு வகையான அமிலத்தில் உள்ள ஆறு தீய

குணங்களுக்கு எந்நிலையில் அதிகமாய் நம் எண்ணத்தை அதிகப் படுத்தி வளர்த்துக் கொண்டிருந்தாலும், இவ்வாழும் பக்குவத்தில் நம்மை நாம் உணர்ந்து, ஜெபம் என்ற இப்பன்னிரண்டு குணங் களையும் நாம் ஈர்க்க, நமக்குத் துணை வந்த, நமக்கு மேல் நம் ஆத்மாண்டவனை, ஆத்மாண்டவன் என்பது நம் உயிராத்மாவைத் தான், அவ்வாத்மாவை, அவ்வாத்மாவுக்குள் உள்ள ஈசனின் சக்தியைக் கொண்டு நமக்குகந்த நல்ல குணங்களையுடைய மறு பாதியில் உள்ள நற்குணங்களை ஈர்க்கும் பக்குவம் பெறல் வேண்டும்.

**23-3-80**

ஒவ்வொரு மனித ஆத்மாவிற்கும் அதன் சக்தியை ஈர்க்கும் நிலை எங்குள்ளது? மனித ஆத்மாவிற்கு நம் நெற்றியின் மையத்தில் நாம் மஞ்சளும் குங்குமமும் தரித்து ஈஸ்வரனுக்கு நெற்றிக்கண் இருந்த இடமாக எண்ணி, நம் நெற்றியில் திலகமோ, திருநீறோ இட்டுக் கொள்கின்றோமே, அங்குதான் உள்ளது, மனிதனை இயக்கும் ஜீவத் துடிப்புள்ள கவன நரம்பு.

மனிதனின் எண்ணத்தைச் செயல்படுத்தும் முக்கிய இடம் அக் கவன நரம்புதான். இக் கவன நரம்பினால்தான், ஒவ்வொரு மனிதனின் அக்கவன நரம்பு செய்யும் செயல் கொண்டுதான், அம் மனிதனின் உடல் நிலையும், எண்ண நிலையும் செயல்கொள்கின்றது.

இக் கவன நரம்பிலுள்ள ஈர்க்கும் பணி, நாமெடுக்கும் சுவாச முடன், நம் உயிர் சக்திக்கு ஈர்த்து, அவ்வுயிர்த் துடிப்புடன் இக் கவன நரம்பு அதனை ஈர்த்து, எந்த வழியில் இக் கவன நரம்பானது எதன் தொடர்பில் இவ்வுடலிலுள்ள உறுப்புகளுக்கு, நம் மண்டை யின் பின்பாகத்திலுள்ள சிறு மூளையில் மோதச் செய்து, அதன் வழித்தொடரில் இருந்துதான் உடல் உறுப்புகள் அனைத்திற்குமே செயல் நிலை ஏற்படுகின்றது.

இக்கவன நரம்பு பாதிக்கப்பட்டாலோ, பின்னப்பட்டாலோ உடல் உறுப்புகளின் நிலையும் சரி, நம் உடலைச் சுற்றியுள்ள ஆத்மா வானாலும் சரி, அதன் வழித்தொடர் நிலையைச் செயல்படுத்திட முடியாது.

இதயத்தில்தான் இவ்வுடலுக்குகந்த நிலை உள்ளது என்று இவ்வளவு காலங்கள் நம்முடன் கலந்த ஆத்மாக்கள் நம்பி வந்தனர். இன்று மாற்று இதயம் இணைக்கப் பெற்று வாழும் மனிதர்கள், பெறப்பட்ட இதய எண்ணமுடனா வாழ்கின்றனர்? இதயத்தையே இயக்கும் செயல் இக்கவன நரம்பின் மூலமாய்

ஈர்க்கப்பெற்று, சிறு மூளையின் வழித்தொடரினுல் செயல் படுகின்றது.

இவ்வுடலிலுள்ள எந்த பாகத்தையும் இவர்களினுல் மாற்று உறுப்புகளைப் பொருத்தி உயிர் வாழ வைத்திட முடிந்திடும். ஆனுல் இந்நெற்றியில் உள்ள கவன நரம்பிற்கு மேல் ஏற்படும் பின்னத்திலிருந்து பைத்தியம் பிடித்த ஆத்மாவையோ, கவன நரம்பில் அடிபட்டு, அதனுல் தன் நினைவிழந்த ஆத்மாவையோ சரிப்படுத்துவது முடியாத காரியம்.

நம் தலையில் உள்ள பெருமூளையை மாற்றி அமைத்தாலும் கூட நம் எண்ணமும் மாருது, செயலும் அதே நிலையில்தான் இருந்திடும். ஆனுல் இக் கவன நரம்போ, இக்கவன நரம்பை ஈர்த்து, சிறு மூளையின் உதவி கொண்டு, இவ்வுடலையும் ஆத்மாவை யும் வளர்க்கும் இதில் பின்னப்பட்டால், தன் நிலையில் எவ்வாத்மா வும் வாழ்ந்திட முடியாது.

உடலில் ஏற்படும் இரத்த அழுத்தத்தின் துரித நிலை அதிகப் பட்ட ஆத்மா, இக்கவன நரம்பின் தொடர் கொண்ட சிறு மூளைக்குச் செல்லும் நிலையில் வெடித்துவிட்டால்தான், நாம் இதயவலியினுல் இறந்துவிட்டதாகச் சொல்லுகின்ருேம்.

இதயத்திலுள்ள எந்த நரம்புகள் பாதிக்கப்பட்டாலும், இன்றைய அறிவியல் மருத்துவரால் குணப்படுத்திடலாம். இதயத்திற்கும் இரத்த அழுத்த விகிதத்திற்கும் தொடர்பு கொண்டது இக்கவன நரம்புகள், சிறு மூளையும்தான்.

முதலில் செப்பியபடி இவ்வுடலில் உள்ள எந்த உறுப்பையும் இன்றைய அறிவியல் மருத்துவ ஞானத்தினுல் செய்விக்கும் செயல் திறமையுண்டு. இக் கவன நரம்பை மட்டும் படைக்கப்பெற்றவன், இவ்வாத்ம சக்தியைத் தந்த ஆதி சத்தியின் செயல் சக்தியின் செயல்தான்.

இவ்வுடலில் எப்பாகங்கள் பின்னப்பட்டு ஆத்மா பிரிந்திருந் தால் கூட, அவ்வுடலை ஏற்கச் சில சித்தர்கள் செயல்பட்டாலும், கவன நரம்பும், சிறு மூளையும் பின்னப்படாமல் இருந்தால்தான், அவ்வுடலையும் சித்தர்கள் ஏற்பார்கள்.

ஈஸ்வரனுக்கு நெற்றிக்கண் இருந்ததாகவும், நெற்றிக் கண்ணை வைத்துத்தான் உலகை ஆண்டதாகவும் புராணம் கூறுகின்றது. ஒவ்வோர் ஆத்மாவிற்குமே அந்நெற்றிக்கண் உண்டு. நெற்றிக்கண்ணினுல்தான் நம் விழிக்கு ஒளியைக் காணும் நிலை பெற முடிகின்றது.

கவன நரம்பைத்தான் நெற்றிக்கண்ணாகவும், ஞானக்கண்ணாகவும் நம் முன்னோர்கள் புராணக்காலங்களில் இதனை உணர்ந்து அதற்கு உருவம் தந்து சிவனாக்கி, சிவனுக்கு நெற்றிக்கண்ணைப் படைத்து, அன்றைய கால மனித ஆத்மாக்கள் புரிந்திடும் பக்குவத்தை ஊட்டினார்கள்.

புராணக் கதைகளில் அன்றே பல நிலைகளை, புரியாத நிலையில், சூட்சுமமாக ஆண்டவன் வாழ்ந்ததாகவும் அததற்குகந்த நிலைகளை உணர்த்த, ஆண்டவனையே கதையின் நாயகனாக்கி, பல நிலைகள் சித்தர்களினால் கதைப்படுத்தி வழங்கப்பட்டன.

இராமாயணத்திலும், மகாபாரதத்திலும் உள்ள உண்மை நிலைகள் மறைக்கப்படாமல், அதனை அவரவர்கள் எண்ணத்திற்குகந்து திரிக்கப்பட்டு, சில நிலைகளை ஏற்றி இராவிட்டால் உண்மைக் காவியமான இராமாயணமும், மகாபாரதக் கதையும் உயர்ந்த பொக்கிஷமாய் அதிலுள்ள கருத்தாற்றலைக்கொண்டு பல நடைமுறை பொக்கிஷ நிலையெல்லாம் இன்று நாம் தவற விட்டு இருக்கும் நிலையை எய்தியிருக்க வேண்டியதில்லை.

அன்று போதிக்கப்பட்ட அரும் பெரும் பொக்கிஷமெல்லாம் இன்று கேலிக்குரிய நடைமுறைச் செயலுக்குப் பொருள் என்ற வியாபார நிலைக்கு வந்துவிட்டது.

ஒவ்வோர் ஆத்மாவுக்கும் உகந்த, உயர்ந்த ஞான சக்தியையும், அதன் தொடர் சக்தியையும் நமக்குள்ள இக் கவன நரம்பு நல்ல நிலையில் செயல்படுங்கால் நம்மை நாம் இக்கவன நரம்பின் துணையினாலேயே ஒளியின் ஞானத்துடன் செல்லும் பேற்றை அடையலாம்.

**24-3-80**

உயிரணு உதித்து உயிராத்மாவாய் ஆத்ம சக்தியை அவ் உயிரணு சேமிக்கும் நிலையிலேயே உயிரணுவின் ஆரம்ப உறுப்பாய் இக்கவன நரம்பின் செயல்தான் முதலில் தாயின் வயிற்றில் உதிக்கும் உயிரணுவிற்குச் செயல் கருவியாய் அது ஈர்க்கும் அமில குணமான ஆத்மா என்ற ஆவி அமிலம் திடப்பட்டு அதன் தொடர்ச்சியில் இருந்துதான் ஒவ்வோர் உறுப்புகளும் உருக்கொள்கின்றது.

மனித ஆத்மாவுக்குகந்த பன்னிரண்டு வகையான குண அமிலத்தையும் ஈர்க்கவல்ல சக்தியாய் இக்கவன நரம்பு ஆரம்ப கட்டத்திலிருந்தே செயல் கொள்கின்றது. சாதாரண மனித ஆத்மாக்கள் இதன் தொடர்ச்சி வட்டத்தில் எக் குண அமில சக்தியை அதிகப்படி ஈர்த்துப் பழக்கப்படுத்தி வாழ்ந்தனவோ அதே தொடர் நிலையில் வாழ்நாள் முழுவதும் வாழ்கின்றன.

வாழ்நாள் முடிந்த பிறகும், ஆவி உலகிலும், மறு ஜென்மத்தி லும் இதன் தொடரில் இருந்து மாறுபடுவதில்லை. ஆனால் இப் பன்னிரண்டு வகையான அமில வட்டத்தில் வாழும் மனிதன் தன் நிலை உணர்ந்து, சம நிலை பெற்று, இன்று நாங்கள் உணர்த்தும் இந்த ஞான மார்க்கத்தின் தொடர் நிலை எய்துங்கால் இப் பன்னிரண்டு வகையான குண அமிலத்திற்கும் அப்பாற்பட்ட உயர்ந்த குண அமிலமான ஞான அமிலத்தை ஈர்க்கும் பக்குவம் பெற்றுவிட்டால், அதன் தொடரினால் ஒவ்வோர் ஆத்மாவும் இவ்வுலகினில் நம்முள் கலந்துள்ள தீய சக்தி எது? நற் சக்தி எது? என்ற பாகுபாட்டை அறியலாம்.

ஒருவரைக் காணும் பொழுதே அவரது குண நிலையையும், அவர் எவ்வெண்ணமுடன் நம்மை நாடுகிறார் என்ற செயலையும், அவர் சுவாசமுடன் நம் சுவாசம் மோதும் நிலையிலேயே அவரது எண்ணநிலையை நாம் அறியலாம்.

மற்றும் இஞ்ஞானத்தொடர் வழிபெற்று, தெய்வத்துடன் ஐக்கியமாகி, தெய்வமாகிப் பேரானந்தம் அடையலாம் என்ற ஞான மார்க்கம், கொடிய விஷத்தன்மையுடைய நான் என்னும் அகந்தையில் செல்லும் மார்க்கம்.

நாம் பிறந்த பூமியில் நம்முடன் கலந்துள்ள ஜீவ ஆத்மாக் களின் நிலையிலிருந்து ஒதுங்கி, தான் மட்டும் ஆண்டவனைக் செல்லும் ஞான மார்க்கம் உகந்த மார்க்கமல்ல. நம்முடன் கலந்துள்ள ஜீவ ஆத்மாக்களுக்கு அன்பு என்ற கலசத்தை ஏற்றி, கலந்து வாழ்ந்து நாம் பிறந்ததின் நலனை நம்முடன் கலந்துள்ள வர்களை விரோதத்தையும், கோபத்தையும் சாடி வாழ்ந்து பொருளாசையில் தனக்கே சொந்தமாகப் பொருள் பெற்று, நான் என்ற வட்டத்தில் வாழ்வதினால் நம் ஆத்மாவிற்கு என்ன பயன்?

நாம் அறிந்த உண்மையின் ஞானத்தைப் பலருக்குப் போதித்து வாழும் இக்குறுகிய வாழ்நாட்களை, அன்பின் அடிப் படையில் வாழும் பக்குவத்தையும் நம் சக்தியைக் கொண்டு சேமிக்கும் பொருளினால், பல ஜீவன்களை வாழ வைக்கும் முறை யுணர்ந்தும் செயல்படல் வேண்டும்.

நமக்கு உள்ள பொருளை எடுத்து அவர்களுக்கு தானமளித் துச் சோம்பேறி நிலைப்படுத்திடச் செப்பவில்லை. ஒவ்வொரு ஜீவ ஆத்மாவும் தனக்குகந்த செயல் புரிந்துதான் ஜீவிதம் கொள்ள வேண்டும். அதன் வழித் தொடருக்குப் பொருளிடுங்கள்.

அங்கவீனமுற்ற ஆத்மாக்களுக்கு ஜீவிதம் செய்திடப் பொருள் அளித்திடலாம். பட்சிகளோ, மற்ற மிருக இனங்களோ

தனக்கு வேண்டிய உணவை எப்படித் தானுகச் சம்பாதித்துக் கொள்கிறதோ அதைப்போன்ற பக்குவ ஆத்மாக்கள் மனித ஆத்மாவில் குறைவு.

பன்னிரண்டு வகையான குண அமிலத்தைப் பெற்ற மனித ஆத்மாதான் இன்று தன் நிலே உணராமல் வாழ்கின்ருன். மிருக இனங்கள் மனிதனேக் காட்டிலும் இன்று உயர்ந்ததாகிவிட்டது.

நாம் நம் நிலேயை (தன் நிலே) உணரும் பக்குவம் பெற்ற பிறகு, ஞானத் தொடரின் ஒளியை ஈர்க்கும் குண நிலே கொண்ட பிறகு ஞானத்தின் வட்டத்திலுள்ள பல ஒளி ஞானிகள் எல்லாம் நமக்கு உதவுவர். ஆரம்ப நாளிலேயே ஏன் அவர்கள் நம்மை ஏற்கவில்லே என்ற வினு எழும்பலாம்.

நம் ஆத்மாவைக் கொண்டு நாம் பெறும் சக்தியின், ஞான ஈர்ப்பில் நம் செயல் சென்ற பிறகுதான் அச் செயலின் ஒளியும் நம்முடன் கலக்குமேயன்றி, அவர்கள் சக்தியை எல்லாம் தீய ஆத்மாக்களின் வட்டத்தில் செலுத்திவிட்டால் அவர்கள் பெற்ற சக்தியும் குறைந்துவிடும்.

குறைந்துவிடும் என்பது மட்டுமல்ல வீண் விரயப்பட்டு விடும். இதனே உணர்ந்துதான் சில கால கட்டங்களில் இத் தியான மார்க்கத்தை ஈர்த்து ஞானத்தின் வழிபெறும் ஆத்மாக்களின் நிலேயுடன் இவ்வுலகிற்குத் தன் ஒளியை எப்படி எப்படியெல்லாம் பரப்பிடலாம் என்ற ஆர்வத் துடிப்புடன் இன்று நாம் எப்படிப் பல சித்தர்களின் நிலேயை உணருகின்ரேமோ, அதைப்போன்று பல காலமாய் இச்செயல் நிலேகள் நடந்துவந்தன.

தானுக எந்த நிலேயும் செயல் கொள்ளாது. ஒளியுடன் நல் லொளியாய்க் கலக்கத்தான் செய்யுமே ஒழிய வீண் விரயப்படுத்திச் செயல்படாது.

**25-3-80**

இன்று இவ்வுலகில் சில இடங்களில், சில ஆத்மாக்கள் குழந் தைப் பிராயத்திலேயே அதன் வயதுக்கு ஒவ்வாத நிலேயில் சில நிலேகளே ஞானேதயம் பெற்று வயதுக்கு மீறிய சித்தர்களாலும் சப்த ரிஷிகளாலும் மட்டுமே உணர்த்தக் கூடிய நிலேயில் உணர்த்து கின்றனர் என்ருல் அது எந்த நிலேயில்?

அவ்வாத்மாவின் ஒளி அலேகள் அதனுடைய முன் ஜென் மத்தில் சில மகான்களின் தொடர்புடன் வாழ்ந்திருந்து அவர் களின் எண்ணத்திலேயே ஆத்மா பிரிந்து, மறு ஜென்மத்திற்கு

வரும் பொழுதும், இன்னும் ஒவ்வோர் உடலுக்குள்ளும் பல அணுக்கள் உள்ளன என்று உணர்த்தியுள்ளோம். அதைப்போல், பல ஆவிகளும் அவ்வுடலில் ஏறிக்கொண்டுள்ளன. அந்த நிலையில் அம் மகானனவர் அவர் வாழ்ந்து, ஞானம் பெற்று சக்தியின் நிலையில் ஒளியுடன் கலக்கப் பெறும் பொழுது அவர் உடலுடன் உள்ள நிலையிலேயே அவர் எடுத்த ஜெபத்தினல் அவ்வுடலில் இருந்த மற்ற ஆவிகளும், அணுக்களும் (பல கோடி எண்ண அணுக்கள்) அவரின் ஞானத்தினல், இவைகளும் நல்ல நிலை எய்தி, இம் மகான் உடலை விட்டுச் செயல்படும் நிலையிலேயே இவ்வுடலில் தங்கிய இவ்வாவிகளுக்கும் அவற்றின் எண்ணமெல்லாம் நீங்கி இம் மகானுடன் அவர் உடலில் சாடியதின் பயனல் அவர் பெற்று ஏற்றிய ஞானத்தின் ஒளியில் பங்கு பெற்று மறு ஜென்மத்திற்கு வந்து வாழும் நிலையில் மகானுடன் ஒன்றியதினல் அவ்வொளி அலையை ஈர்க்கும் அமில குணமுடன் இச் சிசு பிறப்பில் வாழும் பொழுது அம் மகானின் சக்தி அலையை இச்சிசுவின் மேல் பாய்ச்சி பல அபூர்வ நிலையெல்லாம் வயதிற்கு மீறிய செயலாக இன்றளவும் நடந்து வருகிறது.

திருஞானசம்பந்தரின் மொழி அமுதை ஒரு குழந்தை வெளிப் படுத்துகிறது என்றல் அது இந்த நிலையில்தான்.

இன்று மட்டுமல்ல பல கால கட்டங்களாய் சில சில இடங்களில் இப்படி வியக்கத்தகும் அதிசய நிலைகள் நடந்து வருகின்றன. இதன் வட்ட ஒளியிலேயே ஞானம் பெற்று, செயல் பட்டால் மீண்டும் மீண்டும் சக்தி நிலை பெருகிப் பல நிலைகளைச் செயலாக்கிடலாம்.

பெற்ற பயனைப் பொருளுக்கும், புகழுக்கும் விரயப்படுத்தி விட்டால் ஞானசக்தியின் வலு குன்றிவிடுகின்றது.

திருவையாறு தியாகராஜரின் நிலையும் இந்நிலையில் வந்தது தான். அவர், தன் உடலை விட்டுப் பிரியும் நாள்வரை, அச் சங்கீத ஞானத்துடனே ஐக்கியப்பட்டு, தான் அடைந்த ஞானத்தின் பொக்கிஷத்தை இம்மியளவும் சிதறவிடாமல் செயல்கொண்ட தினல் நல் ஒளி பெற்றர்.

இந்த நிலை தெய்வீக நிலையில் மட்டும் ஏற்படுகின்றதா? மற்ற நிலைகளில் இல்லையா? என்ற வின எழும்பலாம். இன்று உலகத்தில் பல பாகங்களில் தன் பூர்வ ஜென்மத்தில் இந்த இந்த இடத்தில் வாழ்ந்ததாகவும், இவர்தான் என் தாய், இவர்தான் என் தந்தை என்று சொந்தபந்தங்களை உணர்த்தியும், தன் முந்தைய நாமகரணத்தையும், சொந்தபந்தங்களின் நாமகரணத்தையும்,

மற்ற எல்லாக் குறிப்புக்களையும், மறு ஜென்மம் எய்திய பிறகும், முன் ஜென்மத்தில் நடந்த இடத்தை உணர்த்துகின்றார்களே, இவை எந்த நிலையில்?

ஓர் ஆத்மா வாழுகின்றது. அது வாழும் நிலையில் இன்று பேய் பிடித்துவிட்டது, பிசாசு பிடித்து விட்டது என்றெல்லாம் சிலரைச் செப்புகின்றனர். எப்பேயும் யாரையும் பிடிப்பதில்லை. ஆனால் இம்மனித ஆத்மாவின் எண்ணச் சிதறலினால் அந்த அந்த எண்ண நிலைக்கொப்ப, ஆவி உலக ஆத்மாக்கள், அதன் எண் ணத்தை ஈடேற்றச் சில உடல்களில் ஏறுகின்றன. உடலில் ஏறிய எவ்வாத்மாவுமே அவ்வுடலுக்குச் சொந்தமான ஆத்மா பிரிந்த பிறகுதான் இவ்வாவி ஆத்மாவும் வெளியேற முடிகின்றது.

ஓர் உடலில் இப்படி ஏறிய ஆவி ஆத்மாவானது, அவ் உடலுக் குச் சொந்தமான ஆத்மாவைக் காட்டிலும் சக்தியுடையதாய் ஏறிச் சில செயல்களைப் புரிவதினால்தான் சிலர் (சில உடல் ஆத்மாக்கள்) தன் நிலை பெற முடிந்து தன் எண்ணத்தைக் கொண்டு வாழ்ந்திட முடியாமல் ஆவி ஆத்மாவின் செயலில் வாழ்வதினால்தான், பேய் பிடித்து விட்டது, பிசாசு பிடித்து விட்டது என்கின்றனர்.

இப்படி வீரிய சக்தி கொண்ட ஆவி ஆத்மாக்கள் ஏறிய உடல் ஆத்மாக்கள், நீண்ட நாளும் வாழ்வதில்லை. அகால மரணம் எய்துகின்றனர், தன் நிலை மறந்து.

அந்த நிலையில் அவ்வுடலில் இருந்து, உடலுக்குச் சொந்த மான ஆத்மாவும் உடலில் ஏறிய ஆவி ஆத்மாவும் பிரிந்து செல் கின்றது. இவ்வுடலில் ஏறிய ஆவி ஆத்மாவிற்கு தன் செயலைச் செயல்படுத்த மற்றோர் உடலில் ஏறியதினால், தன் முந்தைய நிலையும் மறந்து, எவ்வுடலில் ஏறிச் செயல் கொண்டதோ, அவ் உடலின் சொந்த பந்தங்களுடன் தன் எண்ணமும் செயல்பட்டதி னால் இவ்வுடலுக்குச் சொந்தமான, சொந்த பந்தங்களும் வாழ்ந்த இடங்களையும் தனதாக ஒன்றிவிடுகின்றது. இவ்வுடலை விட்டுப் பிரிந்த ஆத்மா, எவ்வாத்மாவானாலும் சரி, உடனே பிறப்பிற்கு வருவதில்லை. தன் உதிரத் தொடர்புடைய தாய், தந்தையார், மக்கள் இவர்கள் உள்ளவரை பிறப்பிற்கு வருவதில்லை.

அப்படி இருக்க இக் குறுகிய காலத்தில் பிறப்பெய்தி, இவர் கள்தான் என் தாய், தந்தையார், சுற்றத்தார் என்றெல்லாம் முன்ஜென்மத்தின் நிலையை உணர்த்துவது, இவ்வுடலில் ஏறிய ஆவி ஆத்மாவானது தாயின் கரு நிலைக்கு வந்தவுடன் அதன் இரண்டு நிலைகொண்டு, இரண்டு நிலையென்பது அதன் முந்தைய ஜென்ம

நிலையும், ஆவி ஆத்மாவாய் மற்ற உடலில் சாடியதின் நிலையும் கொண்டு, கர்ப்பத்திற்கு வந்தவுடன், இவ்வாத்மாக்களுக்கு பன்னி ரண்டு வகையான அமிலத்தை ஈர்க்கும் குணமுடைய சக்தியைக் காட்டிலும், மற்றோர் உடலில் ஏறி வெளிப்பட்டதின் நிலையினால் தாயின் கருவில் அதன் நிலையும் மறக்கப் பெற்று, பிறப்பிற்கு வந்த பிறகு அது எடுக்கும் சுவாசத்தினால் மற்றோர் உடலில் ஏறி வெளிப்பட்ட ஆவி ஜென்மத்திற்கு வந்து, வாழும் வளர்ச்சி பெற்று எண்ண நினைவுகள் எல்லாம் நினைவில் சாடும் பருவத்தி லேயே அதன் பேசி உறவாடும் கால கட்டத்தில் அவை ஏறிய உடலாத்மாவின் சொந்த பந்தங்கள், வாழ்ந்த நினைவலைகள் எல் லாம் இவ்வாத்மா செப்புகின்றது.

மற்றோர் உடலில் குடியேறி தன் முந்தைய ஆவி நிலையை மறந்து அவ்வுடலின் எண்ணத்தில் வாழ்ந்து செயல்பட்ட ஆவி களினால்தான் இப்படி முந்தைய ஜென்மத்தைச் செப்ப முடியும். ஆனால் இவற்றிலேயே எல்லா ஆவிகளும் இப்படி மற்ற உடலில் ஏறிய பிறகு ஜென்மத்திற்கு வர முடியாது.

நல்ல ஆத்மாவின் எண்ணமுடன் ஏறிச் செயல்பட்ட ஆத்மாக் களுக்குத்தான் இப்படிப் பிறப்பெடுக்கும் நிலை பாக்கியமும் வருகின்றது. ஆனால் முந்தைய ஜென்ம வாழ்க்கையை உணர்த்தி வாழும் ஆத்மாக்களும் நீண்ட நாட்கள் வாழ்ந்திடா. இதன் தொடர்ச்சி நாளை.

**26-3-80**

இப்படி இப்பூமியில் பல காலமாய் ஏற்பட்டதின் தொடர்ச்சி யில் பலப்பல நிலைகள் நடக்கின்றன. ஒன்றைப்போல் ஒன்றில்லா மல்தான், ஒன்றை அழித்து ஒன்று சக்தி கொண்டு இவ்வண்டமும், பேரண்டமும் சுழலுகின்றன. ஆனால் நம் மனித ஆத்மாக்கள் மட்டும் ஒருவரைப் பார்த்து ஒருவர் அவரைப்போல் நாம் வாழ வேண்டும், மற்றவர்களைப் பார்த்து ஆண்டவன் அவர்களுக்கு அபரி மிதமான சக்தியை அளிக்கின்றார் என்ற குறையான எண்ணம் வேறு.

ஒன்றைப் போல் ஒன்றில்லை. ஒன்றில்லாமல் ஒன்றில்லை என்ற நிலை இப்பூமிக்கே உள்ள பொழுது (அனைத்திற்குமே) நாம் ஏன் ஒன்றின் எதிரொலியை எதிர்பார்க்க வேண்டும்.

ஆதி காலம் தொட்டே ஞானிகள் உணர்த்தி வந்த நிலையி லும், ஒவ்வொருவரும் அவர்களின் உண்மை நிலையைத்தான் உணர்த்தினார்கள். இன்று நம் ஞானத்தின் சக்தி பொதுவானது தான். ஒவ்வொருவருக்கும் அந்த ஞானத்தைப் பெறும் ஆற்றல்

உள்ளது என்று உணராமல், செக்குமாடுகளைப் போல் சுழன்று கொண்டே உள்ளோம்.

ஞானிகள் வெளிப்படுத்தியதை இப்பூமியில் (இந்தியா) உள்ள பல பாகத்தில் இதன் நிலையை எடுத்து அதில் ஆராயும் நிலையைப் (ஞானோதய நிலை) பெற்று பல விஞ்ஞானத்தை, தன் ஞானத்துடன் சேர்த்துச் செயலாக்குகின்றார்கள்.

ஆனால் ஞானத்தை வளர்த்த பூமியிலுள்ள ஆத்மாக்கள், இன்று மற்றைய மேலை நாடுகளின் செயற்கையின் வளர்ச்சியில் மயங்கி, இங்கிருந்து அங்கு சென்று வந்தால், இவ்வுலக அனுபவம் பெறலாம் என்று, அற்ப ஆசையில் ஓடுகின்றார்கள். ஞானிகளையே அள்ளி வழங்கிய ஞானச் சுரங்கத்தை எடுக்கும் பக்குவம், இன்றைய காலத்தின் ஜாதியின் அடிப்படையில் சொந்தமாக்கி, பக்திக்குப் பொருளைக்கொண்டு ஸ்தானங்கள் அமைக்கப்படும் கோயில்களில் ஏற்படும் இம்மதிப்பு விகிதத்தைக் கொண்டு மங்கச் செய்து விட்டார்கள்.

இராமாயணத்தையும், கீதையையும் இவர்கள் ஜாதியின் அடிப்படையில் சொந்தமாக்கி, அதிலுள்ள கருத்துக்களையும் மாற்றிவிட்டனர். ஆனால் விக்ரமாதித்த ராஜாவின் கதையிலுள்ள, வேதாள முனிவர் செப்புவதாக உணர்த்திய அதன் கருத்துக்களை மக்களினால் விளையாட்டாகவும், விரும்பத் தகாத முறையில் பேய் என்ற, ஒதுக்கப்பட்ட நிலையிலும், ஒதுக்கிவிட்டார்கள். விக்ரமாதித்தன் கதையிலுள்ள கருத்துக்களை ஊன்றி அறிந்தால், இவ்வுலக நடப்பின் உண்மைகளை அன்றே கதையுருவில் ஆவி, பேய் என்ற ரூபத்தில் உணர்த்தியுள்ளார்.

விக்ரமாதித்த ராஜாவின் கதையில் உள்ள நிலைகள், உண்மை நிலைகள். ஒவ்வொரு மனிதனின் எண்ணத்திலும் இன்று பல பேயான குணங்களுக்கு இடமளித்து விட்டு, பேய் என்று உருவமில்லாத நம்பப்படாத நிலைக்கு மட்டும்தான் இன்றைய மனிதன் பயப்படுகின்றான்.

உலக நிலை எப்படி இருக்கின்றது பார்த்தீர்களா? அனைத்துமே ஆவிதான். பக்தி என்று, சக்தி மாதா என்று மற்றவர்கள் எழுதி வைத்த மந்திரங்களைப் புரியாமல், உருப்போட்டு, பல பொருட்களை அச்சக்தி மாதாவுக்குப் படைத்து, பூஜித்து வணங்கச் சொன்னால் இன்றைய நம் மனிதர்கள் நம்புவார்கள்.

உலகின் சத்திய நியதியை எடுத்துச் சொன்னால், ஆவி என்றும், பேய் என்றும் சொல்பவர்களை ஒதுக்கித் தள்ளுவார்கள்.

இன்று இங்குள்ள ஆத்மாக்கள் ஒன்றையே சுற்றிச் செக்கு மாடுகளைப் போல் உழன்று உள்ள நிலையில், மறு சொல் ஏற்கப் படுவது கடினம்தான். நம் பூமியின் நிலையே அந்தந்த இடத்திற்குத் தகுந்த அமிலத்தை ஈர்க்கும் குணத்தைக் கொண்டு, இப்பூமியின் பல பாகங்களில் அதனதன் இயற்கை வளத்தின் செழிப்புத் தன் மையும், கால நிலைகளும் உருவாகின்றன.

இயற்கைத் தன்மைக்கு மட்டும்தான் அம்மாற்றமா? இயற் கையின் வளர்ச்சி பெற்ற மனித ஆத்மாவுக்கும் அதுவேதான். அந்தந்தப் பூமியின் காந்த சக்தியைக் கொண்டுதான் மனிதனின் எண்ண ஓட்டம், உருவ வளர்ச்சி, உணவுநிலை, உறங்கும் நிலை அனைத்துமே இருந்திடும்.

இங்குள்ள மனிதனின் சுறுசுறுப்பிற்கும், மற்ற நாட்டின் சுறுசுறுப்பின் தன்மைக்கும் மாறுபடும். இங்கு காய்க்கும் காய்கறி, கனி வளங்களைப் போல் மற்ற நாடுகளில் இருப்பதில்லை. இங்குள் ளவை அங்கு வளர்வதில்லை. அங்குள்ளவை இங்கு வளர்வதில்லை. இதே விதையை அங்கு போட்டாலும், அப்படி அது வளர்ச்சி எய்தினாலும், சுவையில் மாறுபடுகின்றது.

அங்குள்ள மனிதன் மிகவும் சுறுசுறுப்பாக உள்ளான். பல நவீன செயற்கையகங்களை உருவாக்கி உள்ளான் என்றால், அது அவன் செயல் மட்டுமல்ல, அவன் பிறந்த பூமியின் அமில குணத் தில், அவன் உருவாக்குகின்றான். அவன் செயல் திறனும் அதன் நிலைக்கொப்பத் தொடருகின்றது.

நம் பூமியில் கலந்துள்ள இந்த ஞான ஒளியை அன்று உணர்ந்த சித்தர்களின் தொடர்பிருந்தும், இன்று நாம் தவற விட்டு சாமான்யர்களாய்ப் பெற முடியாத ஒன்றாக அதனைக் கருத்தில் கொண்டு வாழ்கின்றோம்.

இன்னும் சிலர் சித்தும், ஞானமும் எதற்காக? வாழ்க்கையை அனுபவிக்க வேண்டாமா, என்ற உணர்விலேயே ஞானத்தைத் தவற விட்டு இன்று பக்தி என்ற மமதைப் பிடியிலும், அரசியல் என்ற கோமாளி விளையாட்டிலும் நம் செயலையெல்லாம் விரயமாக்கி வாழ்ந்து வருகின்றோம்.

**30-3-80**

அன்று சில உண்மை நிலைகளை காவியங்களாக்கி உணர்த்திய நிலையிலிருந்துதான் (சித்தர்களின் நிலை) இன்று விஞ்ஞானம் காண்கின்றோம்.

இப்பூமியின் ஈர்ப்பிற்கு மூலகாரணமாய், ஆணிவேராய் உள்ள ஓம் என்ற நாதத்தினுல் ஈர்க்கப்பட்ட அமில குணங்கள்தான் இவ்வுலகனைத்துமே. ஒன்றுடன் ஒன்று கலக்கச் செய்து அதன் ஒளி அமிலத்தை இப் பூமியே பல நிலைகளில் வளர்த்துக் கொண்டது.

இப்பூமியின் அமில சக்தியான ஈர்ப்பின் அலை கொண்டு தான் அனைத்து நிலைகளும் நடக்கின்றன. எதுவுமே ஒதுக்கப்பட்ட, சக்தியற்ற, ஜீவனில்லா நிலை இப்பூமியில் இல்லை. ஒவ்வொன்றிற்கும் அதன் ஈர்ப்பிற்கு ஏற்ப அதன் குண நிலையுண்டு.

அதன் வளர்ச்சியில் மாற்ற நிலைகளும் உண்டு. இயற்கையுடன் வளர்ந்திட்ட சக்திதனிலேயே உயர்ந்த ஞானம் கொண்ட மனித ஆத்மாவின் உடலைக்கொண்ட நாம், இவ்வுலகின் உண்மை நிலையை உணர்ந்திடாமல் இருந்திடலாகாது என்பதனை அன்றுணர்ந்த சித்தர்கள் அந்தந்தக் கால நிலைகளுக்கொப்பக் கவிதைகளாக்கி, காவியங்களாக்கி, பல அபூர்வ நிலைகளையெல்லாம் புரியும் நிலையில் வடித்துச் சென்றுர்கள். சென்றுர்கள் என்ன? வடிவாக்கி நின்றுர்கள்.

ஆனுல், இக்கலியின் கதையின் ரூபமாய்க் கண்டுணர்ந்து விரயப்படுத்தி விடுகின்றோம். ஒவ்வொரு நிலைக்கும் ஒவ்வொரு தத்துவக் கோளங்களுண்டு. நம் முன்னோர்கள் உணர்த்தி ஏற்படுத்திய அரும் பெரும் பொக்கிஷத்தை நாம் கண்டுணரல் வேண்டும்.

இவ்வுடல் என்ற மாய பிம்பத்தின் அற்ப ஆசைக்காக ஆத்மாண்டவனின் அறிவு ஞான பொக்கிஷத்தைச் சிதறவிட்டே வாழ்கின்றோம்.

அன்று பல சித்தர்களினுல் ஆண்டவனைப் பல ரூபப்படுத்தி அவரவர்கள் எண்ணத்திற்குகந்தபடியெல்லாம், ஆண்டவனின் ரூபத்தைக் கண்டுணர்ந்து, அவர்களின் ஞானப்பாலை வெளிப்படுத்திஞர்கள்.

எங்கும் நிறைந்துள்ள ஆண்டவனை எந்த ரூபத்தில் கண்டால் என்ன, என்ற தத்துவ நிலையை அவரவர்கள் சிவனுகவும், விஷ்ணுவாகவும், பிரம்மாவாகவும் வடிவமைத்துத் தந்தார்கள் நாம் அன்பு, நற்பண்பு, சத்திய ஜெபம் இவற்றை மேற்கொண்டால் அன்றைய சித்தர்களினுல் சிவனுகவும், விஷ்ணுவாகவும், பிரம்மாவாகவும் படைக்கப்பட்ட ஆத்மாண்டவனை இயற்கையின் எல்லாமில் எல்லாமாய் உள்ள ஒளியுடன் கலக்கச் செய்யலாம்.

அன்றைய சித்தர்களிலேயே ஒவ்வொரு சித்தனும் பல நிலைகளில் விளக்கியுள்ளான். பல பாடல்களை இயற்றி இன்றைய கால நிலைக்கும் பொருந்தும் நிலை ஏற்படுத்தியுள்ளான்.

ஆனால் இந்த ஞானத்தின் பொக்கிஷத்தை மனித ஆத்மாக்கள் பயன்படுத்தாமல் செயல் கொண்டு வருகின்றன.

கருவூராரின் கருவூலத்தைக் காண்பாரும் இன்றில்லை. கருவூலத்தின் கருவையே கரியூலமாக்கிக் களிப்படையும் காலமப்பா இது.

ஒவ்வோர் ஆத்மாவும் தான் பிறந்த கருவூலத்தின் மகிமையை உணர்ந்து வாழ்ந்திடுங்கள். கனவூலத்தில் களிப் பெய்திக் காணும் சுகம் என்னவோ என்பதனை உணர்ந்து வாழ்ந்திடுங்கள்.

பக்தியையும், ஞானத்தையும் வளரவிட்டு முக்தியென்னும் பக்தி பெறலாம். பக்தியில் வழியெடுத்து, முக்தியென்னும் பக்திக்கே செல்லும் மார்க்கத்தை அடையலாம்.

சிற்றின்பம், பேரின்பம் என்றிட்டே ஞான இன்பத்தை நாசப்படுத்திட்ட நிலை ஏனப்பா?

உண்டாலும் உண்ணாவிட்டாலும் இரவும் பகலும் மாறிக் கொண்டுதான் உள்ளன. நாம் பெறப்போகும் ஞானத்திற்காக, நாம் பெறப்படும் காலம் வரை எதுவுமே நமக்காக நிறுத்தி வைப்பதில்லை.

கருவூலத்தின் கருவாகிய நாம், நம் ஞானத்தைப் பெறும் சக்தியை அடையும் பக்குவத்தைத் திரும்பவும், திரும்பவும் செப்புகின்றேன் செயல்படுத்திட வேண்டும்.

**2-4-80**

ஞானத்தின் சக்தி பெற்று சித்து நிலை பெற்றிடவே நம் முள்ளுள்ள அமில சக்தியை எல்லாம் நம் நிலைக்குகந்த அமில குணத்தை இந்த ஞானத்தின் ஈர்ப்பிற்குச் செல்லும் குண அமில மாக நாம் செயல்படுத்திட்டால் எவ்வமிலத்தை நாம் எவ்வழித் தொடருக்கு அதிகப்படுத்தி அதன் ஈர்ப்பில் வளர விடுகின்றோமோ, அதன் தன்மையின் ஆணைக்குட்பட்டு மற்ற அமில குணங்களும் இதன் கட்டுப்பாட்டிற்கே அடங்கி செயல்படுத்திட வைத்திடலாம்.

அதனதன் குணம் என்றுமே மாறாது. ஆனால் அதனை இதனின் கட்டுப்பாட்டிற்குள் அடக்கி வைத்திட முடியும்.

நல்ல அமிலத்தின் செயலைப் போன்றே தீய அமில குணத்தின் செயல் நிலையும் அதன் செயலிலேயே வழிகொண்டிடும். நமக்குள்ளுள்ள இப் பன்னிரண்டு வகை அமிலத்தையும் அதன்

போக்கில் நாம் செல்லவிட்டிட்டால் அதனதன் தொடரில் எதன் குணம் அதிகப்படுகின்றதோ அதற்குகந்த ஆவி குண அமிலங் களும் இதன் ஈர்ப்பில் அந்தக் குணத்துக்குடைய இக்காற்றினில் சுற்றிக் கொண்டிருக்கும் உடலைவிட்டுப் பிரிந்த மனித ஆத்மா, மிருக ஆத்மா என்ற பாகுபாடில்லாமல் இக்குண அமிலத்துடன் வந்து சேர்ந்துகொண்டே இருக்கும்.

இப்படிச் சேரும் ஆவி அமிலங்களில் சில சக்தி வாய்ந்த ஆவி அமிலங்கள் உடலில் ஏறிவிட்டால் அதன் செயல் நிலை அவ் உடலில் உள்ள உயிராத்மாவைக் காட்டிலும் இதன் தூண்டுதலின் வெறிக்கு உட்பட்டு மென்மேலும் இதன் நிலைக்கேதான் இழுத்துச் சென்று கொண்டே இருக்கும்.

பக்தி, ஞானம், சித்து என்ற நல்லுணர்வு அமில சக்தியின் கூட்டு நிலையும் இப்படித்தான். சலிப்பு, கோபம், வெறி, குரோ தம் இப்படிச் செயல்படும் நிலையின் அமில குணமும் அதன் ஈர்ப்பில் தான் இழுத்துச் செல்லும்.

இப்படி இத் தீய அணுவின் அமில குணத்திற்குக் கட்டுப் பட்ட ஆத்மாக்களை அத் தீய அமிலசக்தி மென்மேலும் அதனை இழுத்துச் சென்று வஞ்சனை, குரோதம், கொலை, கொள்ளை இப்படிச் செல்லும் அமில உயிர் ஆத்மாக்கள் அதன் வெறி உணர்வினல் உடலைவிட்டு ஆத்மா பிரிந்து சென்றுலும், இவ்வெறி யுணர்வு அடங்காமல், அதே நிலை கொண்ட உடல்களில் ஏறி, தன் வெறிக்குகந்த செயலை மென்மேலும் தூண்டி மனித ஆத் மாவைப் பேயாக்கி விடுகின்றது.

இவ்வெறி கொண்ட ஆவி உலக ஆவி, மனித ஜீவ உடல் கொண்ட அதே குண நிலையில் உள்ள ஆத்மாவின் உடலில் ஏறி மென்மேலும் இவ்வெறியுணர்வு அதிகப்பட்டு உடலில் உள்ள பொழுதே மாமிச உணவுகளை மிக அதிகமாக உண்டு அதன் வெறியிலேயே உடல் பிரிந்து சென்றுலும், அவ்வாவிகள்தான், தன் வெறிக்குகந்த உணவைப் பெற இரத்தக் காட்டேறிகளாய், அவ் உதிரத்தின் சுவாசத்தை எடுக்க ஆவி உலகில் இருந்து கொண்டு வெறியாட்டம் நடத்துகின்றன.

இன்று உலகில் எல்லாப் பாகங்களிலுமே அதிகமாக விபத் துகள் ஏற்படுகின்றன என்றுல் எந்த நிலையில்? இரத்தக் காட்டேறி களாய் ஆவி உலகில் சூழ்ந்துள்ள இவ்வாத்மாக்களுக்கு அதற் குகந்த ஆகாரத்தை எடுக்கத்தான் அவைகள் செய்யும் வெறிச் செயலினல் இன்றைய உலக ஆத்மாக்கள் மாளுகின்றன.

இம் மனிதனேதான் தெய்வமும் ஆகின்றான். இரத்தக் காட்டேறியாகவும் ஆகின்றான். எமனாகவும் செயல்படுகின்றான், தேவனாகவும் செயல்படுகின்றான்.

எண்ணும் எண்ணத்தைக் கொண்டு நல் அமிலத்தை ஈர்த்து வாழ்பவன் தெய்வமாகின்றான். தீய அமிலத்தை ஈர்த்து வாழ் பவன் பேயாகின்றான். நமக்கெல்லாம் மீறிய அப்பாற்பட்ட சக்தி யான அவ்வாதிசக்தி, அவள் விதைத்த விதையில் வளரும் நிலை கொண்டு, பலனைக் கண்டு அவளே நகைக்கின்றாள்.

எல்லா விதையும் ஒன்றுபோல் விதைத்து அவ்விதையின் பயனைக் கண்டு மென்மேலும் விதைத்துக் கொண்டே உள்ளாள். விதையின் நற்பயனைத் தன்னுள் எடுத்துக்கொண்டு வேண்டாத பயனை ஒரு கால கட்டத்தில் மாற்றி அமைத்துவிடுகின்றாள்.

இக்கலியில் பொறுக்கி எடுக்கின்றாள் தான் விதைத்ததன் பயனையெல்லாம். தனக்குகந்தது எது என்று அவளுக்குத் தெரி யும். மற்றவற்றைத் திரும்பவும் உழுது, பயிருக்கு அனுப்புவாள். மாற்றி மாற்றிப் பலனை எடுத்துக்கொண்டேதான் இருக்கிறாள் என்பதனை உணர்ந்து இரத்தக் காட்டேறிகளாய் அலையும் ஈர்ப்பில் நாம் போய்ச் சிக்காமல் அன்பென்னும் பக்தி நெறியில் நம்முள் உள்ள அமில குணங்களை வழிநடத்தி அந்த ஞானத்தின் சித் தடைவோம்.

இம்மனிதனின் குண நிலையைக் கொண்டு அவ்வுடலில் உள்ள ஆவி அணுக்களின் சுவாச நிலை செயல்படும் முறையினை உணர்த்திடுவேன்.

**3-4-80**

காலச்சக்கரத்தில், இயற்கையில் சுழல வந்துள்ள ஒவ்வோர் உயிரணுவிற்கும், அதனதன் சுவாசத்தின் அமில குணம் கொண்டு, ஜீவன் பெற்று வாழும் நிலையில், ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு வீரிய அமில குணமுண்டு.

நாம் நினைக்கின்றோம், தாவரங்கள் பல பலன்களை அளிக் கின்றன. மிருகங்களின் உடலினால் பல பொருள்களை நாம் பெறு கின்றோம், ஆனால் இம் மனித உடலில் இருந்து எப்பயனைப் பெற முடிகின்றது? இம்மனித உடல் நரமாமிசத்தைக் கொண்ட, எதற் கும் உபயோகமில்லாத உடலாய் எண்ணுகின்றோம்.

இதுநாள் வரை இவ்வுடலை வெறுத்து, ஆத்மா என்ற உயிர ணுவிற்குத்தான் எல்லாப் பெரியோர்களும் முக்கியத்துவம் தந்தார்கள்.

எம் சத்தியத்தின் சக்தி நிலைப்படி இம்மனித உடலுடன் கூடிய ஜீவ ஆத்மாவிற்குத்தான் ஞானமும் சூட்சுமமும் பெறத்தக்க சத்திய ஒளியுண்டு. மற்ற எந்த ஜீவ உடல்களாலும் இந்த ஞானம் பெற்று, அதன் வழித்தொடர் அடையும் பாக்கியமில்லை.

உடலை விட்டுப் பிரிந்த ஆத்மாவிற்கும் இல்லை, எண்ணிலடங்கா தாவரங்களிலிருந்தும், மற்ற ஜீவ ஜெந்துக்களிலிருந்தும், இந்த ஞானம் பெற்றிட முடியாது. மனிதனின் வாழ்க்கை நிறைவு பெற வேண்டுமென்றால், ஞானத்தின் சத்தியத்தை ஈர்த்து, சித்தென்ற நிலையெய்தி, சூட்சுமம் கண்டாலன்றி, எவ்வுயிரணுவிற்கும் மாற்றம் கொள்ளாத பிறப்பெடுக்கும் சுழலிலிருந்து மீள முடியாதப்பா.

இவ்வுடல் என்ற பொக்கிஷத்தை விட்டுப் பிரிந்து செல்லும் ஆத்மாவினால், எச் சக்தியையும் பெற முடியாது. பல ஜென்மங்களில், நாம் நம் உடலில் ஏற்றிக் கொண்டுள்ள அணுக்களையெல்லாம், ஞானம் பெற்ற சக்தியினால்தான், பல நிலைகொண்ட ஆவி அணுக்களின் மோதலில் இருந்து, தன் ஞானத்தை உயர்த்தும் பக்குவப்பதம் பெற வேண்டும்.

எந்த சப்த ரிஷியும், எம் முனிவரும் ஞானத்தின் வழிக்குத் தன்னை உட்படுத்தாத ஆத்மாவிடம், தன் ஞானத்தை வளர விடமாட்டார்கள்.

ஞானத்தின் ஈர்ப்பிற்கு வரவே, தன் உடலில் உள்ள பன்னிரண்டு வகை அமில குணத்தையும், தன் நிலைக்குகந்த அமிலமாக ஒரு நொடிப்பொழுதில் மாற்றும் சக்தி பெற்றுவிட்டால், ஞானத்தின் ஒளியை நமதாகக் கண்டிடலாம்.

நம்மை ஏன் நாம் வருத்தி இந்நிலை பெறல் வேண்டும் என்று எண்ணிடலாம். உயிராத்மாவின் விமோசனம் பெறும் முறையே இதுதான்.

இன்றைய கால நிலையிலுள்ள பக்தி பஜனையினாலும், இன்று செய்த பாவத்தை மாற்றிவிட்டு ஆண்டவனை வணங்குவதினாலும் ஞான ஒளி பெற முடியாது.

எதற்கும் நாம் அடிமைப்படாமல், நம் உயிரணுக்களை நாம் அடக்கிச் சமமான நிலை பெற்றாலன்றி, ஞானத்தின் வழித் தொடர் பெறுதல் கடினம். ஞானம், சித்து, சப்த ரிஷி என்றெல்லாம் உணர்த்துகின்றீரே, நமக்கேன் அவ்வெண்ணத்திற்கு ஆசை? மனித உடலுடனே வாழ்ந்திடலாம் என்று எண்ணுவீர்.

இம் மனித உடல் நிலையிலேயே நாம் பெறப்போகும் ஞானத்தை, இம்மனித உடலிலிருந்து மிருக நிலைக்குச் செல்லா மலும், இன்றுள்ள இவ்வுலகில் சூழ்ந்துள்ள இக்காற்றே கடும் விஷமாய் உள்ளதினால், உடலைவிட்டு நம் ஆத்மா பிரிந்து சென்ற லும், இக்கலி முடிந்து, கல்கியுகம் பெற்று, மீண்டும் மனிதப் பிறவியாய்ப் பிறப்பெடுக்கும் நாள் வரை, ஆவி உலகில் படர்ந் துள்ள எண்ணிலடங்கா ஆவி ஆத்மாக்களின் பிடியிலும் நாம் சிக்காதிருத்தல் வேண்டும்.

ஆவி உலகில் பல நிலைகொண்ட மிருக ஆவிகளும், மனிதனின் ஆவிகளும், பல நூற்றாண்டுகளாய்ப் பிறப்பெடுக்காத ஆவிகளும், இக்கலியில் வாழ்ந்த ஆவிகளும், ஒன்றின் எண்ணத்தைப்போல் ஒன்றில்லாத எண்ணிலடங்கா ஆவிகளின் நிலையில் தத்தளித்து, சிக்குண்டு, மீண்டு நாம் கல்கியில் மனித ஆத்மாவாய் அவதரிக்க வும், நம் எண்ணத்தில் எண்ணக்கூடிய சாத்தியக்கூறு, இன்றைய இவ்வுலகின் நிலைப்படி இல்லையப்பா இல்லையப்பா.

இவ் ஈஸ்வரப்பட்டன் செப்புவது சத்தியத்தின் சக்தி நிலை யப்பா. இம்மனித ஆத்மாக்களே! உங்களின் எண்ணத்தையெல் லாம் உங்களுக்குகந்ததாக்கி சமமான நிலையெய்தி, அன்பையும், சத்தியத்தையும், தர்மத்தையும் மாற்றாமல் ஞானத்தின் ஒளி பெற்று, சூட்சுமம் பெறும் பாக்கியத்திற்கு உங்களை அர்ப்பணி யுங்கள்.

இவ்வுலகின் கலியை மாற்றி, கல்கியை கல்கி யுகமாகக் காண வாருங்கள்.

**12-4-80**

காட்சி: குதிரைக்குப் பையில் கொள்ளு வைத்துக் கட்டி யுள்ளது போலவும், குதிரை அதைச் சாப்பிடுவதைப் போலவும், குதிரைக்குக் கடிவாளம் போட்டு இரண்டு பக்கமும் கண்ணிற்கு மறைப்பு வைத்துக் கட்டுவதைப் போலவும் காட்சி தந்து, குதிரை ஓடுவதைக் காட்டுகின்றார்.

குருநாதரின் கேள்வி: இதிலிருந்து எதைப் புரிந்து கொண்டீர்? கடிவாளமில்லாத குதிரை தறிகெட்டு ஓடும். எப்படிக் கடிவாளத் தைக் கொண்டு, நம் திசைக்குக் குதிரையைத் திருப்புகின்றோம். ஒரே நிலைப்பட்டு ஓட இரண்டு பக்கமும் கண் மறைப்புக் கட்டி னால்தான் அதன் பார்வை பல திக்குக்குச் செல்லாமல் ஒரே நிலையில் ஓடும்.

இதைப்போல் மனித ஆத்மாவிற்கு, பக்தி என்ற கடிவாளம் போட்டு, பூஜை என்ற மறைப்புக் கட்டி ஒரு நிலைப்படுத்த நமக்கு சித்தர்களால் வழிப்படுத்திய முறை, நம் பூஜை முறை.

இவ்வுலகில் மட்டுமல்லாமல், இவ்வுலகிற்கு மனித ஆத்மா ஜீவன் பெறச் செய்த, இவ்வுலகில் பிறப்பெடுக்காமல், மற்ற மண்டலத்தில் வழிபெற்று, சித்தெடுத்த பலகோடி எண்ணிலடங்காச் சித்தர்களும், முனிவர்களும், சப்த ரிஷிகளும் உள்ளனர். அவர்களின் சக்தியின் அருளினுல், நம் உலகில் இன்று நமக்காக வழிப்படுத்திய சத்திய நிலைகள், இந்நூற்ருண்டிலும், பல ஆயிரம் நூற்ருண்டிற்கு முதலிலும் அச் சித்தர்களின் ஒளி அலைகள் இப்பூமியில் படர்ந்தன.

அவர்களின் ஞானத்தினுல்தான் நம் பூமிக்கு மனித ஆத்மாக்களின் அறிவாற்றலும், வழித்தொடர்களும், ஞானத்தின் வளர்ச்சி நிலையும் ஊன்றச் செய்ததின் நிலை.

அவர்களின் ஒளி அலைகளை எந்தெந்த உருவில் இப்பூமிக்குப் பரப்பினுர்கள். இன்றல்ல நேற்றல்ல நூறு, இருநூறு ஆண்டல்ல, பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முதலிலே, இன்றைய நம் பூமியில் அன்றே பல ரிஷிகள் அவர்களின் ஒளியை மனித ஆத்மாவின் மேல் படரச் செய்து, அவ்வாத்மாவின் நிலையில், இப்பூமியில் நல் ஞான உபதேசங்களும், சத்திய நியதிகளும் ஊன்றச் செய்தார்கள்.

அப்படி வழிபெற்று வந்தவர்தான் ஆதிசங்கரர், கோலமா மகரிஷியின் ஒளி அலையை, உயிர் அலையை ஆதிசங்கரரின் உடலில் ஏற்றி, அவரை இவ்வுலகம் முழுவதற்கும், பல இடங்களுக்கும், பல புண்ணிய ஸ்தலங்களுக்கும் நடக்கச் செய்து, அவரது சுவாசத்தினுல் பல ஒளி அலைகளை இவ்வுலகம் முழுவதற்கும் நிலைக்கச் செய்தார்.

அவரால் அவரது உடலைக் கடைசியாக ஐக்கியப்படுத்திய இடம் ஒன்று உண்டு. அவ் ஐக்கியப்படுத்திய நிலையிலிருந்து இன்றும் அவரால் சக்தியின் அருள் பூஜிக்கப்பட்டு, சக்தி ரூபமாய் வெளிப்படுத்துகின்ருர்.

ஒளி அலையின் நல்லொளியாய் உடலில் உள்ள அணுக்களை யும் நல் ஞான ஒளியாய் வழிப்படுத்திவிட்ட ஞானிகளின் சுவாச அலை படர்ந்த இடங்களெல்லாம், இன்றும் அந் நல்லுணர்வின், ஒளி அலைகொண்ட, ஞான ஒளிச் சக்தி இன்றும் உண்டு.

ஆதிசங்கரரின் காலத்திற்குப் பிறகு அவர் நிலையை ஒத்த, ஒளி அலைபெற்ற, உயர்ந்த ஆத்மா செயல்படவில்லை இன்றளவும்.

இன்றைய நம் ஞானமெல்லாம் அகத்தின் அழகிற்காகத் தான் என்பதனைப் புரியாமல், புற அழகைக் கண்டு மகிழ்கின் றோம். மனிதனுக்கு எல்லா ஆசை நிலைகளும் வளர்ந்துவிட்ட காலமிது.

நம் இல்லத்தையும், உடலையும் எப்படி நாகரிக அழகிற்கு அழகுபடுத்துகின்றோமோ அதைப்போல் நம் அகத்தினையும் அன்பென்னும் சத்திய நியதியில் அழகுறச் செய்து, நல் ஞானம் பெறுங்கள்.

உடல் அழகைக் கண்டு மகிழ்வதைப்போல் அக அழகை அழகுபடுத்திடுங்கள். இன்றைய கால நிலையிலிருந்தே ஞான உப தேசம் பெறுங்கள்.

நம்முள்ளுள்ள வீரிய சக்தியை (will power) நாம் உணரல் வேண்டும். ஞானம் ஒவ்வொரு வழியில், ஒவ்வோர் ஆத்மாவிற்கும் செயல் கொள்கின்றது.

இப்பாட நிலையை உணர்ந்து சத்தியத்தின் சக்தி நிலை தந்த சத்திய நூலாய் உணர்ந்தே ஒவ்வோர் ஆத்மாவும் சத்தியம் பெறுங்கள்.

இந்நிலையை உணர்ந்தாலே எவ்வொளியை நாம் எண்ணு கின்றோமோ அவ்வொளியின் சித்தர்களின் அருள் கொண்ட ஒளி பெற்றிடலாம். ஒளியாய் வாழ்ந்திடுங்கள்! ஞான ஒளியாய் வாழ்ந் திடுங்கள்! சத்திய ஒளியாய் வாழ்ந்திடுங்கள்!

எல்லாமில் எல்லாமாய் உள்ள சக்தி அருளைப் பெறுவீர்!

---

தொடரும் மூன்றும் பாகம்

---

## தலைமைச் சங்க உறுப்பினர்கள்

திரு. எஸ். எஸ். எம். சுப்பிரமணியம்
தலைவர், குமாரபாளையம்

திரு. டாக்டர் ஆர். கிருஷ்ணன், M.B.,B.S.
பொதுச் செயலாளர், வெள்ளக்கோயில்

திரு. ஆர். என். நாராயணசாமி
பொருளாளர், மங்களூர்

திரு. கே. ஸ்ரீனிவாஸ்
உறுப்பினர், மங்களூர்

திரு. எல். வி. எல். சுப்பிரமணியம்
உறுப்பினர், மங்களூர்

திரு. ஏ. கந்தசாமி
உறுப்பினர், சேலம்

திரு. ஆர். பாலசுப்பிரமணியம்
உறுப்பினர், பவானி

திரு. எஸ் குழந்தைவேலு
உறுப்பினர், சேலம்

திருமதி இராஜம்மாள் பாலசுப்பிரமணியம்
உறுப்பினர், பவானி

தலைமைச் சங்க நிர்வாகிகள் மேற்கண்ட ஒன்பது பேர்களால் இப்புத்தகம் வெளியிடப்பட்டது.

ஓம் ஈஸ்வர குருதேவர் துணை

ஓம்

**ஆத்மாஞ்சலி**

எங்கள் தாய் தந்தையருக்கும், எங்கள் குருவாகிய தெய்வத் திரு **வேணுகோபால் சுவாமி** அவர்களுக்கும், எங்கள் குருவின் குரு தேவராகிய அனைத்திலும் நாம் காணும் எங்கள் ஆத்மாவுடன் ஆத்மாவாகக் கலந்துள்ள ஆண்டவனாக வந்து எங்களை வழிநடத்தி, எம் வழியை அனைவரையும் ஏற்கும் நிலைப்படுத்திட, எங்களுக்கு இப் பாக்கிய அருளைப் பெரும்பொக்கிஷமாக ஏற்றி வழி நடத்திடும் சற்குருதேவர் **ஈஸ்வரபட்டராகிய** ஆண்டவரின் பொற்பாதங் களைப் போற்றியே வணங்கி, பூஜித்தே என்றும் எங்களை அவர் வழியில் வழி நடத்திட எங்கள் ஆத்மாஞ்சலியைச் செலுத்தியே, அடி பணிந்தே, நமஸ்கரித்தே எங்கள் குடும்பத்தில் நாங்கள் இருவரும், எங்களின் குழந்தைகளும் வணங்குகின்றோம், வணங்கு கின்றோம்.

**திருமதி இராஜம்மாள் பாலசுப்பிரமணியம்,**
**திரு. ஆர். பாலசுப்பிரமணியம்,**
பவானி



தவத்திரு வேணுகோபால சுவாமிகள்

புத்தகம் கிடைக்குமிடம்:

சத்தியத்தின் சக்திநிலைச் சங்கம்
தலைமையகம், பவானி-638301

திரு. G. கிருஷ்ணராஜ், B.A., M.L.A.
C/o. சேலம் சண்முகா பிலிம்ஸ்
மாரியம்மன் கோவில் தெரு
சேலம்-636006

திரு. S. கிருஷ்ணமூர்த்தி
வீனஸ் பிக்சர்ஸ்
நெ. 7, வீனஸ் காலனி
சென்னை-600018

விலை ரூ. 31-00